## எண்சீர் ஆசிரியவிருத்தம்

திருமலமாம் வர்ணவர் ணீதமா யெவரும்
நினையகமீக் களிகூர நிலவொளிய தாகி
உருவளரும் விபுதரிடத் தமர்ந்துதலைக் கொம்பின்
உயர்சுழியி னுருதுகளி லாதுவிழைந் தோர்க்குத்
திருவளருஞ் சுகமளித்துத் தனைநோக்கு நர்க்குத்
திரைகடல்சூழ் நிலவல்யத் தெப்பொருளுந் தரலால்
குருவளரு நிகண்டதனை யானவர்கோ வென்றே
குறித்துரைக்கத் தடையென்னே குவலயத்தீர் கூறீர்.

இத்தகைய சிறப்பினதாகிய இத்தொன்மொழியாம் தென் மொழியிற் சதுரகராதி முதலிய பற்பலவகராதிகள் இருப்பினும அவைகளெல்லாம் பெருவாரியாய்ப் பள்ளிப்பிள்ளைகட்கும் பிறர்க்கும் எளிதிற்பயன்தருவன அல்ல. அன்றியும், அவை களின் விலை ஏற்றமும், உருவத்தோற்றமும் எல்லாரும் எளிதிற் பெற்று உபயோகிக்க அநுகூலமானவைகளல்ல. ஆகையால், விருகவிரித்தும், மிகச்சுருக்கியும் பயனற்றதாக்காமல், இதனைத் தற்காலத் தமிழ் மாணவரும் பிறரும் நயமாக வாங்கி நவீன முறையால் உபயோகித்து நலம் அடையுமாறு, நல்லெழுத்திலும் நற்காகிதத்திலும் அச்சிட்டிருக்கின்றோம்.

இன்னும் இம்மொழியில் வந்து வழங்கும் வடசொற்களில் இன்றியமையாதவைகளையும், திசைச்சொற்களில் அரசாங்க முறையிலும், அதிகாரமுறையிலும், வர்த்தகமுறையிலும், சாஸ் திர சாம்பிரதாய இலௌகிகமுறைகளிலும் உள்ள எத்தனையோ சொற்களையும் இதிற் புதுவனவாகச் சேர்த்திருக்கின்றோம். "பழையன கழிதலும் புதியன புகுதலும், வழுவல கால வகையி னானே" என்ற ஆன்றோர் மொழிப்படி அவைகள் தகையாம் அன்றி மிகையாகா.

"அரசனெவ்வழி அவ்வழி குடிகள்" என்ற பழமொழியைப் புதுமொழியாக்க, அரசன் எவ்வழி ஆசாரம் அவ்வழி என்று ஆக்கிவிடலாம் என்றெண்ணும்படி அநேக நவீன இலௌகிக ஆசாரங்கள் பிரவர்த்தித்திருக்கும் இந்நாளில் முன்னுளைய வழக்கத்தை அநுசரித்த தமிழகராதியைப் போன்றதொன்றே போதாமையை அநுபவத்தில் உணர்ந்த யாம், இதில் அநுபந்

தங்களாக அந்நியபாஷைச் சொற்களை உச்சரிக்கச் சென்னை, சர்வகலாசாலையார் அநுமதியுடன் தமிழில் ஏற்பட்ட புது எழுத்துகள் இரண்டையும், [உ-ம். (1) ப = f; காபீ = Coffee; வேக்பீல்ட் = Wakefield. (2) ஸ = z; கெஸட் = Gazette.] பஞ்சாங்கப் பெயர்களில் பக்ஷங்களின் பெயரையும், பஞ்ச பக்ஷிகளின் பெயர்களையும், அவைகளின் தொழில்களையும், வாரசூலையின் *வாரநாழிகைகள் பரிகாரங்கள் முதலியவைகளையும், கிரகணங்கள், பரதகண்டவாசிகளின் பண்டிகைகள் முகம்மதியர் பண்டிகைகள், உருஸுகள், கிறிஸ்தவர்களின் முக்கிய பண்டிகைகள், திருநாட்கள், அச்சுப் பிழைதிருத்தி அச்சுக்கூடத்துக் கனுப்புவதற்குவேண்டிய திருத்தக்குறிகள் அவைகளின் விளக்கங்கள், இங்கிலிஷ் நாணய வழக்கப் பெயர்கள், பரதகண்ட நாணய வழக்கப்பெயர்கள், புகைவண்டியில் ஏற்றும் சாமான்களின் நிறை அளவின் பெயர்கள், சென்னை முகத்தலளவை பரதகண்டக் காலஅளவைகளின் பெயர்கள், இங்கிலிஷ் காலஅளவைகளின் பெயர்கள், லீப் வருஷக்குறிப்பு, இங்கிலிஷ் நீட்டலளவைப்பெயர்கள், நிறுத்தலளவைப்பெயர்கள், இங்கிலிஷ் முகத்தலளவைப்பெயர்கள், தானியதவச அளவுப் பெயர்கள், எண்வாய் பாட்டுப்பெயர்கள், இங்கிலிஷ் நிறுத்தலளவைப்பெயர்கள் (பொன், வெள்ளி முதலியன) இங்கிலிஷ் மருந்து நிறுத்தலளவைப்பெயர்கள், இங்கிலிஷ் நீட்டலளவைப் பெயர்கள், இங்கிலிஷ் சதுர அளவைப்பெயர்கள், வாக்கியங்கள் அர்த்தமாவதற் கனுகூலமான அடையாளப்பெயர்கள் முதலியவைகளையும் முறையாகக் கோத்திருக்கின்றோம்.

அன்றியும் அனுபந்தம் ஒன்றில், அசல், அலாதி என்பவைகளைப்போன்ற உருதுபாஷைப்பதங்கள், அலமாரி, கிராம்பு போன்ற போர்த்துகேசியச் சொற்கள், எச்சரிக்கை, வாடிக்கை போன்ற தெலுங்கு பதங்கள், பயங்காளி, விரயம்போன்ற கிராமியச்சொற்கள், ஏராளம், தாராளம் முதலிய வழக்கச்சொற்கள், கவர்ன்மெண்ட், கவர்னர் முதலிய இங்கிலிஷ் பதங்கள் முதலியவைகளையும்; அனுபந்தம் இரண்டில், அக்ரிமெண்ட், அங்குஸ்தான் முதலிய அன்னிய வியாபாரக்கூட்டுச் சம்பந்தமான

* யான் ஒரு அங்கத்தினனாயிருந்த தமிழ் வியாசக்கமிட்டியார் சென்னை சர்வகலாசங்கத்திற்கு அனுப்பிய ரிப்போர்ட்டைப் பார்க்கவும்.

மொழிகளையும், அட்டெண்டர், அத்தாக்ஷி முதலிய துரைத்தன சம்பந்தமான மொழிகளையும், பிற மத சம்பந்தமான மொழிகளையும், நவீனசாஸ்திர சம்பந்தமான மொழிகளையும், இன்னும் பற்பல புதுச்சொற்களையும்; அனுபந்தம் மூன்றில் வருஷங்கள், மாதங்கள், வாரங்கள், இராகுகால நாழிகைகள், கிரகங்களின் பெயர்கள், நக்ஷத்திரங்களின் பெயர்கள், இலக்கினங்களின் பெயர்கள், திதிகளின் பெயர்கள், யோகங்கள், கரணங்கள், மூன்றாம்பிறை, இராசிகளின் பெயர்கள் ஆகிய இவைகளைக் குறிக்கும் சொற்களையும் நவீனமுறையாக யாவரும் நலம்பெறப் புகுத்தி வெளியிட்டிருக்கின்றோம்.

ஆகையால், மாணவரும், மற்றவரும், அம்மற்றவரிற் கற்றவரும், கற்பவரும்,

கற்றோர்கள் தாமுகப்பர் கல்விதனில் ஆசையுள்ளோர்
பெற்றோ மெனவுகந்து பின்புகற்பர்—மற்றோர்கள்
மாற்சரியத் தாலிகழின் வந்ததென் னேயிகழ்கை
ஆச்சரிய மோதான் அவர்க்கு.

என்றபடி இதை மற்றோர்களாய்க் காணுமல் உவந்து பெற்றோர்களாய்க்கொண்டு, இதனுதவியைக் கண்டு களிப்பார்களென நம்புகின்றோம்.

தமிழும் அங்கிலமுங்கலந்த வின்ஸ்லோ முதலிய பிற வகராதிகளைப் பெரிதும் தழுவித் தமிழ்க்கு இன்றியமையாதனவாகிய சங்கநூற்சொற்களையும் அமைத்து இதை இனிதின் முடிக்குமாறு திருவருள்புரிந்த எம்பிரானுகிய குகப்பெருமானை எம் மன மொழி மெய்களால் சிந்தித்து வந்தித்துத் தொழுகின்றோம்.

கந்தன் கழலிணை காலையினு மாலையினும்
எந்தந் தலைக்கணியாம் இங்கு.

பவானந்தர் கழகம்
நியூட்டன் ஹவுஸ், வேப்பேரி
சென்னை, ஜனவரிமீ 1925.

ச. ப.

கடவுள்துணை

# தமிழகராதி.



(பெ) பெயர். (வி) வினை. (தொ.பெ) தொழிற்பெயர்.

(வை—அ) வைத்திய அகராதி.

## அ

அ—தமிழ் நெடுங்கணக்கில் முதலெழுத்து. 2. சுட்டெழுத்து, (உ-ம்.) அவன், அக்கொற்றன். 3. அஃறிணைப் பன்மைவிகுதி, (உ-ம்.) வந்தன, 4. ஆறும் வேற்றுமை உருபு, (உ-ம்.) தன்கைகள் (தன் + அ), 5. சாரியை, (உ-ம்.) எனக்கு,(என் + அ + க் + கு) 6. எட்டென்னும் எண்ணின்குறி, 7. ஓர் உபசர்க்கம், (உ-ம்.) அஞ்ஞானம்.

அ ஆ—அதிசயவிரக்கக் குறிப்பு.

அஃகம்—(பெ) தானியம்.

அஃகரம—வெள்ளெருக்கு.

அஃகான்—(பெ) அ, முதலெழுத்து.

அஃகு—(வி) குறை, 2. சுருங்கு.

அஃகுல்லி—பிட்டு, 2. சிற்றுண்டி.

அஃகேனம்—இது ஆய்தவெழுத்து.

அஃது—அஃறிணை ஒருமைச் சுட்டு.

அஃறிணை—உயர்திணையல்லாதவை.

அகங்காரம்—கருவம், 2. அந்தக் கரணங்களில் ஒன்று, 3. நானெனுஞ் செருக்கு, 4. பிறவிக்கு மூலம்.

அகங்கை—உள்ளங்கை.

அகசியம்—ஆசியம்.

அகசு—பொழுது, 2. பகல்.

அகடவிகடம்—தட்டுமாற்று, 2. இரண்டகம்.

அகடு—பொல்லாங்கு, 2. நடு, 3. வயிறு.

அகடூரி—பாம்பு.

அகணி—தெங்கு பனை முதலியவற்றின் உள் நார், 2. மருதநிலம்.

அகண்டம்—அபின்னம், 2. மண் விளக்கு.

அகண்டாகாரம்—அளவுபடாத வடிவம்.

அகண்டிதம்—முழுமை.

அகதி—திக்கற்றவன், 2. வறியவன்.

அகத்தி—ஒரு மரம்.

அகத்திணை—உள்ளத்தே நிகழ்கின்ற இன்ப ஒழுக்கம்.

அகத்தியம்—அகத்தியனாராற் செய்யப்பட்ட இலக்கணம், 2. அவசியம்.

அகத்தியன்—அகஸ்திய முனிவர்.

அகந்தை—அகங்காரம்.

அகப்பட—கிடைக்க, 2. வசப்பட, 3. சிக்கிக்கொள்ள.

அகப்பற்று—உள்பற்று.

அகப்பா—மதிலுண்மேடை, 2. மதில், 3. அகழி.

அகப்பாட்டு—அகநானூறென்னும் நூல்.

அகப்பு—ஆழம்.

அகப்பேய்ச்சித்தன்—பதினெண் சித்தரில் ஒரு சித்த புருஷன்.

அகப்பை—சட்டுவம்.

அகப்பொருள்—ஓரிலக்கணம், அது உண்ணிகழ்ச்சியான் இன்பத்திற்குரிய எழுதிணையைக்கூறும், 2. வீட்டிலுள்ள பொருள்.

அகமருடணம்—நீருக்குள்ளே நின்று செபித்துப் பாவத்தைப் போக்கச் செய்யும் ஒரு மந்திர செபம்.

அகமுடையான்—வீட்டுக்காரன், 2. கணவன்.

அகம்—வீடு, 2. மனம், 3. பாவம்.

அகம்படிமை—உட்டொண்டு.
அகம்படியார் — உள்வேலைக்காரர், 2. ஒரு சாதியார்.
அகம்பாவம் — உள்செருக்கு, 2. நான் என்னும் எண்ணம்.
அகம்பிரமம்—நானே பிரமம் எனல்.
அகம்மியம்—ஒரெண், 2. அறியக்கூடாதது.
அகம்மியை—பொதுமகள்.
அகரம்—அ, ஒரெழுத்து, 2. மருதநிலத்தூர், 3. பார்ப்பனச்சேரி, 4. இரசம்.
அகராதி-நெடுங்கணக்கிலுள்ளபடி அகர முதலிய எழுத்துக்களாலாய சொற்கோவை.
அகரு—அகில்.
அகலம்—விரிவு, 2. மார்பு.
அகலவுரை—விரிவுரை.
அகலிகை—கௌதம முனிவர் பத்தினி.
அகல்—தகழி, 2. ஒருமரம், 3. விரிவு.
அகலுள்—அகலம், 2. ஊர், 3. நாடு, 4. பெருமை.
அகவல்—மயிற்குரல், 2. கூத்து, 3. ஆசிரியப்பா.
அகவு—(வி) அழை, 2. (வி) ஆடு.
அகவை—உட்பொருள், 2. வயது.
அகழ—(வி) தோண்டு.
அகழான்—வயலெலி.
அகழி—மதில்சூழ் கிடங்கு.
அகழ்—அகழி, 2. (வி) தோண்டு.
அகளங்கம்—சுத்தம், 2. சீதாங்க பாஷாணம்.
அகளம்—மிடா, 2. தாழி, 3. நிட்களம்.
அகற்று—(வி) நீக்கு.
அகஸ்மாத்து—தற்செயல்.
அகன்றில்—ஆணன்றில்.
அகாதம்—ஆழம், 2. பொந்து, 3. நீந்துபுனல், 4. வஞ்சகம்.
அகாதன்—வஞ்சகன்.
அகாத்தியம்—பொல்லாங்கு, 2. உண்ணத்தகாதது.
அகாரம்—அ என்னும் எழுத்து, 2. வீடு.
அகாரணம்—காரணமின்மை.
அகாரியம்—காரியமல்லாதது.
அகாலமிருத்து—அனியாய மரணம்.
அகாலம் — பருவமின்மை, 2. பஞ்சகாலம்.
அகி—பாம்பு, 2. இரும்பு.
அகிஞ்சனன்—தரித்திரன்.
அகிருத்தியம்—அக்கிரமம்.
அகிதம் — இதமின்மை, 2. பகை, 3. ஏலாமை, 4. உரிமையின்மை.
அகிம்சை — கொல்லாமை, பிறவுயிருக்குத் தீங்குசெய்யாமை.
அகிலம்—எல்லாம், 2. பூமி.
அகிலாண்டம்—சர்வலோகம்.
அகிலாண்டவல்லி—பார்வதி.
அகில்—ஓர் மரம், அகில்வாசம்.
அகிற்கூட்டு — ஏலம், கருப்பூரம், எரிகாசு, சந்தனம், தேன் இவைகளின் கூட்டு; கூந்தலுக்கு வாசனையூட்டப் பயன்படுவது.
அகுணம் — குற்றம், 2. குணவீனம், 3. இலட்சணமின்மை.
அகூபாரம்—ஆமை, 2. கடல்.
அஃசைதல்—(தொ. பெ) எரிதல், 2. ஒடித்தல், 3. தளிர்த்தல், 4. வருந்தல்.
அஃகைத்தல்—(தொ. பெ) அடித்தல், 2. ஒட்டுதல், 3. முறித்தல், 4. வருத்தல்.
அகோ—ஓர் அதிசயச்சொல்.
அகோசரம்—அறியொணாமை.
அகோபிலம்—ஒரு விஷ்ணுதலம்.
அகோரம் — கொடுமை, 2. சிவன் ஐம்முகத்தொன்று.
அகோராத்திரம்—பகலுமிரவும்.
அக்கசாலை—கம்பட்டசாலை, 2. அணிகலன் செய்யுமிடம்.
அக்கடா—ஓய்வு குறிக்கும் ஓர் இடைச்சொல். (உ-ம்) இத்தொல்லை ஒழிந்தால் அக்கடாவென்றிருக்கலாம்.
அக்கணம்—அந்த நிமிஷம்.
அக்கதம் — அட்சதை, 2. பங்கப்படாதது.
அக்கதேவி—சோனைப்புல்.
அக்கதை—மங்கலவரிசி.
அக்கபாதன் — நியாய சூத்திரஞ்செய்த கௌதம முனிவன்.
அக்கமாலை—உருத்திராக்ஷமாலை.
அக்கம்—தானியம், 2. கயிறு, 3. பக்கம்.

அக்கம்—கண், 2. உருத்திராட்சம்.
அக்கரம் — அழியாதது, 2. எழுத்து, 3. பிரமம்.
அக்கரன்—அழிவில்லாதவன், 2. கூடஸ்தன்.
அக்கராகாரம்—ஒரு பூண்டு.
அக்கறை—அவசியம்.
அக்கன் -கருடன், 2. குருடன், 3. நாய்.
அக்கா—தாய்.
அக்கா—தமக்கை, 2. மூதேவி.
அக்காரம்—சருக்கரை, 2. சீலை.
அக்காரவடிசில்—சர்க்கரையன்னம்.
அக்காள்—அக்கா.
அக்கி — கண், 2. அக்கினி கரப்பன், 3. உஷ்ணம், 4. அக்கினி.
அக்கியாதம்—மறைவு.
அக்கியானம்—அஞ்ஞானம்.
அக்கிரகண்ணியன்—சபையில் முதல்வனாக மதிக்கப்படுபவன்.
அக்கிரகாரம்—பார்ப்பனச்சேரி.
அக்கிரசம்பாவனை—முன்மரியாதை.
அக்கிரசன்மன்—அண்ணன், 2. பிராமணன்.
அக்கிரதாம்பூலம்—முதற்றாம்பூலம்.
அக்கிரமம் — கொடுமை, 2. ஒழுங்கின்மை.
அக்கிராரம்—அக்கிரகாரம்.
அக்கினி — தீ, 2. அக்கினிபகவான், 3. செங்கொடிவேலி.
அக்கினிகாரியம் — ஓமத்தீ வளர்த்தல்.
அக்கினிகோத்திரம் — யாகமிருபத்தொன்றில் ஒன்று.
அக்கினிட்டோமம்—சோமயாகம்.
அக்கினித்தம்பம்—நெருப்புச் சுடாமற் செய்யும் வித்தை.
அக்கினிப்பிரவேசம்—தீயிற்குதித்தல்.
அக்கினிப்பிழம்பு—நெருப்புச் சுவாலை.
அக்கினிமூலை—தென்கிழக்கு மூலை.
அக்கு—பலகறை, 2. சங்குமணி, 3. உருத்திராட்சம், 4. எருத்துத்திமில், 5. எலும்பு.
அக்குரூரன் — ஸ்ரீ கிருஷ்ணன் தகப்பனோடு பிறந்த ஒரு யாதவன்.
அக்குரோணி — 21,870 யானையும், 65,610 குதிரையும், 21,870 தேரும், 1,09,350 காலாளும் கொண்ட ஒரு சேனைத்தொகை.
அக்குல்லி—உக்காரி, 2. சிற்றுண்டி.
அக்குள்—கக்கம்.
அக்கை—அக்கா.
அக்கோலம்—தேற்றாங்கொட்டை.
அக்கௌகிணி—அக்குரோணி.
அக்ரமம்—அக்கிரமம்.
அங்கசேட்டை—உடம்பினது சலனம், 2. கைமெய் காட்டு.
அங்கணம் — முற்றம், 2. சலதாரை, 3. சேறு, 4. வெண்காரம்.
அங்கணன்—சிவன், 2. மகா விட்டுணு, 3. அருகன்.
அங்கதம் — தோளணி, 2. பாம்பு, 3. பொய், 4. வசைச்சொல்.
அங்கத்தி — பண்டாரங்களை மரியாதையாகக் கூப்பிடுந் தாங்களென்னும் பொருள் படுகிற ஒருசொல்.
அங்கநியாசம் — இருதயம் முதலிய உறுப்புகளிலே மந்திரத்தோடு கையாற்றொடுதல்.
அங்கபடி -குதிரையங்கவடி.
அங்கப்பிரதக்கணம் — தேகத்தாற் புரண்டு வலமாகவருதல்.
அங்கம் — அவயவம், 2. உடல், 3. அடையாளம், 4. கட்டில், 5. ஓர் பாஷை, 6. ஓர் தேயம்.
அங்கயற்கண்ணி — மீனாட்சி யம்மையார்.
அங்கயோகம் — எண்வகை யோகத்திலொன்று.
அங்கரக்கா—மெய்ச்சட்டை.
அங்கலாய்த்தல் — (தொ. பெ) துக்கித்தல், 2. இச்சித்தல்.
அங்கவடி—குதிரை ஏறும் படி.
அங்கனை — பெண்.
அங்காடி—கடைவீதி.
அங்காத்தல் — (தொ. பெ) வாய்திறத்தல், 2. கொட்டாவி விடல்.
அங்காரகன்—நெருப்பு, 2. செவ்வாய்.
அங்காளம்மை—காளி.
அங்காளி—அங்காளம்மை.

அங்கி—சட்டை, 2. கார்த்திகை, 3. அக்கினி.
அங்கிகரி—ஏற்றுக்கொள்.
அங்கிகாரம்—ஏற்றுக்கொள்கை.
அங்கிசம்—உபநிடதம் முப்பத்திரண்டினொன்று, 2. கூறு.
அங்கிதம் — உடற்றழும்பு, 2. பாட்டுடைத்தலைவன்.
அங்கிடுதத்தி—நாடோடி, 2. நிலைகெட்டவன்.
அங்கிடுதுடுப்பன்—நாடோடி.
அங்கிட்டோமம்—அக்கினிஷ்டோமம்.
அங்கிரி—கால்.
அங்கீகாரம்—சம்மதம்.
அங்கு—அவ்விடம்.
அங்குசம்—யானைத்தோட்டி.
அங்குசபாணி—விநாயகன், 2. காளி.
அங்குசரோசனம்—(வை-அ) கூகைநீறு.
அங்குட்டம்—பெருவிரல், 2. குறளுரு.
அங்குஷ்டான்—தையற்காரர் விரலிலே அணியும் கூடு.
அங்குரம்—முளை, 2. குப்பைமேனி.
அங்குரித்தல் — (தொ. பெ) முளைத்தல்.
அங்குலம்—விரலகலம் ($\frac{1}{12}$ அடி).
அங்குலி — விரல், 2. யானைக்கைநுனி 3. மோதிரம்.
அங்குலிகம்—மோதிரம்.
அங்கூரம்—தளிர்.
அங்கை—உள்ளங்கை.
அங்ஙனம்—அவ்விடம், 2. அவ்விதம்.
அசககாந்தரம் — ஆட்டுக்கும் யானைக்கும் உள்ள பேதம்.
அசகம்—மலையாடு.
அசகாயம்—சகாயமின்மை.
அசக்கியம்—இயலாமை, 2. நாகமணல்.
அசங்கதம்—இகழ்ச்சி, 2. ஒழுங்கின்மை.
அசங்கியம்—அருவருப்பு.
அசங்கு—அசை.
அசங்கை—மதிப்பின்மை.
அசஞ்சலம்—அசைவின்மை.
அசடன்—கீழ்மகன், 2. சோம்பேறி.
அசடு—கீழ்மை, 2. குற்றம், 3. உலோகங்களிற் பேரும் பொருக்கு.
அசட்டை -பராமுகம், 2. மதியாமை.

அசதி—சிரித்துப்பேசுகை, 2. சடுதி, 3. சோர்வு. 4. ஔவையாரால் புகழ்ந்து பாடப்பெற்ற ஓர் இடையன்.
அசதியாடல்—(தொ. பெ) மிகுதியாகச் சிரித்துப் பேசுதல்.
அசத்தன்—வலிவில்லாதவன், 2. உலகப்பற்றில்லாதவன்.
அசத்தி—பலவீனம்.
அசத்தியம்—பொய்.
அசத்து—தீயது, 2. மாயை.
அசத்துக்கள்—அற்பர்.
அசந்தர்ப்பம் — சமயமின்மை, 2. சரிப்படாமை.
அசபம்—அசபா என்னும் ஓர் மந்திரம்.
அசபை—அசபா.
அசப்பியம்—சபையில் ஏற்காதசொல்.
அசமந்தம்—மலையத்தி, 2. மந்தகுணம், 3. சம்பந்தமின்மை.
அசமயம்—ஒவ்வாச் சமயம்.
அசம்—ஆடு, 2. மூவருடநெல், 3. வெங்காயம்.
அசம்பவம் — அதிசயம், 2. தருக்கநூலின் முகக்குற்றத்திலொன்று, 3. பிறவாமை.
அசம்பாவிதம்—சம்பவிக்கக்கூடாதது.
அசம்பிரேட்சிதம் -ஆராய்வின்மை.
அசம்மதம்—சம்மதமின்மை.
அசரம்—அசைவில்லாதது.
அசரீரி—ஆகாசவாணி.
அசரை—ஓர் மீன்.
அசர்—தலைச்சுண்டு.
அசர்தல்—(தொ.பெ) அயருதல்.
அசலம்—அசையாநிலை, 2. மலை.
அசல் — அருகாமை, 2. உயர்ந்தது, 3. முதற்பிரதி.
அசறு—தலைச்சுண்டு.
அசனம்—சோறு, 2. போசனம், 3. வேங்கைமரம்.
அசனி—இடி, 2. வச்சிராயுதம்.
அசன்—பிறப்பில்லாதவன், 2. பிரமன்.
அசா—தளர்ச்சி.
அசாகசம்—பொய்.
அஜாகளம்—ஆட்டின் அதர்.
அசாக்கிரதை—விழிப்பின்மை.

அசாதசத்துரு—தனக்குப்பகைவரில்லாதவன், 2. தருமபுத்திரன்.
அசாதாரணம் — சிறப்பு, 2. பொதுவின்மை.
அசாத்தியம் — இயலாமை, 2. குணமாகாமை.
அசாவேரி—ஓர் ராகம்.
அசி—வாள்.
அசிங்கம்—அவலக்ஷணம்.
அசிதம்—சிவாகமம், 2. கருமை.
அசித்து—சடம்.
அசிந்தியம்—ஓரெண், 2. சிந்தைக்கெட்டாமை.
அசிபதம்—தத்துவமசி என்னும் மஹாவாக்கியத்தின் மூன்றும் பதம்.
அசிரத்தை—சிரத்தையின்மை.
அசினம்—தோலாசனம்.
அசீரணம் — செரியாமை, 2. பசியின்மை.
அசுசி—சுத்தமின்மை, 2. அருவருப்பு.
அசுணமா—கேகயப்புள்.
அசுத்தம்—சுத்தமின்மை.
அசுத்தி—அழுக்கு.
அசுபதி—அசுவினி.
அசுபம்—அமங்கலம்.
அசுப்பு—சடுதி.
அசும்பு—வழுக்கு நிலம், 2. கிணறு, 3. பொல்லா நிலம்.
அசுரகுரு—சுக்கிரன்.
அசுரசந்தி — இரணியவேளை, 2. சாயங்காலம்.
அசுரர்—இராக்கதர்.
அசுவதாட்டி—குதிரையின் வேகம்.
அசுவத்தம்—அரசமரம், 2. அத்திமரம்.
அசுவத்தாமன்—துரோணன் மகன்.
அசுவமேதம்—ஓர் யாகம்.
அசுவம்—குதிரை.
அசுவினி—ஒரு நட்சத்திரம்.
அசூயை—பொறாமை, 2. அவதூறு.
அசூர்—சமூகம்.
அசேஷம்—முழுமை.
அசேதனம்—அறிவின்மை.
அசை—அசை நிலை, 2. இசைப்பிரிவு, 3. செய்யுளுறுப்பி லொன்று.
அசைதல் — (தொ. பெ) ஆடுதல், 2. இருத்தல், 3. உலாவல், 4. சோம்புதல், 5. கலங்குதல்.
அசைதன்னியம்—அறிவில்லாதது.
அசைத்தல்—(தொ பெ) ஆட்டல், 2. கட்டுதல், 3. சொல்லுதல்.
அசைபோடல்—(தொ. பெ) இரைமீட்டல்.
அசையாமணி—ஆராய்ச்சி மணி, முக்கியமான வேலைகளில் அடிக்கு மணி.
அசையிடல் — (தொ. பெ) அசைபோடல்.
அசைவு—(தொ பெ) ஆட்டம், 2. சஞ்சலம், 3. சோர்வு.
அசோகம் — சோகமின்மை, 2. ஒரு மரம், 3. மன்மதன் கணை.
அசோகன்—அருகன்.
அசோகு—அசோகமரம்.
அசோதை—நந்தகோபன் மனைவி.
அச்சகாரம்—முன்பணம்.
அச்சணம்—அக்கணம், அந்த நிமிஷம்.
அச்சம்—பயம், 2. மகளிர் நாற்குணத்திலொன்று, 3. தகடு, 4. இலேசு.
அச்சரம்—நாவில் வருமோர் வியாதி.
அச்சன்—தந்தை.
அச்சாணி—வண்டி சக்கரத்திற் கிடும் கடையாணி.
அச்சாரம்—முன்பணம்.
அச்சி—ஓர் தேசம்.
அச்சி நறுவிலி—நறுவிலிமரம்.
அச்சு — அடையாளம், 2. உயிர், 3. வண்டி யச்சு, 4. கட்டளைக்கருவி, 5. உயிரெழுத்து.
அச்சுதம்—கெடுதலின்மை.
அச்சுதன்—அழிவில்லாதவன், 2. மகாவிஷ்ணு.
அச்சுவதி—அசுவினி.
அச்சுவத்தாமா—ஒரு யுத்தவீரன்.
அச்சுவம்—குதிரை.
அச்சுவினி—அசுவினி.
அச்சுவினிதேவர்—தேவ மருத்துவர்.
அச்சுறல்—(தொ. பெ) பயப்படுதல்.
அச்சுறுத்தல் — (தொ. பெ) பயப்படுத்தல்.

அச்சோ–ஓர் அதிசயச்சொல், 2. ஓரிரக்கச்சொல்.
அஞர்–துன்பம்.
அஞ்சம்–அன்னப்புள்.
அஞ்சலி–கும்பீடு.
அஞ்சலிகை–வௌவால்.
அஞ்சல்–(தொ. பெ) பயப்படுதல், 2. தபால்.
அஞ்சனப்பெட்டி–மை வைத்திருக்கும் பெட்டி.
அஞ்சனம்–கண்ணுக்கிடுமை, 2. கறுப்பு, 3. இருள், 4. திசையானைகள் எட்டனுள் மேற்றிசையானை.
அஞ்சனவண்ணன்–திருமால்.
அஞ்சனவித்தை–மறைந்த பொருளைக் காண்பிப்பது.
அஞ்சனை–அனுமன்தாய்.
அஞ்சாமை–பயப்படாமை.
அஞ்சிக்கை–பயம்.
அஞ்சு–ஐந்து.
அஞ்சுகம்–கிளி.
அஞ்சுதல் – (தொ. பெ) பயப்படுதல்.
அஞ்சுருவாணி–அச்சாணி.
அஞ்ஞதை–அறியாமை.
அஞ்ஞன்–அறிவிலான்.
அஞ்ஞாதம் – பிறர் அறியாமை, 2. மறைவு.
அஞ்ஞானம்–ஞானமின்மை.
அடகு–இலைக்கறி, 2. கொதுவை.
அடக்கம்–ஒடுக்கம், 2. கீழ்ப்படிவு, 3. பிரேதமடக்குகை.
அடக்கு–கீழ்ப்படுத்து, 2. குறை.
அடங்கலர்–பகைவர்.
அடங்கல்–முழுதும்.
அடங்குதல்–(தொ. பெ) அமைதல்.
அடடா–அதிசயக்குறிப்பு.
அடத்தி–வாசி, (வட்டமாகக் கழிக்கும் காசு).
அடப்பம்–வெற்றிலைப்பை, 2. அம்பட்டன் கருவிப்பை.
அடப்பனர்–நெய்தற் றலைவனது பட்டப்பெயர்.
அடமானம்–அடைமானம்.
அடம்–சஞ்சாரம்.
அடம்பு–அடம்பங்கொடி.
அடர்–செறிவு, 2. தகடு.
அடர்த்தி–நெருக்கம்.
அடர்ப்பம்–நெருக்கம்.
அடலை–சாம்பல், 2. போர்க்களம்.
அடல்–வலி, 2. போர், 3. வெற்றி.
அடவி–காடு, 2. சோலை, 3. கூட்டம்.
அடாசு–மட்கிச் செத்தது.
அடாணு–ஓரிராகம்.
அடாதது–தகாதது.
அடார் – புலி முதலியவைகளை அகப்படுத்தும் பொறியாகிய கல்லடார்.
அடாவந்தி–அநியாயம், 2. துன்பம்.
அடி–ஆதி, 2. வமிசவழி, 3. செய்யுளினுறுப்பு, 4. கால், 5. காற்சுவடு, 6. கீழ்.
அடி–(வி) வீசு, 2. மோது, 3. கொல்லு.
அடிகள்–கடவுள், 2. முனிவர், 3. குருக்கள்.
அடிகோலல்–(தொ. பெ) முயற்சிசெய்தல்.
அடிக்கடி–பலமுறை.
அடிக்குடி–அடிச்சேரி.
அடிக்குள்–உடனே.
அடிசில்–சோறு
அடிச்சால்–உழவின் முதற்சால்.
அடிச்சி–அடியாள்.
அடிச்சுவடு–காற்சுவடு.
அடிச்சேரி–சமீபகிராமம்.
அடிஞானம்–முத்திக்குரிய ஞானம்.
அடிதலை–கீழ் மேல், 2. ஆதியந்தம்.
அடித்தல்–(தொ பெ) அறைதல்.
அடித்தலம்–கீழிடம், 2. அஸ்திவாரம்.
அடித்தழும்பு–காற்சுவடு, 2. அடிபட்ட தழும்பு.
அடிநா–நாவினடி.
அடிபணிய–(வி) நமஸ்காரம் செய்ய.
அடிபிடி–சண்டை.
அடிபெயர்தல்–(தொ.பெ) விலகுதல்.
அடிப்படுத்தல்–(தொ. பெ) கீழ்ப்படுத்தல்.
அடிப்படை–ஆதாரம்.
அடிப்பட்ட சான்றோர் – பரம்பரைப் பெரியோர்.

அடிப்பந்தி—முதற்பந்தி.
அடிப்பாடு—பழக்கம், 2. பாதை.
அடிமடி—உள்மடி.
அடிமடை—முதல்மடை.
அடிமுடி—வரலாறு, 2. ஆதியந்தம்.
அடிவாரம்—மலைச்சாரல்.
அடிவானம்—திகாந்தம்.
அடிவீழ்தல்—(தொ.பெ) வணங்கல்.
அடிவெண்குருத்து—முருந்து.
அடிவைத்தல்—(தொ.பெ) நலையிடல், 2. நடக்கத் தொடங்கல்.
அடுகலம்—சமையல்செய்யும் பாத்திரம்.
அடுகளம்—யுத்தபூமி.
அடு—(வி) தீயிற் பாகமாக்கு, 2. சேர்.
அடுக்கம்—மலைப்பக்கம்.
அடுக்கல் — (தொ.பெ) ஒன்றன்மேல் ஒன்றுவைத்தல், 2. குவித்தல்.
அடுக்கல்—(பெ) மலை.
அடுக்களை—சமையல் வீடு.
அடுக்கு — வரிசை, 2. அடுக்குச்சொல், 3. சேர்மானம்.
அடுசிலைக்காரம்—செந்நாயுருவி.
அடுதல் — (தொ. பெ) கொல்லல், 2. சமைத்தல், 3. மேற்கொள்ளல்.
அடுத்தல்—(தொ. பெ) கிட்டல், 2. சம்பவித்தல், 3. சேர்தல்.
அடுப்பங்கரை—அடுப்பின்பக்கம்.
அடுப்பு—சேர்கை, 2. பரணிநாள், 3. ஆச்சம், 4. தீவாய்ப்பக்கம்.
அடை—ஓர் பணிகாரம், 2. இலை, 3. கனம், 4. கொதுவை, 5. அபயம்.
அடைகல் — மதகு அடைக்கும் கல், 2. கம்மப்பட்டடை.
அடைகாத்தல் — (தொ. பெ) கோழி முதலியவை அடைகிடத்தல்.
அடைகாய்—வெற்றிலை, பாக்கு.
அடைகிடத்தல்—குஞ்சு புறப்பட முட்டையைக் காத்தல்.
அடைகுளம் — வாய்க்கால் இல்லாத குளம்.
அடைக்கலக் குருவி—ஊர்க்குருவி.
அடைக்கலம் — சரண்புகல், 2. பாதுகாவற் கொப்பித்த பொருள், 3. புகலிடம்.
அடைக்கலாங்குருவி — அடைக்கலக் குருவி.
அடைசுதல் — (தொ.பெ) ஒதுங்குதல், 2. கிட்டுதல், 3. ஒதுக்குதல்.
அடைச்சுதல்—(தொ.பெ) செருகுதல்.
அடைதல்—(தொ. பெ) சேருதல், 2. பெறுதல், 3. கூடுதல்.
அடைத்தல் — (தொ. பெ) சேர்த்தல், 2. தடுத்தல், 3. பூட்டல், 4. வெளியை மறைத்தல்.
அடைந்தோர்—உறவோர்.
அடைப்பம்—அம்பட்டனாயுதவுறை, 2. வெற்றிலைப்பை.
அடைப்பன்—மாடுகள் தொண்டையிற் காணும் ஓர் வியாதி.
அடைப்பு— மறைப்பு, 2. வேலி.
அடைப்பை—வெற்றிலைப்பை.
அடைமழை— விடாமழை.
அடைமாங்காய்—மாங்கா யூறுகாய்.
அடைமானம்—ஈடு, 2. உவமை.
அடைமொழி—விசேடண மொழி.
அடைய—(வி) சேர.
அடையலர்—பகைவர்.
அடையாளம்—அறிகுறி, 2. சின்னம்.
அடைவு—ஈடு, 2 முறை.
அட்சதை—மங்கலவரிசி.
அட்சபாதன்—கௌதம ரிஷி.
அட்சம்—உருத்திராக்ஷம், 2. கண்.
அட்சய—ஒரு வருஷம்.
அட்சயதூணி—அருச்சுனனம்புக் கூடு.
அட்சயபாத்திரம்—பிச்சைப் பாத்திரம்.
அட்சரகணிதம்—பீசகணிதம்.
அட்சரம்—எழுத்து.
அட்சி—கண்.
அட்சௌகிணி—அக்குரோணி.
அட்டகம்—எட்டின் கூட்டம், 2. வடமொழியினோர் பிரபந்தம்.
அட்டகாசம்—பெருநகை.
அட்டணைக்கால்—மடித்தகால.
அட்டமம்—எட்டாவது.
அட்டமி—எட்டாந்திதி.
அட்டமூர்த்தி—சிவன்.
அட்டம்—எட்டு, 2 குறுக்கு, 3. பக்கம்.

**அட்டல்**—(தொ. பெ) நெருப்பிற் காய்ச்சுதல், 2. அழித்தல்.
**அட்டவணை**—வரிசைக்குறிப்பு.
**அட்டவிஞ்சதி**—இருபத்தெட்டு.
**அட்டாக்கரம்** — ஸ்ரீ மகாவிஷ்ணுவைப் பூஜிக்குமோர் மந்திரம்.
**அட்டாதசம்**—பதினெட்டு.
**அட்டாதுட்டி** — மிக்க துடுக்குத்தனம்.
**அட்டாலம்**—மேல்வீடு.
**அட்டாலிகை**—மேல்வீடு.
**அட்டாவதானம்** — ஒரேவேளையிலெட்டுக் காரியத்தைச் சிந்திக்கை.
**அட்டாவளா**—ஓர் மரம்.
**அட்டி**—தடை, 2. அதிமதுரம்.
**அட்டிகை**—ஓர்வகைக் கழுத்தணி.
**அட்டிமை**—ஓமம்.
**அட்டியல்**—அட்டிகை.
**அட்டில்**—மடைப்பள்ளி.
**அட்டுதல்**—(தொ. பெ) வார்த்தல்.
**அட்டுப்பு**—காய்ச்சிய உப்பு.
**அட்டை**—நீர் வாழ்வனவற்றி லொன்று, 2. செருப்பினடி, 3. காகித அட்டை.
**அட்டோலகம்**—ஆடம்பரம்.
**அணங்காடுதல்**—(தொ. பெ) வெறியாடுதல்.
**அணங்கு**—தெய்வம், 2. தெய்வப்பெண், 3. அழகு, 4. ஆசை, 5. நோய், 6. கொலை, 7. அச்சம், 8. தேவர்க்காடும் கூத்து.
**அணங்குதல்**—(தொ. பெ) கொல்லுதல், 2. விரும்புதல், 3. அஞ்சுதல்.
**அணங்குதாக்கு**—(தொ. பெ) காமநெறியாகத் தெய்வப்பெண் (மோகினி) பிடித்தல்.
**அணம்**—மேல்வாய்.
**அணல்**—கீழ்வாய், 2. மிடறு, 3. தாடி.
**அணவல்**—(தொ. பெ) நெருங்கல், 2. இணைதல்.
**அணுப்பல்** (தொ. பெ) எய்த்தல்.
**அணி**—அழகு, 2. ஆபரணம், 3. கூட்டம், 4. அடுக்கு, 5. அலங்காரம், 6. படைவகுப்பு.
**அணிகலச்செப்பு**—ஆபரணப் பெட்டி.
**அணிகலம்**—ஆபரணம்.
**அணிகம்**—சிவிகை.
**அணிகலன்**—ஆபரணம்.
**அணிஞ்சில்**—அழிஞ்சில், 2. கொடிவேலி, 3. நொச்சி, 4. முள்ளி.
**அணிதல்**—(தொ. பெ) அலங்கரித்தல், 2. பூணல், 3. உடுத்தல்.
**அணிநுணா**—சீத்தா என்னும் மரம்.
**அணிநிதம்**—கோபுரவாசலின்மேடை.
**அணிந்துரை**—பாயிரம்.
**அணிமா**—அணுவளவாகச் சுருங்கல்.
**அணிமை**—சமீபம்.
**அணியம்** — கப்பலின் முற்பக்கம், 2. படைவகுப்பு.
**அணியல்**—அணிதல், 2. மாலை.
**அணில்**—அணிற்பிள்ளை.
**அணிவகுத்தல்**—(தொ. பெ) படைவகுத்தல்.
**அணிவிரல்**—மோதிரவிரல்.
**அணு** — நுண்மையானது, 2. சிறுமை, 3. ஆன்மா.
**அணுகலர்**—அயலார், 2. பகைவர்.
**அணுகல்**—(தொ பெ) கிட்டல்.
**அணுக்கத் தொண்டர்** — அந்தரங்க (சீடர்) அடியார்.
**அணுக்கர்**—சினேகர்.
**அணுக்கு**—சமீபம்.
**அணுத்துவம்**—அணுத்தன்மை.
**அணுமை**—சமீபம்.
**அணுரூபி**—கடவுள், 2. ஆன்மா.
**அணை**—வரம்பு, 2. அணைகட்டு, 3. மெத்தை, 4. முட்டு, 5. படுக்கை.
**அணைகயிறு**—பசுவைப் பால் கறக்கக் கட்டுங் கயிறு.
**அணைக்கட்டு**—வரம்புக்கட்டு.
**அணைதல்** — (தொ. பெ) சேர்தல், 2. அவிதல்.
**அணைதறி**—யானை கட்டும் கயிறு.
**அணையாடை**—எணைத்துகில்.
**அணையார்**—பகைவர்.
**அண்டகம்**—குப்பைமேனி.
**அண்டகடாகம்**—அண்டகோள ஓடு.
**அண்டகோசம்** — முட்டை வடிவான அண்டம்.

அண்டங்காக்கை—உடல் முழுமையும் கருநிறமுடைய காகம்.
அண்டசம்—முட்டையிற் செனிக்கும் உயிர்கள்.
அண்டா -பெரும்பாத்திரம்.
அண்டபிண்டம்—பிரமாண்டமுந் தேகமும்.
அண்டமுகடு—அண்டத்தினுச்சி.
அண்டம் — முட்டை, 2. உலகம், 3. ஆகாயம், 4. பீசம்.
அண்டரண்டம்—தேவருலகு.
அண்டரண்டப்பட்சி — ஒரு பெரும் பறவை.
அண்டர் - தேவர், 2. இடையர், 3. பகைவர்.
அண்டர்பிரான்-மகாவிஷ்ணு, 2. சிவன்.
அண்டலர்—பகைவர்.
அண்டல்—(தொ. பெ) நெருங்கல்.
அண்டவாணர்—தேவதைகள்.
அண்டவாதம்—விரைவாதம்.
அண்டவாயு—ஓர் நோய்.
அண்டாகாரம்—முட்டைவடிவம்.
அண்டார்—பகைவர்.
அண்டிகம்—செந்நாய்.
அண்டில்—மாடு முதலியவற்றின் கண்ணிற்பற்றும் ஒரு பூச்சி.
அண்டுதல்—(தொ. பெ) நெருங்குதல்.
அண்டை—சமீபம், 2. முட்டு, 3. வரம்பு.
அண்ணந்தாள் — கழுத்திற்கும் காலுக்கும் பூட்டுங்கயிறு.
அண்ணம்—மேல்வாய், 2. அண்ணு.
அண்ணல்—பெருமை, 2. பெருமையிற் சிறந்தோன், 3. தமையன், 4 அரசன், 5. புத்தன்.
அண்ணன்—தமையன்.
அண்ணு—உண்ணாக்கு.
அண்ணுத்தல் — (தொ. பெ) அங்காத்தல், 2. மேனோக்கல்.
அண்ணுமலை—அருணுசலம்.
அண்ணுவி—உபாத்தியாயன்.
அண்ணி—தமையன் மனைவி.
அண்ணித்தல்—(தொ. பெ) பொருந்துதல், 2. மதுரித்தல்.
அண்ணுதல்—(தொ. பெ) அணுகுதல் 2. பொருந்துதல்.
அண்பல்—மேல்வாய்ப்பல்.
அண்மு—கிட்டு.
அண்மை—சமீபம்.
அதகம்—மருந்து.
அதக்கு—(வி) கசக்கு, 2. இளக்கு, 3. குதப்பு.
அதடம்—செங்குத்து.
அதட்டம்—அரவுயிர்ப்பு, 2. நச்சுப்பல்.
அதட்டு—(வி) கண்டி, 2. உறுக்கு.
அதப்பியம்—சபைக்கடாத சொல்.
அதமதானம்—கடைப்படுதானம்.
அதமம்—கடைத்தரம்.
அதமன்—தாழ்ந்தவன்.
அதம்—தாழ்வு, 2. பள்ளம், 3. பாதாளம், 4. சங்காரம்.
அதமர்ணிகன்—வாங்கினகடனைத் தராதவன்.
அதமாங்கம்—கால்.
அதரம்—கீழுதடு, 2. உதடு.
அதரிகொள்ளுதல்—(தொ. பெ) கடாவிடுதல்.
அதரிதிரித்தல்-(தொ பெ) கடாவிடுதல்.
அதரித்திநன் -கன்னன், 2. செல்வன்.
அதருமம்—பாவம்.
அதர் — வழி, 2. புழுதி, 3. ஆட்டின் கழுத்தினதர்.
அதர்கொளல்—(தொ பெ) வழிப்பறித்தல்.
அதர்கோள்—வழிப்பறி.
அதர்வணம்—நான்காம் வேதம்.
அதலகுதலம்—கலகம்.
அதலம்—கீழேழுலகத்தொன்று.
அதவம்—அத்திமரம்.
அதவிடம்—அதிவிடயம் (ஒரு மூலிகை).
அதவு—அத்திமரம்.
அதவுதல்—(தொ. பெ) கொல்லுதல்.
அதழ்—பூவிதழ்.
அதளி—அமளி.
அதளை—ஓர் பெரும்பாத்திரம், 2. புளியதளை, 3. வயல் வெளியிற் கட்டுங் காவற் குடிசை.
அதள்—தோல்.

அதறு—பதறு.
அதனப்பிரசங்கி—அகங்காரி.
அதனம்—மிகுதி.
அதன்மம்—அதர்மம்.
அதாதா—உலோபி.
அதாலத்து—நியாயஸ்தானம்.
அதி—மிகுதிப்பொருளைக் காட்டும் அசைச்சொல்.
அதிகடம்—யானை.
அதிகண்டம்—மரணாவஸ்தை.
அதிகப்பிரசங்கம் — மிகுதியாகப் பேசுகை, 2. தன் மேம்பாட்டுரை.
அதிகம் — மிகுதி, 2. பொலிவு, 3. மேன்மை, 4. இலாபம், 5. குருக்கத்தி.
அதிகரணம்—நிலைக்களம்.
அதிகன்—மேலானவன், 2. ஒருவள்ளல்.
அதிகாசம்—பெருநகை.
அதிகாயன்—மிகப் பெருஞ்சரீரமுடையவன், 2. இராவணன் மக்களில் ஒருவன்.
அதிகாரம்—அதிகரித்தல், 2. தலைமை, 3. ஆரம்பம், 4. நூற்கூறுபாடு, 5. உத்தியோகம், 6. ஒழுங்கு.
அதிகாரி—அதிபதி, 2. சம்பந்தமுடையவன், 3. நூல்செய்வித்தோன், 4. நூல் கேட்டற்குரியோன்.
அதிகாலை-விடியற்காலம்.
அதிகை — நடுநாட்டிலே உள்ள ஒரு சிவஸ்தலம்.
அதிக்கிரமம்—அக்கிரமம்.
அதிங்கம்—அதிமதுரம்.
அதிசயம்—ஆச்சரியம், 2. புதுமை, 3. அற்புதம், 4. ஓரலங்காரம்.
அதிசயன்—அருகன்.
அதிசயித்தல்—அதிசயங்கொள்ளல்.
அதிசயோத்தி — மிகக்கூறுமோரலங்காரம்.
அதிசரம்—நெட்டுயிர்ப்பு.
அதிசாக்கிரதை—மிகு விழிப்பு.
அதிசாரணம்—மாவிலிங்கு.
அதிசாரம்—உஷ்ணபேதி.
அதிசீக்கிரம்—மிகுசுறுக்கு.
அதிசூக்குமம்—மிகுநுண்மை.
அதிட்டச்செல்லி—இந்திரபாஷாணம்.
அதிட்டம்—நல்லனுபோகம், 2. மிளகு.
அதிட்டாதா—ஆளுமதிபதி.
அதிட்டானம்—நிலை, 2. காரியத்திற்குக் காரணம், 3. பட்டினம்.
அதிட்டித்தல்—(தொ. பெ) நிலைபடுத்தல், 2. ஆவாகனமாதல்.
அதிட்டேயம்—அதிட்டிக்கப்பட்ட பொருள்.
அதிதலசிலேட்டுமம்—ஒருவகை சிலேட்டும நோய்.
அதிதவளம்—மிகு வெண்மை.
அதிதனு—பொன்.
அதிதாதா—பெருங்கொடையாளன்.
அதிதாரம்—இலந்தை.
அதிதி—காசிபப்பிரமாவின் மனைவிகளிலொருத்தி, 2. விருந்தாய் வந்தவன், 3. பரதேசி, 4 சப்தப் பிதிர்களிலொருவர்.
அதிதிசேவை—விருந்தினரை உபசரித்தல்.
அதிதிபூசை—பரதேசிக்கன்னமிடல்.
அதிதீவிரம்—மிகக்கடுமை.
அதிதெய்வம்—மேலான தெய்வம்.
அதிதேசம் — ஒப்புமைகாட்டி யுணர்த்துவது.
அதிதேவதை—குலதெய்வம்.
அதிநுட்பம்—மிக்க நுண்மை.
அதிபதி—தலைவன், 2. அரசன்.
அதிபறிச்சம்—வாலுழுவை யரிசி.
அதிபன் — எப்பொருட்கு மிறைவன், 2. இராசா, 3. எசமான்.
அதிபாதகம்—பெரும்பாதகம்.
அதிபாரகம்—கோவேறு கழுதை.
அதிபாரகன்—மிகு நிபுணன்.
அதிபீடிதம்—அதிகமாக விறுக்குதல்.
அதிபூச்சியர் — அதிகம் பூசிக்கப்படத் தக்கவர்.
அதிமதுரம் — மிகு இனிமை, 2. ஒரு சரக்கு.
அதிமலம்—மாவிலிங்கைமரம்.
அதிமாமிசம் — கண்ணில் வரும் ஒரு வகைத் தசைச் சுரப்பு நோய்.
அதிமிதம்—அளவின் மிக்கது.

அதிமுத்தம்—குருக்கத்தி.
அதிமுத்தி—சாயுச்சிய முத்தி.
அதியம்—அதிகம்.
அதியாமம்—முயற்புல்.
அதிரசம் — ஒரு பண்ணிகாரம், 2. இரசம்.
அதிரல்—மிகுதூறு.
அதிராகம்—கர்தகம்.
அதிராத்திரம் — யாகமிருபத் தொன்றி னொன்று.
அதிராயம்—அதிசயம்.
அதிரிசியம் — தோன்ருமை, 2. கடவுள், 3. கலைஞானம்.
அதிருஷ்டம் — பார்வைக்குத் தோன்ருமை, 2. நல்வினைப் பயன்.
அதிருப்தி—திருப்தியில்லாமை.
அதிரேகம்—மேம்பாடு.
அதிர்ப்பு — தாக்கியொலிக்கை, 2. நடுக்கம், 3. அச்சம்.
அதிலுத்தன் — பிறர் பொருளில் மிக்க ஆசையுடையவன்.
அதிலோபம்—தன்பொருளைப் பிறர்க்குக் கொடுக்க விரும்பாமை.
அதிவருணச்சிரமி — வருணச்சிரமங் களைக் கடந்த ஆத்மஞானி.
அதிவன்ணச்சிரமி-அதிவருணச்சிரமி.
அதிவாசம்—உபவாசத்திற்கு முதனள், 2. கிரியை ஆரம்பச் சடங்கினென்று, 3. மிகுவாசனை.
அதிவிடயம்—ஒரு மருந்து வஸ்து.
அதிவிடை—அதிவிடயம்.
அதிவிரகன்—மிக்க உபாயமுள்ளவன்.
அதிவிருஷ்டி—பெரு மழை.
அதிவினயம்—அதிகக் கீழ்ப்படிவு.
அதிவேகம்—மிகுகதி
அதிவேதனம்—மனைவியைவிட வேறெருத்தியை விவாகம்பண்ணல், 2. மிகக் கூலி.
அதீதகாலம்—இறந்தகாலம்.
அதீதம் — எட்டாதது, 2. கடந்தது, 3. கடவுளதோர் தன்மை.
அதீதன்—கடந்தவன், 2 பாசத்தினின்று விடுவிக்கப்பெற்றவன்.
அதீந்திரியம்—புலனுக்கெட்டாதது.
அதீனம்—உரித்து, 2. சார்பு.
அது — ஆருவதனுருமையுருபு, 2. அஃது.
அதுக்கல்—அடைசுதல், (தொ. பெ) 2. அடித்தல்.
அதுங்கு—ஒதுங்கு, 2. குழி.
அதுலம்—உவமையின்மை, 2. ஓரெண்.
அதுலன் — உவமை யில்லாதவன், 2. கடவுள்.
அதுல்லியம்—ஒப்பின்மை.
அதெந்து—பயப்படாதே எனப்பொருள் படும் ஒரு மொழி.
அதைத்தல்—(தொ. பெ) தாக்கிமீளல், 2. வீங்கல்.
அதைப்பு—தாக்கிமீளுகை, 2. வீக்கம்.
அதைரியம்—தைரியமின்மை.
அதோ—சேய்மைச் சுட்டு.
அதோகதி—இறங்குகை, 2. பள்ளம், 3. நரகம்.
அதோமாயை—ஒருமாயை.
அதோமுகம்—கீழ்முகம், 2. ஆற்றுநீர்க் கழிமுகம்.
அத்தகடகம்—கைவளை.
அத்தகம் — ஆமணக்கு, 2. கருஞ்சீரகம்.
அத்தகிரி - சூரியன் அத்தமிக்கு மிடமாகக் கூறப்படும் மேற்குமலை.
அத்தகோரம்—நெல்லி.
அத்தசாமம்—நடுச்சாமம்.
அத்தநாரீசன் — தனதுடம்பிற் பாதி பெண்வடிவான சிவன்.
அத்தப்பிரகாரம் — நாலேகால் நாழிகை கொண்டது.
அத்தமண்டபம்—கருப்பக்கிரக மண்டபம்.
அத்தமனம்—அஸ்தமிக்கும் காலம்.
அத்தமித்தல் — (தொ. பெ) மறைதல், 2. படுதல், 3. அற்றுப்போதல்.
அத்தம்—கை, 2. ஓர் நட்சத்திரம்.
அத்தம்—அர்த்தம்.
அத்தம்—வழி, 2. அருநெறி, 3. காடு, 4. கண்ணாடி, 5. குங்கிலியம் 6. அதிவிடயம்.
அத்தர்—ஓர் வாசனைத் தைலம்.

அத்தவாளம்-போர்வைச்சீலை, 2. காடு, 3. உல்லாசம்.
அத்தனை—அவ்வளவு.
அத்தன்—கடவுள், 2. தகப்பன், 3. உயர்ந்தோன், 4. குரு.
அத்தன்மை—அம்மாதிரி.
அத்தாட்சி—திருஷ்டாந்தம்.
அத்தாணி—அரசிருக்கை.
அத்தாயம்-கடைச்சற் சக்கரத்தின் மிதிதடி.
அத்தான்—அக்காள் கணவன், 2. அத்தை மகன்.
அத்தி—ஓர் மரம்.
அத்தி—யானை, 2. திப்பிலி, 3. எலும்பு, 4. கொலை, 5. கடல்.
அத்திசுரம்—எலும்பைப்பற்றின சுரம்.
அத்திநாத்தி—உண்டு இல்லை.
அத்திபஞ்சரம்—எலும்புக்கூடு.
அத்திபாரம்—அடிப்படை.
அத்தியட்சன் — மேல் விசாரணைககாரன்.
அத்தியந்தம்-அனந்தம், 2. ஒரெண்.
அத்தியயம்—அழிவு, 2. குற்றம்.
அத்தியயனம்—வேதமோதுகை.
அத்தியாசம்—ஆரோபம்.
அத்தியாசனம்—ஏகோதிட்ட வூண்.
அத்தியாத்துமிகம் — தன்னால் வருந்துன்பம்.
அத்தியாபகன் - வேதமோது விப்போன்.
அத்தியாரோபம்—விபரீதவுணர்ச்சி.
அத்தியாவசியகம்-மிகுந்த அவசியம்.
அத்தியான்மிகம்—அத்தியாத்துமிகம்.
அத்திரசத்திரம்—அம்பும் வாளும்.
அத்திரம்—அம்பு, 2. கழுதை, 3. குதிரை, 4. மலை, 5. நிலையின்மை.
அத்திராசம்—பயமின்மை.
அத்திரி—உலைத்துருத்தி, 2. ஒட்டகம், 3. கழுதை, 4. குதிரை, 5. கோவேறு கழுதை, 6. மலை, 7. ஓர் முனிவர்.
அத்திரு—அரசமரம்.
அத்திலை—செருப்படை.
அத்தினபுரம்-பாண்டவர்களின் இராஜதானிப் பட்டினம்.
அத்தினி—நால்வகைப் பெண்களிலே ஒருத்தி, 2. பெண் யானை.
அத்து—அரைப்பட்டிகை, 2. சிவப்பு, 3. செவ்வை, 4. எல்லை.
அத்து—(வி) இசை, 2. சார், 3. துணைப் பற்று, 4. அடை.
அஸ்து—ஆகுக.
அத்துகமானி—அரசு.
அத்துகம்—ஆமணக்கு.
அத்துவணை—அவ்வளவு.
அத்துமம்—(வை. அ) அரத்தை.
அத்துலாக்கி—(வை. அ) கருஞ்சீரகம்.
அத்துவம்—வழி, 2. சிவப்பு.
அத்துவாக்காயம்—கருஞ்சீரகம்.
அத்துவாந்தம் - காலைமாலை வெளிச்சம்.
அத்துவானம்—பாழ்ங்காடு.
அத்துவிதம் — பரமாத்துமாவுஞ் சீவாத்துமாவு மொன்றென்கை.
அத்தூரம்—மரமஞ்சள்.
அத்தேயம்—களவுசெய்ய நினையாமை.
அத்தை—தலைவி, 2. குருவின் மனைவி, 3. தாய், 4. மாமி, 5. முன்னிலையசைச்சொல்.
அத்தோ—அதிசய விரக்கச்சொல்.
அத்தோதயம் — அருத்தோதயம், ஒரு விசேட நாள்.
அநகம்—பாவமின்மை.
அநகன் — கடவுள், 2. பாவமில்லாதவன்.
அநங்கம்—ஆகாயம், 2. மல்லிகை.
அநங்கன்—மன்மதன்.
அநந்த சதுர்த்தசி — ஸ்ரீ விஷ்ணுவைப் பூசிக்கும் ஒரு விசேஷதினம். இது புரட்டாசி மாதத்துச் சுக்கிலபக்கச் சதுர்த்தசி திதியில் வரும்.
அநந்தசயனம்—சர்ப்பசயனம், 2. ஒரு விஷ்ணு ஸ்தலம்.
அநந்தசாயி—மகாவிட்டுணு.
அநந்தசொரூபி—கடவுள்.
அநந்தம்—முடிவில்லாதது.
அநந்தரம்—பின்.
அநந்தவிரதம் — வைஷ்ணவர் அனுஷ்டிக்கும் ஒரு விரதம்.

அநந்தன் — ஆதிசேடன், 2. கடவுள், 3. அருகன், 4. சிவன், 5. திருமால்.
அநந்நியம்—அன்னிய மல்லாதது
அநபாயம் — அழிவின்மை, 2. குறைவின்மை, 3. தேய்வின்மை.
அநபாயன்—அழிவில்லாதவன், 2. சிவன், 3. இப்பேர்கொண்ட ஒரு சோழன்.
அநருகர்—தகுதியற்றவர்.
அநர்த்தம்—பயனின்மை.
அநலம்—அக்கினி, 2. உட்டணம்.
அநலன்—அக்கினி, 2. அட்டவசுக்களிலொருவன்.
அநலி—சூரியன், 2. நெருப்பு.
அநல்—அக்கினி, 2. உட்டணம், 3. கொடிவேலி, 4. பித்தம்.
அநவத்தானம்—தவறுன நிலை.
அநவரதம்- எப்பொழுதும்.
அநாகதம்—அறியப்படாதது, 2. சொல்லப்படாதது, 3. வெளுக்கப்படாததும் புதியதுமான சீலை, 4. ஆருதாரங்களுளொன்று.
அநாகாலம் -பஞ்சகாலம்.
அநாசாரம்—ஒழுக்கமின்மை.
அநாசாரியன்—ஆசிரியனல்லாதவன்.
அநாசாரிதம் — சார்பில்லாதது, 2. பற்றுககோடாகாதது.
அநாதம்—ஆதரவற்றது.
அநாதரட்சகர்—கடவுள்.
அநாதரம்—மதியாமை.
அநாதன்—ஆதரவில்லாதவன்.
அநாதி—கடவுள், 2. புராதனம்.
அநாதிமலமுத்தர் — இயல்பாகவே பாசங்களின் நீங்கினவர்.
அநாதியன்—கடவுள்.
அநாதை—திக்கற்றவள், 2. ஒரு சத்தி.
அநாத்துமா—ஆத்துமாவல்லாத பதார்த்தம்.
அநாமதேயம்—பெயரில்லாதது.
அநாமயம்—நோயின்மை.
அநாமயன்—கடவுள்.
அநாமிகை—ஆழிவிரல்.
அநாயகம்—முதன்மையின்மை.
அநாயாசம்—இலகு, 2. சோம்பின்மை.
அநாரதம்—எப்போழ்தும்.
அநாரியர்—மிலேச்சர்.
அநாவிருஷ்டி—மழைக்குறைவு.
அநிகம்—சங்கம் மூன்றுகொண்ட சேனை
அநிக்கிரகம்—கட்டுப்பாடின்மை.
அநிசம்—நித்தியம்.
அநிச்சை—இச்சையின்மை.
அநிட்டை—உறுதியின்மை.
அநித்தம்—நிலையின்மை.
அநித்தியம்—நிலையின்மை.
அநியாயம்—நீதியின்மை.
அநிருத்தன்—ஸ்ரீ கிருஷ்ணன் பௌத்திரன்.
அநிர்தம்—மாயை.
அநிலம் காற்று.
அநிலன்—வாயுதேவன்.
அநீகம்—சேனை.
அநீகினி—சேனை.
அநீச்சுவரன்—கடவுளில்லையென்பவன்.
அநீதம்—நீதியின்மை.
அநீதி- நீதிகேடு.
அநு- கதுப்பு.
அநு—ஓர் உபசருக்கம்.
அநுகமனம்—தனது நாயகனோடு உடன்கட்டையேறுதல்.
அநுகம்பம்—கிருபை.
அநுகரணம்—ஒப்பாதல்.
அநுகன் — கணவன், 2. பின்தொடர்வோன், 3. வேலைக்காரன்.
அநுகுணம்—தகுதியானது, 2. அநுகூலமானது.
அநுகூலம்—விக்கினமின்மை, 2. காரியசித்தி.
அநுகூலித்தல் — அநுகூல முடையதாதல்.
அநுக்கிரகம்—கிருபை.
அநுக்கிரமணி—விஷயவரிசை.
அநுக்ரஹம்—அநுக்கிரகம்.
அநுசந்தாநம்—இடையருது சிந்தித்தல்.
அநுசந்தித்தல் — (தொ. பெ) சிந்தித்தல்.
அநுசரணை—இசைவு, 2. சார்பு.
அநுசரி—சார்ந்து நட.
அநுசன்—தம்பி.
அநுசாசனம்—கட்டளை.

அநுசிதம்—பொய், 2. தகுதியின்மை.
அநுசை—தங்கை.
அநுசைவர்—சிவதீக்ஷை பெற்ற க்ஷத்திரியரும் வைசியரும்.
அநுஞ்ஞை—கட்டளை.
அநுடம்—ஒரு நக்ஷத்திரம்.
அநுட்டானம்—ஒழுக்கம், 2. தவம்.
அநுட்டித்தல்—(தொ. பெ) சித்தாந்தப்படுத்தல்.
அநுதாத்தம்—படுத்தலோசை.
அநுதாபம்—பின் இரங்கல்.
அநுதினம்—நாடோறும்
அநுத்தம்—பொய்.
அநுநயம்—ஆசாரக்கிரமம், 2. மரியாதை, 3. விண்ணப்பம்.
அநுநாசிகம்—மெல்லெழுத்து.
அநுநாதம்—எதிரொலி.
அநுபந்தம் — அபிப்பிராயம், 2. ஒற்றுமை, 3. தொடர்ச்சி.
அநுபந்தித்தல்—(தொ. பெ) கூடிப் பந்தித்தல்
அநுபல்லவி—கீர்த்தனையின் இரண்டாம் உறுப்பு.
அநுபவம் — தானே கண்டறியும் அறிவு, 2. கைவல்யம்.
அநுபவி—ஞானி.
அநுபவித்தல்—(தொ. பெ) துய்த்தல்.
அநுபாடணம்-சொன்னதைப் பின்னுஞ் சொல்லுதல்.
அநுபாதம்—சரணங்களிலொன்று.
அநுபாலனம்—பாதுகாத்தல்.
அநுபாவம் — கண்காட்டுகை கைகாட்டு முதலிய அங்கசேட்டைகளினுல் மனக்கருத்தை விளக்குங் குறி, 2. நிச்சயம், 3. திட எண்ணம்.
அநுபாவியம்—அநுபவிக்கத்தக்கது.
அநுபானம்—மருந்துடன் குடிக்கும் பானம்.
அநுபூதி—தான் கண்டறிந்ததும் பிறர்க்குச் சொல்ல முடியாததுமான அறிவு.
அநுப்பிராசம்—வழியெதுகை.
அநுமகுண்டம் — சேதுவிலுள்ள ஒரு புண்ணிய தீர்த்தம்.
அநுமக்கொடியோன்—அருச்சுனன்.
அநுமதம்—அங்கீகரிப்பு.
அநுமதி—சம்மதி.
அநுமந்தன்—அனுமான்.
அநுமானம் — ஒரு பிரமாணம், 2. சந்தேகம்.
அநுமான்—அஞ்சனை யென்பவளுடைய குமாரன்.
அநுமேயம் — அநுமானப் பிரமாணத்தாலறியப்பட்டது.
அநுமோதனம்—சம்மதம்
அநுயோகம்—விசாரணை.
அநுரதம்—ஆசையாயிருத்தல்.
அநுரதி -அன்பு, 2. மதிப்பு.
அநுராகபோகம்—காமவநுபவம்.
அநுராகம்—ஆசை.
அநுரூபம்—ஒத்தவடிவம்.
அநுலோமன்—உயர்குலத் தந்தைக்கும் இழிகுலத் தாய்க்கும் பிறந்த பிள்ளை.
அநுவசனம்—ஒத்தவாக்கியம்.
அநுவதித்தல்—(தொ. பெ) முற்கூறிய பொருளை ஒரு நிமித்தத்தால் பின்னுமெடுத்துக் கூறல்.
அநுவயித்தல்—(தொ. பெ) இலக்கண முறையே ஒரு வாக்கியத்தில் எழுவாய் பயனிலைகள் தெரியுமாறு சொற்களைக் கூட்டிச் சொல்லல்.
அநுவருத்தித்தல்—(தொ. பெ) தொடருதல்.
அநுவாகம்—வேதத்தினுட்பிரிவு.
அநுவாதம்—முன்பு கூறியபொருளை யாதேனுமொரு காரணத்தாற் பின்னும் கூறல்.
அநுவிருத்தி — இசையச் செய்தல், 2. சேர்ந்திருத்தல்.
அநுவுரு—ஒத்த ரூபம்.
அநேகம்—பல.
அநேகன்—கடவுள்.
அந்தகம் — ஆமணக்கு, 2. ஒரு சன்னிநோய்.
அந்தகன்—நமன், 2. குருடன், 3. சனி, 4. சவுக்காரம்.
அந்தகாரம் — இருள், 2. நரகம், 3. மனவிருள்.
அந்தகாரி—சிவன்.

அந்தகாலம்—மரணகாலம்.
அந்தகோரம்—
அந்தகோலம்— } நெல்லிமரம்.
அந்தக்கரணம் — மனம், 2. புத்தி, 3. ஆங்காரம், 4. சித்தம்.
அந்தக்கேடு—அழகீனம்.
அந்தணத்துவம்—அந்தணருந்தன்மை.
அந்தணர்—வேதத்தின் அந்தத்தை அணவுவோர், 2. அழகிய தட்பத்தினையுடையவர், 3. முனிவர், 4. பிராமணர்.
அந்தணன்—கடவுள், 2. பிரமன், 3. சிவன், 4. அருகன், 5. முனிவன், 6. பிராமணன், 7. சனி, 8. வியாழம்.
அந்தணாளர்—முனிவர், 2. அரசர்க்குறுதிச் சுற்றத்தி னொருவர், 3. பார்ப்பார்.
அந்தணநம்பி — விஷத்தைப் போக்கும் மருந்து.
அந்ததரம்—சித்தாந்தம்.
அந்தஸ்து—நிலை, 2. ஒழுங்கு.
அந்தப்புரம்—பெண்களது அறை, 2. மன்னன் தேவி வசிக்குமிடம்.
அந்தம்—அழகு, 2. முடிவு, 3. சாவு, 4. கஸ்தூரி.
அந்தரங்கம்—ஆலோசனை, 2. இரகசியம், 3. ஏகாந்தம்.
அந்தரச்சிந்து—கற்பாஷாணம்.
அந்தரதுந்துபி—ஒரு வாச்சியம்.
அந்தரத்தாமரை—ஆகாயத்தாமரை.
அந்தரம்—வெளி, 2. இடை, 3. ஆகாயம், 4. தேவர் கோயில், 5. தனிமை, 6. முடிவு, 7. பேதம், 8. அளவு, 9. காலம், 10. இருள், 11. கூட்டம்.
அந்தரவல்லி—கொல்லன் கோவை.
அந்தராயம்—தீமை.
அந்தரி—ஆகாயவாணி, 2. துர்க்கை, 3. பார்வதி.
அந்தர்—உள்.
அந்தரர்—தேவர்.
அந்தராத்துமா—உயிர்க்குயிராயிருப்பவன்.
அந்தராளம் — நடு, 2. கர்ப்பகிரகம், 3. இடைக்காலம்.
அந்தரான்மா—அந்தராத்துமா.
அந்தரிட்சம்—ஆகாயம்.
அந்தரித்தல்—(தொ. பெ) நிலைகெடல், 2. மனந்தடுமாறல்.
அந்தரியாகம்—உட்பூசை.
அந்தரியாமி—கடவுள்.
அந்தரியாமித்துவம் — ஆன்மாவொடு கலந்திருத்தல்.
அந்தரீயம்—உள் உடை.
அந்தர்க்கதம்—மறைந்திருக்கை.
அந்தர்த்தானம்—மறைவிடம்.
அந்தர்ப்புரம்—அந்தப்புரம்.
அந்தர்முகம்—உண்ணோக்கிய முகம்.
அந்தலை—முடிவு, 2. சந்திப்பு, 3. மேடு, 4. பேறு.
அந்தளம்—கவசம்.
அந்தளி—தேவர்கோயில்.
அந்தன்—குருடன், 2. சனி.
அந்தாதி—நின்றபாட்டி னிறுதியும் வரும் பாட்டின் முதலும் ஒன்றாய் வருமோர் தொடை.
அந்தாளி—ஒருவகைப் பண்.
அந்தி — மாலைக்காலம், 2. முத்தெருக் கூடுமிடம், 3. இரா, 4. சூரியாஸ்தமனத்தில் தோன்றும் செவ்வானம்.
அந்திகம்—அயல்.
அந்திகாவலன்—மாலை சமயத்தில் தெருக்களில் காவலாக உலாவும் தேவதை.
அந்திகை — இரா, 2. பெண், 3. ஓர் கண்ணோய், 4. அக்காள், 5. அடுப்பு.
அந்திக்காலம்—சாயந்திரம்.
அந்திசந்தி — எப்பொழுதும், 2. காலை மாலை.
அந்தித்தல்—(தொ. பெ) பொருந்தல்.
அந்திபகல்—இராப்பகல்.
அந்திப்பொழுது—மாலைக்காலம்.
அந்திமகாலம்—இறுதிக்காலம்.
அந்திமந்தாரை—ஒரு பூமரம்.
அந்திமான்—இடையெழு வள்ளல்களிலொருவன்.
அந்தியகாலம்—மரணகாலம்.
அந்திரக்கொடிச்சி—கெந்தகம்.
அந்தியம்—மரணம், 2. முடிவு.
அந்தில்—அவ்விடம், 2. ஓரசைச் சொல்.

அந்திவண்ணன்—சிவன்.
அந்து—நெற்பூச்சி.
அந்துகம் — யானைச்சங்கிலி, 2. கைச் சங்கிலி.
அந்தோ—அதிசய விரகக்ச் சொல்.
அந்தோர்—நெல்லிமரம்.
அந்நலார்—அப்பெண்கள், 2. அழகிய பெண்கள்.
அந்நியர்—அயலார்.
அந்நியோந்நியம்—ஒற்றுமை.
அப—ஓரெதிர்மறை யுபசர்க்கம்.
அபகடம்—அவகடம்.
அபகரணம்—தீயொழுக்கம்.
அபகரி—கவர்.
அபகாரம்—தீங்குசெய்தல், 2. நன்றியற்ற செய்கை.
அபகாரி — நன்றிகெட்டவன், 2. துஷ்டன்.
அபகீர்த்தி—நிந்தை.
அபக்கியாதி—பழி.
அபக்குவம்—பக்குவமின்மை.
அபசகுனம்—துர்க்குறி.
அபசத்தம் — வழூஉமொழி, 2. வீண் பேச்சு, 3. அசுபமொழி.
அபசயம்—தோல்வி.
அபசரணம்—புறப்பாடு.
அபசரிதம்—துன்னடை.
அபசவ்வியம்—வலதுபக்கம்.
அபசாரம்—குறைவு, 2. துன்னடை.
அபசாரி — ஒழுக்கம் தவறினவள், 2. வேசி.
அபசித்தாந்தம்—சித்தாந்தத்தின் கேடு.
அபசுமாரம்—காக்காய்வலி, 2. புத்தித் தெளிவு நீங்குதல்.
அபட்கை — பாம்பின் நச்சுப்பல்லி னொன்று.
அபட்சம்—பட்சமின்மை.
அபட்சியம்—உண்ணத்தகாதது.
அபதூறு—பழிமொழி, 2. கொள்ளை.
அபதேசம் — வஞ்சம், 2. உபாயம், 3. வேடம்.
அபத்தம்—பொய், 2. மோசம்.
அபத்தியசத்துரு—நண்டு.
அபத்தியம்—பத்தியத்தவறு.
அபநயனம்—கடனிறுக்கை.
அபநோதம்—அகற்றுதல்.
அபமிருத்தியு—சடுதிமரணம்.
அபயஹஸ்தம்—பயந்தீரக்காட்டும்கை.
அபயம் — அச்சமின்மை, 2. ஓலம், 3. அடைக்கலம்.
அபயமிடல்—முறையிடல்.
அபயன்—பயமில்லான், 2. சோழன்.
அபரகாத்திரம்—கால், 2. பின்கால்.
அபரஞ்சி—புடமிட்ட பொன்.
அபரபக்கம்—தேய்பிறை.
அபரபட்சம்—அமரபட்சம்.
அபரம்—பின், 2. பிணக்கு, 3. மேற்கு, 4. நரகம்.
அபராங்கம்—சரீரத்தின் பிற்பாகம்.
அபராசிதன்—மகாவிஷ்ணு, 2. சிவன்.
அபராணம்—பின்னேரம்.
அபராதம் — குற்றம், 2. பாவம், 3. தண்டம்.
அபராதி—குற்றவாளி.
அபராந்தம்—மேலைத்தேசம்.
அபராநிணம்—மத்தியானத்திற்குப் பிற குள்ள ஆறு நாழிகை.
அபரிச்சின்னம்—வகுக்கப்படாமை.
அபரிமிதம்—அளவில்லாமை.
அபரியந்தம்—மட்டில்லாமை.
அபரோட்சம்—கடவுளைத் தரிசிக்கை.
அபலம்— பயனின்மை.
அபவருக்கம்—முத்தி.
அபவாதம்—பழிச்சொல்.
அபவித்திரம்—புனிதமின்மை.
அபாக்கியம்—நிர்ப்பாக்கியம்.
அபாங்கம்—கடைக்கண்.
அபாசம்—விருப்பின்மை.
அபாண்டம்—நிந்தை.
அபாயம்—ஆபத்து, 2. மோசம், 3. வஞ்சகம்.
அபாரம்—எல்லைப்படாதது, 2. கடவுள்.
அபாவம்—இன்மை, 2. நியாயநூலினொருளவை.
அபானம்—கடுக்காய், 2. குதம்.
அபானன்—தசவாயுவி லொன்று.
அபி—கேள்வி, மேன்மை, விருப்பம் இவற்றைக் காட்டுமோர் உபசர்க்கம்.

அபிகாதம்—அடித்தல், 2. வருத்தம்.
அபிகாயம்—ஓர் காசம்.
அபிசரன்—தோழன்.
அபிசாரம்—மந்திரவிரம
அபிசாரி—வியபிசாரி.
அபிடேகம்—திருமுழுக்கு.
அபிட்டம்- இரதம்.
அபிதானம்—பெயர்.
அபிநயம் — கூத்து, 2. கைமெய்காட்டல்.
அபிநயர்—கூத்தர்.
அபிநயித்தல் — (தொ. பெ) அபிநயஞ் செய்யல்.
அபிநவம்—புதிது.
அபிநிவேசம் — தொழிலிற் பிரவேசிக்கை.
அபிபிராயம்—உட்கருத்து, 2. நோக்கம், 3. மறைபொருள், 4. எண்ணம்.
அபிமதம்—சம்மதம்.
அபிமந்திரித்தல்—(தொ. பெ) பிரதிஷ்டை பண்ணல்.
அபிமான புத்திரன்—ஸ்வீகார புத்திரன்.
அபிமானம்—நேசம், 2. உபாகுனம்.
அபிமானித்தல்—(தொ. பெ) மெச்சல், 2. கனம் பண்ணல், 3. மதித்தல்.
அபிமுகம்—நேர்முகம்.
அபியோகம் — போருக்கழைக்கை, 2. போர், 3. தடை.
அபிரட்சை—சர்வரட்சணம்.
அபிராமம்—அழகு.
அபிராமி—பார்வதி, 2. சரச்சுவதி.
அபிருசி—கீர்த்திப் பிரியம்.
அபிஞன்—அறிவுடையோன், 2. காமன்.
அபிலாசம்—விருப்பம்.
அபிவாதனம்—பெரியோர்க்குச் செய்யும் உபசாரம்.
அபிவியத்தம் — தெளிவு, 2. வெளிப்படை.
அபிவிருத்தி—மிகப் பெருகுகை.
அபினி, அபின்—ஓர் லாகிரி வஸ்து.
அபின்னம்—ஒற்றுமை.
அபீட்டம்—மிகவிருப்பம்.
அபூருவம்—அருமை.
அபேட்சித்தல்—(தொ. பெ) மிகவிரும்புதல்.
அபேதம்- பேதமின்மை.
அப்சரசுக்கள் — தேவருலகத்திலுள்ள வேசிகள்.
அப்சன்—சந்திரன், 2. தன்வந்திரி.
அப்தம்—ஆண்டு.
அப்தி—சமுத்திரம்.
அப்ப—ஓரதிசயச் சொல்.
அப்படி- அவ்வாறு.
அப்பட்டா—வட்டத்திருப்பி.
அப்பணை—உத்தரவு, 2. பிணை, 3. ஆதாரம்.
அப்பத்தாள்—அக்காள்
அப்பம்—சிற்றுண்டி.
அப்பர்—சைவசமயாசாரிகளி லொருவராகிய திருநாவுக்கரசு நாயனார், 2. தந்தையர்.
அப்பல்—(தொ. பெ) அப்புதல்.
அப்பளம்—அப்பவருக்கத்தொன்று.
அப்பளாகாரம்—உறைப்பு முவர்ப்பு முள்ள ஓர் வஸ்து.
அப்பன்—தகப்பன்.
அப்பாட்டன்—முப்பாட்டன்.
அப்பால்—அப்புறம்.
அப்பாவி—பேதை.
அப்பி—அக்காள்.
அப்பியங்கம்—முழுக எண்ணெய் பூசுகை.
அப்பியசித்தல்—(தொ. பெ) பழகல்.
அப்பியந்தம்—தாமதம்.
அப்பியந்தரம்—உள்ளிடம், 2. தாமதம்.
அப்பியாகமம் — சந்தித்தல், 2. கொலை, 3. யுத்தம்.
அப்பியாகாரம்—களவு.
அப்பியாசம்—பயிற்சி.
அப்பிரகம்—ஓர்வகை லோகக்கல்.
அப்பிரகாசம்—இருள்.
அப்பிரசித்தம்—பிரபலியமின்மை.
அப்பிரதக்ஷிணம் — இடசாரியாகச் சுற்றுகை.
அப்பிரதானம்—முக்கியமல்லாதது.
அப்பிரமாணம்—கடவுள்.

அப்பிரமேயம்—அளக்கப்படாதது.
அப்பிரமேயன்—கடவுள்.
அப்பிரயோசனம்—பயனின்மை.
அப்பிராணி — உயிரில்லாதது, 2. ஏழை.
அப்பிராமணன் — பிராமணனல்லாதவன்.
அப்பு—நீர், 2. கடல்.
அப்புதல் — (தொ. பெ) ஒற்றல், 2. பூசுதல், 3. கௌவல்.
அப்புது—யானையைப் பாகன்தட்டு மோசை.
அப்புறப்படல்—குறித்த ஸ்தானத்தைக் கடந்துபோதல்.
அப்புறம்—அந்தப்பக்கம், 2. பின்பு.
அப்பை—அப்பைக்கோவை, 2. கொன்றை.
அப்பொழுது—
அப்போது— } அக்காலத்தில்.
அப்போழ்து—
அமங்கலம்—மங்கலமின்மை.
அமங்கலி—
அமங்கலை— } விதவை.
அமசடக்கம்—மறைப்பு.
அமச்சன்—மந்திரி, 2. வியாழம்.
அமஞ்சி — கூலிகொடாமல் வாங்கும் வேலை.
அமடு—மடிப்பு.
அமட்டு—(வி) அதட்டு, 2. சிக்குப்படுத்து, 3. புரட்டு, 4 மேற்கொள்.
அமணம்—இருபதினாயிரம் பாக்கு, 2. அம்மணம்.
அமணர்—சமணர்.
அமண்—சமணமதம்.
அமண்டம்—ஆமணக்குச்செடி.
அமதி—மதியின்மை.
அமயம்—காலம்.
அமரபக்கம் — பௌர்ணிமைக்குப் பின் சந்திரன் நிற்கும் பக்ஷம்.
அமரம்—ஓர் வடமொழி நிகண்டு.
அமரம் — கண்ணோய், 2. தோணியின் பிற்பக்கம், 3. ஆயிரங் காலாள்களையாளுகை.
அமரர்—வானோர்.
அமராடல்—(தொ. பெ) போர்புரிதல்.
அமரார்—பகைவர்.
அமராவதி—இந்திரன் நகரம்.
அமரி—அமிழ்து, 2. சிறுநீர், 3. துர்க்கை, 4. விஷம்.
அமரிக்கை—அமைவு.
அமரியம்—குருந்து, 2. செண்பகப்பூ.
அமரியுப்பு-சிறுநீரிலிருந்தெடுக்குமுப்பு.
அமருதல்—(தொ. பெ) அடங்குதல்.
அமருலகம்—தேவலோகம்.
அமரேசன்—இந்திரன்.
அமர்—யுத்தம், 2. வெறி.
அமர்க்களம் — போர்க்களம், 2. ஆரவாரம்.
அமர்தல் — (தொ. பெ) இளைப்பாறல், 2. அடங்குதல், 3. பொருந்தல்.
அமர்த்தல் — (தொ. பெ) அமரச்செய்தல், 2. ஏற்படுத்தல்.
அமலகம்—நெல்லி.
அமலம்—அழுக்கின்மை, 2. அழகு.
அமலன்—கடவுள், 2. சிவன், 3. அருகன், 4. மகாவிட்டுணு.
அமலை—இலக்குமி, 2. உமையாள்.
அமலை—சோறு, 2. ஒலி, 3. மிகுதி.
அமல்—மிகுதி.
அமல்தார்—அரசிறை தண்டல்செய்யும் உத்தியோகஸ்தன்.
அமளி — ஆரவாரம், 2. மெத்தை, 3. பள்ளியறை.
அமளை—ஓர் பூடு.
அமறல்—மிகுதி.
அமாத்தியன்—மந்திரி.
அமார்—கப்பற்கயிறு.
அமார்க்கம்—துன்மார்க்கம்.
அமாவாசி—
அமாவசி— } சூரியனுஞ் சந்திரனுங் கூடுநாள்.
அமாவாசியை—
அமாவாசை—
அமானத்து—சேமிப்பு.
அமானி—இராஜ விசாரணைக்குள்ளான நிலம்.
அமிசம்—பங்கு, 2. பின்னம், 3. அதிர்ஷ்டம்.
அமிசு—சூரியன், 2. அணு, 3. பிரபை.

அமிஞ்சி—அமஞ்சி.
அமிதம்—அளவின்மை.
அமித்திரன்—பகைவன்.
அமிருதம்—அழியாமை, 2. அமிழ்தம், 3. இனிமை, 4. நீர், 5. மோக்ஷம்.
அமிர்தகலை—சந்திரகலை.
அமிர்தகிரணன்—சந்திரன்.
அமிர்தம்—அமிருதம்.
அமிர்தவல்லி—சீந்திற்கொடி.
அமிர்தன்—கடவுள்.
அமில்தார்—அமல்தார்.
அமிழ்தல்—(தொ. பெ) ஆழ்தல்.
அமிழ்தம்—தேவருணவு.
அமிழ்து—அமிர்தம், 2. இனிமை.
அமிழ்த்து—(வி) ஆழ்த்து, 2. அழுத்து.
அமீர்—பிரபு.
அமீனு—ஒருத்தியோகஸ்தன்.
அமுக்கடி—மந்திரம், 2. மூடமாயிருத்தல்.
அமுக்கல் (தொ. பெ) அமிழப்பண்ணல்.
அமுக்கனங்கிழங்கு—அசுவகெந்தி.
அமுக்கன்—இரகசியத்திற் கருமமுடிப்போன், 2. தந்திரக்காரன்.
அமுக்கிரா— } அமுக்கனங்கிழங்கு.
அமுக்குரா— }
அமுக்கு—(வி) அமிழ்த்து, 2. நெருக்கு.
அமுங்கல்—(தொ. பெ) அழுந்தல், 2. தாழ்தல்.
அமுசம்—சிறுசெருப்படை.
அமுசு—ஒட்டறை
அமுதம்—அமிர்தம்.
அமுதகுலர்—இடையர், 2. பெரியோர்.
அமுதபுட்பம்—சிறுகுறிஞ்சா.
அமுதர்—இடையர், 2. வானோர்.
அமுதவல்லி — அமிர்தவல்லி, 2. இலக்ஷ்மி.
அமுது—அமுதம், 2. இனிமை, 3. நீர், 4. பால், 5. சோறு, 6. சுவை.
அமுதுசெய்தல்—(தொ. பெ) புசித்தல்.
அமுதுபடி—அரிசி.
அமுதூட்டல்—(தொ. பெ) சோறு அல்லது பாலுண்பித்தல்.
அமுத்தம்—வசநாபி.
அமுரி—சிறுநீர்.
அமுல்—களவு.
அமூர்த்தம்—உருவமில்லது.
அமேத்தியம்—அசுத்தம்.
அமை—மூங்கில்.
அமைச்சன்—மந்திரி.
அமைச்சு—மந்திரித்தொழில், 2. மந்திரி.
அமைதல்—(தொ. பெ) பொருந்தல், 2. அடங்குதல், 3. நிறைதல்.
அமைதி — அடக்கம், 2. மாட்சிமை, 3. தன்மை, 4. சமயம், 5. காலம், 6. வாசஸ்தலம்.
அமைத்தல் — (தொ. பெ) சமைத்தல், 2. ஏற்படுத்தல், 3. அடக்கல், 4. அழுத்துதல்.
அமைப்பு - (தொ. பெ) நியமிப்பு, 2. விதி.
அமையம்—(தொ. பெ) காலம், 2. சமயம்.
அமையாமை—(தொ. பெ) கீழ்ப்படியாமை.
அமைவடக்கம்—(தொ. பெ) அடக்கம்.
அமைவு—(தொ. பெ) அடக்கம்.
அமோகம்—மிகுதி.
அம்—அழகு, 2. நீர், 3. மேகம், 4. ஓர் சாரியை, 5. வினையின் விகுதி.
அம்சம்—அன்னப்பறவை, 2. பங்கு.
அம்சுமாலி—சூரியன்.
அம்பகம்—கண், 2. எழுச்சி, 3. உத்தரவு, 4. செம்பு.
அம்பகன்—சீர்பந்த பாஷாணம்.
அம்படம்—புழுக்கொல்லி.
அம்படலம்-அம்மி, 2.இரதம், 3.ஓடம், 4. வெளி, 5. வெள்ளி, 6. ஈயம், 7. மரக்கால்.
அம்பட்டச்சி— } நாவிதப்பெண்.
அம்பட்டத்தி— }
அம்பட்டன்—நாவிதன்.
அம்பணத்தி—துர்க்கை.
அம்பணம் — மரக்கால், 2. ஆமை, 3. சலம், 4. வாழை, 5. துலாக்கோல்.
அம்பணவர்—பாணர் என்னும் சாதியார்.
அம்பரம்—ஆகாசம், 2. சீலை, 3. திசை, 4. கடல், 5. மஞ்சள்.

அம்பரை—கிமிலை.
அம்பர் – அவ்விடம், 2. சோழதேசத்திலோரூர், 3. ஒக்கோலை.
அம்பலக்காரன் – கள்ளச்சாதித் தலைவன், 2. சபையின் தீர்மானம் வெளியிடுவோன்.
அம்பலக்கூத்தன்— } சிவன்.
அம்பலத்தாடி— } சிவன்.
அம்பலத்தி – தான்றிக்காய், 2. தில்லைமரம்.
அம்பலம்—சபை, 2. வெளி, 3. சித்திரகூடம்.
அம்பலவிருக்கம்—தில்லைமரம்.
அம்பல் – பழிமொழி, 2. சேந்தன்நாடு, 3. புறங்கூறல்.
அம்பறுத்தூணி—அம்புக்கூடு.
அம்பா – தாய், 2. துர்க்கை, 3. பசுக்கதறல்.
அம்பாயம்—பிரசவவேதனை, 2. உபாதி.
அம்பாரம்—குவியல்.
அம்பாரி—யானைமேற்றவிசு.
அம்பாலிகை – பாண்டுவின்றாய், 2. துர்க்கை, 3. தருமதேவதை.
அம்பால்—தோட்டம்.
அம்பாவனம்—சரபப்பட்சி.
அம்பி—தெப்பம், 2. மரக்கலம், 3. ஓடம், 4. இறைகூடை, 5. தாம்பு, 6. மிடா.
அம்பிகாபதி—சிவன், 2. கம்பர்மகன்.
அம்பிகை—பார்வதி, 2. தருமதேவதை, 3. காளி, 4. திருதராட்டிரன் தாய்.
அம்பிகைபாகன்—சிவன்.
அம்பு – அத்திரம், 2. எலுமிச்சை, 3. தளிர், 4. மூங்கில், 5. சரகாண்டபாஷாணம், 6. பாதிரி.
அம்பு—நீர், 2. மேகம்.
அம்புக்குதை—அம்பினிறகு.
அம்புக்கூடு – அம்பு வைத்திருக்குங் கூடு.
அம்புசம்—இடியேறு, 2. தாமரை.
அம்புசாதம்—தாமரை.
அம்புதம்—மேகம், 2. நீர், 3. கோரை.
அம்புதி—சமுத்திரம்.
அம்புயம்—தாமரை, 2. இறைகூடை.
அம்புயன்—பிரமன்.
அம்புயாதம்—தாமரைக் கொடி.
அம்புயை—இலக்குமி.
அம்புராசி—கடல்
அம்புலி—சந்திரன்.
அம்புலிப்பருவம் – பிள்ளைக்குச் சந்திரனைக் காட்டும்பருவம்.
அம்புலிமான்—சந்திரன்.
அம்புவாகினி—எலுமிச்சை, 2. பாதிரி.
அம்புவி—சகம்.
அம்பை – வெட்டிவேர், 2. உமாதேவி, 3. தாய்.
அம்போசன்—சந்திரன்.
அம்போதரங்கம் – கலிப்பாவிளோருறுப்பு.
அம்போதி—கடல்.
அம்போதி—காற்று, 2. பாட்டினர்த்தம்.
அம்போருகத்தாள்—இலக்குமி.
அம்போருகம்—தாமரை.
அம்போருகன்—பிரமன்.
அம்ம—கேளெனல், 2. ஓரதிசயக் குறிப்புச் சொல்.
அம்மகோ—ஓரிரக்கக் குறிப்புச் சொல்.
அம்மட்டு—அவ்வளவு.
அம்மணம்—நிருவாணம், 2. சோரமார்க்கம்.
அம்மம்—பெண் மார்பு.
அம்மனை – அம்மானை, 2. அம்மானைக்காய், 3. தாய்.
அம்மன்—தாய்.
அம்மா – தாய், 2. எசமானி, 3. ஓரதிசயக் குறிப்பு, 4. அசைச்சொல்.
அம்மாச்சி—தாயைப்பெற்ற பாட்டி.
அம்மாத்திரம்—அவ்வளவு.
அம்மாய்—தாயைப்பெற்றவள்.
அம்மாள்—தாய்.
அம்மானை—ஓர் விளையாட்டு, 2. ஓர் பிரபந்தம்.
அம்மான் – தாய் மாமன், 2. அத்தைகணவன், 3. தகப்பன்.
அம்மான்பச்சரிசி—சித்திரப்பாலாவி.
அம்மி—அம்மிக்கல்.
அம்மியம் – கள், 2. காளம், 3. சிறுசின்னம்.
அம்மிரம்—மாமரம்.

அம்மிலிகா— } புளியமரம்.
அம்மிலிகை— }
அம்முக்கள்ளன்—வஞ்சகன்.
அம்மெனல்—ஒலிக்குறிப்பு.
அம்மை—வைசூரி, 2. தாய், 3. பார்வதி, 4. அழகு, 5. வருபிறப்பு, 6. தவப் பெண்.
அம்மையப்பர்—சிவனுர்.
அம்மையார் கூந்தல்—கொடியார் கூந் தற்பூண்டு.
அம்மைவார்த்தல்—வைசூரி காணல்.
அம்ருதம்—அமிர்தம்.
அயகம்—சிறுகுறிஞ்சா, 2. வசம்பு.
அயக்கதை—இருப்புத்தண்டம்.
அயக்காந்தம்—ஊசிக்காந்தம்.
அயக்கிரீவன்-மகாவிஷ்ணு, 2.ஓரசுரன்.
அயசு — இரும்பு, 2. எஃகு, 3. வழுக் கல் நிலம்.
அயசுபடில்—வெள்ளீயமணல்.
அயச்சிந்தூரம்—இரும்புச் சிந்தூரம்.
அயணம்—1. செலவு, 2. வழி.
அயநகாலம்—துலாயனத்துக்கும் மேடா யனத்துக்கும் இடையே நிகழுங் காலம்.
அயநம் — பிறப்பு, 2. வருடப்பாதி, 3. வழி, 4. வீடு, 5. சரித்திரம்.
அயபற்பம்—இரும்புத்தூள்.
அயம்—விழா, 2. சேறு, 3. நீர், 4. குளம், 5. நிலம், 6. அலரிச்செடி, 7. ஆடு.
அயர்—வாட்டம்.
அயர்ச்சி—(தொ. பெ) மறதி, 2. உணா வழிவு,. 3 சோம்பு, 4. பலவீனம், 5. வருத்தம்.
அயர்தி—(தொ. பெ) மறதி.
அயர்வு—(தொ. பெ) சோர்வு, 2. தளர்வு, 3. வருத்தம், 4. அகலம்.
அயலவர்—பிறர்.
அயலார்—அயலோர்.
அயல்—அருகிடம், 2. அன்னியமானது.
அயவாரி—வசம்பு.
அயவெள்ளை—அயபற்பம்.
அயறு—அசறு, 2. புண்வழலை.
அயனம்—பிறப்பு.
அயனுள்—உரோகணிநாள்.

அயன்—பிரமன், 2. அருகன், 3. தசர தன் தந்தை.
அயா—வருத்தம்.
அயாசிதம் — கேளாமற்றரக்கொள்ளும் பிச்சை.
அயாவுயிர்த்தல்—(தொ. பெ) வருத்தம் நீங்கல்.
அயிகம்—ஊமத்தை.
அயிக்கம்—ஐக்கியம்.
அயிங்கிதை—கொல்லாமை.
அயிச்சுவரியம்—ஐசுவரியம்.
அயிணம்—மான்றோல்.
அயிரம்—கண்டசருக்கரை.
அயிராணி—இந்திராணி, 2. பார்வதி.
அயிராவணம்—தேவேந்திரன் யானை.
அயிராவதம்—ஐராவதம்.
அயிரி—மீன்முள்ளரி கத்தி, 2. நெட்டிப் புல்.
அயிரியம்—நெட்டி.
அயிரை—ஓர் சிறுமீன், 2. நுண்மணல்.
அயிர் — நுண்மை, 2. நுண்மணல், 3. சருக்கரை.
அயிர்ப்பு—(தொ. பெ) சந்தேகம்.
அயிலல்— } (தொ. பெ) உண்ணல்.
அயிலுதல்— }
அயில் — கூர்மை, 2. கைவேல், 3. இரும்பு, 4. கலப்பை, 5. அழகு, 6. கோரைப்புல்.
அயிறல்—(தொ. பெ) அயிலல்.
அயினி—சோறு.
அயினிநீர்—சோறுகலந்த ஆலத்திநீர்.
அயின்றல்—(தொ. பெ) உண்டல்.
அயீன்றுள்—தாய்.
அயுக்தம்—தகாதது.
அயுக்தி—பிரிவினை
அயுதம்—பதினுயிரம்.
அயுத்தம்—அயுக்தம்.
அயுத்தி—அயுக்தி.
அயோக்கியதனம்— } யோக்கியவீனம்.
அயோக்கியதை— }
அயோக்கியம்— }
அயோக்கியன்—துஷ்டன்.
அயோநிசன்—அசாதாரண பிறப்புடை யுவன்.

அய்யவி—ஐயவி.
அயோத்தி—சத்தபுரியிலொன்று.
அய்யோ—துன்பச்சொல்.
அர—பாம்பு.
அரகர — சிவசிவ எனப் பொருள்படும் ஓரடுக்குமொழி.
அரக்கம்—கன்னறி.
அரக்கர்—இராக்கதர்.
அரக்கல்—(தொ. பெ) தேய்த்தல், 2. அரைத்தல்.
அரக்காம்பல்—செவ்வாம்பல்.
அரக்கி—இராக்கதப்பெண்.
அரக்கு — சிவப்பு, 2. செம்மெழுகு, 3. சாதிலிங்கம்.
அரக்குமஞ்சள் — மிகச் சிவந்த மஞ்சள்.
அரக்குமாளிகை—செம்மெழுகாற்செய்யப்பட்ட மாளிகை.
அரங்கம் — நாடகசாலை, 2. போர்க்களம், 3. சூது முதலியவை பயிலுமிடம், 4. சதுரச்சாலை, 5. சிலம்பக்கூடம், 6. சத்திரம், 7. சபை, 8. கல்விச்சாலை, 9. ஆற்றிடைக்குறை.
அரங்கல்—(தொ. பெ) அழுந்தல்.
அரங்கன்-சீரங்கத்தேகோயில்கொண்ட ஸ்ரீ மகாவிஷ்ணு.
அரங்கு — இடம், 2. அறை, 3. நாடகசாலை, 4. சபை, 5. சூதாடற்கு வகுத்தவறை.
அரங்கேற்று—அரங்கேற்றம்.
அரங்கேற்றுதல் — தாம் செய்த நூலை சபையிலுள்ள பெரியார்க்குக் காட்டி அதனை உயர்ச்சிப்படுத்த அவரது சம்மதம் வாங்கல்.
அரசச்சின்னம் — இராசரீக அடையாளம்.
அரசன்—இராசா, 2. வியாழம், 3. எப்பொருட்குமிறைவன்.
அரசாட்சி—இராசரீகம்.
அரசாணிக்கால் — விவாகமண்டபத்திலே அரசாணியிலே முருக்குடன் நாட்டப்படும் அரசங்கொம்பு.
அரசாளல்—அரசுசெய்தல்.
அரசி—இராசாத்தி, 2. தலைவி.
அரசிகம்—இரசமின்மை, 2. சுவையில்லாதது.
அரசிகன்—சுவை அறியாதவன்.
அரசியல்—இராசரீகமுறை.
அரசிருக்கை—அரசுவீற்றிருக்குமிடம்.
அரசிலை-அரசமரத்தினிலை, 2. மிருகங்களுக்கிடும் அரசிலைக்குறி.
அரசிறை—அரசர்க்கரசன், 2. கப்பம்.
அரசு — இராசா, 2. ஒரு மரம், 3. அரசாட்சி.
அரசுவா—பட்டத்தியானை.
அரட்டர்—குறுநிலமன்னர், 2. குறும்பர்.
அரட்டல்—(தொ. பெ) பயமுறுத்தல்.
அரட்டி—அச்சம்.
அரணம் — காவற்காடு, 2. கோட்டை, 3. மதில், 4. வேலி, 5. கவசம், 6. கதவு, 7. வேல், 8 மஞ்சம், 9. தொடுதோல்.
அரணி — தீக்கடைக்கோல், 2. சூரியன்.
அரணி—கவசம், 2. மதில், 3. காடு.
அரணித்தல்—(தொ. பெ) காவல்செய்தல், 2. சிறப்பித்தல், 3. முறைத்தல்.
அரணியம்—காடு
அரணியா—காட்டுக்கருணை.
அரவணை—ஒரு செந்து.
அரண் — காவல், 2. அழகு, 3. மதில், 4. கடல், 5. மலை, 6. காடு, 7. கோட்டை.
அரண்மனை—மதிலாற்காவல் செய்யப்பட்ட வீடு, 2. கோட்டை.
அரண்யம்—அரணியம், காடு.
அரதனம்—இரத்தினம், 2. மிருதபாஷாணம், 3. சிலம்பணி, 4. அகன்மணி.
அரதனாகரம்—இரத்தினமிருக்கும் சுரங்கம், 2. கடல்.
அரதி—வேண்டாமை.
அரதேசி [impro. for அகதேசி] பரதேசி.
அரத்தகம்—செம்பஞ்சு.
அரத்தம் — இரத்தம், 2. சிவப்பு, 3. பவளம், 4. செம்பரத்தை, 5. செங்குவளை, 6 கடம்பு, 7. அரக்கு, 8. பொன், 9. செம்மை.

அரத்தனம்—இரத்தினம்.
அரத்தன்—செவ்வாய்.
அரத்துறை—ஒரு சிவஸ்தலம்.
அரந்தை—மனக்கவலை, 2. வருத்தம்.
அரப்பள்ளியான்—மகாவிஷ்ணு.
அரப்பு—அரைப்பு.
அரமகள் — தெய்வப்பெண்.
அரமனை—அரசன்மனை.
அரமாதர்—தெய்வப்பெண்கள்.
அரமியம் — அரமனை, 2. வீட்டின்மே லுலாவும் வெளி, 3 பிரமி என்னும் செடி.
அரம்—ஓர் கருவி, 2 கீழறை, 3 பாதாளம்.
அரம்பு—குறும்பு, 2. தீமை.
அரம்பை — வாழை, 2. தேவலோக தாசி, 3. ஓமம்.
அரயன்- அரசன்.
அரரம்- கதவு
அரலை — கழலைகட்டி, 2. கடல், 3. கோட்டை, 4. மரல்.
அரவகிரி—திருவேங்கடமலை.
அரவணை—(வி) தழுவிக்கொள்
அரவணை—(பெ) சேஷசயனம்.
அரவணையான்—மகாவிஷ்ணு.
அரவப்பகை—கருடன்.
அரவமணி- நாகரத்தினம்
அரவம்—ஒலி, 2. பேரொலி, 3. சிலம்பு.
அரவம்—பாம்பு, 2. ஆயிலியநாள்.
அரவன்—சிவன்.
அரவாபரணன்—சிவன்.
அரவித்தல்—(தொ. பெ) ஒலித்தல்.
அரவிந்தம்—தாமரை.
அரவிந்தலோசனன்—ஸ்ரீ மகாவிஷ்ணு.
அரவிந்தன்—பிரமன்.
அரவிந்தை—இலக்குமி.
அரவு—பாம்பு.
அரவுயர்த்தோன்—துரியோதனன்.
அரவோன்—பதஞ்சலி முனிவன்.
அரளி—பீநாறி.
அரளு—(வி) பிரமி.
அரற்று—(வி) அழு, 2. ஒலி, 3. அலறு.
அரன்—சிவன், 2. எப்பொருட்கு மிறைவன்.
அரன்மகன்—முருகன், 2. விநாயகன், 3. வீரபத்திரன்.
அரன்வெற்பு—கைலைமலை.
அரன்றோழன்—குபேரன்,
அரா—பாம்பு.
அராகம்- ஆசை, 2. ஒருபண், 3. அடங்காமை, 4. சிவப்பு, 5. யாழ்யாழ்த திறம், 6. பொன்.
அராதி— சத்துரு.
அராத்தல்—(தொ. பெ) தேய்த்தல்.
அராநட்பு- வேண்டா வெறுப்பு.
அராபதம்- வண்டு.
அராமம்—சோலை, 2. பயிர்.
அராமி கெட்டவள்.
அராவல் — (தொ பெ) உராஞ்சல், 2. தேய்த்தல்.
அராவரி—கருடன், 2. கீரி, 3. மயில்.
அராளம்—இருவாட்சி, 2. குங்கிலியம்.
அரி—சத்துரு, 2. சக்கரம், 3. பச்சை நிறம், 4. குதிரை, 5. சிங்கம், 6. சிங்கவிராசி, 7. சூரியன், 8. மகாவிஷ்ணு, 9. நமன், 10. காற்று, 11. சந்திரன், 12 தேவேந்திரன், 13. கிரணம், 14. கிளி, 15. குரங்கு, 16. பாம்பு, 17. தவளை, 18. நவகண்டத்தொன்று, 19. தீ, 20. மரகதம், 21. நிறம், 22. புகை, 23. பகை, 24 கூர்மை, 25. ஆடுதப்பொது, 26. நர்வாள்.
அரி- அரிப்பிடி, 2. நெற்கதிர், 3. தேர், 4. சோலை, 5. பொன், 6. கண்வரி, 7. வரி, 8. கடல், 9. வண்டு, 10. செம்மறியாட்டுக்கடா, 11. பன்றி, 12. உட்டுளைப்பொருள், 13. மூங்கில், 14. நெருக்கம், 15. ஐமைவடிவு, 16. அடர்பு, 17. மழைத்தூவல், 18. மாலை, 19. சிலம்பின் பருக்கைக்கல், 20. சிலம்பு, 21. வலி, 22. மரவயிரம், 23. கட்டில், 24. படுக்கை, 25. பறை, 26. மலை, 27. கள், 28. குற்றம், 29. விசி.
அரிகண்டபுலவர்—காளமேகப்புலவர்.
அரிகரபுத்திரன்—ஐயனார்.
அரிகண்டம்—தொந்தரை, 2. ஒரு விரதவேடம்.

அரிகள்—பகைவர்.
அரிகூடம்—கோபுரவாயில்.
அரிக்கண்சட்டி—அரிசியரிக்குஞ்சட்டி.
அரிக்குதல் — (தொ. பெ) அரித்துப் போடுதல், 2. பேச்சினால் வருத்துதல்.
அரிசயம்— } எலுமிச்சை, 2. கொன்றை
அரிசலம்— } மரம்.
அரிசனம்—மஞ்சள்.
அரிசா—பெருங்குமிழ் மரம்.
அரிசி—தண்டுலம்.
அரிச்சந்தனம்—ஐந்தருவிலொன்று.
அரிச்சந்திரன்—இடையெழு வள்ளலிலொருவன்.
அரிச்சிகன்—சந்திரன்.
அரிச்சுவடி—அரிவரியேடு.
அரிச்சுனம்—எருக்கு, 2. மருதமரம்.
அரிடம்—கடுகுரோகிணி, 2. வேம்பு.
அரிடிகம்—சிற்ப நூலிலொன்று.
அரிட்டம்—கள், 2. காக்கை, 3. கேடு, 4. சென்மதோஷம், 5. மோர், 6. வெள்வெங்காயம், 7. பிரசவவீடு, 8. முட்டை.
அரிணம்—மான், 2. வெண்மை.
அரிணம்—பொன், 2. சிவப்பு, 3. யானை.
அரிணி—வஞ்சிக்கொடி.
அரிவணை—கள்.
அரிதகி—கடுக்காய்மரம்.
அரிதம்—பச்சை, 2. பசுமை, 3. பசும் புன்னிலம், 4. திசை.
அரிதல்—(தொ. பெ) அறுத்தல்.
அரிதாளம்—பொன்னரிதாரம்.
அரிதாளம்—நவதாளத்தொன்று.
அரிது—அருமை, 2. பச்சை.
அரித்தல் — (தொ. பெ) அணில் எலி முதலியவை அறுத்தல்.
அரித்திரம்—மஞ்சள், 2. சுக்கான்.
அரித்திராபம்—பொன்னிறம்.
அரித்திரான்னம்—மஞ்சட்சாதம்.
அரித்வித—துன்பம், 2. இலேசம்.
அரிகி—தெத்தினி.
அரிநூற்பொறி — நகரத்தின் மதிலிலே வைக்கும் பொறிகளிலொன்று.
அரிநெல்லி—ஒரு மரம்.

அரிந்தமன் — வெற்றியாளன், 2. ஸ்ரீ மகாவிட்டுணு.
அரிபாலுகம்—தக்கோலம்.
அரிப்பு—குற்றம்.
அரிப்பன்— } அரித்துப் பொருள்
அரிப்பாளன்- } தேடுவோன்.
அரிப்பிரியை—இலக்குமி.
அரிப்புழுக்கல்—சோறு.
அரிமஞ்சரி—குப்பைமேனி.
அரிமணல்—நுண்மணல்.
அரிமணி—மரகதம்.
அரிமந்திரம்—சிங்கம் வாழ் குகை.
அரிமா—ஆண்சிங்கம்.
அரிமான்—அரிமா.
அரிமுகவம்பி—சிங்கமுக ஓடம்.
அரிமுகன்—சிங்கமுகாசுரன்.
அரிய—அருமையான.
அரியகம்—கொன்றைமரம், 2. காஞ்சரி.
அரியணை—சிங்காதனம்.
அரியமா—சூரியன்.
அரியம்—வாச்சியம்.
அரியல்—கள்.
அரியாசனம்—சிங்காதனம்.
அரில்—குற்றம், 2. பிணக்கு, 3. பகை, 4. சிறுதூறு.
அரிவரி—எழுத்து வருக்கம்.
அரிவாள்—கூன்வாள்.
அரிவாள்மணை—காய் கறிகளை அரியுங் கருவி செறிக்கப்பட்ட பலகை.
அரிவாள் மணைப்பூண்டு—ஒருவகைப் பூண்டு.
அரிவி—அரிப்பிடி.
அரிவை — பெண்பொது, 2. பதினெட்டு வயதிற்கு மேற்பட்டு இருபத்தைந்து வயதிற்கு மேற்படாத பெண், 3. தெய்வப்பெண்.
அரீடம்—கடுகுரோகணி.
அரு — உருவமற்றது, 2. கடவுள், 3. அறிவு, 4. அணு.
அருகசனி—பேரேலம்.
அருகணி—பிரண்டை.
அருகணைத்தல் — (தொ. பெ) தழுவல்.
அருகந்தர்—அருகசமயத்தோர்.

அருகம்—தகுதி, 2. பரிசுத்தம், 3. சமண் மதம்.
அருகல்—(தொ. பெ) அணைதல், 2. கிட்டுதல், 3. குறைதல், 4. சாதல்.
அருகி—கள்.
அருகியரத்தம்—பூனைக்காலி.
அருகு—சமீபம், 2. ஓரம், 3. திவட்டி.
அருக்கம்—எருக்கு, 2. நீர்க்காக்கை.
அருக்களி—(வி) பயப்படு, 2. அருவரு.
அருக்கன்—சூரியன்.
அருக்காணி—அருமை, 2. அழுத்தம்.
அருக்கியம்—மந்திரநீரிறைக்கை, 2. பூசனைமுறையுளொன்று.
அருக்கு—(வி) குறை, 2. சுருக்கு, 3. ஒடுக்கு, 4. செய்யப் பின்வாங்கு.
அருங்கலச்செப்பு—மணிக்கலம் பெய்த பணிப்பெட்டகம், 2. ஒரு நூல்.
அருசி—சுவையின்மை.
அருச்சகன்—பூசாரி.
அருச்சனை—பூசனை.
அருச்சி—(வி) பூசி.
அருச்சியம்—வணக்கம்.
அருச்சுனம் — மருதம், 2. வெண்மை, 3. எருக்கு, 4. பொன்.
அருச்சுனன்—விசயன், 2. கார்த்தவீரியன்.
அருச்சை—பூசை.
அருஞ்சயன் — சீவகனது தாயின் பாட்டன்.
அருஞ்சிறை—கடுஞ்சிறை, 2. நரகம்.
அருட்குடையோன்—அருகன், 2. கடவுள்.
அருட்குறி—சிவலிங்கம்.
அருட்சத்தி—இரசம், 2. பராசத்தி.
அருட்செல்வம்—கடவுள்கடாட்சம்.
அருட்டம்—கடுகுரோகிணி, 2. மிளகு, 3. வேம்பு.
அருட்டு—(வி) எழுப்பு, 2. தூண்டு.
அருட்பா—கடவுள் அருள் அடைந்தோர் செய்த பா.
அருணகிரி—அருணாசலம்.
அருணகிரிநாதர் — திருவண்ணாமலையில் எழுந்தருளியிருந்த கௌமார பரமாசாரிய சுவாமிகள்.
அருணகிரியந்தாதி—ஒரு புத்தகம்.
அருணமணி—மாணிக்கம்.
அருணம் — மான், 2. ஆடு, 3. எலுமிச்சை, 4. ஓர் தேசம், 5. பொன், 6. யானை.
அருணவம்—கடல்.
அருணன்—சூரியன், 2. சூரியனது தேர்ப்பாகன், 3. புதன்.
அருணாசலக் கவிராயன்—இராமநாடகஞ் செய்த ஒரு சிறந்த வித்துவான்.
அருணாசலம்—திருவண்ணாமலை.
அருணிமம் — நன்னாரி, 2. திருநாமப்பாலை.
அருவணை—அருணாசலம்.
அருணோதயம்—சூரியோதயம், 2. வைகறை.
அருத்தசாமம்—சாமத்திற்பாதி.
அருத்தநாரீசன்—பாதி பெண்வடிவான சிவன்.
அருத்தபாகை—வேதநூற்பொருள்.
அருத்தம்—கருத்து, 2. பொருள், 3. பயன், 4. பொன், 5. பாதி.
அருத்தயாமம்—அர்த்தசாமம்.
அருத்தராத்திரம்—நடுராத்திரி.
அருத்தல்—(தொ. பெ) உண்பித்தல்.
அருத்தவாதம்—அபிப்பிராயத்தைக் கூறுதல்.
அருத்தாங்கீகாரம்—அரைமனம்.
அருத்தாபத்தி — சொல்லியதுகொண்டு சொல்லப்படாத பொருளைப் பெறுதல்.
அருத்தி—ஆசை, 2. கூத்து, 3 பாதம்.
அருத்தி—(வி) பாதியாக்கு.
அருத்துதல்—(தொ. பெ) உண்பித்தல்.
அருநெல்லி—ஒரு மரம்.
அருநெறி—ஒடுங்கியவழி, 2. நரகம், 3. பாலை நிலம்.
அருந்ததி—வசிஷ்டன் மனைவி, 2. ஒரு நட்சத்திரம்.
அருந்ததிகாட்டல் — கற்பில் அருந்ததி போலிருப்பாயென மணப்பெண்ணிற்கு அருந்ததி நட்சத்திரத்தைக் காட்டல்.
அருந்தமிழ்—நல்லதமிழ்.

அருந்தல்—அருமை.
அருந்துதல் — (தொ. பெ) உண்ணுதல், 2. குடித்தல், 3. அனுபவித்தல்.
அருப்பம்—கொலை, 2. வியாதி, 3. துக்கம், 4. ஊர், 5. வழுக்குநிலம், 6. கள், 7. மோர், 8. பிட்டு, 9. மா, 10. காடு, 11. தொடரி, 12. கோட்டை.
அருப்பலம்—அனிச்சமரம்.
அருப்பு—தயிர், 2. அரும்பு, 3. இளைத்தல், 4. கொலை, 5. துக்கம்.
அருமதாளம்—ஒன்பது தாளத்தொன்று.
அருமந்த—அரியமருந்தன்ன.
அருமருந்தன்ன—அரியமருந்துபோன்ற.
அருமலதி—ஓர் பண்.
அருமறைக் கொடியோன் — துரோணாசாரி.
அருமை—அபூர்வம், 2. மேன்மை, 3. வருத்தம், 4. சிறப்பு, 5. மேன்மை.
அரும்பல் — (தொ. பெ) முளைத்தல், 2. முகைத்தல்.
அரும்பாலை—ஓரிராகம்.
அரும்பித்தல்—(தொ. பெ) தோன்றுதல், 2. முகிழ்த்தல்.
அரும்பு-மொட்டு, 2. பொன் முதலியவற்றாற்செய்த வரும்பு, 3. மெல்லிய மயிர்.
அரும்பு—(வி) முளை, 2. முகை, 3. புன்னகைசெய்.
அரும்பூட்டு—தொடர்ச்சியின்மை.
அருவம்—உருவமின்மை, 2 அருந்தல்.
அருவரு—(வி) வெறு.
அருவருப்பு—(பெ) வெறுப்பு.
அருவாணம்—தாலம்.
அருவாநாடு — கொடுந்தமிழ் நாட்டினொன்று.
அருவி—மலையின்வீழாறு, 2. கழிமுகம், 3. தினைத்தாள்.
அருவு—(வி) மெல்லெனச்செல், 2. கிட்டு, 3. கண்கரி.
அருளகம்—வெள்ளொருக்கு.
அருளரசி—குடசப்பாலை.
அருளவம்—அழிஞ்சில்.
அருளுறுதி—வேம்பு.
அருள்—கிருபை, 2. ஈகை, 3. சத்தி, 4. கட்டளை.
அருளு—(வி) கிருபைசெய், 2. கா, 3. ஈத்தரவுசெய்.
அரூபம்—உருவமின்மை, 2. ஆகாயம்.
அரூபி — உருவிலான், 2. கடவுள், 3. சிவன்.
அரூபி—கருப்பூரம்.
அரேசகண்டு—கருணைக்கிழங்கு.
அரேசிகம்—வாழை.
அரேணுகம்—வால்மிளகு, 2. கடுக்காய் மரவேர்.
அரை—பாதி, 2. இடை, 3. வயிறு.
அரைக்கச்சு—அரைக்கச்சை.
அரைக்காணி—நாற்றறுபதில் ஒரு பாகம்.
அரைக்கால்—எட்டிலொன்று.
அரைசன்—அரசன்.
அரைசிலை—அம்மி.
அரைச்சதங்கை—ஓரிடையணி.
அரைச்சல்லடம்—அரையினின்று முழங்கால்வரை இடும் சல்லடம்.
அரைஞாண்—இடுப்பில் கட்டும் கயிறு.
அரைத்தல்—(தொ. பெ) தேய்த்தல், 2. மாவாக்கல்.
அரைப்பு—இருப்பைப் பிண்ணாக்கு.
அரைமா—நாற்பதிலொருபங்கு.
அரைமூடி—சிறுபெண்பிள்ளைகள் அரையிற் கட்டும் தட்டைவடிவான ஓர் ஆபரணம்.
அரையன்—அரசன்.
அரையாப்பு — அரையிலுண்டாகும் கட்டி.
அரையிருள்—அர்த்தராத்திரி.
அரைவயிரக்கண்—கம்மாளர் கருவியினொன்று.
அரைவாசி—பாதி.
அரோ—அசைச்சொல்.
அரோசகம்—, அரோசம்— } அருவருப்பு, 2. பசியின்மை, 3. சீரணியாமை.
அரோசி—(வி) அருவரு.
அரோசிகம்—, அரோசிப்பு— } ஓக்காளம், 2. அருவருப்பு.

அரோரூட்டுமா — ஆள்வள்ளிக் கிழங்கின்மா.
அர்க்கம்—எருக்கஞ்செடி, 2. தீர்க்காகம், 3. பொன், 4. பளிங்கு, 5. செம்பு.
அர்க்கன் — இந்திரன், 2. ஞாயிற்றுக் கிழமை.
அர்க்கியம்—அருக்கியம்.
அர்ச்சகன்—பூசைசெய்வோன்.
அர்ச்சனம்- திரவியஞ் சம்பாதித்தல்.
அர்ச்சனை- பூசை.
அர்ச்சிதன்—பூசிக்கப்படுவோன்.
அர்ச்சித்தல்—(தொ. பெ) பூசித்தல்.
அர்ஜீ—விண்ணப்பம்.
அர்ச்சியசிஷ்டர்—பரிசுத்தவான்கள்.
அர்ச்சுனம்—அருச்சுனம்.
அர்ச்சை — கல், மண் முதலியவற்றாற் செய்யப்பட்ட விக்கிரகம், 2. மூர்த்தி.
அர்த்தசந்திரபாணம் — பிறைமுகங் கொண்ட பாணம்.
அர்த்தசாமம்—இரவில் நடுச்சாமம்.
அர்த்தநாரீசுரன்—பாதிச்சரீரம் பெண்ணாக இருக்குஞ் சிவபெருமான்.
அர்த்தமண்டபம்-கருப்பக்கிரகமண்டபம்.
அர்த்தம்—அருத்தம்.
அர்த்தாட்சி- பக்கப்பார்வை.
அர்த்தாதுரம்—பணவாசை.
அர்த்தாபத்தி—அருத்தாபத்தி.
அர்த்தி—இரவலன்.
அர்த்தித்தல்—(தொ. பெ) இரத்தல், 2. வேண்டுதல்.
அர்ப்பணம்—நிவேதிக்கை.
அர்ப்பிதம்—கொடுக்கப்பட்டது.
அர்ப்பித்தல்—(தொ. பெ) நிவேதித்தல்.
அர்ப்புதம்—பத்துக்கோடி.
அல—(வி) வருத்தப்படு.
அலகம்—யானைத்திப்பிலி.
அலகரி— } பெருக்கு.
அலகிரி— }
அலகிடல்—அலகிடுதல்.
அலகிடுதல்—(தொ. பெ) செய்யுட் கோசையூட்டும்பொருட்டலகிடுதல், 2. கணக்குப் பார்த்தல், 3. துடைப்பத்தால் விளக்கல்.

அலகின்மாறு—துடைப்பம்.
அலகு — ஆயுதத்தினலகு, 2. ஆயுதப் பொது, 3. பறவைமூக்கு, 4. பயிர்க் கதிர், 5. எண், 6. பலகறை, 7. மகிழம்விதை, 8 நென்மணி, 9. துடைப்பம், 10. கொடிறு, 11. விசாலம்.
அலகுஞ்சம்—மின்மினி.
அலகை—பிசாசம், 2. கற்றாழை.
அலகைக்கொடியாள்—காளியம்மை.
அலகைத்தேர்—கானல்.
அலகைமுலையுண்டோன்—ஸ்ரீ கிருஷ்ணன்.
அலக்கணம் — இலக்கணமின்மை, 2. அதிட்டவீனம்.
அலக்கண்—துன்பம்.
அலக்கழித்தல்—(தொ. பெ) துன்பப்படுத்தல்.
அலக்கியம்- விசேடக்குறியில்லாதது.
அலக்கைச்சுரம்—கீழ்க்காய் நெல்லி.
அலங்கம்—அரண், 2. கொத்தளம்.
அலங்கரணம்—அலங்கரிப்பு.
அலங்கரி—(வி) சிங்காரி
அலங்கல்—(பெ) தளிர், 2. பூமாலை.
அலங்கல்—(தொ. பெ) அசைதல், 2. ஒளிர்தல், 3. மனங்கலங்கல்.
அலங்காரப் பிரியன்—ஸ்ரீ மகாவிஷ்ணு.
அலங்காரம் — அழகு, 2. சிறப்பு, 3. அணியிலக்கணம், 4. கலைஞான மறு பத்துநான்கி லொன்று.
அலங்காரி—அலங்காரஞ் செய்யப்பெற்றவள்.
அலங்கிருதம்— } அலங்காரம்.
அலங்கிருதி— }
அலங்கு—(வி) ஒளிசெய், 2. அசை, 3. தத்தளி, 4. இரங்கு.
அலங்கை—துளசி.
அலங்கோலம்—கிரமமில்லாமை.
அலசம்—சோம்பு.
அலசல்—சோர்வு, 2. இழைவிலக்கமான வஸ்திரம், 3. சோம்பல், 4. சிந்துண்டு கிடப்பது, 5. பயனற்றவேலை.
அலசு—(வி) கழுவு, 2. தளர்.
அலஞ்சரம்—மட்சாடி.

அலட்சியம்—வியப்பின்மை, 2. கனவீனம்.
அலட்டு—(வி) தொந்தரவுசெய், 2. பிதற்று.
அலதரன்—உழவுகாரன், 2. பலராமன்.
அலத்தகம்—, அலத்தம்— } செம்பஞ்சு.
அலத்தல்—(தொ. பெ) துன்பப்படுதல், 2. வறுமைப்படல்.
அலத்தி—மின்மினி.
அலந்தம்—மெய்யீறு.
அலந்தலை—துன்பம்.
அலந்தல்—செங்கத்தாரி.
அலந்தை—துன்பம், 2. குளம்.
அலப்படை—கலப்பைப் படை.
அலப்பல்—(தொ. பெ) வீண்பேச்சுப்பேசல்.
அலப்பன்—வீண்பேச்சுக்காரன்.
அலமரல்—(தொ. பெ) சுழலல், 2. கலங்கல், 3. பயப்படல், 4. வருந்தல்.
அலமாரி—அவாவுள்ளோன், 2. ஒருவகை மரப்பேழை.
அலம்—கலப்பை, 2. நீர், 3. விரிச்சிகவிராசி, 4. தேளின் கொடுக்கு, 5. தேள், 6. போதுமென்கை.
அலம்பல்—(தொ பெ) கழுவல், 2 தளம்பல், 3. ஒலித்தல்.
அலம்வரல்—(தொ. பெ) அமைவுண்டாதல், 2. சுழலுதல்.
அலயம்—அழியாமை, 2. உற்பத்தி, 3 நிலையுண்மை.
அலயன்—அழிவில்லாதவன்.
அலரவன்—பிரமன்.
அலரி—கண்வரி, 2. பூப்பொது, 3. சூரியன், 4. அழகு 5. தேனீ, 6. நீராவி.
அலருதல்—(தொ. பெ) விரிதல்.
அலரோன்—பிரமன்.
அலர்—மலர்ந்த பூ, 2. நீர், 3. பலரறிந்து பழிதூற்றுகை, 4. பழிச்சொல், 5. பூமாலை.
அலர்தல்—(தொ. பெ) விரிதல், 2. மலர்தல்.
அலர்மகள்—இலக்குமி.
அலவர்—உழுதொழிலாளர்.
அலவலை—, அலவல்— } விலக்கமாய் செய்யப்பட்டது, 2. அற்பகாரியம்.
அலவன்—நண்டு, 2. ஆண்நண்டு, 3. கற்கடகவிராசி, 4. சந்திரன், 5. பூனை.
அலவாங்கு—கடப்பாரை.
அலவாட்டு—வழக்கம்.
அலறல்—(தொ. பெ) அழுதல், 2. கதறல், 3. வெடிப்பாயொலித்தல்.
அலறுதல்—(தொ. பெ) அலறல்.
அலன்றல்—(தொ. பெ) சாதல்.
அலாக்கு—தீங்கு.
அலாதம்—நெருப்புக்கொள்ளி, 2. கரி.
அலாதா—, அலாது— } வேறு, 2. தொழிற்படாதது.
அலாபம்—நஷ்டம், 2. தீமை, 3. இடையூறு.
அலாபு—சுரை.
அலாயுதம்—கலப்பைப் படை.
அலாயுதன்—பலராமன்.
அலாரிதா—அலரிச்செடி.
அலி—பேடி, 2. வயிரமில்லாதமரம், 3. நறுவிலிமரம், 4. இயமன், 5. நெருப்பு.
அலி—பலதேவன்.
அலிகம்—, அலீகம்— } நெற்றி.
அலிங்கம்—குறிகள் இல்லாதது.
அலு—(வி) அலைக்கழிவுபடு.
அலுக்குதல்—(தொ. பெ) பிலுக்குப்பண்ணல்.
அலுக்குத்து—ஓர் காதணி.
அலுக்குலைவு—தாறுமாறுதல்.
அலுசிலும்பல்—(தொ. பெ) குழம்பல்.
அலுத்தசத்தி—பேரருளுடைமை.
அலுத்தல்—(தொ. பெ) சலித்தல், 2. இளைத்தல்.
அலுத்தன்—ஆசையற்றிருப்போன்.
அலுப்பு—(தொ.பெ) அயர்வு, 2. சலிப்பு.
அலுமாரி—அலமாரி.
அலுவல்—வேலை.
அலுவா—ஒரு பலகாரம்.
அலுவீகம்—வில்வமரம்.

அலேகம்—வெள்ளோடு.
அலோகம்—லோகமணல்.
அலை—கடற்றிரை, 2. புனற்றிரை, 3. கடல், 4. கருமணல்.
அலை—(வி) ஆடு, 2. திரி, 3. சோம்பு, 4. தள்ளாடு, 5. வருந்து.
அலைக்கழி-(வி) அலைந்து வருந்தச்செய்.
அலைக்கழிவு—(தொ. பெ) உலைவு.
அலைசடி—
அலைசடை— } தொந்தரவு.
அலைசல் — துன்பம், 2. அலைவு, 3. சோம்பு.
அலைசு—(வி) நீரிலலைசு.
அலைசோலி—அலைக்கழிவு.
அலைச்சல்—தொந்தரவு.
அலைதல் — (தொ. பெ) அலையல், 2. வருந்துதல்.
அலைத்தல் — (தொ. பெ) அலையச்செய்தல், 2. அசைத்தல், 3. வருத்துதல்.
அலைத்துவம்—மிகுதி.
அலைப்ப—(வி) வருத்த.
அலைப்பு—(பெ) வருத்தம்.
அலைமகள்—இலக்குமி.
அலைவாய்—கடல், 2. திருச்செந்தூர்.
அலைவு—அசைவு, 2. வருத்தம்.
அலோசி—பசளை.
அலோமி—பொற்றலைக்கையாந்தகரை.
அல்—வடமொழியினொற்றெழுத்து.
அல்—இரா, 2. இருள், 3. மதில்.
அல்கலும்—நாடோறும்.
அல்கல்—இரச, 2. நாள், 3. தரித்திரம்.
அல்குதல்—(தொ. பெ) குறைதல், 2. தங்கல்.
அல்லகண்டம்—துன்பம்.
அல்லகம்—கோவணம்.
அல்லகாத்திரி—தணிகைமலை.
அல்லது—அல்லாமற்போனால்.
அல்லம்—இஞ்சி.
அல்லவை—ஒழிந்தன.
அல்லற்படல்—துன்பப்படல்.
அல்லா—மகமதியர் கடவுள்.
அல்லாத்தல்—(தொ. பெ) அலமரல்.
அல்லாந்து—துன்பமுற்று.
அல்லாரி—வெள்ளல்லி.
அல்லார்—தீயோர்.
அல்லால்—அல்லாமல்.
அல்லி-ஆம்பல், 2. அகவிதழ், 3. பூந்தாது, 4. காயா, 5. இரா, 6. இளவேர்.
அல்லிகம்—பேய்க்கொம்மட்டி.
அல்லியம்—இடையரூர், 2. கொட்டி, 3 மகாவிஷ்ணுவின் கூத்தினொன்று.
அல்லியன் — தன் குழுவைப் பிரிந்த யானை.
அல்லியாமரம்—படவு வலிக்குந் தண்டு.
அல்லியான்—பிரமன்.
அல்லு—(வி) முடை.
அல்லூரம்—வில்வமரம்.
அல்லை—தாய்.
அல்லை — ஓர் கொடி, 2. முன்னிலையொருமைசுகுறிப்பு வினைமுற்று.
அவ—நிச்சயம், நிறைவு, வெறுப்பு, சுத்தம், அப்பால் முதலிய பொருள்களையுணர்த்தும் ஓர் உபசர்க்கம்.
அவகடம்—தாறுமாறு, 2. வஞ்சகம்.
அவகதவாய்—கீழ்க்காய் நெல்லி.
அவகாசம்—சமயம், 2. இடம்.
அவகாசம்—திராணி.
அவகிருத்தியம்—துர்ச்செய்கை.
அவகீர்ணி—ஸ்திரீ சங்கமஞ் செய்தலால் பிரமசரிய நெறி தவறினவன்.
அவகீர்த்தி—நிந்தை.
அவகுணம்—தீக்குணம்.
அவகேசி—பூத்துங் காயாதமரம்.
அவக்கிரசம்—காடி.
அவக்குறி—கெட்டகுறி.
அவசகுனம்—துர்ச்சகுனம்.
அவசங்கை—அழகின்மை, 2. சாமர்த்தியம்.
அவசம்—பரவசம்.
அவசரம்—சமயம், 2. விரைவு, 3. அவசியம்.
அவசர்ப்பிணி — உலகம் வாழ்நாள் போக முதலியவற்றால் தேய்பிறை போலச் சுருங்குங் காலம்.
அவசாயம்—நிச்சயம், 2. முடிவு
அவசாரம் — பிரயோசனமின்மை, 2. வேசித்தனம்.

அவசானம்—எல்லை, 2. முடிவு, 3. மரணம்.
அவசியம்—அவசரம், 2. நிச்சயம்.
அவச்சின்னம்—பிரிவு.
அவச்சேதனம்—பகுத்தறிதல்.
அவடி—குழாய், 2. துளை, 3. திரைச்சீலை.
அவணம்—அமணம்.
அவணன்- திண்ணியன், 2. புகழுடையோன்.
அவணி—நன்மை.
அவண்—அவ்விடம்.
அவதரணிகை—முகவுரை.
அவதரம்—சமயம், 2. தறுவாய்.
அவதரி- (வி) தங்கு, 2. பிற.
அவதாதம்- வெண்மை.
அவதாரணம்—மண்வெட்டி.
அவதாரம்—பிரிக்கை.
அவதாரம்—பிறப்பு.
அவதாரிகை—முகவுரை.
அவதானம்—கிரகித்தல், 2. சாதுரியம், 3. நிதானம், 4. ஞாபகம்.
அவதானம் பண்ணல்—நினைத்தல்.
அவதானித்தல் — (தொ. பெ) நினைத்தல்.
அவதி—தவணை, 2. எல்லை.
அவதி—ஆபத்து, 2. வருத்தம்.
அவதிப்படல்—(தொ. பெ) வருத்தப்படல்.
அவதிகத்தம்—கடனுரை.
அவதிக்காரகம்—நீக்கப்பொருளைக் காட்டு முருபுடைப் பெயர்.
அவதிஞானம் — முற்பிறப்பை அறியுமறிவு.
அவதும்பரம்—அத்திப்பழம்.
அவதூதம்—முழுத்துறவு.
அவதூதன்— } முற்றத்துறந்தவன்.
அவதூதி— }
அவதூறு—நிந்தை, 2. பிறர்பழிகூறல்.
அவத்தம்—பொய்.
அவத்தன்—பிரயோசனமில்லாதவன்.
அவத்து—பொருளல்லாதது.
அவத்துறை—தீயவழி.
அவத்தை—நிலை, 2. மரணவுபாதி, 3. வேதனை.
அவத்தைப்பிரயோகம் — கலைஞானம் அறுபத்துநான்கினொன்று.
அவநதன்—குனிந்தவன், 2. தலைகவிழ்ந்தவன்.
அவநம்பிக்கை—நம்பிக்கையின்மை.
அவநாசி—ஓர் சிவஸ்தலம்.
அவநி—பூமி.
அவநிகேள்வன்—மகாவிஷ்ணு.
அவநிபன்— }
அவநிபாரகன்- } அரசன்.
அவநிபாலகன்— }
அவநிபாலன்— }
அவநியாயம்— }
அவநீதம்— } நீதியின்மை.
அவநீதி }
அவநுதி உண்மையை மறுத்துப் பிறிதொன்றாக உரைப்பது.
அவநெறி—பாவவழி.
அவந்தரை— } குழப்பம், 2. சேதம்.
அபந்தரை— }
அவந்தி — உஜ்ஜயினி (இது சத்தபுரியிலொன்று), 2. அக்காள், 3. காடித் தண்ணீர்.
அவந்திகன்—அவந்தி தேசத்தரசன்.
அவந்திகை—அவந்தி, 2. கிளி.
அவந்திசோமம்—காடி.
அவபத்தியம்—இச்சாபத்தியம்.
அவபாசகம் — ஒளியுடையது, 2. பரப்பிரமம்.
அவபிருதம் — வேள்விமுடிவிற்செய்யும் ஸ்நானம்.
அவப்பிரஞ்சம்—இழிசனர்மொழி.
அவப்பொழுது—வீண்பொழுது.
அவமதி—நிந்தனை.
அவமதிச்சிரிப்பு—நிந்தனைச்சிரிப்பு.
அவமதித்தல்—(தொ. பெ) இகழ்வாக மதித்தல்.
அவமதிப்பு—நிந்தனை.
அவமரணம்—அகாலமரணம்.
அவமரியாதை—மரியாதைத்தவறு.
அவமாக்கல்—வீணாக்கல்.
அவமானம்—மானவீனம்.
அவமானித்தல் — (தொ. பெ) அவமானப்படுத்தல்.

அவமிருத்து – துன்மரணம், 2. கேது வின் மகன்.
அவம்–வீண்.
அவம்போதல்–வீணாகப்போதல்.
அவயங்காத்தல்–அடைகாத்தல்.
அவயமிடல்–அபயமிடல்.
அவயம்–இலாமிச்சு, 2. அடை.
அவயவம்–உறுப்பு, 2. உடல்.
அவயவி–உடல், 2. உறுப்பி.
அவயோகம்–துர்ச்சம்பவம்.
அவரகாத்திரம்–கால்.
அவரசன்–தம்பி.
அவரசை–தங்கை.
அவராகம்–இச்சையின்மை.
அவரி–அவுரி.
அவரை–அவரைக்கொடி.
அவரோகணம்–இறங்குதல், 2. விழுது.
அவரோகம்–இறங்குதல், 2. சுவர்க்கம், 3. விழுது.
அவரோதம் – அரண்மனை, 2. தடை, 3. வேலி.
அவரோதனம்–உள்மாளிகை, 2. தடை.
அவரோபணம் – இறக்குதல், 2. அத்தமித்தல், 3. வேரோடு பிடுங்கல்.
அவர்–அவர்கள்.
அவர்ணியம் – வர்ணித்துச் சொல்லப்படுவதல்லாதது.
அவலச்சுவை – ஒன்பது சுவைகளுள் ஒன்று.
அவலட்சணம்–அழகின்மை, 2. ஒழுங்கின்மை.
அவலம் – பலவீனம், 2. துன்பம், 3. சோர்வு, 4. அவலச்சுவை.
அவலம்பம் – புகலிடம், 2. ஊன்றுகோல்.
அவலம்பித்தல் – (தொ. பெ) சார்ந்து நிற்றல்.
அவலன்–உடற்குற்றமுடையவன்.
அவலி–(வி) வருந்து, 2. புலம்பு.
அவலேகனம்–நக்குகை.
அவலேசம்–அற்பம், 2. அவமானம்.
அவலை–காடு, 2. கட்டுப்பு.
அவலோகம்– } பார்வை.
அவலோகனம்– }
அவலோகிதன்–அறியப்பட்டவன்.
அவல் – ஓர் சிற்றுணவு, 2. பள்ளம், 3. குளம்.
அவவாதம்–வீண்பேச்சு.
அவவிசுவாசம்–பொய் விசுவாசம்.
அவவு–அவா.
அவளிங்கை–திரைச்சீலை.
அவளதுவளை–கதம்பவுணவு.
அவள்–அப்பெண்.
அவற்கம்–கஞ்சி.
அவனதம் – (தொ. பெ) குனிதல், 2. தலைகவிழ்தல்.
அவனசி–ஓர் சிவஸ்தலம்.
அவனி–பூமி.
அவனிகேள்வன்–மகாவிஷ்ணு.
அவனிபதி– }
அவனிபன்– }
அவனிபாரகன்– } அரசன்.
அவனிபாலகன்– }
அவனிபாலன்– }
அவன்–உயர்திணை ஆண்பாலொருமைப் படர்க்கையிடத்துச் சுட்டுப்பெயர்.
அவா–ஆசைப்பெருக்கம்.
அவாசி– } தெற்கு.
அவாசீனம்– }
அவாச்சியம்–சொல்லால் வெளிப்படுத்தாதது.
அவாந்தரம் – வெறுவெளி, 2. மத்தி, 3. உதவியின்மை, 4. அழிவு.
அவாய்நிலை – அருத்தம் பூர்த்தியாகாமல் எஞ்சி நிற்பது.
அவாவுதல்–(தொ.பெ) பேராசை கொள்ளுதல், 2. விரும்புதல், 3 இறங்குதல்.
அவி–தேவருணவு, 2. நெய், 3. சோறு.
அவி–(வினை) வேகு, 2. தணி, 3. அழி, 4. புழுங்கு, 5. வெதும்பு, 6. வருந்து.
அவிகசம்–குவிந்தது.
அவிகற்பம்–சந்தேகமின்மை.
அவிகாரம் – விகாரமின்மை, 2. எழுவாய்.
அவிகாரன்– } கடவுள்.
அவிகாரி– }
அவிக்கினம்–விக்கினமின்மை.

அவிசாரம்—விசாரமின்மை, 2. கவலை யின்மை.
அவிசாரி—அபிசாரி.
அவிசு—தேவருணவு, 2. வெறுஞ்சோறு.
அவிசுவாசம்—அவபக்தி.
அவிச்சின்னம்—பிரிக்கப்படாமை.
அவிச்சை—அஞ்ஞானம்.
அவிஞ்சை—அவித்தை.
அவிஞ்சை—அஞ்ஞானம்.
அவிடி—திரைச்சீலை.
அவிட்டம்—ஓர் நட்சத்திரம்.
அவிதா — 'உதவிசெய்' எனப்பொருள் படும் ஒரு வடமொழி இடைச்சொல்.
அவிதி—கிரமமின்மை, 2. வருத்தம்.
அவித்துவையல்—பச்சடி.
அவித்துரும்ம்—இலுப்பைமரம்.
அவித்தை—அஞ்ஞானம், இது, பஞ்ச மாயையிலொன்று.
அவிநயம்—
அபிநயம்— } விநயமின்மை.
அவிநாசி — அழியாமை, 2. ஓர் சிவ ஸ்தலம்.
அவிநாபாவம் — விட்டகலாது உடன் நிகழும் தன்மை.
அவிநாபூதம்—நீக்கமின்றியிருத்தல்.
அவிநாபூதை—விட்டுப்பிரியாதிருக்கின் றவள்.
அவிபாகம்—பிரிக்கப்படாதது.
அவிப்பாகம்—தேவருணவு.
அவிமுக்தம்—
அவிமுக்தி—
அவிமுத்தி— } காசிக்கருகிலுள்ள ஓர் புண்ணிய பூமி.
அவியல்—(தொ. பெ) அவித்தது, 2. ஓர் கறி, 3. புழுக்கம், 4. வெப்பம், 5. வாய்ப்புண்.
அவிரதம்—எப்பொழுதும்.
அவிரளம்—நெகிழ்ச்சியின்மை.
அவிரி—அவுரி.
அவிருகம்—அதிவிடயம்.
அவிருத்தம்—விரோதமின்மை.
அவிரோதம்—மாறுபாடின்மை.
அவிரோதவுந்தியார்—சாந்தலிங்கசாமி கள் செய்த நூல்களிலொன்று.
அவிர்—பிரகாசம், 2. புல்லு.
அவிர்—(வி) பிரகாசி, 2. பீறு.
அவிர்ப்பாகம்—அவிப்பாகம்.
அவிவாதம்—இசைவு.
அவிவேகம்—விவேகமின்மை.
அவிவேகி—அறிவில்லாதவன்.
அவிழ்—சோறு.
அவிழ்தல்—(தொ. பெ). கட்டவிழ்தல், 2. நெகிழ்தல், 3. மலர்தல்.
அவிழ்த்தல்—(தொ. பெ) கட்டு நீக்கல் 2. அலர்த்தல்.
அவிழ்தம்—அவுடதம்.
அவுக்கவுக்கெனல்—ஒலிக்குறிப்பு, 2. விரைதல்.
அவுசு—சுத்தம்.
அவுசுக்காரன் — உடுப்பிலதிக ஆசை யுள்ளவன்.
அவுஷதம்—
அவுடதம்— } ஔடதம்.
அவுணன்—மாவலி, 2. அசுரன்.
அவுதா—யானைமேற்றவிசு.
அவுத்திரிதீட்சை — சயிக்கைசெய்தும் தரையிலெழுதியும் காட்டுமோ ருப தேசம்.
அவுபலபாஷாணம்—ஓர்வகைப் பாஷா ணம்.
அவுரி—நீலிப்பூண்டு.
அவுழதம்—
அவுழ்தம்— } மருந்து.
அவுறுதம்—பித்தாதிக்கம், 2. கிரந்தி.
அவேட்டிதம் — சுற்றிக்கொள்ளப்படா தது.
அவேதம்—மறதி.
அவேத்தியம்—அறியப்படாதது, 2. பசுக் கன்று.
அவேத்தியன்—அறியப்படாதவன்.
அவை — அஃறிணைப் பன்மைச்சுட்டுப் பெயர், 2. சபை, 3. கூட்டம், 4. புலவர், 5. அம்பலம்.
அவைத்தல்—(தொ. பெ) நெரித்தல், 2. நெல் முதலிய குற்றல், 3. வெட்டு தல்.
அவைப்பு—குற்றப்பட்ட அரிசி.
அவையடக்கம் — சபைமுன் தன்னைத் தாழ்த்திக் காட்டல்.

அவையடக்கு—அவையடக்கம்.
அவையம்—திரள்.
அவையல்—குற்றலரிசி, 2. திரட்சி.
அவையல்கிளவி-அவைக்கண்ணுரைக்கத் தகாதசொல்.
அவையாவரிசி—கொழியலரிசி.
அவையிற்றுக்குள்—அவற்றுள்.
அவைராக்கியம்—வைராக்கியமின்மை.
அவ்—அவை.
அவ்யக்தம்—அவ்வியத்தம்.
அவ்யாப்தி—அவ்வியாத்தி.
அவ்வயின்—அவ்விடம்.
அவ்வளவு—அம்மட்டு.
அவ்வாய்—அழகிய இடம்.
அவ்வாறு—அவ்விதம்.
அவ்விதழ்—அழகிய இதழ்.
அவ்வித்தல் — (தொ. பெ) பொறாமை கொள்ளுதல்.
அவ்வியஞ்சனம்—அடையாளமற்றது.
அவ்வியத்தம் — விளங்கக் காணப்படாதது, 2. ஒரு பெரிய எண்.
அவ்வியத்தன்—கடவுள்.
அவ்வியம்—மனக்கோட்டம், 2. அழுக்காறு.
அவ்வியம்—தேவர்க்கிடப்படுவது.
அவ்வியயம் — அழியாதது, 2. இடைமொழி.
அவ்வியயன்—அழிவில்லாதவன்.
அவ்வியாத்தி—எங்குமிருத்தலின்மை.
அவ்வுதல்—(தொ.பெ) அவாவி விழுதல்.
அவ்வை — தாய், 2. தவப்பெண், 3. ஔவையார்.
அழகர்-மகாவிஷ்ணு, 2.வெள்ளெருக்கு.
அழகாரம் — சித்திரமாகப் பேசுகை, 2. வீண்புகழ்ச்சியாகப் பேசுகை.
அழகியவண்ணன்—ஓர் நெல்.
அழகு—வனப்பு, 2. ஒழுங்கு.
அழகு—(வை.அ) சருக்கரை.
அழகுதுரைப்பெண் — இந்திர பாஷாணம்.
அழத்தியன்—பெருங்காயம்.
அழம்—பிணம்.
அழலவன் — ஆதித்தன், 2. செவ்வாய், 3. அக்கினிதேவன்.

அழலாடி— } சிவன்.
அழலேந்தி— }
அழல்—(வி) எரி, 2. கோபி.
அழல்—(பெ.) நெருப்பு, 2. உட்டணம், 3. கேட்டை, 4. செவ்வாய், 5. நரகம், 6. எரிவு, 7. கோபம், 8. கொதிப்பு, 9. சுரச்சூடு, 10. விடத்தெரிவு.
அழல்வண்ணன்—சிவபெருமான்.
அழற்காய்—மிளகு.
அழற்சி—கோபம், 2. அழுக்காறு.
அழற்றுதல் — (தொ. பெ) எரிதல், 2. சுடுதல்.
அழனம்—தீ, 2. பிணம்.
அழன்—பிணம்.
அழி—(வி) கெடு, 2. தவறு.
அழிகட்டு—பொய்ச்சீட்டு, 2. வீண்போக்கு, 3. தடை, 4. மாற்று.
அழிச்சாட்டியம்—அலைவு.
அழிஞ்சில்—செம்மரம்.
அழிதகன்—தகுதிகெட்டவன்.
அழிதகை—தகுதிக்கேடு.
அழிதலை—தலையோடு.
அழிதூ—அலி.
அழிம்பு—புரட்டு, 2. கேடு.
அழிவு—கேடு, 2. குற்றம், 3. தோல்வி.
அழு—(வி) இரங்கு, 2. புலம்பு, 3. சிணுங்கு, 4. கத்து.
அழுகண்ணி—ஒரு பூடு.
அழுகல்—அழுகினது.
அழுகுணி—அழுபிள்ளை, 2. ஒரு கரப்பன்.
அழுக்கம்—கவலை.
அழுக்கறுத்தல்—(தொ. பெ) பொறாமை கொள்ளல்.
அழுக்காறு—பொறாமை, 2. பொய்.
அழுக்கு—மாசு, 2. பொறாமை, 3. மலம், 4. ஆமை.
அழுங்காமை—(தொ. பெ) அலையாமை, 2. இரங்காமை, 3. கெடாமை, 4. சோம்பாமை, 5. வருத்தப்படாமை.
அழுங்கு—(வி) வருந்து, 2. துன்பப்படு, 3. அழு, 4. இரங்கு, 5. அழுந்து, 6. ஒலிமழுங்கு, 7. அஞ்சு, 8. சோம்பு, 9. தாமதி.

அழுங்குப்பிடி—நெகிழாது பிடித்தல்.
அழுங்குவித்தல்—(தொ. பெ) துயருறச் செய்தல்.
அழுத்தக்காரன்—இறுக்கமுடையவன், 2. அடக்கமானவன்.
அழுத்தம்—இறுக்கம், 2. கடினம், 3. பிடிமானம், 4. பதிப்பு, 5. அடக்கம், 6. உறுதி, 7. மிக்க கவனம், 8. லோபம்.
அழுத்து—(வி) அழுந்தச்செய், 2. உரப்பு, 3. பதி, 4. கருத்திலிருத்து.
அழுந்து — (பெ) நீராழம், 2. வெற்றிலை நடும் வரம்பு.
அழுந்தூர்— } ஓரூர்.
அழுந்தை— }
அழுப்பு—சோறு.
அழுப்புகம்—தேவலோகம்.
அழுவம் — பரப்பு, 2. நாடு, 3 கடல், 4. வழுக்குநிலம், 5. துருக்கம், 6. பெருமை, 7. நடுக்கம், 8. முரசு, 9. போர்க்களம், 10. அப்பவருக்கம், 11. அழுக்குநிலம்.
அழைக்கை—(தொ. பெ) கூவுகை.
அழைத்தல் — (தொ. பெ) கூப்பிடுதல், 2. வரச்செய்தல்.
அழைப்பு—(தொ. பெ) விளிக்கை.
அள — (வி) அளவுசெய், 2. பங்கிடு, 3. எட்டு.
அளகத்தி—அளகமுடையவள்.
அளகபந்தி— } கூந்தற்பாரம்.
அளகபாரம்— }
அளகம்—மயிர்ச்சுருள், 2. பெண்மயிர்.
அளகம்—நீர், 2. பன்றிமுள்.
அளகளப்பு—ஐக்கம்.
அளகாதிபதி— }
அளகாதிபன்— } குபேரன்.
அளகாபதி— }
அளகாபுரி—குபேரனுடைய நகரம்.
அளகு—கூகை, கோழி, மயில் இவற்றின் பெண், 2. அன்னப்பெடை, 3. சேவல், 4. கார்த்திகைநாள்.
அளகேசன்—குபேரன்.
அளகை—குபேரன் நகர், 2. எட்டிற்கு மேலும் பத்திற்குக் கீழுமான வயதுடைய பெண்.
அளக்கர்—உப்பளம், 2. கடல், 3. கார்த்திகைநாள், 4. பூமி, 5. நீர்வழி, 6. குழைசேறு.
அளத்தியர் — உப்பமைப்போர் பெண்கள்.
அளத்துநிலம்—களர்நிலம்.
அளத்துப் பச்சை — மருநகொழுநதுச் சக்களத்தி.
அளந்திடல்—(தொ. பெ) அளந்தல.
அளபு—அளவு, 2. அளபெடை.
அளபெடை—எழுத்துக்கள் தத்தம்மாத்திரையின் நீண்டொலித்தல்.
அளப்பம்— } அளக்கை. 2. ஊழ், 3. அலப்பு.
அளப்பு— }
அளப்பளத்தல் — (தொ. பெ) பிதற்றல்.
அளமரல்—(தொ. பெ) அலமரல்.
அளம் — உப்பளம், 2. நெய்தனிலம், 3. கூர்மை, 4. நெருக்கம்.
அளவடி—நாற்சீரான் வருமடி.
அளவர்—உப்பமைப்போர்.
அளவல் — (தொ. பெ) எட்டுதல, 2. கலத்தல்.
அளவளாதல்— } (தொ. பெ) ஐககமாயிருத்தல்.
அளவளாவல்— }
அளவளாவுதல்— }
அளவன்—சோரபாஷாணம்.
அளவு—பிரமாணம், 2. வரையறை.
அளவை—அளவு, 2. ஓர் நூல், 3. தன்மை.
அளறு—குழைசேறு, 2. நரகம்.
அளறுதல் — (தொ.பெ.) சிதறிவெடித்தல், 2. பிளததல், 3. தொனித்தல்.
அளாய—கலந்த.
அளாவு—(வி) ஊடாடு, 2. கல, 3. தாவு, 4. தடவு, 5. துழாவியாற்று.
அளி—வண்டு, 2. மது.
அளி—கொடை, 2. அருள், 3. குளிர்ச்சி, 4. தேன், 5. மதுரம், 6. காய், 7. எளிமை, 8. கிராதி.
அளி—(வி) கா, 2. ஈ, 3. கையளி, 4. ஈனு, 5. பத்திரப்படுத்து, 6. பங்கிடு, 7. நெருக்கு.
அளிகம்—நெற்றி, 2.

அளிதல் – (தொ. பெ) உருகுதல், 2. குழைதல், 3. கனிதல்.
அளித்தல்–(தொ. பெ) இரட்சிக்கை, 2. அருளுகை.
அளிந்தம்–கோபுரவாயிற்றிண்ணை, 2. வீட்டின் வெளிச்சாலை.
அளியர் – எளியோர், 2. அருளுடையோர்.
அளுக்கு–(வி) பயமுறுத்து.
அளுங்கு–(வி) அழுங்கு.
அவள–வளை, 2. மலைக்குகை, 3. புற்று, 4. இடம், 5. மோர், 6. வெண்ணெய், 7. தயிர்.
அவள–(வி) கல, 2. வருடு, 3. பூசிக்கொள், 4. தொட்டழுக்காக்கு.
அவளஇ–கலந்து.
அள்– / அள்ளு– காது, 2. கன்னம், 3. கூர்மை, 4. பற்றிரும்பு, 5. நெருக்கம், 6. ஓர் நோய்.
அள்ளாத்தி–ஓர் மீன்.
அள்வழும்பு–காதுக்குறும்பி.
அள்ளல்–அள்ளுதல், 2. சேறு, 3. நரகம்.
அள்ளு–அளவுகூலித்தானியம்.
அள்ளுகொள்வள–பெருங்கொள்ளை.
அள்வள–பிசாசம்.
அற–முற்ற, 2. மிக.
அறக்கடவுள்–யமன்.
அறக்கற்பு–மறந்தவிர் கற்பு.
அறக்காடு–சுடுகாடு.
அறக்குளாமீன்–சூரைமீன்.
அறக்கொடி–பார்வதி.
அறக்கொடிபாகன்–சிவன்.
அறங்கடை–பாவம்.
அறச்சாவல–தருமசத்திரம்.
அறச்செல்வி–தருமதேவதை.
அறத்தின்மைந்தன்–தருமபுத்திரன்.
அறத்துறப்பு – அறத்தினது அங்கம். அவை:–1. ஐயப்படாமை, 2. விருப்பின்மை, 3. வெறுப்பின்மை, 4. மயக்கமின்மை, 5. பழியை நீக்கல், 6. அழிந்தோரை நிறுத்தல், 7. அறம் விளக்கல், 8. பேரன்புடைமை.
அறநெறி–தருமவழி.
அறப்புறம்–அறச்சாலை.
அறம் – தருமம், 2. யமன், 3. நீதி, 4. புண்ணியம்.
அறல்–நீர், 2. புனற்றிரை, 3. கருமணல், 4. சிறுதூறு, 5. நாசம்.
அறவர்– / அறவோர்– தருமநெறியோர், 2. துறவோர், 3. முனிவர்.
அறவன்–புத்தன், 2. புண்ணியன்.
அறவாழி–தருமசக்கரம்.
அறவாழியந்தணன்–ஸ்ரீ மகாவிஷ்ணு, 2. அருகன், 3. அரன்.
அறவை–பிரயோசனமற்றது.
அறவள–தொந்தரை, 2. ஓர் நோய்.
அறனோம்படை – தருமம் போதிக்குமிடம்.
அறன்–அறம்.
அறன்கடை–பாவம்.
அறு–நீங்கா.
அறி–(வி) உணர்.
அறிகுறி–அடையாளம்.
அறிக்கை–விளம்பரம்.
அறிக்கை பண்ணல்– / அறிக்கையிடல்– வெளியிடல்.
அறிஞன்–அறிவுடையோன், 2. புலவன், 3. முனிவன், 4. புதன், 5. புத்தன்.
அறிதுயில்–யோக நித்திரை.
அறிப்பலம்–திப்பிலி.
அறிமடம் – தெரிந்தும் தெரியாதுபோலிருத்தல்.
அறிமுகம்–பழக்கம்.
அறிவரன்–அருகன்.
அறிவர்–அறிஞர், 2. கம்மாளர்.
அறிவர்சிறப்பு–கடவுள் பூசை.
அறிவழி–கள், 2. பிசாசம்.
அறிவறை–அறிவில்லான், 2. அறிவில்லாத்தன்மை.
அறிவனாள்–உத்திரட்டாதி.
அறிவன்–அறிவுடையோன், 2. கம்மாளன், 3. புதன், 4. உத்திரட்டாதி நாள், 5. செவ்வாய், 6. கடவுள், 7. அருகன். ஸ்ரீ மகாவிஷ்ணு, 9. சிவன்.
அறிவாளன்– / அறிவாளி– புத்திசாலி.

அறிவிலி – அறிவில்லாதவன், 2. அறிவில்லாதவள்.
அறிவீனம்–அறியாமை.
அறிவு–ஞானம், 2. புத்தி, 3. உணர்வு, 4. பொறியுணர்வு, 5. போதனை.
அறிவுகொளுத்தல்–போதித்தல்.
அறு–(வி) அறு, 2. அழி.
அறுகரிசி–அக்ஷதை.
அறுகழி–நீரற்ற கழி.
அறுகால்–வண்டு.
அறுகீரை–அறைக்கீரை.
அறுகு–ஓர் புல், 2. சிங்கம், 3. யாளி, 4. யானை.
அறுகுணன்–கடவுள்.
அறுதுறை–கவந்தம்.
அறுகை–அறுகம்புல்.
அறுசுவை–அறுவித வருசி. அவை:— உவர்ப்பு, கார்ப்பு, கைப்பு, தித்திப்பு, துவர்ப்பு, புளிப்பு என்பன.
அறுதலி–மங்கலிய மிழந்தவள்.
அறுதி–முடிவு, 2. விக்கிரயச் சீட்டு, 3. இல்லாமை.
அறுதியிடல்–நிச்சயித்தல்.
அறுதொழிலோர்–பிராமணர்..
அறுந்தருணம்– } தற்சமயம்.
அறுந்தருவாய்– }
அறுபதம்–ஆறுகால், 2. வண்டு.
அறுபான்–அறுபது.
அறுபொருள்–ஐயமறற பொருள்.
அறுப்பு–அரிகை, 2. அறுத்த துண்டு, 3. தாலியறுக்கை, 4. அறுவாய், 5. ஆட்சேபிக்கை.
அறுப்புக்காலம் – அரிவி வெட்டுங் காலம்.
அறுமவண–அரிவாள்மணை.
அறுமீன்–கார்த்திகை நட்சத்திரம்.
அறுமீன் காதலன்– } குமரன்.
அறுமுகன்– }
அறும்பு–பஞ்சம், 2. துஷ்டத்தனம்.
அறுவடை–நெல்முதலியன அறுத்தல்.
அறுவாய் – அறுத்த இடம், 2. கார்த்திகை நட்சத்திரம்.
அறுவை–ஆடை, 2. சித்திரை நட்சத்திரம்.

அறை–(பெ) எழுத்திரேசை, 2. சொல், 3. பாறை, 4. மலையுச்சி, 5. அறைவீடு, 6. பெட்டியறை, 7. அரங்கு, 8. தேன்கூட்டினறை, 9. திரைச்சீலை, 10. முழைஞ்சு.
அறை–(வி) அடி, 2. ஒலி.
அறைகுறை–பூர்த்தியின்மை.
அறைகூவல் – (தொ. பெ) போருக்கழைத்தல்.
அறைசெய்தல்–அறுத்துத் துண்டமாக்குதல்.
அறைபோதல் - (தொ. பெ) கீழறுத்தல்.
அறையுண்ணல் – (தொ. பெ) அடிக்கப்படுதல், 2. அறுக்கப்படுதல்
அற்கம்–திரவியம், 2. விலை.
அற்கல்–(பெ) அறிவு.
அற்கல்–(வி) நிலைபெறுதல்.
அற்பணம்–காணிக்கை செலுத்துகை.
அற்பத்தனம்–இழிவு.
அற்பபுத்தி–புத்தியீனம்.
அற்பம்–சிறுமை, 2 இழிவு, 3. இலேசு, 4. நாய்.
அற்பன்–நீசன், 2. கீழ்மகன்.
அற்பரம்–மக்கட் படுக்கை.
அற்பருத்தம்–வாழை.
அற்பாயு– } அற்ப வயது.
அற்பாயுசு– }
அற்பிதம் – காணிக்கையாகக் கொடுக்கப்பட்டது.
அற்பு–அன்பு.
அற்புதமூர்த்தி–கடவுள்.
அற்புதம் – அதிசயம், 2. ஒரெண், 3. அழகு, 4. ஞானம்.
அற்புதன்–கடவுள்.
அற்புத்தவளை–நேசபந்தம்.
அற்றம்–சமயம், 2. சோர்வு, 3. மறைவு, 4. அழிவு, 5. மெலிவு, 6. உண்மை, 7. அச்சம்.
அற்றவர்–தரித்திரர்.
அற்றார்–தரித்திரர், 2. முனிவர்.
அற்று–அத்தன்மைத்து, 2. சாரியை.
அற்றை–அன்றைத்தினம், 2. அற்பம்.
அனகம்–பாவமின்மை.

அனகன்—கடவுள், 2. அருகன்.
அனங்கம் — மல்லிகை, 2. இருவாட்சி, 3. உடலின்மை.
அனங்கன்—மன்மதன்.
அனதிகாரி—உரிமையில்லாதவன்.
அனத்தம்—நாசம்.
அனந்தசயனம்—சர்ப்பசயனம் 2. ஒரு விஷ்ணுஸ்தலம்.
அனந்தம்—அளவின்மை, 2. ஆகாயம், 3. பத்துக்கோடி கோடாகோடி, 4. கௌரி பாஷாணம்.
அனந்தரம்—பிரிவின்மை, 2. நிதம், 3. மேல்.
அனந்தர்—மயக்கம், 2. நித்திரை, 3. பித்து, 4. மயிற்குட்டு, 5. பருத்தி.
அனந்தலோசனன் — கடவுள், 2. புத்தன்.
அனந்தல்—நித்திரை, 2. மதம்.
அனந்தன்—கடவுள், 2. மகாவிஷ்ணு, 3. அருகன், 4. பலதேவன், 5. அட்டநாகத்தொன்று, 6. சிவன், 7. ஆதிசேடன், 8. புத்தன்.
அனலம் — நெருப்பு, 2. உட்டணம், 3. சிவாகமமிருபத் தெட்டிலொன்று.
அனலன் — அக்கினிதேவன், 2. அஷ்டவசுக்களில் ஒருவன்.
அனலி—சூரியன்.
அனலு—(வி) வெம்மையுறு, 2. எரி.
அனல்—உட்டணம், 2. தீ, 3. உயிர்வேதனையிலொன்று.
அனவரதம்- எப்பொழுதும்.
அனற்ற—சுட, 2. எரிக்க.
அனுகதம்—ஆருதாரத்தொன்று.
அனுசாரம் — ஒழுக்கமின்மை, 2. உபசாரமின்மை, 3. சுத்தமின்மை.
அனுதரம்—அலட்சியம், 2. சகாயமின்மை.
அனுதரவு—அலட்சியம், 2. உதவியின்மை.
அனுதி — ஆதியின்மை, 2. கடவுள், 3. மகாவிஷ்ணு, 4. சிவன்.
அனுரதம்—எப்பொழுதும்.
அனுவிருட்டி—மழைக்குறைவு.
அனுவிலன்—சுக்கிரன்.

அனிச்சம்— } அருப்பலம்
அனிச்சை— }
அனிச்சை—இச்சையின்மை.
அனிட்டம்—விரும்பப்படாத தன்மை.
அனிலம்—காற்று, 2. பிறப்பு.
அனிலன் — வாயுபகவான், 2. அட்டவசுக்களி லொருவன், 3. ஓரிராக்கதன்.
அனீகம்— } சேனை, 2. அக்குரோணி.
அனீகினி— }
அனீசு—பெருஞ்சீரகம்.
அனு—கதுப்பு, 2. தொடர்ச்சி, 3. மோனை, 4. சமம்.
அனுகரணம்—ஒன்றுபோற் செய்கை.
அனுகூலம்-விக்கினமின்மை, 2. காரியசித்தி.
அனுக்கம் — சோம்பல், 2. பயம், 3. வருத்தம், 4. கேடு.
அனுக்கல் — (தொ. பெ) கெடுத்தல், 2. வாட்டுதல்.
அனுக்கிரகம்—கிருபை.
அனுக்கிரக மணிகை — பொருளட்டவணை.
அனுக்கை—உத்தரவு.
அனுங்கு—(வி) வருந்து, 2. புலம்பு, 3. மிணுமிணு.
அனுசந்தானம்—ஆராய்வு.
அனுசரணம்—உபசாரம், 2. இணக்கம்.
அனுசன்—தம்பி.
அனுசிதம் — தகுதியின்மை, 2. அசுத்தம், 3. பொய்.
அனுடம்—ஓர் நட்சத்திரம்.
அனுட்டணம் — சோம்பு, 2. வெப்பமின்மை.
அனுட்டானம் — தகுதி, 2. துவக்கம், 3. நிலைநிறுத்தல்.
அனுதாத்தம்—படுத்தலோசை, 2. வேதஸ்வரத்திலொன்று.
அனுதினம்—தினமும்.
அனுத்தம்—பொய்.
அனுபமம்—ஒப்பின்மை.
அனுபமை—மேன்மை, 2. தென்மேற்றிசை யானையின் பெண்யானை, 3. ஒப்பின்மை.

அனுபானம்—மருந்திற் சேர்த்துண்பது.
அனுபூதி—பிரமாணங்களைக் கொண்டறிந்த அறிவு.
அனுமதி—சம்மதி, 2. கட்டளை.
அனுமந்தன்— } ஆஞ்சனேயன்.
அனுமன்— }
அனுமானித்தல்—(தொ. பெ) ஐயப்படுதல், 2. குதிரை கனைத்தல்.
அனுமேயம்—ஓராளவை.
அனுராகம்—காமம்.
அனுவழி—புதன்.
அனூரு — மூடவன், 2. சூரியன் றேர்ப்பாகன்.
அனூரு—புதன்.
அனேகம்—பல.
அனை—ஓர்மீன், 2. தாய்.
அனைக்கியம்—ஐக்கியமின்மை.
அனைத்து — அத்தன்மையது; 2. அவ்வளவு.
அனைத்தும்—எல்லாம்.
அனைய—அன்ன.
அன்-ஓர் சாரியை, 2. ஆண்பாற்படர்க்கையொருமை விகுதி, 3. தன்மையொருமை விகுதி, 4. பெயர் விகுதி.
அன்பன்—தோழன், 2. கணவன்.
அன்பு—நேசம், 2. தயை, 3. ஆசை.
அன்மை—அல்லாமை.
அன்றாடம்—தினம் தினம்.
அன்றி—அல்லாது.
அன்றில்—ஓர் புள், 2. மூலநாள்.
அன்றினர்—பகைவர்.
அன்று — அந்நாள், 2. அல்ல, 3. அசைச்சொல்,
அன்றேல்—அல்லதேல்.
அன்னசத்திரம்—அன்னசாலை.
அன்னசாரம்—கஞ்சி,
அன்னசுத்தி—நெய்.
அன்னதாழை—அன்னாசி.
அன்னப்பால்—கஞ்சி.
அன்னப்பிராசனம்—சோறூட்டல்.
அன்னம்—சோறு.
அன்னம்—ஒரு பறவை.
அன்னம்பாறல்—(தொ. பெ) புலம்பல்.
அன்னவம்—கடல்.
அன்னன்—அத்தன்மையன்.
அன்னியபுட்டம்—குயில்.
அன்னியம்—வேறு, 2. புறத்தேயத்தேயுள்ளது, 3. வித்தியாசமான வருக்கம், 4. குயில்.
அன்னியன்—பிறன்.
அன்னியோன்னியம்—ஐக்கியம்.
அன்னுவயம்—தொடர்ச்சி, 2. வமிசம்.
அன்னுவாதேயம் — கணவன் வழியார் கொடுத்த நன்கொடை.
அன்னை—தாய், 2. அக்காள்.
அன்னோ—அதிசயச்சொல், 2. இரக்கச்சொல்.
அன்னோன்—அத்தன்மையன்.
அன்னோன்றி—பலமற்றவன்.

## ஆ

ஆ—இரண்டாமுயிரெழுத்து, 2. ஆக என்பதின் தொகுத்தல், 3. பசுப்பொது, 4. இரக்கச்சொல், 5. ஆறு என்பதின் கடைக்குறை, 6. ஆச்சாமரம், 7. பெண் எருமை, 8. பெண் பசு.
ஆஅ—அதிசயவிரக்கச்சொல்.
ஆக—முழுவதும், 2. உவமையுருபு.
ஆகஸ்மிகம்—தற்செயல், 2. எதிர்பாராமை.
ஆகடியம்—பரிகாசம், 2. அநியாயம்.
ஆகண்டலன்—இந்திரன்.
ஆகந்துகம்—மத்தியில் வந்தது.
ஆகமப்பிரமாணம் — மூவளவையினொன்று, அது உபதேசகலை, தந்திரகலை, மந்திரகலை எனப்படும்.
ஆகமமலைவு—ஆகமவிதிக்கு முரண்.
ஆகம்—மார்பு, 2. உடல், 3. மனம்.
ஆகமம்—மரப்பொது.
ஆகமனம்—வந்துசேரல்.
ஆகம்பிதம்—நடுக்கம்.
ஆகரம்—உறைவிடம், 2. வீடு.
ஆகரம்—சாலாங்க பாஷாணம்.
ஆகரி—ஓர்ராகம்.
ஆகருடணம்— } இழுக்கை, 2. அழைக்கை, 3. அட்டகருமத் தொன்று.
ஆகருஷணம்— }
ஆகருடணை— }
ஆகருஷி—(வி) இழு, 2. அழை.

ஆகவம்—போர், 2. வில்.
ஆகவம்—சீலே.
ஆகவனீயம் – வேதாக்கினி மூன்றில் ஒன்று.
ஆகற்பம்—அதிகப்படுத்தல், 2. அலங்காரம், 3. நோய்.
ஆகன்னம்—காதுபரியந்தம்.
ஆகு—(வி) சம்பவி, 2. முடி, 3. உண்டாகு, 4. தகுதியாகு.
ஆகா—வியப்பிடைச்சொல், 2. • எதிர்மறைப் படர்க்கைப் பலவின்பால் வினைமுற்று.
ஆகா—ஓர் கந்தருவன்.
ஆகாக்களங்கு – மிருதாரசிங்கி.
ஆகாங்கிசை— } அவாய்நிலே, 2. மிகு
ஆகாங்கிஷை— } விருப்பு.
ஆகாசகமனம் – ஆகாயத்தே செல்லுதல்.
ஆகாசகருடன்—கொல்லன்கோவை.
ஆகாசத்தாமரை—அந்தரத்தாமரை, 2. பொய்.
ஆகாசப்பொய்—பெரும் பொய்.
ஆகாசம்— } பஞ்சபூதத்தொன்று, 2.
ஆகாயம்— } வான், 3. வெளி.
ஆகாசவாணி— } அசரீரிவாக்கு.
ஆகாயவாணி— }
ஆகாத்தியம்—எதிரிடை.
ஆகாமியம் – அதிக்கிரமம், 2. வருங் கருமம்.
ஆகாரம்—ஓரெழுத்து, 2. வடிவம், 3. உணவு, 4. நெய், 5. உடல், 6. வீடு.
ஆகாரி—உயிர், 2. பூனே.
ஆகிரா—ஓர் பட்டணம்.
ஆகிருதி—வடிவு.
ஆகிருனந்தம்—புன்குமரம்.
ஆகு—கொப்பூழ், 2. சாமரம்.
ஆகு—பெருச்சாளி, 2. எலி.
ஆகுதி—ஓமாக்கினியி னெய்முதலியவற்றைப் பெய்தல்.
ஆகுபுகு—பூனே.
ஆகுலம்—கலக்கம், 2. வியாகுலம், 3. ஒலி, 4. ஆரவாரம்.
ஆகுலி—ஆவிரை.
ஆகுலித்தல் – (தொ. பெ) துன்புறல், 2. அழல்.
ஆகுவாகனன்—விநாயகன்.
ஆகுளி—சிறுபறை.
ஆகுனிவாதம்—ஓர் வாதநோய்.
ஆகூழ்—நல்ல அதிர்ஷ்டம்.
ஆகேடகம்—வேட்டை.
ஆகோள்—பசுக்கவர்தல்.
ஆக்கம் – ஆகுதல், 2. இலக்குமி, 3. இலாபம், 4. செல்வம், 5. பெருக்கம், 6. கொடிப்படை.
ஆக்கல் – (தொ. பெ) சமைத்தல், 2. செய்தல், 3. படைத்தல்.
ஆக்கிநேயம்—தென்கீழ்த்திசை, 2. பதினெண்புராணத்தொன்று.
ஆக்கியம்—நாமம்.
ஆக்கியாபி—(வி) கட்டளேயிடு.
ஆக்கியானம்—கட்டுக்கதை.
ஆக்கியோன்—செய்தோன்.
ஆக்கிரகம்—வலிமை, 2. மாவுக்கிரம்.
ஆக்கிரகாயணி—மிருகசீரிடம்.
ஆக்கிரகி—(வி) வலிமைகாட்டு, 2. பலவந்தமாயெடு.
ஆக்கிரந்திதம் – குதிரையின் விரைவு நடை.
ஆக்கிரமம்—மேலெழுச்சி.
ஆக்கிரமி – (வி) சினத்து வீரங்கொண்டெழும்பு.
ஆக்கிரயணம் – யாகமிருபத்தொன்றி னொன்று.
ஆக்கிராணம் – மணத்தல், 2. மூக்கு, 3. மூக்கிற்போடு மோர் மருந்துப் பொடி.
ஆக்கிராணித்தல்—(தொ. பெ) மணத்தல்.
ஆக்கினைசக்கரம்—ஆணே, 2. செங்கோன்முறைமை.
ஆக்கினை—கட்டளே, 2. தண்டனே, 3. சோதனைதண்டனே.
ஆக்குரோசம் – [illegible]
3. கடுங்கோ[illegible]
ஆக்குவயம்-
ஆக்கை—உ[illegible]

ஆக்கையிலி—மன்மதன்.
ஆங்க—ஓரசைச்சொல்.
ஆங்காரம்—அகங்காரம்.
ஆங்காரி—(வி) கருவங்கொள்.
ஆங்காரித்தல் — (தொ. பெ) கருவங் கொள்ளல்.
ஆங்காலம்—நற்காலம்.
ஆங்கிரசம் — தருமநூல் பதினெட்டில் ஒன்று.
ஆங்கிரசன்— ஆங்கிரன்— ஆங்கிரா— } சத்தவிருடிகளி லொருவன்.
ஆங்கிரம்—உபபுராணத்தொன்று.
ஆங்கீரச—ஓர் வருஷம்.
ஆங்கு — அவ்விடம், 2. உவமையுருபிடைச்சொல்.
ஆங்ஙனம் — அத்தன்மை, 2. அவ்விடம்.
ஆசக்தி— ஆசத்தி— } விருப்பம்.
ஆசங்கை—சந்தேகம், 2. பயம்.
ஆசங்கித்தல் — (தொ. பெ) சந்தேகங் கொள்ளல்.
ஆசட்சு—கண்.
ஆசந்தி—பாடை.
ஆசமனம் — மந்திரத்தா னீர்வாயிற் கொள்கை.
ஆசமனீயம் — மந்திரத்தாலுட் கொள்ளு நீர்.
ஆசமி—(வி) குடி, 2. விழுங்கு, 3. மந்திரத்தா னீரை யுட்கொள்.
ஆசம்—சிரிப்பு.
ஆசயம்—உறைவிடம், 2. கருப்பம்.
ஆசரணம்— ஆசரவண— } அநுட்டானம், 2. வழக்கம்.
ஆசரி—(வி) அநுசரி, 2. வணங்கு, 3. உபசரணைசெய், 4. அநுட்டி.
ஆசர்—ஆயத்தம்.
ஆசவம்—மது.
ஆசறுதி—முடிவு.
ஆசனம்—பீடம், 2. இருப்பு.
ஆசனன்—சுக்கிரன்.
ஆசாசி—சீந்தில்.

ஆசாடம்— ஆஷாடம்— } ஆடிமாதம், 2. பூராட உத்திராட நட்சத்திரங்கள், 3. பொதியமலை, 4. முருக்க மரம்.
ஆஷாடபூதி—மோசக்காரன்.
ஆசாட்டம்—தெளிவற்ற தோற்றம்.
ஆசாபங்கம்—நம்பி ஏமாறல்.
ஆசாபந்தம் — சிலம்பிநூல், 2. நம்பிக்கை.
ஆசாபாசம்—ஆசை மயக்கம்.
ஆசாமி—ஆள்.
ஆசாரக்கள்ளன் — முகத்துதி செய்பவன், 2. மாயக்காரன்.
ஆசாரபோசன்—பெருந்தேகி.
ஆசாரம் — அநுட்டானம், 2. சுத்தம், 3. ஒழுக்கம், 4. உபசாரம், 5. நெறி, 6. பிரதிஷ்டை பண்ணுகை, 7. அரசிருக்கை, 8. சீலை, 9. பெருமழை.
ஆசாரவாசல் — தலைவாசல், 2. வெளிவாசல்.
ஆசாரி—குரு, 2. ஒழுக்கமுள்ளவன்.
ஆசாரி—கம்மாளனது பட்டப்பேர்.
ஆசாரியபிஷேகம்— ஆசாரியாபிடேகம்— } சைவ தீக்ஷை வகைகளில் உயர்ந்தது.
ஆசாரியன்—குரு, 2. உபாத்தியாயன், 3. துரோணாசாரியன்.
ஆசானுபாகு- ஆசானுவாகு— } முழந்தாளளவுநீண்ட கையுடையோன்.
ஆசான் — குரு, 2. உபாத்தியாயன், 3. பாலையாழ்த்திறம், 4. வியாழம், 5. சுக்கிரன், 6. அருகன், 7. குமரன். 8. மூத்தோன்.
ஆசி—வாழ்த்து.
ஆசிகூறு—(வி) ஆசீர்வதி.
ஆசிக்கல்—காகச்சிலை.
ஆசிடை — வாழ்த்து, 2. சீலை, 3. கூட்டம்.
ஆசிதையன்—நாவிதன்.
ஆசியம்—அவமதிச்சிரிப்பு, 2. முகம்.
ஆசிரமம் — பன்னசாலை (முனிவரிருப்பிடம்).
ஆசிரயம் — புகலிடம், 2. கொள்கொம்பு.

ஆசிரயி – (வி) அனுட்டி, 2. கைக்கொள்.
ஆசிரிதம்–ஆசிரயமானது.
ஆசிரிதன்–பற்றுகிறவன்.
ஆசிரியம்– } அகவற்பா.
ஆசிரியப்பா– }
ஆசிரியவசனம்–குருவாக்கியம்.
ஆசிரியன் – குரு, 2. உபாத்தியாயன், 3. படைக்கலம் பயிற்றுவோன், 4. சாத்திரங் கற்பிப்போன்.
ஆசினி – ஈரப்பலா, 2. ஆகாயம், மரவயிரம், 4. மரவுரி.
ஆசீயம்–கருஞ்சீரகம்.
ஆசீர்வசனம்– } ஆசிமொழி.
ஆசீர்வாதம்– }
ஆசீர்வதி–(வி) வாழ்த்து.
ஆசீவகப்பள்ளி–சமணமுனிவர்மடம்.
ஆசீவகர்–சமண்முனிவர்.
ஆசு – சீக்கிரம், 2. பாடுகவென்ற அளவிற் பாடும் பாட்டு, 3. சமிசை.
ஆசு – குற்றம், 2. அற்பம், 3. கவசம், 4. நூலிழைக்கும் கருவிகளிலொன்று, 5. இலக்கு, 6. ஓர்வித பாஷாணம்.
ஆசுகம்–காற்று, 2. அம்பு, 3. பறவைப்பொது.
ஆசுகன் – காற்று, வாயுதேவன்.
ஆசுகி–பறவைப்பொது.
ஆசுமவண–நூல்சுற்றுங்கருவி.
ஆசுரம்–அசுரமணம்.
ஆசுரம்–அசுரமணம். அது, தலைமகட்குப் பொன்சூட்டிச் சுற்றத்தார்க்கும் பொன் வேண்டுவன கொடுத்துக் கொள்ளும் மணம்.
ஆசுரவைத்தியம்–இரணவைத்தியம்.
ஆசுவயம்–விரைவு.
ஆசுவலாயனன்–ஒரு முனிவன்.
ஆசுவலாயனீயம்–உபநிடத முப்பத்திரண்டிளொன்று.
ஆசுவினம்– } ஐப்பசிமாதம்.
ஆசுவீசம்– }
ஆசூசம்–அசுத்தி, 2. சூதகம்.
ஆசை–விருப்பம், 2 இச்சை, 3. திசை, 4. பொன்.
ஆசோதை–இலைப்பாறுகை.

ஆசௌசம்– } அசுத்தம், 2. சூதகம்.
ஆசவுசம்– }
ஆச்சந்திரகாலம்–சந்திரனுள்ளமட்டும்.
ஆச்சந்திரார்க்கம்–சூரிய சந்திராளுள்ளவரை.
ஆச்சரியம்–அதிசயம்.
ஆச்சல்–பாய்ச்சல், 2. அசைத்தல்.
ஆச்சா–ஓர் மரம்.
ஆச்சாட்டு–சிற்றீரம்.
ஆச்சி–தாய், 2. பாட்டி.
ஆச்சிபூச்சி–ஓர் விளையாட்டு.
ஆச்சியம்–நெய்.
ஆச்சிரமம்–முனிவ ரிருப்பிடம.
ஆச்சிரயம்–பாதுகாப்பு.
ஆச்சு–ஆயிற்று.
ஆஸ்தானம்–கூட்டம், 2. இராசசபை.
ஆஸ்தி–ஸ்திதி.
ஆஸ்பதம்–புகலிடம், 2. சந்து.
ஆஞா– } தகப்பன்.
ஆஞீ- }
ஆஞ்சனேயன்–அனுமான்.
ஆஞ்சான் – கப்பற்கயிறு, 2. கயிறு, 3. சிறியதனிக்கொப்பு.
ஆஞ்சி-அசைவு, 2. சோம்பு, 3. கூத்து, 4. ஏலம்.
அஞ்சில்–சங்கஞ்செடி.
ஆஞ்ஞாபி–(வி) கட்டளையிடு.
ஆஞ்ஞை-ஆணை, 2 ஆருதாரத்தொன்று.
ஆடகத்தி–குங்கும பாஷாணம்.
ஆடகம்–பொன், 2. நால்வகைப்பொன்களுள் ஒன்று, 3 துவரை.
ஆடகி–துவரைச்செடி.
ஆடகூடம்–செப்புமலை.
ஆடம்–படி, (ஓரளவு.)
ஆடம்பரம்–ஓட்டோலகம், (இடம்பம்).
ஆடலை–பூவில்லாமரம், (பூவிளா).
ஆடல் – (பெ) கூத்து, 2. வெற்றி, 3. வீரம்.
ஆடல்–(தொ. பெ) அசைதல், 2. விளையாடல், 3. குளித்தல், 4. செய்யல், 5. சொல்லல்.
ஆடவர்–ஆண்மக்கள், 2. இளையோர்.
ஆடவை – மிதுனவிராசி, 2. நிருத்தசபை.

ஆடாதோடை—ஓர் செடி.
ஆடி – கர்க்கடகமாதம், 2. உத்திராட நாள், 3. கண்ணாடி.
ஆடிக்கரு—கர்ப்போட்டகமேகம்.
ஆடு—அசம், 2. மேடவிராசி, 3. வெற்றி.
ஆடுதின்றுப்பாலை—புழுக்கொல்லி.
ஆடுதுறை—ஓரூர்.
ஆடூஉ—ஆண்மகன்.
ஆடை—ஏடு, 2. சீலை, 3. நேத்திரப் படலம், 4. சித்திரைநாள், 5. பனங்கிழங்கினுட்டோல்.
ஆடையொட்டி—பேய்ப்புல், 2. சீலைப்பேன்.
ஆட்காட்டி – சுட்டுவிரல், 2. ஒரு பறவை.
ஆட்கொல்லி – ஆளைக்கொல்வது, 2. பணம்.
ஆட்கொள்ளுதல் – (தொ. பெ) அடிமை கொள்ளல்.
ஆட்சி—ஆளுகை, 2. உரிமை, 3. பழக்கம்.
ஆட்சேபம் – தூஷணை, 2. குற்றம், 3. ஓரலங்காரம், 4. சங்கை, 5. நிராகரணம்.
ஆட்சேபி—(வி) நிராகரி.
ஆட்டம் – அசைவு, 2. விளையாட்டு, 3. தன்மை, 4. முயற்சி.
ஆட்டாம்புழுக்கை—ஆட்டின் மலம்.
ஆட்டி—தலைவி, 2. பெண்.
ஆட்டு – (பெ) கூத்து, 2. அலைப்பு, 3. வல்லமை.
ஆட்டை—வருடம்.
ஆட்டுக்கல் – அமுத பாஷாணத்தினொன்று, 2. அரைக்குங்கல்.
ஆட்டுக்கிடை—ஆட்டுப்பட்டி.
ஆட்டைத்திதி—தலைத்திவசம்.
ஆணம்—குழம்பு, 2. அன்பு, 3. கொள்கலம்.
ஆணர் – பாடகர், 2. நன்மை, 3. வளமை.
ஆணவமலம் – மூலமலம், அஃது உடம்பை யானென்றிருக்கை.
ஆணவம் – கருவம், 2. ஆணவமலம், 3. கோளக பாஷாணம்.
ஆணி – இலகம், 2. உரையாணி, 3. எழுத்தாணி.
ஆணித்தங்கம்—உயர்ந்த பொன்.
ஆணித்தரம் – முதற்றரம், 2, நல்ல முத்து, 3. உறுதி.
ஆணிப்பூ—கண்வியாதி.
ஆணிவேர்—உச்சிவேர்.
ஆணி – மேன்மை, 2. காலிலுண்டாகுமாணி, 3. உரலாணி.
ஆணு—இனிமை, 2. நன்மை.
ஆணை – சத்தியம், 2. வீண்சபதம், 3. மெய், 4. ஆக்கினை, 5. அடையாளம், 6. வெற்றி, 7. சான்றோர் கட்டளை.
ஆணைச்சக்கரம்—செங்கோல்.
ஆணைவழி நிற்றல்—அரசன் கட்டளைப்படி நடத்தல்.
ஆண்-ஆண்பாற்பொது, 2. ஆண்மகன், 3. தலைமை.
ஆண்டகை—அரசன், 2. சிறந்தோன்.
ஆண்டகைமை—வீரம்.
ஆண்டலை—கோழி.
ஆண்டி—பண்டாரம்.
ஆண்டு—வருடம், 2. அவ்விடம்.
ஆண்டையர்—மனிதர்.
ஆண்மை—ஆண்தன்மை, 2. மனமுயற்சி, 3. ஆளுந்தன்மை, 4. தைரியம்.
ஆண்வழி—தந்தைவழி.
ஆதங்கம்—ஆபத்து, 2. பறையிரைச்சை.
ஆததாயி—கொல்ல வொருப்பட்டு நிற்கிறவன்.
ஆதபத்திரம்—குடை, 2. வெண்குடை.
ஆதபம்— ஆதவம்— } வெயில், 2. ஒளி, 3. குடை.
ஆதபன்— ஆதவன்— } சூரியன், 2. பார்ப்பான்.
ஆதம்—ஆதரவு, 2. கூந்தற்பனை.
ஆதம்பேதி—செப்புநெருஞ்சில்.
ஆதரம்—ஆசை, 2. அன்பு, 3. ஊர், 4. சிலம்பு.
ஆதரம்—கேழ்வு.
ஆதரவு—உதவி, 2. அன்பு, 3. தேற்றரவு, 4. ஆதாரம்.
ஆதரி—(வி) உதவிசெய், 2. ஆசைகூர், 3. தேற்றரவுபண், 4. ஆசரி.

ஆதரிசம்—கண்ணாடி, 2. உரை, 3. கையெழுத்துப் பிரதிமூலம்.
ஆதரிசனம்—கண்ணாடி.
ஆதல்—கல்விநூல், 2. கூத்து, 3. தரிசனம், 4. நுணுக்கம்.
ஆதவளா—ஆமணக்கு.
ஆதவளாமாதவளா—வருத்தம்.
ஆதனம்—நீளுதல், 2. ஆசனம், 3. சீலை.
ஆதன்—உயிர், 2. பேதை, 3. குரு, 4. அருகன்.
ஆதாயம்—இலாபம், 2. நன்மை.
ஆதாரம்—ஆதரவு, 2. உடல், 3. மழை, 4. அத்திபாரம், 5. தானம்.
ஆதாளி—பேரொலி, 2. படாடோபம், 3. கலக்கடி.
ஆதாளிமன்னன்—கரடி.
ஆதானம் — ஏற்றுக்கொள்ளுதல், 2. ஸ்தாபனம் பெறுதல்.
ஆதி — மூலம், 2. முதன்மை, 3. கடவுள், 4. இறைவன், 5. எசமான், 6. சூரியன், 7. நேரோடுகை, 8. பழமை, 9. சிவன், 10. மகாவிட்டுணு, 11. பிரமன், 12. அருகன், 13. புத்தன், 14. ஆதிதாளம், 15. மண்டலமாயோடுகை.
ஆதிகவி—வால்மீகி.
ஆதிகாரணம்—முதற்காரணம்.
ஆதிகேசவன்—மகாவிஷ்ணு.
ஆதிக்கம் — உயர்ச்சி, 2. உரிமை, 3. முதன்மை.
ஆதிக்கல்நாதம்—அன்னபேதி.
ஆதிக்குரு—பூநீறு.
ஆதிசாரம்—சிற்பநூல் வகையிலொன்று.
ஆதிசேடன்—பூமியைத் தாங்கிக்கொண்டிருக்கிறது எனக்கூறும் அனந்தன் என்கிற பாம்பு.
ஆதிட்டம்— } உண்ட சேடம்.
ஆதிஷ்டம்— }
ஆதிதேயன்—தேவன், 2. விருந்தினரை உபசரிப்போன்.
ஆதிதைவிகம்—தெய்வத்தால் வருந்துன்பம்.
ஆதித்தம்—மாணிக்கல், 2. தருசு.
ஆதித்தன்—சூரியன்.
ஆதித்தியம்—அதிதிகட்குச் செய்யும் உபசாரம்.
ஆதித்தியன்—சூரியன்.
ஆதிபத்தியம்—அதிகாரம், 2. சுதந்திரம்.
ஆதிபன்—அரசன், 2. எசமானன்.
ஆதிபகவன்—கடவுள்.
ஆதிபௌதிகம் — உடம்பு வழியாக வருந்துன்பம்.
ஆதிமூலம்—மகாவிஷ்ணு, 2. முதற்காரணம்.
ஆதியதிவஞ்சம்—போகபூமி.
ஆதியந்தம்—அடிமுடி.
ஆதியுகம்—கிருதயுகம்.
ஆதிரம்—நெய்.
ஆதிரவிச்சிலை—செங்கழுநீர்க்கல்.
ஆதிரன்—பெரியோன்.
ஆதிரை—திருவாதிரைநாள்.
ஆதிவராகன்—மகாவிஷ்ணு.
ஆதிவாரம்—ஞாயிற்றுக்கிழமை.
ஆதிவிந்து—திலப்பாஷாணம்.
ஆதிவிராகன்—சோரபாஷாணம்.
ஆதிவிராட்டியன் — சூத பாஷாணம், 2. சோரபாஷாணம்.
ஆதீண்டுகுற்றி—ஆவுரிஞ்சுதறி.
ஆதீனம்—சுதந்திரம்.
ஆது—ஆறனுருபு, 2. தெப்பம், 3. யானையைப் பாகர் அதட்டுமோசை.
ஆதுபம்—பேராசை.
ஆதுரன்—நோயுள்ளோன், 2. ஆசையுற்றோன்.
ஆதுலன்—தரித்திரன்.
ஆதுவம்—கள்.
ஆதெரிசம்—கண்ணாடி.
ஆதேசம்—எழுத்துத்திரிபு, 2. ஆதாயம்.
ஆதேயம்—சுமக்கப்பட்டது, 2. ஆதாயம்.
ஆதொண்டை—ஓர் கொடி.
ஆதோரணர்—யானைப்பாகர்.
ஆத்தன்—சங்காத்தி, 2. முதல்வன், 3. கடவுள், 4. அருகன்.
ஆத்தா—சீத்தா.
ஆத்தாடியுள்ளான்—ஒரு குருவி.
ஆத்தாள்—தாய், 2. பார்வதி.
ஆத்தானமண்டபம்—கொலுமண்டபம், 2. தருமசபை கூடுமிடம்.

ஆத்தானம்—இராசசபை, 2. நியாயஸ்தலம், 3. கோபுரவாயில்.
ஆத்தி—ஓர் மரம்.
ஆத்திகன்—கடவுள் உண்டென்கிறவன்.
ஆத்திசூடி—சிவன், 2. ஔவைசெய்த ஒரு நூல்.
ஆத்தியன்—சிவன்.
ஆத்திரதம்—இஞ்சி.
ஆத்திரம்—அவசரம், 2. கோபவிரைவு.
ஆத்திரேயன் — சந்திரன், 2. தத்தாத்திரேயமுனி.
ஆத்துமசன்—மகன்.
ஆத்துமபுத்தர்—பூனைக்காலி.
ஆத்துமம்— } சீவாத்துமா, 2. சீவ
ஆத்துமா— } சென்து.
ஆத்துமார்த்தம்—தற்பிரயோசனம், 2. ஆத்மா உய்தற்கு ஏதுவானது.
ஆத்தை — தாய், 2. அதிசய விரக்கச் சொல்,
ஆத்மீகம்—ஆத்ம சம்பந்தம்.
ஆநநம்—முகம்.
ஆநந்த—ஒரு வருடம்.
ஆநந்தக்களிப்பு—பக்திமான்கள் ஆனந்தத்தாற் பாடும் பாடல்.
ஆநந்தபரவசம்—ஆனந்தத்தில் மூழ்கித் தன்னை மறக்கும் நிலை.
ஆநந்தபாஷ்பம் — சந்தோஷத்தினால் உண்டாகுங் கண்ணீர்.
ஆநந்தபைரவி—ஓர் இராகம்.
ஆநந்தமயம்—தன்வசமற்றிருத்தல்.
ஆநந்தமயன்—கடவுள்.
ஆநந்தம் — சந்தோடம், 2. பேரின்பம், 3. சாக்காடு.
ஆநந்தவல்லி—உமாதேவி.
ஆநந்தவாதி—கௌரிபாஷாணம்.
ஆநாயம்—வலை, 2. வாயுக் கண்ணறை.
ஆநிரை—பசுக்கூட்டம்.
ஆநிலன்—அனுமான், 2. வீமன்.
ஆநிலை—பசுக்கொட்டில்.
ஆநெய்—பசுநெய்.
ஆந்தரம்—தெலுங்குபாஷை.
ஆந்தவனயும்—ஆமளவும்.
ஆந்திரன்—தெலுங்கன்.
ஆந்திரிகம்—குடர்.

ஆந்தை—ஓர் பறவை.
ஆந்தோளி — ஓரிராகம், 2. ஓர்வகைச் சிவிகை.
ஆபகம்— } ஆறு.
ஆபகை— }
ஆபச்சைவன்—அஷ்ட வசுக்களி லொருவன்.
ஆபணம்—கடை.
ஆபுணியம்— } கடைவீதி, 2. கடைச்
ஆபயணீயம்— } சரக்கு.
ஆபதம்—ஆபத்து.
ஆபதோத்தாரணன் — ஆபத்தை நீக்குவோன்.
ஆபத்சன்னியாசம் — மரிக்குங்காற்பெறுந்துறவு.
ஆபத்தம்பம்—ஓர் தருமநூல்.
ஆபத்து—உபத்திரவம், 2. வியாகுலம்.
ஆபரணம்—அணிகலம், 2. சீலை.
ஆபாசம் — கெடுதல், 2. போலி நியாயம்.
ஆபாடம்—பாயிரம்.
ஆபாதசூடம்— } உச்சிதொடங்கி
ஆபாதமத்தகம்— } யுள்ளங்கால் வரைக்கும்.
ஆபானம்—மதுக்கடை.
ஆபீரம்—இடையர் சேரி.
ஆபீனம்—பசுவின்மடி, 2. சிற்பர்வீதி.
ஆபோசனம்—விழுங்குகை.
ஆப்தம்—ஆண்டு, 2. நேசம்.
ஆப்தன்—நேசன்.
ஆப்பம்—ஓர்வகைப் பலகாரம்.
ஆப்பி—பசுச்சாணி.
ஆப்பு—மரம் பிளக்குங் கருவி.
ஆமகணம்—சீதக்கட்டு.
ஆமசிராத்தம்—பாகஞ் செய்யப்படாத பதார்த்தங்களைப் பிராமணனுக்குக் கொடுக்கை.
ஆமணக்கு—ஏரண்டம.
ஆமம் — பாகஞ் செய்யப்பட்டிராதவை, 2. ஓர் நோய்.
ஆமயம்—நோய்.
ஆமரி—வார்த்தை.
ஆமலகம்—நெல்லி, 2. பளிங்கு.
ஆமா—காட்டா.

ஆமாகோளா—கடுக்காய்ப்பூ.
ஆமாசயம்—இரைக்குடர்.
ஆமாத்தியர்— } மந்திரிகள், 2. வைத்
ஆமாத்திரர்— } தியர்.
ஆமிரம்—மாமரம், 2. புளிப்பு.
ஆமிலம்— } புளிப்பு, 2. புளிய
ஆமிலிகை— } மரம்.
ஆமுகம்—ஆரம்பம்.
ஆமூலாக்கிரம்—வேர் தொடங்கி நுனி மட்டும்.
ஆமை- கூர்மம்.
ஆமோதம்—நற்கந்தம், 2. மிகுமகிழ்ச்சி.
ஆமோதித்தல்—(தொ. பெ) மகிழ்தல், 2. உடன்படல்.
ஆம்—நீர், 2. ஈரம்.
ஆம்பல்—அல்லி, 2. மூங்கில், 3. ஓரிசைக்குழல், 4. ஊதிடுகொம்பு, 5. யானை, 6. கள், 7. பண், 8. சந்திரன், 9. துன்பம், 10. ஓரெண், 11. திதி, 12. ஒழுங்கு.
ஆம்பி—காளான், 2. ஒலி, 3. இறைகூடை.
ஆம்பிகேயன்—திரிதராட்டிரன், 2. சுப்பிரமணியன்.
ஆம்பியம்—(வை. அ) இரசம்.
ஆம்பிரம்—புளிப்பு, 2. புளிமா, 3. மாமரம்.
ஆம்பிலம்—புளிப்பு, 2. புளியமரம், 3. கள்.
ஆம்பு—(வை. அ) காய்ஞ்செறி.
ஆம்புலம்— } சூரை.
ஆம்பூறு— }
ஆயக்கட்டு—ஒரு மாகாணத்திலுள்ள பூமியின் முழு விஸ்தீரணம், 2. மோசடியான பேச்சு.
ஆயக்கசும்—முறைக்காய்ச்சல்.
ஆயக்கல்—காரக்கல்.
ஆயக்கால்—குத்துக்கால், 2. தாங்குகால்.
ஆயக்கோல்—சிவிகைக்கொம்பு தாங்குகால்.
ஆயதம்—நீளம்.
ஆயத்தம்—எத்தனம்.
ஆயத்துக்கருத்தன் — அஞ்சன பாஷாணம்.

ஆயமானம்—உயிர்நிலை, 2. இரகசியம்.
ஆயம்—ஆதாயம், 2. சுங்கம், 3. கவறு, 4. சூதாடுந்தாயம், 5. மாதர்கூட்டம், 6. தோழி, 7. தாய், 8. நாணி, 9. மல்லரி, 10. நீளம்.
ஆயர்பாடி—இடையரூர்.
ஆயல்—(தொ. பெ) ஆய்தல்.
ஆயனம்—வருடம்.
ஆயன் — இடையன், 2. ஸ்ரீ கிருஷ்ண பகவான்.
ஆயாசம்—இளைப்பு, 2. மனவருத்தம், 3. துக்கம்.
ஆயாள்—செவிலித்தாய், 2. பாட்டி.
ஆயானம்—இயற்கைக்குணம்.
ஆயி—தாய்.
ஆயிடை — அவ்வேளையில், 2. அவ்விடம்.
ஆயிரக்காலி—மரவட்டை, 2. துடைப்பம்.
ஆயிரங்கண்ணன்—இந்திரன்.
ஆயிரங்கதிரோன்— } சூரியன்.
ஆயிரங்கிரணன்— }
ஆயிரநாமன்—மகாவிட்டுணு.
ஆயிலியம்—ஆயிலியநாள்.
ஆயில்—ஓர் மரம்.
ஆயிழை—விசேஷ ஆபரணம், 2. பெண், 3. அரிவாணுனி.
ஆயின்மேனி—பச்சைக்கல்.
ஆயு— } வாழ்நாள்.
ஆயுஷியம்— }
ஆயுள்— }
ஆயுசு— }
ஆயுகாரகன்—சனி.
ஆயுட்டானம்—பிறந்தகாலத்தில் சந்திரனிருந்த இடத்திற் கெட்டாமிடம்.
ஆயுட்டோமம் — தீர்க்காயுப் பெறுதற்குச் செய்யும் ஓமம்.
ஆயுதம்—படைக்கலம், 2. கருவி, 3. கூத்துப்பயிலிடம்.
ஆயுருவேதம்— } உபவேதத்தி லொன்று, 2. வைத்தியம்.
ஆயுள்வேதம்— }
ஆயுள்வேதியர்—வைத்தியர்.
ஆயோகம்—அர்ச்சனை.

ஆயோதம்—
ஆயோதனம்— } போர், 2. சேனை.
ஆய்—வருத்தம், 2. நட்பம், 3. தாய், 4. முன்னிலை யொருமை விகுதி.
ஆய்க்குடி—இடைச்சேரி.
ஆய்ச்சல்—முறை.
ஆய்ச்சி—இடைச்சி, 2. தாய்.
ஆய்தம்—மூன்றுபுள்ளி வடிவினதாகிய ஓரெழுத்து.
ஆய்தல்—(தொ. பெ) ஆராய்தல், 2. தேர்தல், 3. பறித்தல், 4. பிரித்தெடுத்தல்.
ஆய்ந்தோர்—புலவர், அறிவுடையார்.
ஆய்ப்பாடி—ஆயர்பாடி.
ஆய்மதி—நுண்ணிய அறிவு.
ஆய்வு—ஆராய்ச்சி.
ஆர—நிறைய.
ஆரகம்—ஈயுமெண்.
ஆரகம்—இரத்தம்.
ஆரகூடம்—
ஆரகூலம்— } பித்தளை.
ஆரகோரம்—கொன்றை.
ஆரக்கம்—(வை. அ) அகில்.
ஆரக்குவதம்—
ஆர்க்குவதம்— } கொன்றைமரம்.
ஆரணம்—வேதம், 2. வேதத்தின் ஞானபாகை, 3. செய்யுட் குரியவோர் மங்கலமொழி.
ஆரணவாணர்-பிராமணர், 2. முனிவர்.
ஆரணன்—மகாவிஷ்ணு, 2. பிரமன், 3. சிவன், 4. பார்ப்பான்.
ஆரணி—பார்வதி, 2. காளி.
ஆரணியம்—
ஆரண்ணியம்— } காடு.
ஆரதம்—சுத்தபோசனம்.
ஆரதி—சோடச உபசாரத்தொன்று, 2. ஆலாத்தி.
ஆரம்—முத்து, 2. முத்துமாலை, 3. கீழ்வாயிலக்கம், 4. பதக்கம், 5. பூமாலை, 6. மாதரணிவடம், 7. இரத்தினவடம், 8. ஆபரணம், 9. புருமுதலியவற்றின் கழுத்துவரி, 10. பித்தளை, 11. காந்தம்.
ஆரம்—ஆட்டகர், 2. ஓர்பாணம். 3. நந்தனவனம், 4. ஆத்தி, 5. சந்தனமரம், 6. கடம்பு, 7. கோடகசாலை, 8. அஞ்சனபாஷாணம்.
ஆரம்பசூரன்—வீம்புபேசுவோன்.
ஆரம்பம்—தொடக்கம், 2. முயற்சி, 3. பேரொலி.
ஆரம்பி—(வி) தொடங்கு, 2. ஒலி.
ஆரலம்—பகை.
ஆரல்—ஆரல்மீன், 2. ஓர் பூண்டு. 3. நெருப்பு, 4. செவ்வாய், 5. கார்த்திகைநாள், 6. மதில்.
ஆரவம்—ஒலி.
ஆரவாரம்—பேரொலி.
ஆரவாரம்—ஆடம்பரம்.
ஆரவாரி—(வி) மிக்கவொலி.
ஆராகவரியம்—அரசு.
ஆராட்டு—தாலாட்டு.
ஆராதனை—பூசனை, 2. வணக்கம்.
ஆராதி—(வி) பூசி.
ஆராதூரி- ஊதாரிக்குணம், 2. துஷ்டத்தனம், 3. அழிப்பாளி.
ஆராத்தியர்—
ஆராத்திரியர்— } வீரசைவப் பார்ப்பார்.
ஆராத்திரவியம்—அரசர் பொக்கசம்.
ஆராத்திரிகம்—ஆலாத்திவிளக்கு.
ஆராப்பத்தியம்—கடும்பத்தியம், 2. அற்பம்.
ஆராமம்—சோலை, 2. பூந்தோட்டம்.
ஆராய்—(வி) சோதி, 2. தேடு.
ஆராய்ச்சி- சோதனை, 2. தலையாரி.
ஆராய்ச்சிமணி — நியாயம் வேண்டுவோர்க்காக அரண்மனை வாசலிற் கட்டிய அசையாமணி.
ஆராய்வு—விசாரிப்பு, 2. நுண்ணறிவு.
ஆரால்—ஆரல்மீன்.
ஆரி—சோழன், 2. மேன்மை.
ஆரி—துர்க்கை, 2. பார்வதி.
ஆரிடம்—
ஆரிஷம்— } இருஷி சம்பந்தமானது, 2. அஷ்டமணத்தி லொன்று, 3. வேதம், 4. கல்வி, 5. ஆகமம், 6. பூசை, 7. வழுக்குநிலம்.
ஆரிடர்—சமணர், 2. இருடிகள்.
ஆரிதம்—ஒரு தருமநூல்.
ஆரியப்பாவை—ஓர் பாவைக்கூத்து.

ஆரியப்பூமாலை — காத்தவராயன் மனைவி, 2. அடங்காப் பெண்.
ஆரியம் — விந்தியமலைக்கும் இமயமலைக்கும் இடையிலுள்ள தேயம், 2. அழகு, 3. சமஸ்கிருதம், 4. பண்டம்.
ஆரியவராடி—ஓர் பண்.
ஆரியவேளாகோல்லி — கொல்லித் திறத்திலொன்று (ஓர் பண்).
ஆரியன் — அறிவுடையோன், 2. குரு, 3. புலவன், 4. மேலவன், 5. வைத்தியன், 6. மிலேச்சன், 7. ஐயனார், 8. சூரியன், 9. தொம்பன்.
ஆரியாவர்த்தம்—இமயமலைக்கும் விந்தமலைக்கும் நடுவிலுள்ள தேசம்.
ஆரியை—பார்வதி, 2. துர்க்கை, 3. காளி.
ஆரு—நண்டு, 2. பன்றி, 3. கரகம்.
ஆருகதம்—சமண சமயம்.
ஆருகதம்—நாவன்மரம்.
ஆருணி—உபனிடதத்திலொன்று.
ஆருத்திரை— } திருவாதிரை நாள்.
ஆர்த்திரை— }
ஆருபதம்—பித்தளை.
ஆருப்பியம்—வங்கமணல்.
ஆருவம்—நீர்.
ஆரூடம்—ஏறுதல், 2. முன்னறிவிக்கை.
ஆரூபம்—ஒவ்வாமை, 2. நீங்காமை.
ஆரை—நீராரை, 2. மதில், 3. புற்பாய்.
ஆரோகணம்—எழுச்சி, 2. ஏறுகை, 3. கற்படி, 4. தாழ்வாரம்.
ஆரோகணித்தல்—(தொ. பெ) எழும்புதல், 2. ஏறுதல்.
ஆரோக்கியம்—சௌக்கியம், 2. வருத்தமின்மை, 3. சுகம்.
ஆரோபணம்—ஏற்றுகை.
ஆரோபம்—ஒன்றை மற்றொன்றாயறிகை.
ஆரோபி — (வி) சார்த்து, 2. பொய்யாய்க் குற்றஞ்சாற்று.
ஆரோபிதம்—ஆரோபிக்கப்பட்டது, 2. கற்பிதம்.
ஆர் — யார், 2. நிறைவு, 3. கூர்மை, 4. சோதி, 5. ஐந்துருவாணி, 6. ஆத்திமரம், 7. வண்டியிலே, 8. பாகு, 9. தண்மை, 10. கொன்றை. 11. பூமி, 12. வண்டியகவாய்.
ஆர்தல்—(தொ. பெ) நிறைதல், 2. தங்கல், 3. பொருந்தல், 4. சாப்பிடல், 5. வினைப்பயனுகரல்.
ஆர்க்க — நிறைக்க, 2. கட்ட, 3. அணிய, 4. பொருந்த, 5. ஊட்ட, 6. பொர, 7. ஒலிக்க.
ஆர்கதி—திப்பிலி.
ஆர்கலி—கடல்.
ஆர்க்கம்—இரத்தம், 2. இலாபம்.
ஆர்க்கு—ஓர் மீன்.
ஆர்க்கை—கட்டு, 2. வாரடை.
ஆர்ச்சனம்— }
ஆர்ச்சனை— } சம்பாத்தியம்.
ஆர்ச்சிதம்— }
ஆர்ஷம்—ஆரிடம்.
ஆர்துபம்—அரத்தை.
ஆர்த்தபம்—மகளிர்தீட்டு.
ஆர்த்தர் — துயருறுவோர், 2. சான்றோர்.
ஆர்த்தி — துன்பம், 2. அனுபவம், 3. அகோரசத்தி, 4. விற்குதை.
ஆர்த்திகை—துன்பம்.
ஆர்த்திரகம்—இஞ்சி.
ஆர்பதம்—வண்டு, 2. நிழல்.
ஆர்ப்பரவம்—ஆரவாரம்.
ஆர்ப்பரி—(வி) ஆரவாரி, 2. கர்ச்சி.
ஆர்ப்பு—கட்டு, 2. சிரிப்பு, 3. போர், 4. பேரொலி.
ஆர்மை—கூர்மை, 2. மதில்.
ஆர்வம்—விருப்பம், 2. அன்பு, 3. ஒலி, 4. நரகம், 5. சீலை.
ஆர்வலன்—அன்புடையான், 2. சினேகிதன், 3. கணவன்.
ஆர்வு — விருப்பம், 2. உண்டல், 3. நிறைவு.
ஆலகண்டன்—சிவன்.
ஆலகாலம்—விடம்.
ஆலங்கட்டி—கல்மழை.
ஆலங்காடு—ஒரு சிவஸ்தலம்.
ஆலசியம்—சோம்பல், 2. தாமதம்.
ஆலத்தி—ஆரதி.
ஆலம் — நீர், 2. மழை, 3. மலர்ந்தபூ, 4. மழு, 5. ஆலமரம், 6. ஈயம், 7. பாம்பினஞ்சு, 8. அம்புக்கூடு.

ஆலம்பம் – பற்றுக்கோடு, 2. அடைக்கலம், 3. இலம்பம்.
ஆலயம்–தங்குமிடம், 2. கோயில், 3. பிரமாலயம், 4 வீடு, 5. யானைக்கூடம்.
ஆலலம்–கூறை.
ஆலவட்டம் – கால்செய்வட்டம், 2. விசிறி.
ஆலவாலம்–மரத்தடியிற் பாத்தி, 2. வயல், 3. சிறுபாத்தி.
ஆலவாய்–மதுரைநகர், 2. பாம்பு.
ஆலா–ஓர் பட்சி.
ஆலாங்கட்டி–மழைக்கட்டி.
ஆலாசியம்–மதுரை.
ஆலாதம்–நெருப்புக்கொள்ளி.
ஆலாத்தி நீராஞ்சனம்.
ஆலாபம்– } சம்பாஷணை.
ஆலாபனம்– }
ஆலாபி–(வி) சுருதிகூட்டு, 2. பேசு.
ஆலாலம்–நஞ்சு, 2. வெளவால்.
ஆலாவர்த்தம்–ஆலவட்டம்.
ஆலானம்–யானைகட்டுந்தறி, 2. கயிறு. 3. யானைகட்டுங் கயிறு, 4. கட்டுகை.
ஆலி–மழைத்துளி, 2. மழை, 3. ஆலாங்கட்டி, 4. காற்று, 5. கள், 6. அமுதம்.
ஆலி– } தோழி, 2. தேள், 3. தொடர்ச்சி, 4. வரம்பு.
ஆளி– }
ஆலி–(வி) களி.
ஆலிங்கனம்–தழுவுகை.
ஆலீடம் – அம்பெய்வோர்க்குரிய நிலை நான்கிலொன்று
ஆலு–நீர்க்குடம்.
ஆலு–(வி) ஆடு, 2. ஒலி, 3. நிறை.
ஆலேகனம்–எழுதுகை
ஆலேகனி–எழுத்தாணி.
ஆலை–கரும்பாலை, 2. கள், 3. உபத்திரவம்.
ஆலைமாலை–அலைச்சல்.
ஆலோகம்– } பார்வை, 2. பிரவை, 3. முகமன்.
ஆலோகனம்– }
ஆலோகன்–தெளிந்தவன்.
ஆலோசனை – காட்சி, 2. யோசனை, 3. சிந்திப்பு, 4. புத்தி.
ஆலோசி–(வி) யோசி, 2. சிந்தி.
ஆலோலம் – சலனம், 2. புள்ளோச்சுகை, 3. கீரொலி.
ஆலோலிதம்–பிரியம்.
ஆலோன்–சந்திரன்.
ஆல்–அசைச்சொல், 2. மூன்றும் வேற்றுமை யுருபு, 3. ஆலமரம்.
ஆல்வாட்டு–உலர்ச்சி.
ஆல்வாட்டு–(வி) சிறிது காயச்செய்.
ஆவ்வு–அகலமானது.
ஆவ்சியகம்–அவசரம்.
ஆவட்டை–ஒரு பூண்டு.
ஆவணம்–கடை, 2. கடைவீதி, 3. புனர்பூசம், 4. முறிச்சீட்டு, 5. உரிமை, 6. அடையாளம், 7. தேர்மொட்டுப் பொருந்திய பீடம்.
ஆவணி–ஓர் மாசம், 2. அவிட்ட நாள்.
ஆவணியம்–கடைவீதி.
ஆவது–ஆருவது.
ஆவத்து–துன்பம்.
ஆவநாழி–அம்புக்கூடு.
ஆவம்–அம்புக்கூடு, 2. நாணி, 3. குங்கும மரம்.
ஆவயின்–அவ்விடம்.
ஆவரணம்–மறைப்பு, 2. கோட்டை, 3. மதில், 4. சீலை, 5. கேடகம்.
ஆவரி–அம்பு.
ஆவரை – ஆவாரை, 2. நிலவாகைப் பூண்டு.
ஆவர்த்தம்–சத்தமுகிலிலொன்று.
ஆவலம்–வாயாலார்த்தல், 2. கொல்லை.
ஆவலாதி–தூற்றுதல்.
ஆவலி– } ஒழுங்கு.
ஆவளி– }
ஆவலி–(வி) ஆசைப்படு, 2. புலம்பு, 3. கொட்டாவி விடு.
ஆவலாதி–தூற்றுதல்.
ஆவல்–காதல், 2. பேராசை, 3. அவா, 4. வளைவு.
ஆவலர்–உற்றார், 2. கணவர்.
ஆவறி–அவா.
ஆவா–இரக்கக் குறிப்பு, 2. அதிசயக் குறிப்பு.
ஆவாகனம்–ஸ்தாபனம்.
ஆவாகி–(வி) ஸ்தாபி.

ஆவாசம்—வீடு.
ஆவாபனம்-செய்பவர்தறி, 2. ஆசுமணை.
ஆவாரை — ஆவிரஞ் செடி, 2. நில வாகை.
ஆவாலம்—வௌவால்.
ஆவாலம் — மரத்தினடியிற் கோலிய பாத்தி.
ஆவி—உயிர், 2. உயிரெழுத்து, 3. சுவாசம், 4. நீரிலெழுமாவி, 5. புகை, 6. வாசனை, 7. குளம், 8. பிட்டு, 9. அரூபி.
ஆவிடையார்—ஆவுடையார்.
ஆவிதம்—திருகூசி.
ஆவித்தல் — (தொ. பெ) கொட்டாவி விடுதல், 2. புகைத்தல், 3. பெருமூச் செறிதல்.
ஆவிபத்தம்—பேராமுட்டி.
ஆவியம்—உயிர், 2. சரீரம்.
ஆவியர்—வேடர், 2. வேளாளர்.
ஆவிரம்—இடைச்சேரி.
ஆவிருதி—மறைப்பு, 2. ஆணவமலம்.
ஆவிருத்தி—முறை, 2. பரிவிருத்தி.
ஆவிரை—ஓர் செடி.
ஆவிர்ப்பவித்தல்—(தொ. பெ) உண்டாதல், 2. தோற்றுதல்.
ஆவிலம்—கலங்கனீர்.
ஆவுடையார்—சத்திரூபமாகிய பீடம்.
ஆவுதி—ஆகுதி.
ஆவுரிஞ்சி-ஆ உராய்தற்காக நட்டதறி.
ஆவெனல்—(தொ. பெ) வாய் திறத்தல்.
ஆவேசம்—ஆவி, 2. சன்னதம், 3. மருள்.
ஆவேசனம் — சித்திரக்காரர்வீதி, 2. இரவி மண்டலம்.
ஆவேசித்தல் — (தொ. பெ) உட்புகுதல்.
ஆவேட்டன் — யாகத்தி லுபதேசஞ் சொல்லுவோன்.
ஆவேலம்—தம்பலம்.
ஆவேலி—தொழுவம்.
ஆவோ—அதிசய விரக்கச்சொல்.
ஆழம் — குட்டம், 2. ஆழ்ந்தகருத்து, 3. அறிதற்கரியது.
ஆழல்—கறையான்.
ஆழாக்கு—அரைக்காற்படி.

ஆழி—வட்டம், 2. சக்கரம், 3. மோதிரம், 4. தேருருளை, 5. வண்டி, 6. கடல், 7. கரைப்பொது, 8. யானைக்கை நுனி.
ஆழிவித்து—முத்து.
ஆழிவிரல்—மோதிரவிரல்.
ஆழிவிரை—ஓர் பூடு.
ஆழிவெம்முரசோன்—மன்மதன்.
ஆழ்தல்— } (தொ. பெ) அழுந்தல், 2.
ஆழுதல்— } தாழ்தல்.
ஆழ்த்து—(வி) தாழ்த்து, 2. கட்டு.
ஆழ்வார்—கருடன், 2. ஸ்ரீ விஷ்ணுபக்தர், 3. சடகோபர்.
ஆளகம்—சுரைக்கொடி.
ஆளரி—நரசிங்கமூர்த்தி.
ஆளன்—எசமான்.
ஆளாதல்—புருஷத்தன்மை அடைதல்.
ஆளானம்— } கலப்பை, 2. யானைகட்
ஆளாநம்— } டுந்தறி, 3. கட்டுத்தறி.
ஆளி—சிங்கம், 2. ஆள்வோன், 3. சிங்கவிராசி, 4. யாளி, 5. ஆளிவிதை, 6. செய்கரை, 7. கரைப்பொது, 8. சிப்பி.
ஆளியூர்தி—காளி, 2. துர்க்கை.
ஆளிவிரை—ஒரு விரை.
ஆளுகை—ஆட்சி, 2. ஆளுந்தன்மை.
ஆளோலை—அடிமைச் சீட்டு.
ஆள்—ஆண்மகன், 2. தலைவன், 3. அடிமை, 4. கூலியாள், 5. தொண்டன், 6. பெண்பாற்படர்க்கை யொருமை விகுதி.
ஆள்வணங்கி — அரசமரம், 2. தொட்டால் வாடி.
ஆள்வள்ளி—மலைச்சக்கரவள்ளி.
ஆள்வினை — முயற்சி, 2. உற்சாகம், 3. பணிவிடை.
ஆறகோரம்—கொன்றை.
ஆறதீகம்—கல்நார்.
ஆறலைத்தல் — (தொ. பெ) வழிபறித்தல்.
ஆறுட்டம்—நோயுற்றோர் கலக்கம்.
ஆறுதாரம்—சடாதாரம். அவை—மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆஞ்ஞை என்பனவாம்.

ஆறுதூறு—பழிதூற்றல்.
ஆறு—ஒரெண், 2. ஒழுக்கம், 3. வழி, 4. நதி.
ஆறுகாடு—ஓர் ஊர்.
ஆறுதல்—(தொ. பெ) இளைப்பாறல், 2. ஆறியிருத்தல், 3. ஓய்தல், 4. சூடு தணிதல்.
ஆறுமுகன்—குமரக் கடவுள்.
ஆறெழுத்து — குமரக் கடவுள் மந்திரம்.
ஆறெறிபறை — வழிபறிக்கும்போது கொட்டும் பறை.
ஆற்பதம்—சாரம்.
ஆற்ற—மிகுதியாய்.
ஆற்றலுடைமை—வலியுடைமை.
ஆற்றல்—வலிமை, 2. முயற்சி, 3. மிகுதி, 4. ஞானம், 5. நிலையுடைமை.
ஆற்றல் — (தொ. பெ) சகித்தல், 2. தணித்தல்.
ஆற்றாமை—சகிக்ககூடாமை, 2. செய்யமாட்டாமை.
ஆற்றார்—தரித்திரர், 2. பகைவர், 3 தோற்றோர்.
ஆற்றிடைக்குறை — ஆற்றுக்கிடையே உயர்ந்த திடர்.
ஆற்றின்வித்து—கர்ப்பூரசிலாசத்து.
ஆற்றுக்காலாட்டி—உழத்தி, 2. மருதநிலப் பெண்.
ஆற்றுக்கால் — ஆற்றிலிருந்துபாயும் வாய்க்கால்.
ஆற்றுணா—கட்டுச்சோறு.
ஆற்றுநெட்டி—நீர்ச்சுண்டி.
ஆற்றுப்படுத்தல்—(தொ. பெ) வழிப்படுத்தல், 2. சன்மார்க்கத்திலுட்படுத்தல்.
ஆற்றுப்படை—ஒரு பிரபந்தம், 2. வழிப்படுத்தல்.
ஆற்றுமடை—ஆற்றுக்காலின் மடை.
ஆற்றுவரி—இசைப்பா வகையுளொன்று.
ஆற்றொழுக்கு—ஆற்று நீரோட்டம்.
ஆனகதுந்துபி—வசுதேவன், 2. போர்ப்பறை.
ஆனகம்—தேவதரு.

ஆனகம் — போர்ப்பறை, 2. மேளம், 3. தம்பட்டம், 4. முழங்குமுகில், 5. காதினுட் சவ்வு.
ஆனத்தேர்—விடத்தேர்ச்செடி.
ஆனந்த—ஓர் வருடம்.
ஆனந்தபரவசம்—ஆனந்தத்தி லழுந்தித் தன்னை மறத்தல்.
ஆனந்தபாஷ்பம் — ஆனந்தக்கண்ணீர்.
ஆனந்தபைரவி—ஓரிராகம.
ஆனந்தம் — அரத்தை, 2. பாக்குற்றங்களிலோர்வகை, 3. சந்தோஷம்.
ஆனந்தவல்லி—பார்வதி.
ஆனந்தவாதி—கௌரிபாஷாணம்.
ஆனந்தன்—அருகன், 2. கடவுள், 3. களிப்புடையோன், 4. சிவன்.
ஆனந்தி—(வி) பெருமகிழ்ச்சியுறு.
ஆனந்தை—பார்வதி.
ஆனம்—கள்.
ஆனயம்— } கொண்டுவருகை, 2. உபநயனம்.
ஆனயனம்— }
ஆனனம்—முகம்.
ஆனா—கெடாத, 2. நீங்காத.
ஆனாமை—நீங்காமை, 2. உத்திராடம்.
ஆனாயர் — அறுபத்துமூன்று நாயன்மாரில் ஒருவர்.
ஆனி — ஓர் மாதம், 2. கேட்டை, 3. மூலம், 4 உத்திராடம், 5. பொருந்த நதி, 6. வெட்டுக் குருத்து.
ஆனி—கேடு.
ஆனியம்—நாள், 2. பருவம், 3. பொழுது, 4. மூலநாள்.
ஆனிரை—பசுக்கூட்டம்.
ஆனிலன்—அனுமான், 2. வீமன்.
ஆனிலை—பசுக்கொட்டில்.
ஆனு—இனிமை, 2. நன்மை.
ஆனெய்—பசுவினெய்.
ஆனேறு—எருது.
ஆனை—யானை, 2. அத்திமரம்.
ஆனைக்கரப்பன்—அக்கியென்னும் ஒருவகை நோய்.
ஆனைக்கால் — வாதக்கால், 2. தண்ணீர்க்குழாய்.
ஆனைக்கூடம்—யானை கட்டுமிடம்.

ஆனைக்கொம்பன் — ஆனைவாழை, 2. ஒருவகை நெல்.
ஆனைத்திசை—வடக்கு.
ஆனைத்தீ—பெரும்பசியைத் தரும் ஒரு நோய்.
ஆனைத்தோட்டி—அங்குசம்.
ஆனைப்பந்தி—ஆனைக்கூட்டம்.
ஆனைப்பேன் — கத்தரிச் செடியிலுண் டாகுமோர் பூச்சி.
ஆனைமுகவன்— } விநாயகன், 2. கஜ
ஆனைமுகன்— } முகாசுரன்.
ஆனையூர்தி—இந்திரன், 2 ஐயன்.
ஆன் — பசுப்பொது, 2. பெண்பசு, 3. பெண்மரை.
ஆன்மதரிசனை—ஆத்தும நிலையறிதல்.
ஆன்மா—ஆத்துமா.
ஆன்ற — விசாலமான, 2. மாட்சிமைப் பட்ட.
ஆன்றல் — அகலம், 2. மாட்சிமை, 3. மிகுதி.
ஆன்றவர்— }
ஆன்றார்— } சான்றோர்.
ஆன்றோர்— }

# இ

இ — ஓர் குற்றெழுத்து, 2. ஒரு சுட்டெழுத்து.
இஃது—இது.
இக—முன்னிலை அசைச்சொல்.
இகத்தல் — (தொ. பெ) கடத்தல், 2. மீறல், 3. போதல்.
இகந்துபடல்—(தொ. பெ) தவறுபடல், 2. முற்கூறிய விதியைக் கடத்தல்.
இகபரம்—இம்மை மறுமை.
இகம் — இவ்விடம், 2. இப்பிறவி, 3. இம்மை.
இகரம்—மூன்றா முயிர், 2. சந்தம்.
இகல—ஒருவமை யுருபு.
இகலு—(வி) பகை, 2. எதிர், 3. பொரு, 4. வாக்கு வாதஞ்செய்.
இகலன்—கிழநரி, 2. பகைவன்.
இகல்—பகை, 2. போர், 3. வலி.
இகழ்—நிந்தை.
இகழ் (வி)—நிந்தி.
இகழ்ச்சி—நிந்தை, 2. இழிவு, 3. மறதி.
இகழ்தல்—(தொ. பெ) நிந்தித்தல்.
இகழ்வு—நிந்தை.
இகளி—இடி.
இகு — (வி) புறங்காட்டச்செய், 2. ஈ, 3. எறி, 4. கொல், 5. துடை, 6. தாண்டு, 7. அழை, 8. வீழ்த்து, 9. வருத்து, 10. தாழ்ந்து, 11. குழை, 12. மறி.
இகுடி—ஆடுதின்னடை.
இகுப்பம்—திரட்சி.
இகும்—அசைச்சொல், (உ-ம்) காண்டிகு மல்லமோ கொண்க?
இகுளை—தோழி, 2. சுற்றம், 3. நட்பு.
இகுள் — இடி, 2. கார்த்திகைநாள், 3. ஆரல்மீன்.
இகைத்தல் — (தொ. பெ) கொடுத்தல் 2. நடத்தல்.
இக்கட்டு—இடுக்கண், 2. தடை.
இக்கணம்—இந்த க்ஷணம்.
இக்கன்—மன்மதன்.
இக்கிடைஞ்சல்—இடுக்கண்.
இக்கிரி—ஓர் முட்செடி.
இக்கு—கரும்பு, 2. கள்.
இக்குவாகு — சூரியவமிசத்து ஓரரசன், 2. பேய்ச்சுரை.
இக்குவில்லி—மன்மதன்.
இக்கெனல்—விரைவுக் குறிப்பு.
இக்கோ—அதிசய விரக்கச்சொல்.
இங்கண்—இவ்விடம்.
இங்கிசை—கொலை.
இங்கிதம் — குறிப்பு, 2. இனிமை, 3. நினைவு.
இங்கிரி—கஸ்தூரி.
இங்கு—பெருங்காயம்.
இங்கு—இங்கே.
இங்குசுக்காண்டான் — நீர்முள்ளி, 2. நெருஞ்சில்.
இங்குடிமம்— } (வை. அ) பெருங்
இங்குளி— } காயம்.
இங்குதாரி—பேரோசனை.
இங்குதாழி—பீதரோகணி, 2. புறநாட் டுப்பூண்டு.
இங்குராமம்—பெருங்காயம்.

இங்குலிகம்—சாதிலிங்கம், 2. சிவப்பு.
இங்ஙனம்— } இவ்வாறு, 2. இவ்வி
இங்ஙன்— } தம்.
இசகு பிசகு— } குழப்பம்.
இசக்குப் பிசக்கு— }
இசங்கு—சங்கஞ்செடி.
இசலு—(வி) வாதாடு.
இசிதல்—(தொ. பெ) இழுபடுதல், 2. நீளுதல்.
இசித்தல்—(தொ. பெ) இழுத்தல், 2. ஒடித்தல்.
இசிப்பு— } இணுங்குகை, 2. சிரிப்பு, 3.
இசிவு— } நரம்புச்சுருக்கு.
இசின்—இறந்தகால விடைநிலை. (உ-ம்.) என்றிசினோர்.
இசுதாரு—கடம்பமரம்.
இசை — ஒலி, 2. புகழ், 3. சொல், 4. மிடற்றுற் பிறக்கு மிசை, 5. நரம்பிற் பிறக்குமிசை, 6. இசைப்பாட்டு, 7. சங்கீதம், 8. புகழ், 9. முத்தமிழி லொன்று.
இசைகேடு—சுரபேதம், 2. அவகீர்த்தி, 3. ஒத்துக்கொள்ளாமை.
இசைதல் — (தொ. பெ) இணைதல், 2. பொருந்தல், 3. உடன்படல், 4. சரிப்படல்.
இசைத்தமிழ்—சங்கீதத் தமிழ்.
இசைத்தல்—(தொ. பெ) இணக்குதல், 2. ஒலித்தல், 3. பாடல், 4. பேசுதல், 5 பொருந்தப் பண்ணுதல்.
இசைநுணுக்கம் — ஒரு இசைத்தமிழ் நூல்.
இசைப்பு—இணக்கம், 2. சொல்லுகை.
இசைப்புள்—குயில், 2. அன்றில்.
இசைமடந்தை—சரச்சுவதி.
இசைமுடி— } சிலந்தி நாயகமென்கிற
இசைமுடி— } செடி.
இசைவல்லோர் — சங்கீத வித்துவான்கள், 2. கந்தருவர்.
இசைவாணர்—இசைவல்லோர்.
இசைவு—இணக்கம், 2. சம்மதி.
இச்சகம்—முகஸ்துதி.
இச்சாசத்தி—பஞ்சசத்தியிலொருசத்தி.
இச்சாபத்தியம்—கடுகு, நல்லெண்ணெய் நீக்கிச் சாப்பிடுதல்.
இச்சி— } இத்திமரம்.
இச்சியால்— }
இச்சித்தல்—(தொ. பெ) காதலித்தல்.
இச்சியல்—கடுகுரோகணி.
இச்சை — விருப்பம், 2. மிகுவிருப்பம், 3. தரிச்சை, 4. இஷ்டம், 5. அஞ்ஞானம், 6. பொய், 7. உறுதிச்சொல்.
இஞ்சாகம்—இறால்.
இஞ்சி—இஞ்சிக் கிழங்கு, 2. மதில், 3. வாவி, 4. கேடகம்.
இஞ்சித்தேறு—இஞ்சித்துண்டு.
இஞ்சு—(வி) இறுகு, 2. சுவறு.
இடகலை—சந்திரகலை.
இடக்க—(வி) தோண்ட, 2. பிளக்க, 3. விரிந்து நிற்க.
இடக்கரடக்கல்— } இழிந்த சொற்களை
இடக்கரடக்கு— } மறைத்துக் கூறல்.
இடக்கர்—மறைத்த வார்த்தை, 2. தூர்த்தர், 3. குடம், 4. நெருக்கம்.
இடக்கன்—தாறுமாறு செய்வோன்.
இடக்கியம்—தேர்க்கொடி.
இடக்கு — சேஷ்டை, 2. இழிசொல், 3. முருட்டுத்தனம், 4. குதர்க்கம்.
இடக்கை — ஓர் தேயம், 2. ஓர் வாச்சியம்.
இடங்கணம்—வெண்காரம்.
இடங்கம்—உளி.
இடங்கர்—முதலை, 2. தூர்த்தர், 3. நீர்ச்சால், 4. சிறுவழி.
இடங்கழி— } நெருக்குகை.
இடங்கழிமை— }
இடங்கழியர்—காமுகர், 2. தூர்த்தர்.
இடங்கரம்—மகளிர் சூதகம்.
இடங்காரம்—மத்தளத்தினிடப்புறம்.
இடங்கேடு—தரித்திரம்.
இடசாரி—இடதுபக்கமாகச் சுற்றுதல்.
இடத்தலைப்பாடு—இடத்தைச்சேர்தல்.
இடபம் — எருது, 2. சிவன் கொடி, 3. இடபராசி, 4. மேற்றிசைப்பாலன் குதி.
இடபாரூடன்—சிவன்.
இடமாரம்—ஓர் பெரும் பறை.

இடம்—ஸ்தானம், 2. ஆதாரம், 3. வீடு, 4. அகலம், 5. ஏது, 6. பெருமை, 7. இடதுபக்கம், 8. மூலிடம், 9. செல்வம், 10. ஆகாயம், 11 விசாலம்.
இடம்பம்—ஆடம்பரம்.
இடம்பல்—விலகல்.
இடம்பாடு—விசாலம், 2. செல்வம்.
இடம்புரி—சங்கு, 2. இடம்புரிச் சங்கு, 3. ஓர் பூடு, 4. இடப்பக்கமாக முறுக்கிய கயிறு.
இடர்—துன்பம்.
இடலம்—விசாலம்.
இடவகம்—மாம்பிசின், 2. பனம்பிசின்.
இடவன்—மண்ணாங்கட்டி, 2. பிளக்கப்பட்டது.
இடவை—வழி.
இடறு—தடை, 2. ஆபத்து.
இடறு—(வி) பெயர், 2. தடு.
இடன்—இடம்.
இடா—இறை கூடை, 2. ஓராயுதம்.
இடாகினி—காளியேவல் செய்வோள்.
இடாகு—புள்ளி.
இடாசு—(வி) நெருக்கு, 2. மேற்கொள், 3. அவமதி.
இடாப்பு—அட்டவணை.
இடாப்பு—(வி) காலை யகலப்பண்ணி நில்.
இடாம்பீகன்—இடம்பன்.
இடார்—இறைகூடை, 2. எலி முதலியன பிடிக்கும் பொறி.
இடி—தாக்குகை, 2. அசனி, 3. ஒலி, 4. இடித்தமா, 5. சிற்றுண்டி, 6. சுண்ணம், 7. மயிர்ச்சாந்து, 8. உறுதிச்சொல், 9. துடிப்பு, 10. இந்திரன் கொடி.
இடிகரை—அழிந்த கரை.
இடிக்கொடியோன்—இந்திரன்.
இடிஞ்சில்—அகல்.
இடிதல்—(தொ. பெ) உடைதல், 2. சரிதல், 3. நொறுங்கல், 4. ஓடிதல்.
இடித்தல்—(தொ. பெ) தூளாக்கல், 2. தாக்கல், 3. முட்டல், 4. இடியிடித்தல், 5. தகர்த்தல், 6. உறுதிசொல்லல், 7. துடித்தல், 8. உதைத்தல், 9. ஒலித்தல்.
இடித்துரை—உறுதிச்சொல்.
இடிமரம்—உலக்கை.
இடிம்பன்—ஓர் அரக்கன்.
இடிம்பு—அவமதிப்பு.
இடியப்பம்—சிற்றுண்டி வகையி லொன்று.
இடு—(வி) தரி, 2. வை, 3. ஈ, 4. எறி, 5. விதி, 6. சொரி.
இடுகாடு—சுடுகாடு.
இடுகு—(வி) சுருங்கு, 2. ஒடுங்கு.
இடுகு—(பெ) ஒடுக்கம்.
இடுகை—ஈகை, 2. கொடை.
இடுக்கண்—துன்பம்.
இடுக்கி—குறடு, 2. உலோபி.
இடுக்கு—கொடுக்கு, 2 சந்து, 3. துன்பம்.
இடுக்கு—(வி) நெருக்கு, 2. இடுக்கிப்பிடி, 3. குறடு முதலியவற்றால் விடுக்கு.
இடுக்குமுடுக்கு—முட்டுச்சந்து, 2. சங்கடம்.
இடுப்பு—இடை.
இடும்பன்—குமரனேவல் செய்வோன், 2. ஓரரக்கன்.
இடும்பி—இடும்பன் தங்கை, 2. செருக்குடையவள்.
இடும்பு—அகந்தை, 2. சேட்டை, 3. அவமதிப்பு, 4. கொடுமை.
இடும்பை—துன்பம், 2. தீமை, 3. அச்சம், 4. வறுமை, 5. விகாரமெட்டிலொன்று.
இடுமருந்து—ஒருவரைத் தன் வசமாக்கு மருந்து.
இடுலி—பெண்ணுமை.
இடுவந்தி—அபாண்டம், 2. அநீதி, 3. நெருக்கிடை.
இடை—நடு, 2. மருங்குல், 3. இடைச்சொல், 4. நடுநேரம், 5. இடம், 6. ஏழனுருபு, 7. பக்கம், 8. யானை, 9. சமயம், 10. பௌரணை, 11. அளவையிலொன்று, 12. தசநாடியிலொன்று.
இடைகலை—சந்திரகலை.

இடைக்கச்சு—அரைக்கச்சை.
இடைக்காடன்—பதினெண் சித்தரி லொருவன்.
இடைக்கிடை—நடுநடுவே, 3. நிறைக் கு நிறை.
இடைக்கொள்ளை—நடுக்கொள்ளை, 2. கொள்ளைநோயான் வருமழிவு.
இடைச்சனி—பூரநாள்.
இடைச்சன்—இரண்டாம் பேறு.
இடைச்சேரி—இடையரூர்.
இடைஞ்சல்—இடுக்கு, 2. நெருக்கம், 3. உபத்திரவம், 4. தடை.
இடைதல்—(தொ. பெ) பின்னிடல், 2. ஒதுங்கல், 3. தாழ்தல்.
இடைப்போகம்—இடையிற் புன்செய்ப் பயிர்விளைவு.
இடைமுள்—இடைப்பகு, 2. ஒரு கரப் பன்.
இடையன்கால்வெள்ளி — ஓர் விண் மீன்.
இடையாந்தரம்—நடு.
இடையூறு—இடர்.
இடைவள்ளல்-இரக்கக்கொடுப்போர்.
இடைவிடாமல்—ஓயாமல்.
இடைவெட்டுப்பேச்சு—நிந்தனை.
இடைவெளி—நடுவெளி.
இடோலி—ஓர் வகைச் சிவிகை.
இடோல்—ஓர் பறை.
இட்டகாமியம்— } இச்சித்த பொருளை
இஷ்டகாமியம்— } நினைத்தபடி பெறு தல்.
இட்டசித்தி — காரிய மனுகூலமாதல், 2. அழகர் மலையிலுள்ள ஒரு பொய் கை.
இட்டடை— } துன்பம்.
இட்டிடை— }
இட்டதேவதை—தான் வழிபடு தெய் வம்.
இட்டபோகம் — விரும்பினபடி அனுப விக்கை.
இட்டம்— } பிரியம், 2. விருப்பம், 3.
இஷ்டம்— } அன்பு, 4. அடிமை விடுதலை, 5. கிரக நிலையாலாகும் பலாபலன், 6. குருவம்.

இட்டலி—ஓர் சிற்றுண்டி.
இட்டளம்—துன்பம், 2. தளர்வு.
இட்டறுதி—முட்டு, 2. வறுமை.
இட்டி—ஈட்டி.
இட்டி— } யாகம்.
இஷ்டி— }
இட்டிகை — செங்கல், 2. இடுக்குவழி, 3. சுட்டு மெழுகு.
இட்டிடை — சிறுமை, 2. தரித்திரம், 3. கடைச்சற் கருவியினோ ருறுப்பு.
இட்டிமட்டைஞ்சல் — துன்பப்படுகை, 2. வறுமை.
இட்டு— } விருப்பம்.
இஷ்டு— }
இட்டு—ஓரசைச்சொல், 2. சிறிது.
இட்டுறுதி—கண்டிதம்.
இட்டேற்றம் — கொடுமை, 2. முழுப் பொய்.
இட்டோடு- பிரிவு.
இட்டோட்டு—அலைக்கழிவு
இணக்கம்—உடன்பாடு, 2. பொருத்தம், 3. திருத்தம்.
இணக்கு—(வி) உடன்படுத்து.
இணக்கோலை—உடம்படிக்கைப் பத திரம்.
இணங்கலர்—பகைவர்.
இணங்கு—பிசாசம்.
இணங்கு-(வி) உடன்படு.
இணங்கன்—வெடியுப்பு.
இணர்—பூங்கொத்து, 2. பூமலர், 3. பூந் தாது, 4. கிச்சிலிமரம்.
இணுட்டு—மீன்செவுள், 2. ஓலைத்துண்டு.
இணுப்பு—ஏய்ப்பு.
இணுப்பு—(வி) ஏய்.
இணி—கண்ணுறு, 2. எல்லை, 3. ஏணி.
இணுக்கு—வளார், 2. கைப்பிடியளவி னுக் ககப்பட்டது, 3. இரண்டோ லைகளினிடைவெளி, 4. கிளை முத லியவைகளி னிடைச்சந்து.
இணுங்கு—(வி) இசி.
இணை—இசைவு, 2. ஒப்பு, 3. துணை, 4. துணைவன், 5. இச்சை, 6. கூந் தல்.
இணைப்பு—இசைப்பு, 2. சேர்ப்பு.

இவணவிழைச்சு – கற்பில்லாமை, 2. காமம்.
இவ்வவு–ஒன்றிப்பு.
இண்டர்–இடையர்.
இண்டை–ஈகைக்கொடி, 2. தாமரை, 3. முல்லை, 4. மாலை.
இதணம்–, இதண்– } காவற்பரண், 2. பரண்.
இதமியம்–இன்பம்.
இதம்–இன்பமானது, 2. நன்மை, 3. இனிமை, 4. உரிமை, 5. சொல்.
இதயம்–இருதயம்.
இதரம்–அன்னியம், 2. ஈனம், 3. நீங்கு, 4. பாதரசம்.
இதலை–கொப்பூழ்.
இதல்–கவுதாரி, 2. காடை.
இதவு–இதம்.
இதழி–கொன்றை.
இதழ்–பூவிதழ், 2. உதடு, 3. கண்ணிமை, 4. பனையேடு, 5. வகிர்ந்த வோலை, 6. கதவினிலை, 7. பாளை, 8. இலை.
இதழ்விள்ள–(வி) மலர, 2. வாய்திறக்க, 3. பேச.
இதள்–இரசம்.
இதி–பிசாசம், 2. உறுதி.
இதிகாசம் – கலைஞான மறுபத்துநான்கி னொன்று, 2. பழங்கதை.
இதியாசம்–உதாரணம்.
இது–சுட்டுச்சொல்.
இதை–காரமணி, 2. புதுக்கொல்லை, 3. மரக்கலப்பாய், 4. கலப்பை.
இத்தி–கல்லாலமரம்.
இத்திநடையம்–நத்தை.
இத்தியாதி–இதுமுதலானவை.
இத்து–காவட்டம்புல்.
இத்துரு–ஈயமணல்.
இத்தை–முன்னிலை யசைச்சொல்.
இந்த–ஒரு சுட்டுச்சொல்.
இந்தம்–புளியமரம்.
இந்தளம்–தூபக்கால், 2. ஓர் பண்.
இந்தனம்–விறகு, 2. நறும்புகை, 3. மேல், 4. சுவாலை.
இந்தா–இதை வாங்கிக்கொள், 2. இங்கே வா.
இந்தி–பூனை.
இந்திகோபம்–(வை. அ) ஈயம்.
இந்தியம்–இந்திரியம்.
இந்திரகம்–சங்கமண்டபம்.
இந்திரகாளியம் – யாமளேந்திர முனிவர் செய்த இசை நூல்.
இந்திரகீலம்–மந்தரமலை.
இந்திரகோபம்–தம்பலப்பூச்சி.
இந்திரசாலம் – இல்லாததை உள்ளது போலக் காட்டும் கண்கட்டி வித்தை.
இந்திரசித்து–இராவணன் மகன்.
இந்திரதனு–வானவில்.
இந்திரதிசை–கிழக்கு.
இந்திரநீலம்–நீலரத்தினம்.
இந்திரபம்–வெட்பாலை.
இந்திரபதம்–சொர்க்கம்.
இந்திரபுரி–அமராவதி.
இந்திர புரோகிதன்–வியாழன்.
இந்திரப்பிரத்தம்–பாண்டவர் நகரம்.
இந்திரம் – இந்திரியம், 2. நவகண்டத் தொன்று, 3. மேன்மை.
இந்திரவல்லி – கொத்தான், 2. பிரண்டை.
இந்திரவாசம்–நெய்தல்.
இந்திரவில்–வானவில்.
இந்திரன்–வாசவன், 2. மிருகசீரிடம்.
இந்திரன்மைந்தன் – அருச்சுனன், 2. சயந்தன்.
இந்திராணி–இந்திரன்மனைவி.
இந்திரியகோசரம் – இந்திரியத்துக்கு விஷயமாகுகை.
இந்திரியநிக்கிரகம் – ஐம்புலனைத் தன் வசமாக்குதல்.
இந்திரியநுகர்ச்சி–ஐம்புலனுகர்ச்சி.
இந்திரியம்–தாது, 2. பொறி.
இந்திரை–இலக்குமி, 2. அரிதாரம்.
இந்தீவரம் – கரு நெய்தல், 2. கருங்குவளை.
இந்து – சந்திரன், 2. பச்சைக்கர்ப்பூரம், 3. கரடி, 4. கரி, 5. கௌரிபாஷாணம், 6. சிந்துநதி.

இந்துகாந்தம்—சந்திரகாந்தக் கல்.
இந்துசேகரன்—சிவன்.
இந்துஸ்தானி—ஓர் பாஷை.
இந்துதேசம்—சிந்துதேசம்.
இந்துப்பு—ஒரு மருந்துச் சரக்கு.
இந்துரவிகூட்டம்—அமாவாசியை.
இந்துரேகை—சந்திரன் கலை.
இந்துழி— } பெருங்காயம்.
இந்துளி— }
இந்துளம்—கடம்பமரம்.
இந்துலோகம்—வெள்ளி.
இந்துள்—நெல்லி.
இந்தோளம்—ஓர்ராகம், 2. ஊசல்.
இந்நாள்—இன்று.
இபங்கம்—புளிமா.
இபம்—யானை.
இபம்—மரக்கொம்பு.
இபவ—விபவ (ஓர் வருடம்.)
இப்படி—இவ்வாறு.
இப்பந்தி—பலவீனன், 2. பேடி, 3. உலோபி, 4. வகை தெரியாதவன்.
இப்பர்—வைசியர் பொது, 2. தனவைசியர், 3. கோவைசியர்.
இப்பால் — இந்தப்பக்கம், 2. இனிமேல்.
இப்பி—சிப்பி, 2. சங்கு.
இப்போது—இப்பொழுது.
இமகரன்—சந்திரன்.
இமகிரி— }
இமாசலம்— } இமயமலை.
இமாலயம்— }
இமம்—சீதளம், 2. உறைந்தபனி, 3. பொன்.
இமயகிரி— } இமயமலை.
இமயம்— }
இமயவல்லி—பார்வதி.
இமலம்—மரமஞ்சள்.
இமிசை—வருத்தம், 2. கொலை.
இமிர்தல் — (தொ. பெ) ஒலித்தல், 2. மொய்த்தல்.
இமில்—எருத்துத்திமில்.
இமிழ்—ஒலி, 2. இனிமை, 3. பறை.
இமிழ்தல் — (தொ. பெ) ஒலித்தல், 2. இனித்தல்.
இமிழ்த்தல்—(தொ. பெ) ஒலித்தல், 2. கட்டல், 3. கொப்பளித்தல்.
இமை—கண்ணிமை, 2. கண்ணிமைப்பொழுது, 3. அற்பம், 4. கரடி, 5. மயில்,
இமைகொட்டல்—இமைத்தல்.
இமையவர்— } வானவர்.
இமையோர்— }
இம்பர்—இவ்விடம், 2. இவ்வுலகம்.
இம்பூறல்—சாயவேர்.
இம்மடி—யானை.
இம்மி—ஓரெண், 2. நுண்மை, 3. பொன்மை, 4. புலம், 5. மத்தங்காய்ப் புல்லரிசி.
இம்மெனல்—அநுகரணவோசை, 2. விரைவுக் குறிப்பு.
இம்மை—இப்பிறப்பு.
இயக்கம்—பெருமை, 2. பிரகாசம், 3. வடதிசை.
இயக்கர்கோமான்— } குபேரன்.
இயக்கன்— }
இயக்கி—தருமதேவதை.
இயக்கு-(வி) செலுத்து, 2. பழக்கு, 3. நடத்து, 4. இயங்குவி.
இயங்கு—ஓர் முட்செடி.
இயங்கு-(வி) அசை, 2. நட, 3. உலாவு, 4. ஒளிசெய், 5. தங்கு.
இயங்குதிணை—அசைவுள்ளது.
இயசுரு—இரண்டாம் வேதம்.
இயத்தினம் — முயற்சி, 2. ஆயத்தம், 3. கருவி.
இயந்திரம்—சூத்திரம், 2. சக்கரம், 3. மதிலுறுப்பு; 4. தேர், 5. ஆலை.
இயந்தை—மருதயாழ்த்திறம்.
இயமகணம்— }
இயமகிங்கரர்— } நமன்றூதர்.
இயமதூதர் }
இயமபடர் }
இயமம்—அட்டாங்கயோகத்தொன்று.
இயமானன் — யாகஞ் செய்விப்போன், 2. யசமானன், 3. உயிர்.
இயமான்—எசமான்.
இயம்—ஒலி, 2. வாச்சியம், 3. சொல், 4. ஈ.

இயம்பு—(வி) சொல், 2. வாச்சிய முழங்கு, 3. ஒலி.
இயல்—குணம், 2. ஒழுக்கம், 3. ஒழுங்கு, 4. சாயல், 5. இசை, 6. இயற்றமிழ், 7. ஒத்து, 8. விதி.
இயல் – (வி) பொருந்து, 2. இசை, 3. நட, 4. ஆகு.
இயல்பு—குணம், 2. ஒழுக்கம், 3. முறை, 4. தன்மை, 5. நேர்மை, 6. இயற்கை.
இயல்பூதி—வில்வம், 2. நாய்வேளை.
இயவம்—நெல், 2. ஓர் தானியம்.
இயவர் – கீழ்மக்கள், 2. சண்டாளர், 3. தோற்கருவியாளர்.
இயவனர்—சோனகர், 2. கம்மாளர், 3. சித்திரக்காரர்.
இயவு—வழி, 2. ஊர், 3. காடு.
இயவுள்—புகழாளன்.
இயவை—வழி, 2. தோரைநெல், 3. துவரை.
இயறல்—முத்தி, 2. போதல்.
இயற்கை—சுபாவம், 2. கிராணி, 3. வழக்கம், 4. தன்மை.
இயற்பகைநாயனார்—அறுபத்து மூன்று நாயன்மாருளொருவர்.
இயற்றி—முயற்சி.
இயற்று—பாத்திரம்.
இயற்றுதல் – (தொ. பெ) செய்தல், 2. நடத்தல், 3. விதித்தல்.
இயனம்—கள்ளிறக்குவோன் கருவிபெய்புட்டில்.
இயாகம்—கொன்றை, 2. யூகம்.
இயாதம் – தோட்டியால் யானையைச் செலுத்துகை, 2. யானைத் தோட்டியின் பிடர்.
இயுசாவியம்—கொன்றை.
இயை—இசைப்பு.
இயைதல்—பொருந்தல்.
இயைத்தல்—பொருத்தல்.
இயைபு – இசைவு, 2. பொருத்தம், 3. செய்யுள் வனப்பினொன்று.
இயைவு—பொருத்தம்.
இயைமே—(வை. அ) வாழை.

இர – (வி) பிச்சைகேள், 2. வேண்டிக்கொள்.
இரகசியம்—மறைவு, 2. அந்தரங்கம்.
இரகிதம்—நீங்கிநிற்கை.
இரகு—ஸ்ரீராமனிரண்டாம் பாட்டன்.
இரகுநாதன்—ஸ்ரீராமன்.
இரகுவமிசம் – இரகுவின் சந்ததியார், 2. காளிதாசன் செய்த ஒரு காப்பியம்.
இரக்கம் – கிருபை, 2. மனவுருக்கம், 3. துன்பம், 4. ஒலி.
இரங்கு—(வி) பரிதபி, 2. துன்பப்படு, 3. அழு, 4. ஒலி.
இரங்கல் – அழுதல், 2. அகப்பொருட்டுறையினொன்று.
இரசகற்பூரம்—ஒரு மருந்து.
இரசகன்—வண்ணான்.
இரசகுளிகை – இரும்பைப் பொன்னாக்கு மருந்து.
இரசதம்— } வெள்ளி.
இரசிதம்— } வெள்ளி.
இரசதாளி—கப்பல்வாழை.
இரசம்—சுவை, 2. இனிமை, 3. சாறு, 4. பாதரசம், 5. சத்த தாதுவினொன்று, 6. மிளகுநீர்.
இரசலிங்கம்—சாதிலிங்கம்.
இரசவாதி – இரும்பைப் பொன்னாக்குவோன்.
இரசனம் – சுவை, 2. ஒலி, 3. பல், 4. ஓர் பொறி.
இரசனி – இராத்திரி, 2. நீலம், 3. மஞ்சள், 4. புயின்.
இரசனை—சுவை, 2. நாக்கு, 3. சாறு.
இரசாதலம்—கீழேழுலகினொன்று.
இரசாயனம் – ஓர் மருந்து, 2. இரசவாதம்.
இரசிகம்—குதிரை, 2. தூர்த்தத்தனம்.
இரசிகன்—தூர்த்தன்.
இரசிகை—தூர்த்தி.
இரச்சை— } கயிறு.
இரச்சு— } கயிறு.
இரஞ்சகம்-பற்றுவாய் மருந்து.
இரஞ்சகம்—அன்பு.
இரஞ்சிதம்—பிரியம்.

இரட்சகம்—
இரட்சணியம்—
இரட்சவணை—
இரட்சை— } மீட்பு.

இரட்சாபந்தனம் — காப்புக் கட்டல் 2. அட்சரவியந்திரம்.
இரட்சித்தல்—(தொ. பெ) காத்தல், 2. மீட்குதல்.
இரட்சிப்பு—காப்பாற்றுகை.
இரட்டியர்—வைசியர்.
இரட்டு—ஓர் சாதி, 2. ஒலி, 3. இருமடங்கு, 4. இரண்டென்னேவல்.
இரட்டுதல்—(தொ. பெ) இரட்டித்தல், 2. ஒலித்தல், 3. வீசுதல்.
இரட்டுமி—ஓர் வாத்தியம்.
இரட்டை—இரண்டொன்றானது, 2. மிதுனராசி.
இரட்டைக்கிளவி — ஒலிக் குறிப்பில் வரு மிரட்டை மொழி.
இரட்டையர் — இரட்டைப் பேருகப் பிறந்து சிறப்படைந்த கவிராயர் இருவர்.
இரணகளம்—போர்க்களம்.
இரணகெம்பீரம்—யுத்தத்தில் ஆரவாரித்தல்.
இரணசூரன்—வீரன்.
இரணதூரியம்—போர்ப்பறை.
இரணபாதகம்—கொலை, 2. நம்பிக்கைத் துரோகம்.

இரணபேரி—
இரணபேரிகை— } யுத்தமுரசு.

இரணம் — உப்பளம், 2. உணவு, 3. கடன்.
இரணம்—போர், 2. பகை, 3. புண்.
இரணரங்கம்—போர்க்களம், 2. யானைக் கொம்பினடி.
இரணவீரன்—யுத்தவீரன்.
இரணவைத்தியம் — சத்திரவைத்தியம்.
இரணியகசிபன் — நரசிங்கமூர்த்தியிறாற் சங்கரிக்கப்பட்ட ஓர் அசுரன்.
இரணியகருப்பன்—பிரமன்.
இரணியதானம்—சுவர்ணதானம்.
இரணியநேரம் — இரணியன் கொலையுண்ட வேளை, அது மாலை நேரம்.
இரணியம்—பொன்.
இரணியன்—இரணியகசிபன்.
இரண்டகம்—துரோகம்.
இரண்டு—உபயம், 2. புரளித்தனம்.
இரண்டுபடுதல்—வேறுபடுதல், 2. ஒற்றுமையின்றாதல், 3. ஐயுறுதல்.
இரதுகம்—இத்திமரம்.
இரதசாரதி—தேர்ப்பாகன்.
இரதபதம்—புறு.
இரதபந்தம்—ஒருவகைச் சித்திரகவி.
இரதம்—தேர், 2. பல், 3. இரசம், 4. இனிமை.
இரதம் — அரைஞாண், 2. மாமரம், 3. பாதரசம்.
இரதனம் — பல், 2. அரைஞாண், 3. கிண்கிணி.
இரதன்—கண், 2. கிளி.
இரதி — காமம், 2. விருப்பம், 3. மன்மதன் மனைவி, 4. பெண் யானை.
இரதி — இலந்தை மரம், 2. காந்தள், 3. பித்தளை.
இரத்தசாகம்—செங்கீரை.
இரத்தமாரணம்—காவிக்கல்.
இரத்தம்—சிவப்பு, 2. உதிரம், 3. பவளம்.
இரத்தல்—(தொ. பெ) வேண்டுதல், 2. பிச்சைகேட்டல்.
இரத்தாட்சி-அறுபது வருடத்தொன்று.
இரத்தி—இத்தி, 2. இலந்தை.
இரத்திரி—இத்தி.

இரத்தினக்கம்பளம்—
இரத்தினக்கம்பளி— } சித்திரக்கம்பளம்.

இரத்தினச்சுருக்கம் — ஒரு வைத்திய நூல், 2. புகழேந்திசெய்த உறுப்புவமை நூல்.
இரத்தினம்—மாமணி.
இரத்திஞகரம்—கடல்.
இரத்தினி—பிடிமுழம், 2. முன்கைப் பேரெலும்பு.
இரத்தோற்பலம்—செங்குவளை.
இரஸ்து—சேனையினுணவகை.
இரந்திரம் — துவாரம், 2. சென்மலக்கினம்.

இரந்துண்ணி— } யாசகன்.
இரப்பாளன்— }
இரப்பு—தரித்திரம், 2. பிச்சை.
இரமணம்— } இன்புறச் செய்கை.
இரமணியம்— }
இரமணன்—நாயகன்.
இரமி—(வி) சந்தோஷி.
இரமியம்— } திருப்தி.
இரம்மியம்— }
இரமை—இலக்குமி, 2. செல்வம்.
இரம்பக்கல்—குருந்தக்கல்.
இரம்பம் — ஈர்வாள், 2. கஸ்தூரிமிருகம்.
இரம்பிவம்—மிளகு.
இரம்பை—இரம்பம், 2. கஸ்தூரி மிருகம், 3. தேவதாசிகளிலொருத்தி.
இரம்மியம்—பூரண சந்தோஷம்.
இரலை—கலைமான், 2. புல்வாய், 3. அச்சுவினி, 4. ஊதுகொம்பு.
இரவணம்—குயில், 2. வெண்கலம், 3. பரிகாசம் பண்ணுதல், 4. ஒட்டகம்.
இரவல் — மீண்டுந் தருவதாகக் கொள்பொருள், 2. மீண்டுந் தருவதாகக் கொள்கை.
இரவி — சூரியன், 2. மூக்கின் வலத்துவாரம், 3. மலை.
இரவிகாந்தம்—சூரியகாந்தக்கல்.
இரவிகுலம்—சூரியவமிசம்.
இரவிக்கை—முலைக்கச்சு.
இரவிநாள்—இரேவதிநாள்.
இரவிமது—(வை. அ) வெள்ளி.
இரவு—இராத்திரி.
இரவுத்திரம்—இரௌத்திரம்.
இரவுரவம் — ஓர் நரகம், 2. இருபத்தெட்டாகமத்திலொன்று.
இரவை — அணு, 2. துப்பாக்கியிலிடு மீயச்சன்னம், 3. வச்சிரம், 4. சொற்பம்.
இரளி—கொன்றை.
இரா—இரவு.
இராகமெடுக்க—இராகமாலாபிக்க.
இராகம்—ஆசை, 2. மோகம், 3. நிறம், 4. சிவப்பு, 5. இன்னிசை.

இராகவன் — இரகுவம்சத்திற் பிறந்தவன், 2. ஸ்ரீ இராமன்.
இராகவி—பெருநெருஞ்சில்.
இராகவிண்ணுடகம்—கொன்றை.
இராகி—கேழ்வரகு.
இராகு—கரும்பாம்பு.
இராகு—கோமேதகம்.
இராக்கதம் — பெண்ணும் அவளது பெற்றோரும் சம்மதியாதிருக்க, தானே பலாத்காரத்திற் செய்யுமணம்.
இராக்கதர்— } அரக்கர்.
இராட்சதர்— }
இராக்கதிர்—சந்திரன்.
இராக்கினி—அரசி.
இராசசம்— } முக்குணத்திலொன்று.
இராசதம்— }
இராசசூயம் — ஏகசக்கராதிபதி செய்யும் ஓர் யாகம்.
இராசதானம்— } அரசன் வாழுநகரம்.
இராசதானி— }
இராசத்துவம்—அரசியல்.
இராசநோக்காடு—பிரசவவேதனை.
இராசபஞ்சகம்—இராசபயம்.
இராசபட்டம்—இராசாதிகாரம்.
இராசபாட்டை—இராசமார்க்கம்.
இராசபிளவை — முதுகிலுண்டாகும் ஒரு சிலந்தி.
இராசமண்டலம்—அரசர் கூட்டம்.
இராசமாநாகம்—கருவழலைப்பாம்பு.
இராசராசன்— } சக்கரவர்த்தி.
இராசாதிராசன்— }
இராசராசேஸ்வரி—துர்க்கை, 2. பார்வதி.
இராசரிகம்—அரசாட்சி.
இராசவள்ளி—ஓர் வள்ளிக்கொடி.
இராசவாகனம்—சிவிகை.
இராசன்—அரசன், 2. சந்திரன்.
இராசவிருட்சம்—கொன்றைமரம்.
இராசாக்கினை—அரசனாணை, 2. இராசதண்டம்.
இராசாளி—ஒரு பறவை.
இராசி—ஓரை, 2. கூட்டம், 3. குவியல், 4. ஒழுங்கு.

இராசி—இணக்கம், 2. மத்தியானம்.
இராசிக்காரன்—அதிர்ஷ்டசாலி.
இராசிப்பொருத்தம்—மணப் பொருத்தம் பத்தினொன்று, 2. இராசிப்பலன்.
இராசி மண்டலம்—இராசி வட்டம், 2. ஓரை.
இராசியம்—இரகசியம், 2. மறைபொருள்.
இராசிலம் — நீர்ப்பாம்பு, 2. சாரைப் பாம்பு.
இராசீவம்—தாமரைமலர்.
இராச்சியபாரம்—இராச்சியப் பொறுப்பு.
இராச்சியம்—அரசாளுமிடம், 2. நாடு, 3. அரசாளுகை, 4. உலகு.
இராடம்—ஓர் தேயம், 2. கழுதை, 3. பெருங்காயம்.
இராட்சசன்—இராக்கதன்.
இராட்சத—ஓர் வருடம்.
இராட்டினம்—நூனூற்கு மியந்திரம்.
இராட்டினவூஞ்சல் — இராட்டினம் போற் சுற்று மூஞ்சல்.
இராட்டு—அரசன்.
இராணம்—இலை, 2. மயிற்றோகை.
இராணி—அரசி.
இராணுவம்—சேனை.
இராதம்—கடைக்கொள்ளி.
இராதை — ஸ்ரீ கிருட்டிணன் மனைவி, 2. விசாகம், 3. மின்.
இராத்திரி—இரா.
இராந்து—இடுப்பு.
இராமகலி—ஓரிராகம்.
இராமக்கம்—ஓர் வைகூரி.
இராமக்கிரியை—ஓர் இராகம்.
இராமடம்—பெருங்காயம்.
இராமதூதன்—அனுமான்.
இராம நவமி — சித்திரையில் சுக்கில பக்ஷத்தே வரும் நவமிதிதி.
இராமபத்திரன்—தசரத ராமன்.
இராமபாணம்—புத்தகங்களை யரிக்கும் பூச்சி, 2. ஸ்ரீ இராமனம்பு, 3. ஓரௌடதம்.
இராமம்—அழகு.
இராமன் — ஸ்ரீ விஷ்ணு மூர்த்தியின் ஏழாவ தவதாரம்.
இராமாநுசன்—இலக்குவன், 2. வைஷ்ணவ சமயாசாரியரி லொருவர்.
இராமாயணம் — ஸ்ரீராமபிரான் சரித்திரம்.
இராயசம்—சம்பிரதித்தொழில்.
இராயணி—அரசி.
இராயன்—அரசன்.
இராவடம் — அசோகு, 2. அராவு தொழில்.
இராவடி—ஏலம்.
இராவணம்—விளக்கு.
இராவணன்—இலங்கை வேந்தன்.
இராவணன் மீசை—ஓர் புல்.
இராவணாத்தம்—ஒரு வீணை.
இராவணி—இந்திரசித்து.
இராவிரேகு—குழந்தைகளணியி லொன்று, 2, அரசிலைச் சுட்டி, 3. அரைமூடி.
இராவு—(வி) அராவு.
இராவுத்தன்—குதிரைச் சேவகன்.
இரிகம்—இருதயம், 2. இரத்தாசயம்.
இரிசல்—இரிதல்.
இரிசியா—பூனைக்காலி.
இரிஞர்—பகைவர்.
இரிதல் — (தொ. பெ) கெடுதல், 2. தோற்றோடல், 3. சாய்தல், 4. அஞ்சுதல்.
இரித்தல்—(தொ. பெ) பயப்படுத்துதல், 2. அழித்தல், 3. முறியடித்தல்.
இரிப்பு—முறியடிக்கை.
இரியல்—நல்லாடை.
இரீதி—பித்தளை, 2. முறைமை.
இரீதிகவுளம்—ஓரிராகம்.
இரு—பெரிய, 2. இரண்டு.
இருகால் — அரை, 2. இருமுறை, 3. இரண்டு தாள்.
இருக்கு — முதல் வேதம், 2. வேதம், 3. மந்திரம்.
இருக்கை — ஆசனம், 2. குடியிருப்பு, 3. ஊர்ப்பொது, 4. வீடு.
இருசமய விளக்கம்—ஒரு நூல்.
இருசி—இருதுவாகுந் தன்மையில்லாப் பெண், 2. ஓர் பெண் பிசாசு.
இருசு—செவ்வை.

இருசு—பண்டியுளிரும்பு, 2. மூங்கில்.
இருடி—ஆந்தை.
இருடி— } முனிவன்.
இருஷி— }
இருடிகேசன்—மகாவிட்டுணு.
இருட்சி—இருள், 2. மயக்கம்.
இருட்டு—இருள், 2. அறியாமை.
இருட்டுதல்—இருளடைதல்.
இருட்பிழம்பு—இருளின் திரள்.
இருணம் — கடன், 2. கழிக்கப்படு மெண், 3. உவர்த்தரை.
இருணிலம்—நரகம்.
இருண்மை—இருளுடைமை.
இருதயம் — உள்ளம், 2. உயிர்நிலை, 3. மனம், 4. கருத்துரை.
இருதலைக்கொள்ளி—இருதலையுந் தீப் பற்றிய கொள்ளி.
இருதலை மாணிக்கம்—ஒரு மந்திரம்.
இருதிணை—உயர்திணை அஃறிணை.
இருது—இரண்டுமாத பருவம், 2. மக ளிர் முதற்பூப்பு, 3. கடவுளின் முத் தொழில்.
இருதுசாந்தி-ஒரு சடங்கு, 2. சோபன கலியாணம்.
இருத்தி—சித்தி, 2. மேன்மை.
இருத்து—அஸ்தக்கிரியை,
இருத்துதல் — (தொ. பெ) உட்காரச் செய்யல், 2. தாமதிக்கச் செய்யல், 3. அழுத்தல், 4. நிலைபெறச் செய் தல், 5. இருத்திக்கொள்ளல்.
இருத்தை — இருபத்துநாலு நிமிஷங் கொண்ட ஒரு நாழிகை, 2. நாழிகை வட்டில், 3. சேங்கொட்டை.
இருநா—உடும்பு, 2. பாம்பு.
இருநிதிக்கிழவன்—குபேரன்.
இருந்து— } கரி.
இருந்தை— }
இருபஃது—இருபது.
இருபிறப்பாளர்—பிராமணர்.
இருபிறப்பு—சந்திரன், 2. சிறகு, 3. பல், 4. முட்டையிற் பிறப்பன.
இருப்பவல்— ஓர் பூண்டு.
இருப்பிடம் — ஆசனம், 2. இருக்குமி டம்.
இருப்பு-இருக்கை, 2.இருக்குந்தன்மை, 3. மீந்திருப்பவை.
இருப்புக்காய்வேவளா—ஒரு செடி.
இருப்புநெஞ்சு—இரக்கமில்லாதநெஞ்சு.
இருப்புப்பாரை—குழிதோண்டுங் கருவி.
இருப்பை—இலுப்பை.
இருமல்—கக்கல் (ஒரு நோய்.)
இருமுது குரவர்— } தாய் தந்தையர்.
இருமுது மக்கள்— }
இருமை — பெருமை, 2. மகிமை, 3. துக்கம்.
இரும்பிலி—ஒரூர், 2. ஓர் செடி.
இரும்பு — கரும்பொன், 2. ஆயுதப் பொது.
இரும்புளி- ஓர் மரம்.
இரும்பை-பாம்பு, 2. குடம்.
இருவல் நொருவல்—இடிந்தும் இடியா தது.
இருவாச்சி—கருமுகைச் செடி.
இருவி—தினைத்தாள், 2. ஒரு நாபி.
இருவிக் காந்தகம்—ஓர் நச்சு மூலிகை.
இருவினை—நல்வினை தீவினை.
இருவேலி—வெட்டிவேர்.
இருளன்—ஒரு பிசாசம், 2. மலையிடை வாழும் ஓர் சாதியான்.
இருளி—வெட்கம், 2. பன்றி, 3. கருஞ் சீரகம், 4. இருதுவாகுந் தன்மையில் லாப் பெண்.
இருவா—நாணம்.
இருள்—அந்தகாரம், 2. கறுப்பு, 3. உன் மத்தம், 4. யானை, 5. நரகம்.
இருள்வலி—சூரியன்.
இருள்—(வி) அந்தகாரமாகு, 2. மங்கு, 3. ஒளி மழுங்கு, 4. மருளு.
இரெட்டி—ஓர் சாதி.
இரெப்பை—கண்மடல்.
இரேகி — (வி) ஒன்றுபடு, 2. ஐக்கமா யிரு.
இரேகுத்தி—ஓரிராகம்.
இரேகை—வரி, 2. கைகால்முதலியவற் றினிரேகை, 3. எழுத்து, 4. சந்திர ரேகை, 5. சித்திராகிருதி, 6. இறை.
இரேக்கு — பூவிதழ், 2. ஓர் வகைச் சல்லா, 3. பொற்றகடு.

இரேசகம்—பேதிமருந்து, 2. பிராணு யாமம்.
இரேசனம்—பேதி.
இரேசன்—வெள்ளைப்பூண்டு.
இரேசி — (வி) நாசியிளுெரு தொளைபாற் சுவாசம் விடு.
இரேசிதம்—குதிரை வட்டமாயோடல்.
இரேசுதல்—(வை. அ) அசீரணம்.
இரேணு—அணு.
இரேணுகம்—ஓர் மருந்து.
இரேபதம்— } தருமசாத்திரத்தி லொன்
இரேவதம்— } று, 2. கண்டம்.
இரேயம்—கள்.
இரேவதம்—இரேவதிநாள்.
இரேவதன்—பலதேவன் ராமன்.
இரேவதி — கடைநாள், 2. பலதேவர் மனைவி.
இரேவு — இறங்குதுறை, 2. ஆபந்து றை.
இரை—பறவை முதலியவற்றி னுணவு, 2. தூண்டிலிரை, 3. உணவு, 4. உண்டது.
இரை-(வி) ஒலி, 2. இரையென்னேவல், 3. வீங்கு.
இரைகொள்ளி — பெருந்தீனியாள், 2. இரைப்பெட்டி.
இரைச்சல்—ஆரவாரம், 2. ஒலி.
இரைப்பு—இரைச்சல், 2. ஓர் நோய்.
இரைமீட்குதல் — (தொ. பெ) அசை போடுதல்.
இரௌத்தர் — குதிரைச் சேவகர், 2. சோனகர்.
இரௌத்திரம்—பெருங்கோபம்.
இரௌத்திரி—ஓர் வருடம்.
இரௌரவம் — ஓர் நரகம், 2. சிவாக மங்களி லொன்று.
இலகடம்—யானைமேற்றவிசு.
இலகம்—ஊமத்தை.
இலகரி— } வெறி, 2. மகிழ்ச்சி, 3. மது,
இலகிரி— } 4. ஒரு நூல்.
இலகாம்— }
இலகான்— } கடிவாளம்.
இலகிமா — ஒரு சித்தி. (அதுகனமின் மையுறுகை.)
இலகு — இலேசு, 2. நுண்மை, 3. கால தரப்பிரமாணத்தி லொன்று, 4. தணிவு, 5. குற்றெழுத்து.
இலகு—(வி) ஒளிசெய்.
இலகுசம்—ஈரப்பலா.
இலகுத்துவம்—இலேசாகுதல.
இலக்கணச் சிதைவு—நவருய் வழங்கும் சொல்.
இலக்கணம் அடையாளம், 2. இயல்பு, 3. அசாதாரண தருமம், 4. உறுப்புகள், 5. சிறப்பு, 6. இலக்கியத்தி னமைதி.
இலக்கணச் சுழி — குதிரையின் அங்கத்திலுள்ள நற்சுழி.
இலக்கணி—இலக்கண மறிந்தவன்.
இலக்கணை — உரியபொருளை விட்டு அப்பொருளின் சம்பந்தியை யுணர்த்துவது.
இலக்கம் — துலக்கம், 2. குறிப்பு, 3. இலட்சம்.
இலக்கர்—சீலை, 2. கந்தை.
இலக்காரம்—சீலை.
இலக்கியம் — குறி, 2. உதாரணம், 3. சான்றோர் செய்யுள்.
இலக்கினம்—இராசிகளினுதயம், 2. முகூர்த்தம்.
இலக்கு — குறி, 2. எதிரி, 3. அசாதாரண தருமம், 4. குறிப்பு, 5. எண்ணம், 6. ஏது, 7. சமயம்.
இலக்குமணன்— } ஸ்ரீஇராமனுக்கிளை
இலட்சுமணன்— } யோன்.
இலக்குமன்னை—சாரசபட்சியின் பேடு.
இலக்குமி— }
இலட்சுமி— } திருமகள், 2. செல்வம்.
இலக்குவன்—இலட்சுமணன்.
இலங்கம் — எறும்பு, 2. கூட்டம், 3. மூடம்.
இலங்கர்—நங்கூரம்.
இலங்கனம்—உணவொழிகை, 2. தாண்டுகை, 3. விதி கடக்கை.
இலங்கிசார்—அலைக்கழிவு.
இலங்கு—குளம்.
இலங்கு—(வி) ஒளிசெய்.

இலங்கை — ஆற்றிடைக்குறை, 2. இலங்காபுரி, 3. இராவணனரண்.
இலங்கோடு—கீழுடை.
இலசுனம்-வெள்ளைப்பூண்டு, 2. மணியின் குற்றத்திலொன்று.
இலச்சினை—குறி, 2. முத்திரைமோதிரம்.
இலச்சை — வெட்கம், 2. கூச்சம், 3. அவமதிப்பு, 4. தொந்தரவு.
இலஞ்சம்—பரிதானம்.
இலஞ்சி- குளம், 2. ஏரி, 3. கொப்பூழ், 4. மகிழமரம், 5. புன்கு, 6. குணம், 7. சாரைப்பாம்பு, 8. மதில்.
இலட்சணம்—குறி, 2. பார்வை, 3. அழகு.
இலட்சம்—நூறாயிரம்.
இலட்சியம்—குறி, 2. எதிர், 3. மதிப்பு.
இலட்சுமணம்—தாளி (ஓர் மரம்).
இலட்சுமணன்—சீராமபிரான் தம்பி.
இலட்டுகம்—தோசை, 2. அப்பவருக்கம், 3. இலட்டு.
இலவை—அரசமரம்.
இலண்டம்—யானையிலத்தி.
இலண்டு—முருட்டுத்தனம்.
இலதை—படர்கொடி.
இலத்தி — குதிரை முதலியவற்றினிலத்தி.
இலந்தை—ஓர் மரம், 2. குளம்.
இலபனம்—வாய்.
இலபி—(வி) கைகூடு, 2. நேரிடு.
இலப்தம்—பாசிதம், 2. கிடைத்தது.
இலம்பகம் — அத்தியாயம், 2. மாலை, 3. நுதலணிமாலை.
இலம்படை — இடுக்கண், 2. தரித்திரம்.
இலம்பம்— } தொங்குவது, 2. மாலை,
இலம்பனம்— } 3. ககோளத்திற் கூறுமோர் பாகையளவு, 4. நிறுநிட்டம்.
இலம்பாடி—ஓர் சாதி.
இலம்பாடு—தரித்திரம், 2. இன்மை.
இலம்பிகை—அண்ணாக்கு.
இலம்பிதம்—தொங்குகை, 2. உயர்ச்சி.
இலம்பை — இடுக்கண், 2. துயரமானநிலை.

இலயம்—சாவு, 2. அடங்குகை, 3. ஒளிப்பு, 4. கரைவு, 5. கூத்தின் விகற்பம்.
இலயி—(வி) ஒன்று, 2. ஒடுங்கு, 3. அழி.
இலயை — தாளப்பிரமாணம்பத்திலொன்று.
இலலாடம்—நெற்றி.
இலலிதம்—அழகு, 2. மாதுரியம்.
இலலிதை — இராகம் முப்பத்திரண்டிலொன்று, 2. பார்வதி.
இலவங்கம் — ஓர் வாசனைமரம் (கராம்பு.)
இலவசம்—விலையின்றிப் பெறுவது.
இலவண பஞ்சாட்சரம் — ஓர் மாந்திரிக நூல், 2. ஓர் மந்திரம்.
இலவணம்—உப்பு, 2. உவர்ப்பு.
இலவணவித்தை—ஒரு தந்திரவித்தை.
இலவந்திகை—தண்ணீரிறைக்கு மியந்திரம்.
இலவம்— } இலவம் பஞ்சுமரம்.
இலவு— }
இலவம் — எண் கணப்பொழுது, 2. சொற்பம், 3. எழுதிவுகளிலொன்று, 4. பூசை.
இலவலேசம்—மிகச் சிறிது.
இலவன்.— ஸ்ரீ இராமனுடைய மூத்தமைந்தன்.
இலலிதம்— } அழகு, 2. மாதுரியம்,
இலளிதம்— } 3. சரசம், 4. உபசாரம், 5. சிவாகமமிருபத் தெட்டிலொன்று, 6. ஓரிராக விகற்பம்.
இலளிதை—பார்வதி.
இலாகரி— } வெறி, 2. மஸ்து.
இலாகிரி— }
இலாகவம்— } சாமர்த்தியம்.
இலாகு— }
இலாகன்—ஓர் மீன்.
இலாகை—விதம்.
இலாக்கிரி—செம்மெழுகு.
இலாக்கை—ஈர்.
இலாங்கலி—தென்னமரம், 2. செங்காந்தள், 3. கார்த்திகைப்பூ, 4. கலப்பை.
இலாங்கூலம்—வால்.
இலாசடி— } வருத்தம்.
இலாசடை— }

இலாச்சம் – ஓர் தானிய அளவை, 2. ஓர் நில அளவை.
இலாஞ்சனம்– } அடையாளம், 2. முத்திரை, 3. பெயர், 4. கீர்த்தி.
இலாஞ்சனை– }
இலாஞ்சி–ஏலம்.
இலாடம் – தேசமைம்பத்தாறினொன்று, 2. நெற்றி.
இலாடம் – குதிரைக்குளம்பி லிணைக்கு மிரும்பு, 2. புளியமரம்.
இலாடன்பருத்தி–ஓர் செடி.
இலாபம்–ஆதாயம்.
இலாபாதேவி– } கொடுக்கல் வாங்கல்.
இலாவாதேவி– }
இலாமச்சை– } விழல். (ஒரு வாசனைப்புல்.)
இலாமிச்சை– }
இலாயம்–குதிரைச்சாலை.
இலாலனம்– } நயஞ்செய்கை.
இலாலனை– }
இலாலி – ஓர் வாழ்த்து, 2. மங்களப் பாடல்.
இலாவணம்–பெயர்ப் பதிப்பு.
இலாவணியம்–அழகு.
இலாவிருதம்– } நவகண்டத் தொன்று.
இளாவிருதம்– }
இலிகி–எழுதுகை, 2. எழுத்து.
இலிகிதம்–எழுதிய புத்தகம், 2. கலைஞானம்.
இலிகுசம்–எலுமிச்சமரம்.
இலிங்கம் – அடையாளம், 2. சிவலிங்கம், 3. சாதிலிங்கம்.
இலிங்கி–ஒரு சைவ சந்நியாசி.
இலிபி–எழுத்து, 2. விதி.
இலிர்–(வி) தளிர், 2. சிலிர்.
இலீக்கை–நமடு.
இலீலை – விளையாட்டு, 2. சரசம், 3. மகளிர் மோகவிளையாட்டு, 4. பாவனை காட்டுகை, 5. பரிகாசம், 6. புணர்ச்சி.
இலுதை–அணில்.
இலுப்பை–இருப்பைமரம்.
இலேககன்–எழுதுவோன்.
இலேகர்–தேவர்.
இலேகனம்–எழுத்து.
இலேகனி– } எழுத்தாணி.
இலேகினி– }
இலேகை–எழுத்து, 2. சித்திரம்.
இலேகியம் – நக்குகை, 2. பாகாகக் கிண்டிய மருந்து.
இலேசம் – நொய்மை, 2. இலேசு, 3. காலவிரைவு, 4. ஓரணி.
இலேசு – நொய்மை, 2. கனமின்மை, 3. எளிது, 4. பலவீனம், 5. விதப்புக்கிளவி.
இலேசுணம்–அரிதாரம்.
இலேந்து– } கல்லுப்பு.
இலேவுந்து– }
இலேபம்–வால்மிளகு.
இலேபனம் – பூசுமருந்து, 2. வாசனைத் தைலம்.
இலேம்புகம்–நிலக்கடம்பு.
இலை – அடை, 2. உலோபத்தனம், 3. வெற்றிலை.
இலைக்கறி–கீரை.
இலைங்கம்–இலிங்கபுராணம்.
இலையான்–ஈ.
இலௌகீகம்–உலகசம்பந்தம்.
இல் – இடம், 2. வீடு, 3. இல்வாழ்க்கை, 4. இராசி, 5. மனைவி, 6. எழனுருபு, 7. இல்லை.
இல்லக்கிழத்தி–மனைவி.
இல்லம்–தேற்றான்மரம், 2. வீடு.
இல்லவள்–மனைவி.
இல்லவன்–கணவன்.
இல்லறம் – இல்லத்தில் மனையாளோடு கூடி வாழுகை.
இல்லாத்தனம்–வறுமை.
இல்லாமை–தரித்திரம்.
இல்லார்–தரித்திரர்.
இல்லாள்–மனைவி.
இல்லான்–தரித்திரன்.
இல்லி–சில்லி.
இவக்காண்–இங்கே, 2. இந்நேரமனைவும்.
இவண்–இவ்விடம்.
இவர்–(வி) ஏறு, 2. எழும்பு, 3. விரும்பு, 4. செல், 5. நடத்து, 6. பேராசைகொள்.

இவவு—இழிவு.
இவறு—(வி) ஆசைகூர், 2. உலோபஞ் செய், 3. மற.
இவுளி—குதிரை.
இழ—(வி) இழந்துபோ.
இழவு—நஷ்டம், 2. மரணம்.
இழவுவிழு—சாவுநேரிட.
இழி-(வி) இறங்கு, 2. இழிவுபடு, 3. தாழ்.
இழிகடை—மிகவிழிந்தது.
இழிகண்—எப்பொழுதும் பீளை நீர் ஒழுகும் கண்.
இழிசனர்—கீழ்மக்கள்.
இழிசொல்-பழிச்சொல், 2. பொய்மொழி, 3. கடுஞ்சொல், 4. பயனில்சொல்.
இழிஞர்—சண்டாளர்.
இழிதகவு—இழிவு, 2. எளிமை.
இழிதிணை—அஃறிணை.
இழிபு—தாழ்வு, 2. பள்ளம்.
இழிவு—தாழ்வு, 2. நிந்தை, 3. குறைவு, 4. பள்ளம், 5. கேடு, 6. குற்றம்.
இழு—(வி) ஈர், 2. பின்வாங்கு, 3. வசமாக்கு, 4. உறிஞ்சு.
இழுக்கம்—தளர்வு, 2. தாமதம், 3. ஈனம்.
இழுக்கல்—வழுக்குநிலம்.
இழுக்கு—ஈனம், 2. தளர்தல், 3. தவறு, 4. மறதி, 5. தாழ்வு, 6. நிந்தை, 7. பொய்.
இழுது—நெய், 2. தித்திப்பு, 3. நிணம்.
இழுதை — அறிவில்லான், 2. பேய், 3. பொய்.
இழுபறி—தொந்தரை.
இழுப்பாட்டம்—தாமதம்.
இழுமு—தித்திப்பு.
இழுமெனல் — சீர்மை, 2. இனிமை, 3. அநுகரணவோசை.
இழுவை—ஓர் முட்செடி.
இழை—நூல், 2. கையிற் கட்டுங் காப்பு, 3. ஆபரணம், 4. எண் வனப்பினொன்று.
இழை — (வி) உரிஞ்சு, 2. பிணை, 3. உட்குழை.
இழைப்புடவை—நல்லாடை.
இழைப்புளி—சீவுளி.
இழைவாங்கி—இழையூசி.

இளகு—(வி) தணி, 2. நெகிழ், 3. கரை, 4. தளர்.
இளக்கம்—இளகிய தன்மை.
இளக்கரி—(வி) தளர், 2. தாழ், 3. எளிமையாகு, 4. அஞ்சு.
இளக்காரம்—இளக்கம்.
இளக்கு—(வி) இளகச்செய்.
இளங்கதிர்—பயிரினிளங்கதிர், 2. இளங்கிரணம், 3. உதையாதித்தன்.
இளங்கலையன்—ஓர் நெல்.
இளங்கன்று—சிறுகன்று, 2. மரக்கன்று.
இளங்கார்—கார்நெல்.
இளங்கால்—வெற்றிலை யிளங்கொடி.
இளங்குரல் — சிறுகுரல், 2. பயிரிளங்கதிர்.
இளங்கொடி—சிறுகொடி, 2. பசுவினஞ்சுக்கொடி, 3. பெண்.
இளங்கோக்கள்—வைசியர்.
இளசு—முதிராதது.
இளஞ்சூல்—பயிரி னிளங்கரு, 2. முதிராப்பிண்டம்.
இளநீர் — இளந்தேங்காய், 2. மணியினிறம்.
இளநெஞ்சன் — கோழை மனதுடையவன், 2. இளகின மனதுடையவன்.
இளந்தலை—இளமைப்பருவம், 2. எளிமை.
இளந்தாரி—வாலிபன்.
இளந்தை—இளவயதுடையது.
இளந்தோயல்—உறைந்துவருந் தயிர்.
இளப்பம்—திடமின்மை.
இளம்பதம்—இளமை, 2. இளம்பாகம், 3. உருகுபதம், 4. வேகாப்பதம், 5. நெல் முதலியவற்றின் காய்ச்சற் குறைவு.
இளம்பாடு — இளமையிற் படும்பாடு, 2. இளம்பதம்.
இளம்பிடி — சிறிய பெண்யானை, 2. பெண்.
இளவரசு—இராசகுமாரன், 2. பட்டத்துக்குரிய பிள்ளை.
இளவல்—தம்பி, 2. இளைஞன், 3. முதிராதது.
இளவெயில்—காலைவெயில்.

இளவேனில் — சித்திரை வைகாசியின் பருவம்.

இளி—இகழ்ச்சி, 2. இகழ்ச்சிக்குறிப்பு, 3. சிரிப்பு, 4. அவமதிச்சிரிப்பு, 5. யாழிலோர் நரம்பு, 6. இணக்கம்.

இளி—(வி) பல்லிளி, 2. களகளவெனச் சிரி, 3. பரிகாசஞ் செய், 4. அவமதி.

இளிப்பு— இளிவு— } பல்லிளிக்கை, 2. இழிவு, 3. நிந்தை.

இளை — தலைக்காவல், 2. காவற்காடு, 3. வேலி, 4. மேகம், 5. இளமை, 6. புதனுடைய மனைவி.

இளை—(வி) தொய், 2. மெலி, 3. தளர், 4. சக்திகுறை, 5. வளங்குறை, 6. தோல்வியாகு.

இளைஞர்— இளைஞோர்— } சிறுவர், 2. தம்பியர்.

இளைப்பம்—சொற்பம், 2. தீமை.

இளைப்பாறுமண்டபம்—வசந்தமண்டபம்.

இளைப்பு—மெலிவு.

இளமை—பாலியம்.

இளையவன்— இளையோன்— } தம்பி, 2. இளைஞன், 3. முருகன், 4. இலட்சுமணன்.

இளையள்— இளையாள்— } தங்கை, 2. இலக்குமி.

இளையான்குடிமாற நாயனுர் — அறுபத்துமூன்று நாயன்மாரி லொருவர்.

இற—(வி) சா, 2. அழி, 3. செல், 4. அதிகரி, 5. கட.

இறகர்— இறகு— } பறவை யிறகு, 2. சிறகு, 3. சிறை.

இறக்கம்—இறங்குகை, 2. சரிவு, 3. இறங்குதுறை, 4. அம்பலம் முதலிய விறக்கம், 5. மிருகங்கள் செல்வழி.

இறக்கல் — (தொ. பெ) தாழ்த்தல், 2. தைலமுதலியன வடித்தல்.

இறக்குதல்—(தொ. பெ) கீழ்ப்படுத்தல், 2. தாழ்த்தல், 3. தைலமுதலியன வடித்தல்.

இறங்கமட்டான்— இறங்குமட்டான் — } ஓர் வகை நெல்.

இறங்கர்—குடம்.

இறங்கு—(வி) சரி, 2. தாழவிறங்கு, 3. அமிழ்.

இறங்குபொழுது—சாயங்காலம்.

இறடி—கருந்தினை.

இறப்பு—சாவு, 2. அழிகை, 3. செல்லுகை, 4. மிகுதி, 5. கடக்கை, 6. கெடுகை, 7. வீட்டிறப்பு.

இறலி-இத்திமரம், 2. சந்ததிவிஞெண்று.

இறல்—கிளிஞ்சில்.

இறவானம்—தாழ்வாரம்.

இறவு—இறால்.

இறவுளர்—குறிஞ்சி நிலமாக்கள்.

இறவை—ஏணி, 2. இறைகூடை, 3. விறற் புட்டில்.

இரு—இறால்.

இருஞ்சு -பட்சியறை.

இருட்டணம்—இராட்டினம்.

இருட்டுப்பிருட்டு—சச்சரவு.

இருத்தல்—ஓர் நிறையளவு, 2. மீனையத் துறை.

இருத்து—வருத்தமுறக் கட்டிய குண்டு.

இருல்—ஓர் மீன், 2. எருது, 3. இடபவிராசி, 4. கார்த்திகை நாள், 5. தேன் கூடு.

இறுகக்கட்டு—(வி) அழுந்தக்கட்டு.

இறுகங்கியான் — கரிசிலாங்கண்ணிச் செடி.

இறுகினகை—ஈயாத கை.

இறுக்கம் — அழுத்தம், 2. ஒடுக்கம், 3. கை யழுத்தம், 4. நெருக்கம்.

இறுக்கர்—பாலைநில மாக்கள்.

இறுக்கு—(வி) அழுந்தக்கட்டு, 2. உறையச்செய், 3. உடுத்து, 4. உறுத்து, 5. ஒடுக்கு.

இறுங்கு—காக்காச் சோளம்.

இறுதி—எல்லை, 2. சாவு, 3. முடிவு.

இறுத்தல் — (தொ. பெ) ஒடித்தல், 2. கடன் செலுத்தல், 3. சொல்லுதல், 4. வெட்டடல்.

இறுப்பு — குடியிறை, 2. கடன்செலுத்துகை.

இறும்பப்பு—மிகுமகிழ்ச்சி, 2. ஏமாப்பு, 3. சிலிர்ச்சி.

இறும்பல்—அதிசயம்.
இறும்பு—குறுங்காடு, 2. தூறு, 3. சிறு மலை, 4. மலை, 5. தாமரைப்பூ, 6. வண்டு, 7. காந்தட்பூண்டு.
இறும்பூது — அற்புதம், 2 சிறு தூறு, 3. மலை, 4. தாமரைப்பூ.
இறுவரை—முடிவு.
இறுவாய்—முடிவு.
இறை—பெருமை, 2. கடவுள், 3. அரசன், 4. உயர்ந்தோன், 5. மூத்தோன், 6. கடன், 7. விடை, 8. வீட்டிறப்பு, 9. இறகு, 10. உயர்ச்சி, 11 நீலை, 12. சிவன், 13. பிரமன், 14. மகாவிட்டுணு, 15. சிறுமை, 16. காலவிரைவு, 17. வருத்தம், 18. ஊழித்தீ, 19. நோய், 20. குடியிறை, 21 கையிறை, 22 இறைக்கட்டு.
இறைகூடை—நீரிறைக்குங் கூடை.
இறைக்கள்ளன்— } கையிறையில்வருமோர் புண்.
இறைப்பிளவை— }
இறைச்சி—மாமிசம்.
இறைஞ்சலர்— } சத்துருக்கள்
இறைஞ்சார்— }
இறைஞ்சு—(வி) குனி, 2. வணங்கு.
இறைபுரி—(வி) அரசாட்சிசெய்.
இறைமகள்—அரசன் மகள்.
இறைமரம்—இறைவைமரம், 2. ஏற்றமரம், 3. நீரிறைக்கு மரப்பத்தல்.
இறைமாட்சி—அரசியல்.
இறைமை-தலைமை,2.தெய்வத்தன்மை.
இறையவன்— } கடவுள்
இறையோன்— }
இறையனார் — சங்கச்சங்கப் புலவருளொருவர்.
இறைவன்—கடவுள், 2. சிவன், 3. பிரமன், 4. அரசன், 5. தலைவன், 6. தந்தை, 7. குரு, 8. மூத்தோன்.
இறைவன்வேம்பு—சிவனார் வேம்பு.
இறைவை—இறைகூடை, 2. ஏணி.
இற்புலி—பூனை.
இற்று—இத்தன்மைத்து, 2. சாரியை.
இற்றுப்போதல் —(தொ. பெ) அழுகிப்போதல், 2. முரிந்துபோதல்.
இற்றை—இன்று.

இனம் — சுற்றம், 2. குலம், 3. சம்பந்தம், 4. கூட்டம், 5. திரள், 6. அரசர்க் குறுதிச் சுற்றம்.
இனன்—சூரியன், 2. அரசன்.
இனும்—பயனேக்காத வீகை.
இனி—இப்பொழுது, 2. பின்பு.
இனித்தல்-(தொ. பெ) தித்தித்தல், 2.செவிக்கினிதாதல், 3. இனிய நட்பாதல்.
இனிப்பு—இனிமை.
இனிமை—இனிப்பு.
இன்கண்—இன்பம்.
இன்பம்— } அகமகிழ்ச்சி, 2 இனிமை, 3. நவரசத்திலொன்று.
இன்பு— }
இன்பூறல்—சாயவேர்.
இன்மை—இல்லாமை, 2. வறுமை.
இன்றி—இல்லாமல்.
இன்றியமையாமை—இல்லாமல் முடியாமை.
இன்று — இல்லை, 2. ஓரசைச்சொல், 3. இந்நாள்.
இன்ன—இத்தன்மையான, 2. உவமையுருபு.
இன்னம்— } இனிமேலும்.
இன்னும்— }
இன்னல்—தீமை, 2. துன்பம்.
இன்னா—வெறுப்பு, 2. தீமை, 3. துன்பம், 4. இகழ்ச்சி, 5. கீழ்மையான.
இன்னுங்கு—துன்பம்.
இன்னாது—தீது.
இன்னாமை—இனியவாகாமை, 2. துயரம், 3. தீமை.
இன்னார்—பகைவர்.
இன்னியம்—இன்பமான வாத்தியம்.
இன்னே — இத்தன்மையாய், 2. இப்பொழுது.
இன்னோசை—இனியவோசை.

## ஈ

ஈ—நான்கா முயிரெழுத்து, 2. ஈயெனும் பறவை, 3. தேனீ, 4. வண்டு, 5. முன்னிலை யசைச்சொல்.
ஈ — (வி) கொடு, 2. பகிர்ந்துகொடு, 3. அளி, 4. சொரி.
ஈகம்—சந்தனமரம்.

**ஈகை** — இண்டங்கொடி, 2. கொடை, 3. பொன், 4. மேகம்.
**ஈங்கம்**—சந்தனமரம்.
**ஈங்கிசை**— / **ஈங்கிஷை**— } இம்சை, 2. கொலை, 3. வருத்தம், 4. நிந்தை.
**ஈங்கு**—இவ்விடம், 2 இண்டங்கொடி.
**ஈங்கை**—இண்டங்கொடி.
**ஈசதேசாத்தி**—பெருமருந்து.
**ஈசத்துவம்**—அட்டசித்தியிலொன்று.
**ஈசல்**—சீழ்க்கை, 2 செட்டைக் கறையான்.
**ஈசனாள்**—திருவாதிரைநாள்
**ஈசன்**—கடவுள், 2. சிவன், 3. அரசன், 4. மூத்தோன், 5. குரு, 6. மகாவிட்டுணு, 7. பிரமன், 8. எப்பொருட்குமிறைவன், 9. கௌரிபாஷாணம்.
**ஈசன்மைந்தன்**—முருகன், 2. விநாயகன், 3. வீரபத்திரன்.
**ஈசன்றார்**—கொன்றைமாலை.
**ஈசானம்**— / **ஈசானியம்**— } வடகீழ்த்திசை, 2. சிவனைம்முகத்தொன்று.
**ஈசானன்**— / **ஈசானியன்**— } கடவுள், 2. சிவன், 3. வடகீழ்த்திசைப் பாலகன்.
**ஈசுரமூலி**—பெரு மருந்துக்கொடி.
**ஈசுரன்**— / **ஈசுவரன்**— / **ஈச்சுரன்**— / **ஈச்சுவரன்**— } கடவுள், 2. சிவன்
**ஈசெல்**—சிறகுள்ள கறையான்.
**ஈசை**— / **ஈடை**— } ஏர்க்கால்.
**ஈச்சுர**—ஓர் வருடம்.
**ஈச்சுரம்** — சிவதத்துவ மைந்திலொன்று, அஃது: ஞானங்குன்றிக் கிரியை யுயர்ந்தது.
**ஈஞ்சு**— / **ஈந்து**— } ஈச்சமரம்
**ஈஞ்சை**—கொலை, 2. நிந்தை.
**ஈஷணை**— / **ஈடணை**— } விருப்பம், 2. புத்திரன் மனைவி பொன் இவற்றின் விருப்புறுகை.
**ஈடிகை**— / **ஈஷிகை**— } தூரிகை

**ஈடு** — பிரதி, 2. ஒப்பு, 3 கைம்மாறு, 4. அடகு, 5. பெருமை, 6. தகுதி, 7. வலி, 8. நேராகுலை, 9. குழைவு.
**ஈடுகட்டு** — (வி) பிணைகொடு, 2. ஈடு செய்.
**ஈடுபாடு**—நயநஷ்டம், 2. ஒப்பு.
**ஈடேறுதல்**—(தொ. பெ) கடைத்தேறுதல், 2. வாழ்வடைதல்.
**ஈடேற்றம்**—பேரின்பவாழ்வு, 2. உய்வு, 3. கன்னிகை யீடேற்றம்.
**ஈட்டம்**—கூட்டம், 2. திரள், 3. தேட்டம்.
**ஈட்டி**—குந்தம்.
**ஈட்டு**—(வி) சம்பாதி, 2. கூட்டு.
**ஈண்டு** — இவ்விடம், 2. இந்தப்பிரகாரம், 3. சீக்கிரம், 4. புலித்தொடக்கிச்செடி.
**ஈண்டு**—(வி) கூடு, 2. நெருங்கு, 3. நிறை.
**ஈண்டை**—இவ்விடம்.
**ஈந்து**—ஈச்சமரம்.
**ஈப்புலி**—ஈயைக் கொல்லும் பூச்சி.
**ஈமம்**—சுடுகாடு, 2. விறகு.
**ஈம்**—சுடுகாடு.
**ஈயக்குழவி**—நீலபாஷாணம்.
**ஈயம்** — பஞ்சலோகத்தொன்று, 2. மிருதாரசிங்கி.
**ஈயல்**—ஈசல், 2. தம்பலப் பூச்சி.
**ஈயவரி**—பெருமருந்து.
**ஈயுவன்**—இராவணன்.
**ஈயை**—இஞ்சி
**ஈரங்கொல்லியர்**—வண்ணார்.
**ஈரப்பற்று** — ஈரக்கசிவு, 2. சம்பத்து, 3. நன்றி.
**ஈரம்**—நினைவு, 2. குளிர்ச்சி, 3. அன்பு, 4. நயவு, 5. அறிவு, 6. பகுதி, 7. பண்பு, 8. அழகு, 9. குங்குமம்.
**ஈரல்**—ஈருள்.
**ஈரவுள்ளி**—ஈரவெண்காயம்.
**ஈரற்கருகுதல்**—மிகவும் பயப்படுதல்.
**ஈரி**—கந்தை, 2. எழாங்காய் விளையாட்டிலொருறுப்பு, 3. பலாக்காய்த்தும்பு
**ஈரித்தல்**—(தொ. பெ) ஈரமாதல்.
**ஈரிப்பு**—குளிர்மை.
**ஈருள்ளி**—ஈரவெங்காயம்.

ஈர்—மயிரிற் பற்றுமீர், 2. முன்னிலைப் பன்மை விகுதி.
ஈர் — (வி) இழு, 2. அறு, 3. பிள, 4. உரி.
ஈர்க்கில்—அம்பினிறகு.
ஈர்க்கு — ஓலையீர்க்கு, 2. பற்குத்துங் குச்சு, 3. அம்பினிறகு.
ஈர்க்குச்சம்பா—ஒருவகை நெல்.
ஈர்ந்தமிழ்—தண்டமிழ்.
ஈர்வடம்—பனையீர்க்குக் கயிறு.
ஈழக்குலச்சான்றார் — சாணார், 2. ஏனாதி நாயனார்.
ஈழம் — பொன், 2. உலோகக்கட்டி, 3. சிங்களதேசம், 4. கள்.
ஈழை—காசநோய், 2 கோழை.
ஈளை—கோழை.
ஈறல்—துக்கம், 2. நெருக்கம்.
ஈறிலான்— } கடவுள்.
ஈறிலி— }
ஈறு—முடிவு, 2. மரணம், 3. பல்லீறு, 4. உப்பளம்.
ஈனம் — குறைபாடு, 2. அங்கவீனம், 3. இழிவு, 4. கேடு.
ஈனனம்—வெள்ளி.
ஈனுயம்—நிந்தை.
ஈனை—இலைநரம்பு, 2. சித்திரக்குறிப்பு, 3. ஓர் வியாதி.
ஈன்றவள்—தாய்.
ஈன்றவன்—பிதா.
ஈன்றாள்—தாய்.
ஈன்றான்—பிதா.

## உ

உ — ஒருயிரெழுத்து, 2. சுட்டெழுத்தொன்று, (உ — ம்.) உக்கொற்றன், 3. இரண்டென்னுமெண்ணின் குறி, 4. ஓர் வினையெச்ச விகுதி, 5. சிவன்.
உ ஃதி—ஒன்றன் படர்க்கைச் சுட்டுப் பெயர்.
உக — மகிழ, 2. மகிழ்வோடுகொள்ள, 3. விரும்ப, 4. திருப்தியடைய.
உகந்தது—பிரியமானது, 2. அங்கீகரிக்கும்படியான வஸ்து.
உகப்பிரளயம்—யுகமுடிவு.
உகப்பு—உயர்ச்சி.
உகம்—யுகம், 2. முடிவு, 3. இரண்டு.
உகம்—பூமி, 2. பாம்பு, 3. நாள்
உகரம்—ஐந்தாமுயிர்.
உகளம்—இரண்டு, 2. இஷ்டம்.
உகளி—(வி) குதி, 2. பாய்.
உகளு— } (வி) குதி, 2. பாய், 3. கட.
உகள்— }
உகா—உகாமரம்.
உகாதி—அநகர்.
உகிரம்—இலாமிச்சம்புல்.
உகிர்—நகம்.
உகுணம்—முகட்டுப்பூச்சி.
உகுதல்—(தொ பெ) உதிரல், 2. சிந்தல், 3. சொரியல், 4 கழலல்.
உகுத்தல் — (தொ. பெ) சிந்தல், 2. உதிர்த்தல், 3. விடுத்தல்.
உகைதல் (தொ. பெ) செல்லுதல்.
உகைத்தல்— (தொ. பெ) செலுத்தல், 2. அம்பு முதலியவற்றை விடல், 3. எழுப்பல்.
உக்கம் - ஆலவட்டம், 2. இடபம், 3. மருங்கு, 4. கோழி, 5. தீ, 6. பசு, 7. பந்து.
உக்கலை-மருங்கினபக்கம்.
உக்கல்—டக்கம்.
உக்களம் — இராக்காவல், 2. தலைக்காவல், 3. பாளயஞ்சூழ் கழி.
உக்கா— கஞ்சா முதலிய புகைகுடிக்குங் கருவி.
உக்காரம் — சத்திபண்ணுகை, 2. தொனுப்போடுதல்.
உக்காரி—பிட்டு.
உக்கிடர்—சிலந்திப்பூச்சி.
உக்கிரகந்தம்— } வெள்ளுள்ளி, 2. பெருங்காயம், 3. வசம்பு, 4. வேம்பு, 5. கரும்பு.
உக்கிரகந்தி— }
உக்கிரசர்மன்—ஒரு பாண்டியன்.
உக்கிரசேனன் — கஞ்சனுடைய பிதா.
உக்கிரமம்—மூர்க்கம்.
உக்கிரம் — கொடுமை, 2. கோபம், 3. மும்முரம், 4. மூர்க்கம், 5. தலைக்காவல்.

உக்கிராணம்—பண்டகசாலை.
உக்கிருஷ்டம் — } மேன்மை, 2. மிகுதி.
உக்கிருட்டம் — }
உக்கு—(வி) இற்றுப்போ, 2. பயப்படு.
உக்குளான்—சருகுமுயல்.
உங்கரித்தல் — (தொ. பெ) உங்காரஞ் செய்தல்.
உங்காரம் — உம்மெனவெகுள்கை, 2. அதட்டுகை, 3. வண்டினொலி.
உங்கை—உன்றங்கை.
உசரம்—உயரம்.
உசரு— } (வி) உயர்.
உசர்— }
உசற்காலம்—வைகறை.
உசனம்—உபபுராணம், 2. தருமநூல்.
உசனன்—சுக்கிரன்.
உசா— } சூரியன் மனைவி.
உசாதேவி— }
உசார்—விழிப்பு.
உசாவு—(வி) ஆராய், 2. எண், 3. யோசனைகேள்.
உசி—விருப்பம், 2. கூர்மை.
உசிதம்—தகுதி, 2. உத்தமம்.
உசிதன்—பாண்டியன்.
உசிரம் — செவ்வியம், 2. இடபம், 3. கிரணம்.
உசிரம்— } இலாமிச்சை வேர்.
உசீரம்— }
உசிலம்— }
உசிலை— } சீக்கிரிமரம்.
உசில்— }
உசு—உளு.
உசுப்பு—(வி) எழுப்பு.
உசும்பு—(வி) அசை.
உசுவாசம்—சுவாசமுள்ளே யிழுத்தல்.
உச்சட்டம்—இலக்கு, 2. நேர்.
உச்சந்தம்—தணிவு, 2. விலையுயர்ச்சி.
உச்சம் — உயர்ச்சி, 2. தலைக்கு நேரிடம், 3. வல்லிசை, 4. நுனி, 5. கிரகவுச்சம்.
உச்சயனி— } ஓர் நகரம்.
உச்சயினி— }
உச்சரி—(வி) உரை

உச்சரிப்பு— }
உச்சாரணம்— } உச்சரிக்கை, 2. மந்திரோச்சாரணை.
உச்சாரணை— }
உச்சலம்—மனம்.
உச்சவம்—உற்சவம்.
உச்சாகம்—உற்சாகம்.
உச்சாடனம் — அகற்றுகை, 2. பேய் முதலியவைகளை யேவுகை, 3. கலைஞானம் அறுபத்து நான்கினொன்று.
உச்சாணி—உச்சி.
உச்சாரம்—உயர்ச்சி.
உச்சி—உச்சந்தலை, 2. தலை, 3. தலைக்கு நேரிடம், 4. நடுப்பகல், 5. நுனி, 6. மயிர்முடி, 7. ஆண்மயிர், 8. நாய்.
உச்சிக்கிழான்—சூரியன்.
உச்சிக்கொம்பன் — உச்சியிற் கொம்புள்ளமாடு, 2. காண்டாமிருகம்.
உச்சிஷ்டம்— } எச்சில்.
உச்சிட்டம்— }
உச்சிதம்—அரியது, 2. நெருஞ்சில், (ஒரு முட்பூண்டு). 3. உசிதம், 4. கொடை.
உச்சிரதம்—பிரண்டைக்கொடி.
உச்சிரயம்—உயரம், 2. முக்கோணத் திணிறுதிட்டவரி.
உச்சினி— } ஓர் பட்டணம்.
உச்சினிமாகாளி— }
உச்சு — (வி) கழற்காய் முதலியவையெறி, 2. வெல், 3. பிறர் பொருளைக் கவர்.
உச்சைச்சிரவம் — இந்திரன் குதிரை.
உஞற்று — (வி) முயற்சிசெய், 2. வழக்கோது.
உஞ்சட்டை—மெலிவு.
உஞ்சல்—ஊஞ்சல்.
உஞ்சு—நாயைக் கூப்பிடு மொழிக்குறி.
உஞ்சை—அவந்திநகரம்.
உடக்கு—திருகாணிச் சுரையினுட்சுற்று.
உடங்கு—கூடிநிற்கை.
உடசம்—பன்னசாலை.
உடந்தை—கூட்டுறவு, 2. சேர்
உடப்பு—தொரட்டுமுள் மரம்.
உடம்படல்—(தொ. பெ) உடன்படல்.
உடம்படுமெய்—இரண்டுயிர்களை யொற்றுமைப்படுத்து மெய்யெழுத்து.

உடம்பிடி—வேலாயுதம்.
உடம்பு—உடல், 2. உயிர்க்கிருப்பிடம், 3. மெய்யெழுத்து.
உடம்பை—கலங்கனீர்.
உடலம்—உடம்பு.
உடலு— } (வி) கோபத்தோடு போர்
உடல்— } செய், 2 சினக்குறிப்புக் காட்டு.
உடல் – சரீரம், 2. மெய்யெழுத்து, 3. பொன்.
உடறல்—(தொ. பெ) உடலல், 2. சினத்தல்.
உடற்குறை—தலையற்ற உடல்.
உடற்றல்—(தொ. பெ) போர்செய்யல், 2. வருத்தல், 3. துரத்தல், 4. சிதறவடித்தல், 5 அழித்தல், 6. பிரயோகித்தல்.
உடனாளி—கூட்டாளி.
உடனிகழ்ச்சி—ஒருங்கு சம்பவித்தல்.
உடன்படிக்கை—சம்மதிப் பத்திரம்.
உடன்பிறப்பு—கூடப்பிறக்கை.
உடன்றல்—(தொ. பெ) பொருதல்.
உடு – ஆடு, 2. விண்மீன், 3. அம்பு, 4. அம்பினிறகு, 5. அம்புத்தலை, 6. ஓடக்கோல், 7. அகழி, 8. சீக்கிரிமரம்.
உடுக்கு—இடை சுருங்குபறை.
உடுக்கை – சீலை, 2. உடுத்தல், 3 ஓர் கட்பறை.
உடுபதி—மரமஞ்சள், 2. சந்திரன்.
உடுபம்—தெப்பம்.
உடுப்பை—சீக்கிரிமரம், 2. மத்துவாசாரியர் வசிக்குமிடம்.
உடும்பு—இரண்டுநாக்குள்ள ஓர்செந்து.
உடுவை—அகழி.
உடை-குடைவேல், 2. செல்வம், 3. சீலை.
உடைகுளம்—பூராடநாள்.
உடைமை – உரிமை, 2. உரியவை, 3. ஆபரணம், 4. செல்வம்.
உடையவன்—உரிமைக்காரன்.
உடையார்—ஒரு ஜாதியின் பட்டப்பேர்
உடையார்பாவளயம் – ஒரூர்.
உடைவு—கேடு, 2. தளர்வு.
உட்கட்டு—அந்தப்புரம், 2. மாதர் கழுத்திற்கட்டும் ஒரு மணிவடம்.
உட்கரணம்—அந்தக்கரணம்.
உட்கல் – (தொ. பெ) அச்சக்குறிப்புக் காட்டல், 2. நாணுதல்.
உட்காரல்—(தொ. பெ) உட்காருதல்.
உட்குதல் – (தொ. பெ) அஞ்சுதல், 2. நாணுதல், 3. மடிதல்.
உஷ்ணம்— } வெப்பம்.
உட்டணம்— }
உஷ்ணாதிக்கம்—அதிக வெப்பம்.
உட்படுத்தல் – (தொ. பெ) அகப்படுத்தல், 2. உள்ளாகச் செய்தல்.
உட்பொருள்—உட் கருத்து
உணக்கு—(வி) உலர்த்து, 2. வருத்து.
உணங்கு—(வி) வருந்து, 2. வாடு.
உணத்து—(வி) உலர்த்து.
உணர்—(வி) அறி, 2. பகுத்தறி, 3. நினை, 4. பரிசித்தறி, 5. கற்றறி, 6. ஊடறீர், 7. தெளி.
உணர்ச்சி—உணர்வு.
உணர்த்தல்—(தொ. பெ) ஊடறீர்த்தல், 2. துயிலெழுப்புதல், 3. அறிவித்தல்
உணர்ந்தோர்—அறிவுடையோர்.
உணர்வு – உணர்கை, 2. தெளிவு, 3. ஊடலுந் துயிலுநீங்கல், 4. கற்றுணர்கை, 5. புலன், 6. நீங்கல்.
உணவு—ஆகாரம்.
உணா—போசனம், 2. சோறு.
உணி—ஒரு செந்து.
உண்—(வி) அருந்து, 2. புசி, 3. அனுபவி, 4. விழுங்கு.
உண்கலம்— } போசன பாத்திரம்.
உண்கலன்— }
உண்டாகு—(வி) தோன்று, 2. கருவுண்டாகு, 3. முளை, 4. செல்வமுண்டாகு.
உண்டாக்கு – (வி) படை, 2. விளைவி, 3. உண்டுபண்ணு, 4. விருத்திக்கப்பண்ணு.
உண்டி—உணவு, 2. சோறு, 3. இரை, 4. பறவை விலங்கிவற்றினுணவு.
உண்டி— } உண்டியற் சீட்டு, 2.
உண்டிகை— } பொக்கசப் பெட்டி.
உண்டியல்—உண்டிச் சீட்டு, 2. பொக்கிஷம், 3. கோயிற்குக் கொடுக்கும் பணம்.

உண்டுகம்—பெருவாகை மரம்.
உண்டை — உருண்டை, 2. குளிகை, 3. சிற்றுண்டி, 4. உண்டைநூல், 5. படைவகுப்பு.
உண்ணு—உண்ணுக்கு.
உண்ணி—ஓர் செந்து, 2. பாலுண்ணி.
உண்மை — உள்ளது, 2. இயல்பு, 3. யதார்த்தம், 4. மெய், 5. சத்தியம், 6. ஊழ், 7. அறிவு.
உதகம் — நீர், 2. மழை, 3. மழைத்துளி, 4. பூமி.
உதகவன்—நெருப்பு.
உதகு—புன்கமரம்.
உதக்கு—வடக்கு.
உதடு — இதழ், 2. பானை முதலியவற்றின் விளிம்பு, 3. வெட்டுவாய்.
உதணம்—மொட்டம்பு.
உததி—கடல்.
உதபாரம்—முகில்.
உதபானம்—கிணறு.
உதப்பி — தெறிக்குமெச்சில், 2. ரால், 3. சீரணிக்காத இரை.
உதப்பு—(வி) கடிந்துகொள், 2. இக.
உதம்—நீர்.
உதம்பு — (வி) கடிந்துகொள், 2. பயமுறுத்து.
உதயகாலம்— } சூரியோதயம்.
உதயகாலை— }
உதயகிரி — சூரியன் உதிப்பதாகக் கருதப்படும் மலை.
உதயம்—கிரகத்தோற்றம், 2. உதிக்குங்காலம், 3. பிறப்பு, 4. உதயகிரி, 5. உதயவிராசி, 6. சீர்பேறு.
உதயன்—சூரியன்.
உதயாத்தமனம் — உதயமும், அஸ்தமனமும்.
உதரகோமதம்—பாலடைப்பூண்டு.
உதரபந்தனம்—அரைப்பட்டிகை.
உதரம் — வயிறு, 2. கருப்பம், 3. கீழ்வயிறு.
உதரவணி— } கண்டங்கத்தரிச்செடி.
உதரவாணி— }
உதராவி—மரமஞ்சள்.
உதவகன்—நெருப்பு.
உதவி—சகாயம், 2. ஈகை, 3. உபகாரம்.
உதவு — (வி) கொடு, 2. சகாயமாயிரு, 3. தகுதியாயிரு.
உதள் — ஆடு, 2. வெள்ளாட்டுக்கடா, 3. மேடவிராசி.
உதறு — (வி) உதறிப்போடு, 2. விதிர், 3. தள்ளிவிடு, 4 நீக்கு, 5. நடுங்கு.
உதறுகாலி — உதறுகாற்பசு, 2. உதறுகாற் பெண்.
உதாகரி—(வி) உதாரணங்காட்டி விளக்கு.
உதாசனம்— } நிந்தை.
உதாசினம்— }
உதாசனன் — அக்கினி, 2. அக்கினிதேவன், 3. கண்குத்திப் பாம்பு.
உதாசனி—(வி) இகழ்.
உதாத்தம்—எடுத்தலோசை, 2. ஓரலங்காரம்.
உதாரணம்—திருட்டாந்தம், 2. துணைக்காரணம், 3. எதிர் நியாயம்.
உதாரத்துவம்—கொடுக்குங்குணம்.
உதாரம் — கொடை, 2. தாராளம், 3 மேட்டிமை, 4. குறிப்பிற்றோன்றிய பொருள்.
உதாரன்— } கொடையாளி, 2. பேச்
உதாரி— } சுத்திரமுள்ளவன்.
உதாவணி—கண்டங்காலிச்செடி.
உதானம்— } தசவாயுவிலொன்று.
உதானன்— }
உதி—உலைத்துருத்தி, 2. ஒதியமரம்.
உதி—(வி) பிற, 2. உதயமாகு, 3. அவதரி, 4. காலந்தொடங்கு.
உதிட்டிரன்—தருமராசன்.
உதியம்பூர்—ஓரூர்.
உதியன்—சேரன், 2. பாண்டியன்.
உதிரம்—இரத்தம்.
உதிர்—முத்தக்காசு.
உதிர்—(வி) சொரி, 2. அசைக்கப்பட்டுதிர், 3. பிதிர், 4. சிந்து, 5. சா.
உதிர்வு—உதிர்கை, 2. உகுகை.
உது—உஃது.
உதும்பரம் — அத்திமரம், 2. செம்பு 3. வாயிற்படி, 4. எருக்கஞ்செடி.

உதை—(வி) தாக்கிமீள், 2. பிரயோகி, 3. காலாலுதை.
உதைசுவர்—முட்டுச்சுவர்.
உதைப்பு — உதைக்கை, 2. தாக்குகை, 3. பயம்.
உத்தண்டமணி— } பொன்மணியாலாய கழுத்தாபரணம்.
உத்தண்டால்— }
உத்தண்டம் — உக்கிரம், 2. வீரம், 3. மகத்துவம், 4. துணிவு, 5. வலிமை.
உத்தமசத்து—அவுடலபாஷாணம்.
உத்தமதாளி—வேலிப்பருத்தி.
உத்தமபரி-கொத்துமல்லிப்பூண்டு, 2. சிரேஷ்ட குதிரை.
உத்தமபலம்—முந்திரிகைப்பழம்.
உத்தமம்—நன்மை, 2. மேன்மை.
உத்தமன்—சற்குணன், 2. பெரியவன், 3. மூன்றுமனு.
உத்தமாங்கம்—தலை.
உத்தமி—நல்லவள், 2. பார்வதி.
உத்தமோத்தமம்—மிகு நன்மை.
உத்தரகோசமங்கை—ஒரு சிவஸ்தலம்.
உத்தரணி—பஞ்சபாத்திரக் கரண்டி.
உத்தரம் — எதிர்மொழி, 2 வடக்கு, 3. ஊழித்தீ, 4. உயர்ச்சி.
உத்தரவாதம்—பிரதிவாதம், 2 பிணை.
உத்தரவாதி—பிரதிவாதி.
உத்தரவு—விடுதலை, 2. கட்டளை, 3. விடை, 4. தேவோத்தரவு.
உத்தராசங்கம்—உத்தரீயம்.
உத்தராடம்—ஒரு நக்ஷத்திரம்.
உத்தராயணம்—சூரியன் வடதிசையாகச் சஞ்சரிக்கும் காலம்.
உத்தரி—குதிரை.
உத்தரி—(வி) ஈடுசெய், 2. சகி, 3. கடன் செலுத்து, 4. நியாயங்காட்டு, 5. உத்தரவாதஞ்செய், 6. அழுந்து.
உத்தரியம்— } ஏகாசம்.
உத்தரீயம்— }
உத்தளம்—உத்தூளிதம்.
உத்தாபம் — மிகுவெப்பம், 2. தவிப்பு, 3. முயற்சி.
உத்தாபலம்—இசங்கு, (ஓர் செடி).
உத்தாபனி—விசி நரம்பு.
உத்தாமணி—வேலிப்பருத்தி.
உத்தாரணம்—நிலை நிறுத்துகை.
உத்தாரம் — மறுமொழி, 2. உத்தரவு, 3. கட்டளை.
உத்தானபாதன்—ஓரிராசன்.
உத்தானம்—அடுப்பு, 2 உயிர்த்தெழுகை, 3. இசைப்பு, 4. ஊழித்தீ, 5. புடைப்பு.
உத்தானி—தசை நரம்பு.
உத்தி—இசைவு, 2. சந்திரவுத்தி, 3. அறிவு, 4. திருவுறுப்பு, 5. தேமல், 6. பாம்பின் படப்பொறி, 7. பேச்சு, 8. செல்வம், 9. அபின்.
உத்திட்டம்—குறிக்கப்பட்டது.
உத்தியம்— } யாகமிருபத்தொன்றிலொன்று.
உக்தியம்— }
உத்தியாபனம்—நோன்பு முடிக்கை.
உத்தியானம்— } பூந்தோட்டம்.
உத்தியானவனம்— }
உத்தியுத்தர்—சகள நிட்களர்.
உத்தியோகம்—உள்ளமிகுதி, 2. முயற்சி, 3. தொழில்.
உத்திரட்டாதி—ஓர் நட்சத்திரம்.
உத்திரம்—சூரியநாள், 2. விட்டம்.
உத்திராசாடம்— } ஒரு நட்சத்திரம்.
உத்திராடம்— }
உத்திராபன்னி—சணல், (ஒரு செடி).
உத்திரி—பருத்திச்செடி, 2. அருச்சனை.
உத்திரேகம்—ஆரம்பம், 2. மிகுதி.
உத்துங்கம்—உயர்ச்சி, 2. மேன்மை.
உத்துவாகனம்-இரண்டுதரம் உழுகை, 2. விவாகம்.
உத்துவாகிதமுகம்—அண்ணாந்து பார்க்கை.
உத்தூளனம்— } விபூதி குழையாது பூசுகை.
உத்தூளிதம்— }
உத்தேசம் — நோக்கம், 2. மதிப்பு, 3. போதப்பிரகார மூன்றிலொன்று.
உத்தேசி—(வி) தீர்மானி, 2. கருது.
உத்பிரேட்சை—தற்குறிப்பேற்றம்.
உந்தரம்—வழி.
உந்தி — கொப்பூழ், 2. நதி, 3. கடல், 4. நீர்ச்சுழி, 5. தேருருள், 6. மகளிர்

விளையாட்டிலொன்று, 7. நடு, 8. உயர்ச்சி, 9. யாழினுறுப்பு, 10. பரப்பு, 11. ஆன்கூடம்.
உந்து – பசுவை விளிக்கு மோசையொலி, 2. கச்சோலம்.
உந்து–(வி) தள்ளு, 2. அம்பு முதலிய செலுத்து, 3. செலுத்து, 4. எழும்பு.
உந்துரு–பெருச்சாளி.
உந்தை–உன்றந்தை.
உப–ஒருபசர்க்கம்.
உபகதை–கிளைக்கதை.
உபகந்தம்–வாசனை.
உபகரணம் – துணைக்கருவி, 2. எத்தினங்கள், 3. அரசசின்னம்.
உபகரி–(வி) உதவு, 2. உபகாரஞ்செய், 3. தயைசெய், 4. உபசாரஞ்செய்.
உபகாரம்–சகாயம், 2. உதவி, 3. ஆதரிப்பு, 4. ஈகை.
உபகிருதம் – } உதவுகை.
உபகிருதி– }
உபகுல்லம்–சுக்கு.
உபகேசி–பார்ப்பதி.
உபக்கிரமணிகை–முகவுரை.
உபசங்காரம் – அழிக்கை, 2. ஆட்சேபம், 3. விலக்குதல்.
உபசத்தி–ஐக்கம், 2. உதவி, 3. ஈகை.
உபசமனம்–அமைவு.
உபசரணை–உபசாரம்.
உபசருக்கம்– } வடமொழி முதனிலையடை.
உபசர்க்கம்– }
உபசாந்தம்– } அமைவு, 2. தயை, 3. விருப்பு வெறுப்பின்மை.
உபசாந்தி– }
உபசாபம்–வேறுபாடு, 2. துரோகம்.
உபசாரம்–மரியாதை, 2. வாழ்த்து, 3. வழிபாடு.
உபசுந்தன்– } ஓரிராக்கதன்.
உபசுரதன்– }
உபதாமநநாடி–சுவாசக்குழல் நாடி.
உபதானம்–தலையணை, 2. அஸ்திவாரம்.
உபதி–தேருருள், 2. அச்சம், 3. கை.
உபதேசம்–போதகம், 2. புத்தி, 3. சம்யாசார வுபதேசம், 4. மந்திரோபதேசம்.
உபதேசி–போதகன்.
உபநிதை–காணிக்கை.
உபத்தம்– } பெண்குறி.
உபஸ்தம்– }
உபத்தாயம்–உபாயம்.
உபத்திரவம்–வேதனை, 2. கொடுமை.
உபநயம்– } பூணூற் கலியாணம்.
உபநயனம்– }
உபநயனம்–மூக்குக் கண்ணாடி.
உபநளகம்–முன்காற் சிற்றெலும்பு.
உபநாகம்– } இரணத்திற் கிடுமருந்து
உபநாயம்– }
உபநாகனம்–அபிஷேகம்.
உபநிடதம்–வேதமுட்பம்.
உபநிட்கிரமணம் – பிறந்த நான்காமாதம் பிள்ளைக்குச் சந்திரனைக் காண்பிக்கை.
உபநியாசம் – சொல்லியவைகட்கு விடைகூற அவைகளை யுட்கொள்ளுகை.
உபபலம்–உதவித்துணை, 2. உதவி.
உபபாதகம்–மகாபாதகம்.
உபபுராணம்–பதினெண் புராணங்களிலிருந்தெடுத்துச் சொல்லப்பட்ட பதினெண் சார்ப்புப் புராணங்கள்.
உபமலம்–மனமாசு.
உபமானம்–உவமிக்கும் பொருள்.
உபமிதி–ஒப்பு.
உபமேயம்–உவமிக்கப்படும்பொருள்.
உபமை–உவமை.
உபயமம்–விவாகம்.
உபயம்–இரண்டு, 2. கோயிற்காணிக்கை, 3. உபகாரம்.
உபயவாதிகள் – இருதிறத்தாரையுஞ் சார்ந்து நிற்போர்.
உபயோகம்–பிரயோசனம், 2. உதவி.
உபரசம்–கடலுரை, 2. இழிந்த சுவை.
உபரசன்–தம்பி.
உபரதி – மூன்றுஞ் சாதன மாறிலொன்று, (வெறுத்துத்தள்ளுதல்).
உபராகம்–கிரகணம்.
உபராசன்–இளவரசன்.
உபரி–மேல், 2. அதிகம், 3. ஒருமீன்.
உபலம்–கல், 2. சிறுகல்.

உபலாளனம்—தாய்தாக்குகை.
உபலேபனம்—கோமயத்தால் மெழுகுகை.
உபலோத்திரம்—விளாம்பிசின்.
உபவம்—சீந்திற்கொடி.
உபவனம்—நந்தனவனம்.
உபவாசம் — உணவொழிக்கை, 2. ஓமபீடம்.
உபவீதம்—பூணூல்.
உபவேசனம் — உட்காருகை, 2. மலங்கழிக்கை.
உபாகமம்—சார்பாகமம்.
உபாகருமம் — வேதமோதற்குமுன்செய்யுஞ் சடங்கு.
உபாகிதை—விண்வீழுங்கொள்ளி.
உபாக்கியானம்—இதிகாசம்.
உபாங்கம் — மார்க்கத்துக்குரிய குறி, 2. சார்பான வுறுப்பு.
உபாசனம்—வில்வித்தை.
உபாசனை—ஆராதனை.
உபாசி—(வி) ஆராதி.
உபாதானம் — முதற்காரணம், 2. அரிசிப்பிச்சை, 3. அன்னதானம், 4. ஐம்புலனடக்குகை.
உபாதி—வாதை, 2. வியாதி, 3. வருத்தம்.
உபாதி—(வி) உபத்திரவஞ் செய்.
உபாத்தி—, உபாத்தியாயன்— ஆசிரியன், 2. புரோகிதன்.
உபாந்தியம்—கடைக்கண், 2. ஈற்றயல்.
உபாயம்—சூழ்ச்சி, 2. தந்திரம், 3. அரசர்க்குரிய உபாயம் அவை:—சாமம், பேதம், தானம், தண்டம், 4. சொற்பம்.
உபானம்—, உபானவரி— கோபுரத்தினடிச் சித்திரவரை.
உபுக்கு—(வி) பெருகு.
உபேட்சை — அலட்சியம்.
உபேந்திரன் — மகாவிட்டுணு.
உபோதம்—பேய்ப்பசளைக்கீரை.
உப்பக்கம்—முதுகு.
உப்பங்கழி—உப்புக்கழி.
உப்பசம்—சுவாசகாசம்.
உப்பட்டி—அரிக்கட்டு.
உப்பரவர்—குளமுதலிய வகழ்வோர்.
உப்பிலி—இண்டங்கொடி, 2. ஈர்கொல்லிக்கொடி.
உப்பு—லவணம், 2. உவர்ப்பு, 3. கடல், 4. இனிமை, 5. மகளிர் விளையாட்டு, 6. அராகம், 7. விளையாட்டு மணற்குவியல்.
உப்பு—(வி) வீங்கு, 2. பொங்கு.
உப்புக்கண்டம்—உப்புச்சேர்த்துக் காயவைத்த இறைச்சித்துண்டம்.
உப்புக்குத்தி—ஓர் பட்சி.
உப்புசம்—வயிற்றுவீக்கம்.
உப்புப்பூக்க—(வி) உப்புமலர, 2. சரீரந்திறுப்புப் படர.
உப்புவாணிகர்—உமணர்.
உப்பை — ஔவை சகோதரிகளிலொருத்தி.
உமணத்தி—உப்புவிற்றிடுமகள்.
உமணர்—உப்பமைப்போர்.
உமம்—இறங்குதுறை.
உமரி—, உமிரி— ஒரு பூடு, 2. நத்தை.
உமலகம்—அரிதாரம்.
உமலோத்திரம்—விளாம்பிசின்
உமல்—ஓலைப்பை.
உமற்கடம்—தருப்பைப்புல்.
உமாகடம்—சணற்கொத்து
உமாதசி—சணல்.
உமாபட்சி—ஓர்வகைப்பட்சி.
உமாபதி—சிவன்.
உமி—தானியங்களினுமி.
உமிக்கரப்பான்—குழந்தைகட்கு வருஞ்சிரங்கு.
உமிதல்—(தொ. பெ) துப்பல், 2. உறிஞ்சுதல், 3. கொப்பளித்தல்.
உமித்தல் — (தொ. பெ) பதராக்குதல், 2. அழித்தல்.
உமிழ்—(வி) கொப்பளி, 2. உமி, 3. சத்தியெடு, 4. சொரி.
உமிழ்வு—உமிழ்நீர், 2. துப்புகை.
உமை—பார்ப்பதி.
உமையவள்—, உமையாள்— பார்ப்பதி, 2. சவுக்காரம், 3. மயிலிறகு.
உம்—ஓரிடைச்சொல்.

உம்பரான் — காமதேனு, 2. உயர்ந்தோன்.
உம்பர்—மேல், 2. ஆகாயம், 3. உயர்ச்சி, 4. வானோர், 5. பார்ப்பார்.
உம்பல்—யானை, 2. விலங்கினாண், 3. ஆட்டுக்கடா, 4. ஆண் யானை, 5. எருது, 6. எருமைக்கடா, 7. எழுச்சி, 8. வலிமை, 9. கோத்திரம், 10. முறைமை.
உம்பளம் — இராசாவினாற் கிடைத்த வெகுமதி.
உம்பி—உன்றம்பி.
உம்பிளிக்கை—மானியம்.
உம்மாண்டி—வெருட்டுஞ்சொல்.
உம்மை — கழிபிறப்பு, 2. வருபிறப்பு, 3. ஓர் இடைச்சொல்.
உயக்கம்—வருத்தம்.
உயக்கு—(வி) வருத்து.
உயங்கு—(வி) வருந்து.
உயத்தி—வெள்ளைப்பாஷாணம்.
உயரம்—உயர்ச்சி, 2. உச்சம், 3. மிகுதி.
உயர்—குன்றிச்செடி.
உயர்—(வி) வளர், 2. மேலெழு, 3. இறுமாப்புறு, 4. மேன்மையுறு, 5. உன்னதப்படு.
உயர்த்து—(வி) உயரச்செய், 2. அதிகப்படுத்து, 3. மேலாக்கு, 4. கனப்படுத்து, 5. உபசரி, 6. எழுப்பு, 7. மேலெடு, 8. பெருமைப்படுத்து.
உயர்நிலம் — மேடு, 2. தேவலோகம், 3. உப்பரிகை.
உயர்நிலை—சுவர்க்கலோகம், 2. மேன்மாடம்.
உயர்ந்தோர்—சான்றோர், 2. உயர்குலத்தோர், 3. வானோர், 4. பார்ப்பார்.
உயர்பு—, உயர்வு— } உயர்ச்சி, 2. மேன்மை, 3. விர்த்தி.
உயல்—உயிர்வாழ்தல்.
உயவர்—வருந்தினர்.
உயவல்—, உயவு— } வருத்தம்.
உயவை—காக்கணங்கொடி, 2. மேகம்.
உயா—வருத்தம்.
உயிரோம்பல்—(வி) உயிர்காத்தல்.
உயிர்—சீவன், 2. காற்று, 3. உயிரெழுத்து, 4. ஓரறி வுயிர் முதலிய சீவராசி.
உயிர்தருமருந்து—மிருத சஞ்சீவினி.
உயிர்த்தானம்—உயிர்நிலை.
உயிர்த்துணை—ஆபத்திற் சகாயஞ்செய்பவன், 2. பிராணசிநேகன், 3. மனைவி, 4. கணவன், 5. கடவுள்.
உயிர்த்துணைவி - மனைவி, 2. உயிர்த்தோழி, 3. சரச்சுவதி.
உயிர்த்தெழுதல்—(தொ. பெ) மரித்தவனுயிர்பெற்றெழுதல்.
உயிர்த்தோழன்—பிராணசிநேகன்.
உயிர்நிலை—உடல், 2 உயிர்த்தானம்.
உயிர்ப்பழி — உயிர்க்கொலை, 2. பிரமகத்தி.
உயிர்ப்பு — (வி) மூச்செறி, 2. வீசு, 3. ஈனு.
உயிர்ப்பு — உயிர்க்கை, 2. சுவாசம், 3. காற்று, 4. சுகந்தம்.
உயில்—மரணசாஸனம்.
உயிறு—இலாமிச்சம்புல்.
உய்—(வி) சீவி, 2. உயிர்வாழ், 3. ஈடேறு, 4. தப்பு.
உய்தி—ஈடேற்றம்.
உய்த்தல்—(தொ. பெ) செலுத்துதல், 2. வாகனமூர்தல், 3. காரியத்தை முடித்தல், 4. நடத்தல், 5. அமிழ்த்தல், 6. சேர்த்தல், 7. அனுபவித்தல்.
உய்த்துணரல்—(வி) ஆராய்ந்தறிதல்.
உய்ப்பு—உய்க்கை.
உய்மணல்—கருமணல்.
உய்யக்கொண்டான்—எருமை முல்லை, 2. கொய்யாமரம்.
உய்யானம்—, உய்யானனம்— } பூந்தோட்டம், 2. சோலை, 3. சிங்காரவனம்.
உரகம்—, உரங்கமம்—, உரங்கம்— } பாம்பு.
உரகர்—நாகர், 2. சமணர்.
உரகாதிபன்—, உரகேந்திரன்— } ஆதிசேஷன்.
உரகாரி—கருடன்.
உரசு—(வி) உரிஞ்சு.

உரண்டம்—காக்கை.
உரந்தை—துன்பம்.
உரபடி— } உரப்பு.
உரபிடி— }
உரப்பு – (வி) அதட்டு, 2. துரத்து, 3. உரத்தொலி.
உரப்பு—அதட்டுகை, 2. வலி, 3. திண்மை.
உரம் – 2. ஊக்கம், 3. மார்பு, 4. ஞானம், 5. வேகம், 6. வயிரம், 7. திண்மை, 8. மதில்.
உரம்போடு–(வி) எருப்போடு, 2. உரப்பி.
உரல் – நென்முதலிய குற்றுமுரல், 2. இடியப்பவுரல்.
உரவு—வலி.
உரவுநீர்-உவர்நீர், 2. பலந்தசமுத்திரம்.
உரவோர்—அறிஞர், 2. மூத்தோர்.
உரறல்—பெருங்கோபங்கொள்ளல்.
உரற்று–(வி) ஒலி.
உரன்—வலி, 2. ஊக்கம், 3. அறிவு.
உராய்–(வி) உடலுரிஞ்சு, 2. உரிஞ்சு.
உராய்ஞ்சல்–(வி) உரைதல்.
உரி—அரைப்படி, 2. தோல், 3. கொத்துமல்லி, 4. உரிமை.
உரி–(வி) களை, 2. கழற்று.
உரிசை—சுவை.
உரிஞு–(வி) உராய், 2. தேய், 3. அரை.
உரித்து—உரியது, 2. கடமை, 3. பட்சம்.
உரிமை – உரியதன்மை, 2. சுதந்திரம், 3. இனம், 4. கடமை, 5. சிநேகம், 6. இஷ்டம், 7. மனைவி.
உரிமைக்கஞ்சி—சாகுந்தறுவாயில் வார்க்குங்கஞ்சி, 2. சாவீட்டிற் சுற்றத்தார்க்கு வார்க்குங் கஞ்சி.
உரிமைசெய் – கடமைசெய், 2. கருமாதிசெய்.
உரியர்— } உடையவர்கள், 2. சுதந்திரர், 3. சம்பந்தமுடையார், 4. அறிஞர்.
உரியார்— }
உரியோர்— }
உரிவை—தோல், 2. மரவுரி.
உரு – வடிவு, 2. அழகு, 3. உடல், 4. தோற்றம், 5. விக்கிரகம், 6. கப்பல், 7. உருப்படி, 8. செபத்திற்உரு, 9. சன்னதம், 10. பருமை, 11. நிறம், 12. அட்டை, 13. உள், 14. வியாதி, 15. கோபம், 16. வெப்பம், 17. கரு.
உரு—அதிகமான, 2. பெரிய, 3. நீண்ட, 4. விலையுயர்ந்த.
உருகம்—பிறப்பு.
உருகு – (வி) கரை, 2. இரங்கு, 3 மனங்கரை.
உருக்கம்—இரக்கம், 2 அன்பு, 3. உருகுகை.
உருக்கு – (வி) தீயிற்கரை, 2. வாட்டு, 3. வருத்து.
உருக்கு—எஃகு.
உருக்குமணி—ஸ்ரீ கிருஷ்ணன்தேவி.
உருக்குமம்—பொன்.
உருசி—சுவை, 2. சந்தவின்பம், 3. இன்பம், 4. மிகுசுவை.
உருசி–(வி) அனுபவி, 2. சுவைபார்.
உருசிகரம் – மதுரம், 2. இனிப்புள்ளவை.
உருசிகாட்டு – (வி) இனிப்புக்காட்டு, 2 ஆசைபதங்காட்டு.
உருசிதட்டு–(வி) சுவைதோன்று.
உருசு—திருஷ்டாந்தம்.
உருசுப்படுத்து–(வி) மெய்ப்பி.
உருசை—உருசி.
உருட்சி—திரட்சி.
உருட்டு – புரட்டு, 2. திரட்சி, 3. வெருட்டு.
உருண்டை—உண்டை, 2. திரட்சி.
உருத்தல்—(தொ. பெ) கோபித்தல், 2. சினக்குறிப்புக் காட்டுதல், 3. மிகுதி, 4. முளைத்தல், 5. வெளிப்படுதல், 6. தோற்றுதல், 7. கன்மம் விளைதல்.
உருத்திதம் – உரியபொருள், 2. தொழிலாபம், 3. வட்டி, 4. வளர்தல்.
உருத்திரகணிகை—தேவதாசி.
உருத்திரம் – பெருங்கோபம், 2. நவரசத்திலொன்று, 3. மஞ்சள்.
உருத்திரசடை – சிவதுளசிப்பூண்டு.
உருத்திரபஞ்சமம்—ஓர் பண்.
உருத்திரபூமி—மயானம்.
உருத்திரரோகம்—மாரடைப்பு.
உருத்திரன்—சிவன்.

உருத்திராக்கம் — } உருத்திராட்ச
உருத்திராட்சம் — } மணி.
உருத்திரோற்காரி—ஒரு வருஷம்.
உருநாட்டு—சித்திரம், 2. விக்கிரகம்.
உருபு — வடிவம், 2. வேற்றுமையுரு முதலிய இடைச்சொல்.
உருப்பசி — தேவதாசிகளிலொருத்தி.
உருப்பம்—உஷ்ணம், 2. மிகுதி, 3. கோபம்.
உருப்பிரமம்—ஆட்டுக்கொம்பு.
உருமம்—உஷ்ணம், 2. மத்தியானம்.
உருமவேளை — மத்தியானம்.
உருமலவாரி—உலோகமணல்.
உருமிவளா—யமன் மனைவி.
உருமு —
உருமேறு— } இடி.
உருமு—
உரும்— } இடி, 2. அச்சம்.
உரும்பரம் — செம்பு, 2. பெருங்காயம், 3. சர்ப்பம்.
உருவகம்— } உவமான உவமேயங்
உருவகவணி— } களை யொற்றுமைப் படக் கூறுகை.
உருவகி—(வி) உருவகப்படுத்து.
உருவங்காட்டி—கண்ணாடி.
உருவசி—உருப்பசி.
உருவம்—வடிவம், 2. அழகு, 3. சொரூபம், 4. உடல், 5. நிறம்.
உருவல்—ஓர் காதணி.
உருவாணி—மெலிந்தவுடல்.
உருவாரம்—வெள்ளரி.
உருவி-நாயுருவிச்செடி, 2. புல்லுருவி (ஒரு பூடு), 3. முள்ளி (ஒரு செடி.)
உருவு—அச்சம், 2. வடிவம்.
உருவு—(வி) வாள் முதலியவற்றை யுருவு, 2. தழை முதலியவுருவு, 3. சுருக்கு முதலியவற்றிற்கு உருவு, 4. கயிற்றை யுருவு, 5. வடுருவு.
உருவுதடம்—சுருக்குக்கயிறு.
உருவுடம்பு—தூலசரீரம்.
உருவுளூ—சொள்ளுப்பூண்டு.
உருவெடு—(வி) வடிவெடு.
உருளி — யாக்கையின் மூட்டு, 2. தேருருளை, 3. உரோகிணிநாள். 4. வட்டம்.

உருளு— } (வி) புரள், 2. திரள், 3. அழி.
உருள் — }
உருவளை — உருண்டை, 2. தேருருள், 3. வெள்ளைப்பாஷாணம்.
உருவளை— } தேருருள், 2. உரோகணி,
உருள்— } 3. பண்டி, 4. வட்டம்.
உரூடம்—இடுகுறி, 2. பிரசித்தம்.
உரூடி—இடுகுறி, 2. பிரசித்தமானது.
உரூபகம் — உரூபகதாளம், 2. உரூபகவகை
உரூபகாரம்—திருஷ்டாந்தம்.
உரூபதன்மாத்திரை — பஞ்சதன் மாத்திரையி லொன்று.
உரூபம்—வடிவம், 2. விக்கிரகம், 3. அழகு, 4. நிறம், 5. நிலை, 6. சாயை.
உரூபாய்—வெள்ளி நாணயம்.
உரூபி—(வி) மெய்ப்பி.
உரூபிகரம்—உரூபிகரிக்கை.
உரூப்பியம் — அழகுள்ளது, 2. வெள்ளி, 3. வெள்ளிநகை, 4. பொன்னகை.
உரை — பேச்சு, 2. மொழி, 3 வியாக்கியானம், 4. பொன், 5. சொற்பயன், 6. ஒலி, 7. உயர்ச்சி, 8. வேதமொழி, 9. விடை, 10. துணிவு, 11. ஆசிரியவசனம்.
உரை—(வி) தேய், 2. மாற்றறியவுரை, 3. பேசு, 4. ஒலி.
உரைசு—
உரைஞ்சு— } (வி) தேய், 2. உரை.
உரைப்பு — தேய்ப்பு, 2. உரைக்கை, 3. சொல்லுகை.
உரொக்கம்—கையிருப்புப் பணம்.
உரொட்டி—உறட்டி.
உரோககம்—சிவனடிபாதம்.
உரோகணி — உரோகணிநாள், 2. பலதேவன் தாய்.
உரோகதி—நாய்.
உரோகம் — வியாதி, 2. பூவரும்பு, 3. ஏறுகை.
உரோகிணி — உரோகணிநாள், 2. பலராமன்தாய், 3. கடுகுரோகணி, 4. பீதரோகணி, 5. கடுக்காய், 6. ஒன்பானாண்டுப் பெண்.

உரோங்கல்—உலக்கை.
உரோசம்—மானம்.
உரோசல்—(தொ. பெ) உரைஞ்சல்.
உரோசனி—கடுகு.
உரோசனை—கோரோசனை, 2. செந்தாமரை, 3. கடுகு.
உரோசி—(வி) நாணு, 2. சுவரணைகொள்.
உரோணி—உரோகணி நாள்.
உரோதனம்—அழுகை.
உரோமசன்—உரோமரிஷி.
உரோமம்—மயிர்ப்பரப்பு.
உரோமாஞ்சலி—, உரோமாஞ்சிதம்—குதுகலிப்பு.
உல்கசயன்—புத்தன்
உலகநடை —, உலகவழக்கம் —, உலகவழக்கு —உலகொழுக்கம், 2. உலகாசாரம்.
உலகநாதன்—கடவுள், 2. பிரமன்.
உலகநீதி — நன்னெறி, 2. உலகநடை, 3. இயல்பான நீதி, 4. தேசவியற்கை நீதி, 5. ஓர் நூல்.
உலகநேத்திரன்—சூரியன்.
உலகமாதா—சரச்சுவதி, 2. இலக்குமி, 3. பார்வதி.
உலகமுண்டோன்—ஸ்ரீ மகாவிஷ்ணு.
உலகம்—, உலகு—உலோகம், 2. பூமி, 3. நாடு, 4. திசை, 5. உலகத்தார், 6. ஆகாயம், 7. சான்றோர், 8 சிருட்டிப் பொருள்கள், 9. உலோகானுபவம், 10. உலகத்தன்மை, 11. மங்கலச் சொற்களினொன்று.
உலகாயிதம்-அறுசமயங்களிலொன்று.
உலகியல்—உலகநடை.
உலகுலம்—திப்பிலி.
உலக்கை-உரோங்கல், 2. திருவோணம்.
உலக்கைப்பாட்டு—வள்ளைப்பாட்டு.
உலங்கு—கொசுகு.
உலண்டு — பட்டுநூலையுண்டாக்குங் கோற்புழு.
உலத்தல்—(தொ. பெ) அழிதல், 2. சாதல்.
உலப்பு—கேடு, 2. முடிவு.
உலமகு—(வி) அஞ்சு, 2. துன்புறு.
உலம்—திரண்டகல், 2. கற்றிரள்.
உலம்பல்—(தொ. பெ) ஒலித்தல்.
உலரு—, உலர்—காய், 2. வாடு.
உலவம்—உலோபம்.
உலவாக்கிழி—எடுக்க வெடுக்கப் பொருள் குறையாக் கிழிக்கட்டு.
உலவு—(வி) உலாவு, 2. சுகிக்குறை.
உலவை — காற்று, 2. மரக்கொம்பு, 3. தழை, 4. முல்லை நிலக்கான்யாறு, 5. விறகு, 6. ஊர், 7. விலங்கின் கொம்பு, 8. குடி, 9. வள்ளிக்கொடி, 10. குலம், 11. மரப்பொந்து, 12. ஓடைமரம், 13. கிலுகிலுப்பைச்செடி
உலா—சாரிவருதல், 2. நேரிசைக் கலிவெண்பாலாய ஓர் பிரபந்தம்.
உலிற்கள்—வெண்கலம்
உலு—பதர்.
உலுக்கு—(வி) அசை, 2. குலுக்கு.
உலுத்தம்—உலோபம்.
உலுத்தன்—உலோபி, 2. வாங்கின கடனைக் கொடாதவன்.
உலுத்து—(வி) உதிர்.
உலுப்பை — கோயில் முதலியவற்றிற் கனுப்புங்காணிக்கை, 2. பெரியவர்க்களிக்கு மூண்பண்டம், 3. அடைந்தோர்க்களிக்கு மூண்பண்டம்.
உலுவா—, உலுவாவரிசி—வெந்தயம்.
உலூகம்—ஆந்தை, 2. ஒருவகைப் பரி.
உலூகலம்—உரல், 2. குங்குலியம்.
உலூதை—சிலந்திப்பூச்சி.
உலை—கொல்லனுலை, 2. நெருப்புள்ளவடுப்பு, 3. பாகஞ்செய்யவைக்கு நீருலை.
உலைக்களம்—கொல்லனுலையிடம்.
உலைசல்—(தொ. பெ) கெடுதல்.
உலைச்சல்—அலைவு.
உலைதல் — (தொ. பெ) அலைதல், 2. அழிதல், 3. சீரழிதல், 4. நிலைகுலைதல், 5. பலங்குறைதல், 6. மனங்கலங்கல்.
உலைத்தல்—(தொ. பெ) அலைத்தல், 2. கலைத்தல், 3. கெடுத்தல், 4. சீரழித்

தல், 5. முறியடித்தல், 6. மனதைக் கலக்கல், 7. ஆஸ்தியைக் கெடுத்தல்.
உலையிற்பிணந்தின்னி—மாமிசபேதி.
உலைவு—அச்சம், 2. அழிவு, 3. கெடுதி, 4. நடுக்கம், 5. நிலையின்மை, 6. தரித்திரம்.
உலோங்கு—(வி) கீழ்மைப்பட்டிரு.
உலோடலோடெனல்— உலோட லோடென்று கூப்பிடல்— ஓர் வகை யொலிக் குறிப்பு.
உலோடுக்கு—வெறுமை, 2. ஒலிக்குறிப்பு.
உலோட்டி—வெறிதரும் வஸ்து, 2. கள்ளுக்குடுவை.
உலோகம் – உலகம், 2. உலகத்துக் கடுத்த தன்மை, 5. பஞ்சலோகம்.
உலோகாயதம்—உலகாயத மதம்.
உலோகார்த்தம் – இலௌகீக நயம், 2. உலகத்தாருக்கு வருநயம்
உலோகிதம்—சிவப்பு.
உலோசனம்—கண்.
உலோசி—பேய்ப்பசளைப்பூண்டு.
உலோசிதம்—சந்தனமரம்.
உலோபம் – ஈயாமை, 2. பொருளாசை, 3. கெடுதல் விகாரம், 4. குறைவு.
உலோமம்—வால், 2. வானுணி.
உலோலம் – அசைவு, 2. ஆசைப்பெருக்கம்.
உலோலிதம்—அசைவு.
உல்— உல்லு— தேங்கா யுரிக்குங் கருவி, 2. கழு.
உல்கு—ஆயம்.
உல்லங்கனம்— உல்லிங்கனம்— கடக்கை, 2. அவமதிப்பு, 3. நிந்தை.
உல்லம்— ஓர் மீன்.
உல்லரி—தளிர்.
உல்லாசம்—மகிழ்ச்சி, 2. சரசக்களிப்பு, 3, உள்ளக்களிப்பு, 4. இறுமாப்பு, 5. அத்தவாளம்.
உல்லாபம் – மழலைமொழி, 2. நலிக்க மொழி.
உல்லியர்—கூபநூலோர்.
உல்லேகம்—உச்சரிப்பு, 2. ஓரலங்காரம்.
உல்லோசம்—மேற்கட்டி.
உல்லோலம்—கடற்பெருந்திரை.
உவ—(வி) விரும்பு, 2. மகிழ், 3. இன்பமாயிரு.
உவகுலம்—திரிபலை
உவகை—களிப்பு, 2. பிரியம்.
உவக்காண்—அப்பொழுது, 2. அவ்விடம்.
உவச்சர்—சோனகர், 2. ஓச்சர்.
உவட்டி—(வி) அருவரு, 2. குமட்டு.
உவட்டிற்கூர்மை—மாமிசபேதி.
உவட்டு – (வி) வெறு, 2. பிரவாகி, 3. பெருக்கெடு.
உவணகேதனன்—ஸ்ரீ மகாவிஷ்ணு
உவணம்—உயரம், 2. கருடன், 3. கழுகு, 4. பருந்து
உவணி—வாள்.
உவணை—சுவர்க்கம், 2. உவ்விடம்.
உவண்—உவ்விடம்.
உவதி—தருணி.
உவதை—மலையின் வீழருவி
உவப்பு—மகிழ்ச்சி, 2. உயரம், 3. பொலிவு, 4 பிரியம், 5. விளையாட்டு
உவமம்-ஒன்றோடொன்றை யொப்புறுத்தல்.
உவமாநிலம்—சுவர்.
உவமானம்—உவமிக்கும் பொருள்.
உவமிப்பு—ஒப்பிடுகை.
உவமேயம்—உவமிக்கப்படும் பொருள்.
உவமை—உவமாலங்காரம்.
உவராகம்—கிரகணகாலம்.
உவரி—கடல், 2 சிறுநீர்.
உவர்—உவர்ப்பு, 2. கடல், 3. உப்பு.
உவர் – (வி) உப்புக்கரி, 2. துவர், 3. அரோசி.
உவர்ச்சங்கம்—முட்சங்குப்பூண்டு.
உவளகம் – அந்தப்புரம், 2. மதில், 3. ஓர் பக்கம், 4. பள்ளம், 5. குளம், 6. உப்புளம், 7. இடைச்சேரி, 8. இரண்டு.
உவளம்—சோறுதவியபாலைக்கவளம்.
உவளி—(வி) அந்திருசெய்.

உவளு—(வி) துவளு.
உவூறையம்—துவைத்துக் கட்டுமருந்து.
உவனி—வாள்.
உவனிப்பு—ஈரிப்பு.
உவன்—ஒரு சுட்டுச்சொல்.
உவா—நிறைவு, 2. பூரணை, 3. கடல், 4. யானை, 5. அமாவாசை.
உவாதி—உபாதி.
உவாத்தி— உவாத்தியாயன்— } வேத மோதுவிப்போன், 2. உபாத்தியாயன்.
உவாந்தம்—அமாவாசை, 2. பூரணை.
உவாந்தி—சத்தி.
உவாய்—ஓர் மரம்.
உவாலம்பம்— உவாலம்பனம்— } தூஷணை.
உவிதல்—(வி) சாதல், 2. நீர்வற்றி பவிதல்.
உவை— உவ்— } அஃறிணைப் பன்மைப் படர்க்கைச் சுட்டுப்பெயர்.
உவ்வி—தலை.
உவ்விடம்-அவ்விடத்துக்கும் இவ்விடத்துக்கும் இடையிலுள்ளது.
உவ்வு—தவம்.
உழ—(வி) பழக, 2. முயல, 3. வேலை செய்ய, 4. தொழில் நடத்த, 5. உத்தியோகஞ்செய்ய, 6. வருந்த, 7 தவத்தினுட்பட.
உழக்கு—காற்படி.
உழக்கு—(வி) சிலம்பம் பழகு, 2. மிதி, 3. கலக்கு.
உழச்சியர்—மருதநிலப் பெண்கள்.
உழப்பன்—கள்ளநியாயம் பேசுகிறவன்.
உழப்பு—(வி) குழம்பு.
உழப்பு—பழக்கம், 2. முயற்சி, 3. கைத்தொழில், 4. உயிர் முயற்சி, 5. வருத்தம், 6. வலி.
உழமண்—அழுக்கெடுக்கும் மண்.
உழம்பு—(வி) ஒலி, 2. குழம்பு.
உழலு— உழல்— } சுழல், 2. ஆடு, 3. சுற்றித்திரி, 4. அசை, 5. மனஞ்சுழல், 6. பிறவியிற் சுழல்.
உழலை—தாகம், 2. உழலைமரம்.
உழலைமரம்—தொண்டிக்கட்டை.
உழவன்—உழுபவன், 2. வீரன்.
உழவாரப்படை— உழவாரம்— } புற்செருக்கி.
உழவுசால்—உழவிடும் வளையம்.
உழற்சி—சுழற்சி, 2. சுற்றித்திரிகை, 3 ஆடுகை, 4. மனச்சுழற்சி, 5. வருத்தம்.
உழற்றல்—வெப்பம்.
உழற்று — (வி) சுழற்று, 2. கைகாலுழற்று, 3. காலத்தை வருத்தத்தோடு கழி, 4. வருந்திப்புரள்.
உழி—இடம், 2. பக்கம், 3. ஏழனுருபு.
உழிஞை—சிறுபூளை, 2. அஷ்டவெற்றிமாலையிலொன்று.
உழிதரல்—திரிதல், 2. சுழலல்.
உழு— உழுவான்— } பிள்ளைப்பூச்சி.
உழு—(வி) ஏருழு, 2. நிலத்தைக்கிளை.
உழுந்து—உளுந்து.
உழுபடை—கலப்பை.
உழுவம்—எறும்பு.
உழுவல் — முறைமை, 2. விடாது தொடர்ந்த வன்பு, 3. குணம்.
உழுவை—புலி.
உழை—சிரத்தாற் பிறக்குமிசை, 2. யாழினோர் நரம்பு, 3. மான், 4. இடம், 5. ஏழனுருபு.
உழை—(வி) வருந்தியீட்டு, 2. வேலையிற் பிரயாசப்படு, 3. இரை, 4. துன்பமுறு.
உழைப்பறிக்க—(வி) சேற்றிற்புரள, 2. போராட்டப்பட.
உழைப்பாளி—பிரயாசப்படுபவன்.
உழைப்பு—பிரயாசம், 2. வருந்தியீட்டுகை, 3. முயற்சி.
உளகு—யாழினோருறுப்பு.
உளப்படுதல்—(தொ. பெ) சம்மதித்தல், 2. உட்படுதல்.
உளப்பாடு—உட்படுகை.
உளம்—மனம், 2. எண்ணம், 3. கருத்து.
உளரு— உளர்— } சிறகுகோது, 2. சிறகுதறு, 3. யாழினரம்பு தடவு, 4. சுழல், 5. அசை, 6. காற்றுளர்.
உளர்—எது.
உளர்ச்சி—சுழற்சி

உளர்வு—சுழற்சி, 2. உளர்கை.
உளவு—உட்காரியம், 2. இரகசிய சமாசாரம், 3. வேவு, 4. ஒற்றன்.
உளறு—(வி) குழறு, 2. பயத்தினாற் றடுமாறிப்பேசு, 3. வீணையுளறு, 4. கனைக்கண்டு பிதற்று.
உளறுபடி—குழறுகை, 2. கலக்கம்.
உளி—மரவினையாளர் கருவியினொன்று, 2 நகஞ்சீவி, 3. இடம், 4. ஏழனுருபு, 5. சித்திரிக்குங்கருவி.
உளியம்—கரடி.
உளு—ஓர் புழு.
உளுக்காரு—(வி) இரு, 2. பொறுத்துப்போ.
உளுக்கு—(வி) சுளுக்கு, 2. உலோகபாத்திரங்களுக்கு மெருகிடு.
உளுந்து—உழுந்து, (ஒரு தானியம்.)
உளுவை—ஓர் மீன்.
உளை—குதிரை முதலியவற்றின் கழுத்துமயிர், 2. ஆண் மயிர், 3. ஒலி, 4. பேசலாலெழுமொலி, 5. சேறு, 6. புறமயிர்.
உளைதல் — (தொ. பெ) வருந்தல், 2. வயிறுளைதல், 3. பல்லுவலித்தல், 4. மனம்நோதல், 5. பிரசவவேதனைப்படுதல்.
உளைத்தல் — (தொ. பெ) அழைத்தல், 2. ஒலித்தல், 3. வருந்தல்.
உளைப்பு — அழைப்பு, 2. ஒலிப்பு, 3. வருத்தம்.
உளைவு—வலிப்பு, 2. குடைவு.
உள் — உள்ளிடம், 2. உள்ளம், 3. இடம், 4. ஏழனுருபு.
உள்கல்— } (தொ. பெ) நினைத்தல்.
உள்குதல்— }
உள்வாரம்—மனவிருப்பம்.
உள்விழுதல்—(தொ. பெ) குறைதல், 2. உள்ளாதல்.
உள்ளக்கருத்து—தாற்பரியம், 2. மனத்திலுள்ளம்.
உள்ளங்கை—அகங்கை.
உள்ளடங்கு—(வி) உட்பட்டிரு.
உள்ளடி—உள்ளங்கால், 2. இரகசியம், 3. சமீபம், 4. நெருங்கிய சுற்றம்.
உள்ளபடி—யதார்த்தம்.
உள்ளமிகுதி—ஊக்கம்.
உள்ளமுடையான் — ஒரு சோதிடநூல்.
உள்ளம் — மனம், 2. கருத்து, 3. முயற்சி, 4. வாக்கியத்தின் கருத்து.
உள்ளல் — உள்ளான்குருவி, 2. நினைத்தல்.
உள்ளவன் — பொருளுடையவன்.
உள்ளாகுதல் — ஆளாகுதல், 2. உட்படுதல்.
உள்ளி—வெள்ளைப்பூண்டு, 2. வெங்காயம்.
உள்ளிப்பல்—பூண்டின் திரி.
உள்ளியர்—அறிவுடையோர்.
உள்ளுடைவு—மனத்துயர்.
உள்ளுதல்—(தொ. பெ) நினைத்தல்
உள்ளுறை—உள்ளெண்ணம்; 2. மறைபொருள்.
உறக்க — (வி) பிழிய, 2. கறக்க, 3. முற்றுங்கவர, 4. கிள்ளியெடுக்க, 5. பிதுக்க.
உறக்கம்—நித்திரை, 2. ஒடுக்கம், 3 மரணம்.
உறக்கு—(வி) துயிற்று, 2. நாசப்படுத்து.
உறக்கு—நித்திரை.
உறங்கு—(வி) நித்திரைசெய், 2. ஒடுங்கு, 3. சோர்.
உறட்டு—(வி) வறட்டு.
உறட்டை—வறட்சி, 2. துர்க்கந்தம்.
உறண்டு—(வி) வறள்.
உறண்டு—முரட்டுக்குணம்.
உறண்டை—முரட்டுத்தனம், 2. தொந்தரவுசெய்கை, 3. துர்க்கந்தம்.
உறந்தை—உறையூர்.
உறல்—உறுதல், 2. பொருந்தல்.
உறவாதல்—சிநேகமாதல்.
உறவி—ஊற்று, 2. கிணறு, 3. எறும்பு, 4. சுற்றம், 5. உயிர், 6. உலைக்களம், 7. ஓர் புழு.
உறவு — பொருத்தம், 2. சேர்கை, 3. சம்பந்தம், 4. சுற்றம், 5. நட்பு, 6. ஒற்றுமை, 7 [illegible]

உறவுமுறையார்—சுற்றத்தார்.
உறவோர்—சுற்றத்தார், 2. நண்பர்.
உறழ்—(வி) பெருக்கு, 2. பகை கொள், 3. விகற்பமாகு, 4. எதிராகு, 5. இகல், 6. உவமையாகு.
உறழ்ச்சி—உறழ்வு, 2. பெருக்கல்
உறழ்வு—ஒப்பு, 2. சமம், 3. விகற்பம், 4. எதிர், 5. போர், 6. பகை, 7. எண் பெருக்குகை, 8. உணர்வு.
உறி—தூக்கு.
உறிஞ்சல்— } (வி) வாய்க்குள்ளிழு,
உறிஞ்சுதல்— } 2. ஆக்கிராணி, 3. உள்ளேயிழு.
உறியடி— ஓர் திருவிழா
உறு—மிகுதியான
உறுகண் — துன்பம், 2. தரித்திரம், 3. நோய், 4. அச்சம்.
உறுக்கல் — (தொ. பெ) கடிந்துகொள்ளல், 2. பயமுறுத்தல், 3. குரூரமாய்ப்பேசல், 4. கடத்தல், 5. குதித்தல்.
உறுக்காட்டம்— } உறுக்குதல்.
உறுக்காட்டியம்— }
உறுண்டுகம்—அவுபலபாஷாணம்.
உறுதல் — (தொ. பெ) உண்டாதல், 2. கூடல், 3. சம்பவித்தல், 4. சேர்தல், 5. பயனுறல், 6. கிடைத்தல், 7. வருதல், 8. பொருந்தல், 9. தங்கல்.
உறுதி—திரம், 2. வலிமை, 3. நன்மை, 4. சன்மார்க்க வுபதேசம், 5. நிச்சயம், 6. திடப்படுத்துகை, 7. தளராமை, 8. ஆட்சிப்பத்திரம், 9. கல்வி, 10. வழக்கின்திடம், 11. பிடிவாதம்.
உறுதிச்சொல்—நிச்சயமொழி, 2. நல்லுபதேசம், 3. கண்டிப்பு.
உறுதிப்படுத்து—(வி) பலப்படுத்து, 2. உடன்படிக்கை செய்.
உறுதிப்பாடு—திடம்.
உறுதிப்பொருள்—கடவுள், 2. ஞானம், 3. நிச்சயார்த்தம்.
உறுத்தல்—(தொ. பெ) உண்டாக்கல், 2. ஏற்படுத்தல், 3. சேர்த்தல், 4. வருவித்தல், 5. காட்டல், 6. தாக்கல், 7. வருத்தல், 8. மனதிலுறுத்தல்.

உறுத்மதை—அணில்.
உறுபு—பாலையாழ்த்திறம்.
உறுப்படக்கி—ஆமை.
உறுப்பு—அவயவம், 2. உடல், 3. பங்கு, 4. அங்கலக்ஷணம், 5. மிகுதி, 6. மரக்கொம்பு, 7. நெருக்கம், 8. மேல்வரிச்சட்டம், 9. காணியாட்சிப்பத்திரம்.
உறுமல் — (தொ. பெ) உறுமுதல், 2. இரைதல், 3. குமுறல்.
உறுமாலா— } நலைச்சாத்து, 2. அங்க
உறுமாலை— } பாவாடை.
உறுமால்— }
உறுமி—ஒரு பறை.
உறுமு — (வி) முறுமுறு, 2. பன்றியுறுமு, 3. மேகமுழங்கு, 4. சின, 5. எழும்பு.
உறுவல்—துன்பம்.
உறுவன்—முனிவன், 2. அருகன்.
உறுவை — ஔவை சகோதரிகளிலொருத்தி.
உறை—படைக்கூடு, 2. பண்டம் பெய்யுறை, 3. பாலிடுபிரை, 4. இருப்பிடம், 5. துளி, 6. மழை, 7. ஆடையழுக் ககற்றுநீர், 8. காரம், 9. விலங்குணவு, 10. மருந்து, 11. வாழ்நாள், 12. நீளம், 13. உயரம், 14. கிணற்றுறை, 15. இலக்கக்குறி, 16. பாம்பின் விஷப்பை, 17. வெண்கலம்.
உறை — (வி) வாசஞ்செய், 2. இரு, 3. சஞ்சரி, 4. இறுகு, 5. செறி.
உறைத்தல்—(தொ. பெ) கார்த்தல், 2. எரிதல், 3. தாக்கல், 4. அழுந்தல்.
உறைப்பு — காரம், 2. கொடுமை, 3. எரிவு, 4. தாக்குகை, 5. உக்கிரம், 6. பதிவு.
உறையல்—பிணக்கு.
உறையுள் — தங்குமிடம், 2. வீடு, 3. ஊர், 4. நாடு, 5. மக்கட்படுக்கை, 6. மருதநிலத்தூர், 7. ஆயுள்.
உறையூர் — திருச்சிராப்பள்ளிக் கருகிலுள்ள சோழனூர்.
உறைவிடம்—இருக்குமிடம்.

உற்கடம் — மதம்பிடித்த யானை, 2. செருக்கு, 3. நன்னாரி.
உற்கடிதம்—பஞ்சதாளத்திலொன்று.
உற்கம்—கடைக்கொள்ளி, 2. இந்திரன், 3. ஊழித்தீ.
உற்கரி—(வி) கோபத்தோடு பேசு.
உற்காரம்—வாந்திசெய்கை, 2. அதிர்ச்சி, 3. தூற்றுந் தானியம்.
உற்கிருஷ்டம்—மேன்மை, 2. மிகுதி.
உற்குரோசம்—நீர்வாழ் பறவை, 2. சத்தம்.
உற்கை—கடைக்கொள்ளி, 2. விண்வீழ் கொள்ளி, 3. விண்மீன்.
உற்சர்க்கத்தலம்—மூலாதாரம்.
உற்சர்க்கப்பிணி— } உலகம், வாழ்நாள், போகம்
உற்சர்ப்பிணி— } முதலியவைகளால் வளர்பிறைபோற் பெருகுங் காலம், 2. சமணரின் காலப்பிரிவில் ஒன்று.
உற்சர்க்கம்—கைவிடுகை.
உற்சவம் — திருவிழா, 2. விவாகம், 3. ஆசைப்பெருக்கம்.
உற்சாகம் — முயற்சி, 2. ஊக்கம், 3. மனப்பூரிப்பு, 4. சந்தோஷம்.
உற்பத்தி— } பிறப்பு, 2. கருவுண்டாகு
உற்பவம்— } கை.
உற்பலசானன்—பெருங்காயம்.
உற்பலம் — நெய்தல், 2. செங்குவளை, 3. குவளை.
உற்பவி—(வி) பிற, 2. கருப்படு.
உற்பவிப்பு—பிறப்பு, 2. கருப்படுகை.
உற்பனம்— } பிறப்பு, 2. உத்தமம்,
உற்பன்னம்— } 3. உண்மை, 4. தோற்றம், 5. கல்வி.
உற்பாதம் — தூர்க்குறி, 2. கொடுமை, 3. நுண்ணறிவு.
உற்பிரேட்சை—ஓரலங்காரம்.
உற்பீசம்—நிலத்திற் பிறப்பன.
உற்றோர்—உறவோர்.
உற்றிடம்—ஆபத்து, 2. அடைக்கலம்.
உற்றுக்கேள் — (வி) கவனமாய்க் கேள்.
உன் — (வி) நினை, 2. விரைந்தெழும்பு, 3. உந்து.
உன்மணி—உயர்ந்தமணி.
உன்மத்தகி—குறிஞ்சாக்கொடி.
உன்மத்தம் — பைத்தியம், 2. மயக்கம், 3. ஊமத்தஞ்செடி, 4. மன்மதன் கணையுளொன்று.
உன்மத்தர் — பித்தர், 2. வெறியர், 3. மயக்கமுடையோர்.
உன்மத்தை—ஊமத்தஞ்செடி.
உன்மனை—பிராசாத வியல்பி லொன்று
உன்முகம்—அண்ணாந்து பார்க்கை, 2. ஒன்றிற் கருத்தா யிருக்கை
உன்னதம்— } உயர்ச்சி, 2. மேன்மை
உந்நதம்— }
உன்னம் — நினைவு, 2. மனம், 3. அன்னம், 4. நீர்வாழ் பறவை, 5. தசைபிடுங்குங் குறடு.
உன்னயம்— } உயர்த்துகை.
உன்ணயம் — }
உன்னயனம் — } தியானம்.
உந்நயனம்— }
உன்னலர்—பகைவர்.
உன்னல்—(தொ. பெ) நினைத்தல்.
உன்னி—குதிரை.
உன்னியம்—ஐக்கம்.
உன்னியர்—பந்துக்கள்.

## ஊ

ஊ—நெட்டுயிரெழுத்தி லொன்று, 2. வினையெச்சவிகுதி, (உ—ம்) உண்ணூ, 3. தசை, 4. ஓரொலிக் குறிப்பு.
ஊகடன்—முருங்கைமரம்.
ஊகம்—நினைவு, 2. குரங்கு, 3. தியானம், 4. படைவகுப்பு, 5. புலி.
ஊகனம்—நியாயஞ் சொல்லுகை.
ஊகனி—துடைப்பம்.
ஊகி — (வி) நினை, 2. உத்தேசி.
ஊகை—யூகை.
ஊக்கம் — முயற்சி, 2. உள்ளத்தின் மிகுதி, 3. வலி, 4. உற்சாகம், 5. உயர்ச்சி.
ஊக்கு—முயற்சி.

ஊக்கு—(வி) முயல், 2. எழுப்பு, 3. ஏறு.
ஊங்கு—மிகுதி, 2. உவ்விடம்.
ஊசல்—ஊஞ்சல், 2. அசைதல், 3. ஓர் பிரபந்தம், 4. பதனழிதல்
ஊசா—மூக்குத்திக்கொடி.
ஊசாடு—(வி) உலாவித்திரி.
ஊசி - இழைவாங்கி, 2. குண்டூசி, 3. நிறைகோலின்நடுமுள், 4. கடிகாரத்தின்முள், 5. எழுத்தாணி.
ஊசிக்காது—ஊசித்துளை.
ஊசிக்காந்தம் – இரும்பிழுக்குங் காந்தக்கல்.
ஊசிக்கார்—ஓர் வகை நெல்.
ஊசு—(வி) சுவைகெடு, 2. தை.
ஊசுதம்—பயம் (அச்சம்)
ஊஞ்சல்—ஊசல்.
ஊடகம்—ஓர் மீன்.
ஊஷரம்— } பூவழலை.
ஊடரம்— }
ஊடல்—பிணக்கு, 2. பிரிவு
ஊடாடிப்பார்—(வி) ஆராய்ந்துபார்.
ஊடான்—ஓர் மீன்.
ஊடு—நடு, 2. தார்நூல்.
ஊடு—(வி) பிணங்கு, 2. பிரி, 3. விரோதி, 4. வெறு.
ஊடை—நூற்றூர்.
ஊடையம்—சீரரண்.
ஊட்டம்—உண்டி.
ஊட்டி – உண்டி, 2. பறவையுணவு, 3. மழை, 4. மிடறு.
ஊட்டிரம்—தேட்கொடுக்கிப்பூண்டு.
ஊட்டு—(வி) உண்பி, 2. உணவுகொடு, 3. விருந்திடு.
ஊட்டுவண—தலையாட்டம்.
ஊணம்—ஓர் தேயம்.
ஊண்—உண்டி, 2. சோறு, 3. இரை, 4. நன்மை தீமையினால் விளையும் புசிப்பு.
ஊதம்—யானைக் கூட்டம்.
ஊதல்—காற்று, 2. வீங்கல், 3. ஆரவாரம்.
ஊதா—செம்மைகலந்த கருநிறம்.
ஊதாரி—வீண்செலவுக்காரன்.
ஊதாரித்தனம்—வீண்செலவு.
ஊதிகை—முல்லை.
ஊதியம்—இலாபம், 2. கல்வி, 3. பலன்.
ஊது—(வி) வாயாலூது, 2. துளைக்கருவி பிசை, 3. வண்டு முதலிய ஊது, 4. சரீரம் வீங்கு, 5. காற்று நொய்தாய் வீசு
ஊதுகட்டி—சொக்கவெள்ளி.
ஊதுகரப்பன் – ஒருவகைக் கரப்பனோய்.
ஊதுகாமாலை—ஒருவகை நோய்.
ஊதுமா—ஓரிணிப்புக் கூழ்
ஊதுமாந்தம்-மந்தத்திருல் வயிறு வீம்மும் ஒரு நோய்.
ஊதுவாரம்—வெள்ளி.
ஊதுவிரியன்—ஓர் பாம்பு.
ஊதை—காற்று, 2 குளிர்காற்று.
ஊத்தை – சரீரவழுக்கு, 2. அழுக்கு, 3. ஊன்.
ஊத்தைக்குடியன்—ஓர் பிசாசு.
ஊத்தைப்பாண்டம் – அழுக்குப்பாத்திரம், 2. உடம்பு
ஊந்து—கர்சோலம்.
ஊமச்சி— } ஓர் வகை நத்தை, 2. ஊமைச்சி.
ஊர்மச்சி— }
ஊமண – பேசத் திறமில்லாதவன், 2. அழகில்லாதது.
ஊமத்தங்கூகை-ஊமைக்கோட்டான்.
ஊமத்தம்— } உன்மத்தம், 2. ஒரு செடி.
ஊமத்தை— }
ஊமல் – கிழங்கு கழிந்த பனங்கொட்டை.
ஊமன்—கூகை, 2. ஊமை.
ஊமாண்டி – பிள்ளைகள் விளையாட்டிலொன்று, 2. பூச்சாண்டி.
ஊமை—ஒலியின்மை, 2. ஊமன்.
ஊமைத் தேங்காய் – சீராடாத் தேங்காய்.
ஊமையெழுத்து—மெய்யெழுத்து.
ஊரல்—உரிஞ்சல், 2. கிளிஞ்சில், 3. பசுமை.
ஊராண்மை—மிக்கசெயல்.
ஊரி—சங்கு, 2. மேகம், 3. இளமை.
ஊரு—தொடை, 2. அச்சம்.

ஊருடை—
ஊருடைமுதலி— } முருங்கைமரம்.
ஊருணி—ஊரடுத்த குளம்.
ஊர்—(வி) தவழ், 2. பரவு, 3. நினைவுறு, 4. ஏறு, 5. செலுத்து.
ஊர்—
ஊர்கோள்—
ஊர்கோள்வட்டம்— } சந்திர சூரியரைச் சூழ்ந்தவட்டம்.
ஊர்க்கதை—ஊர்ப்பேச்சு, 2. பொய்ச்செய்தி, 3. வீண்செய்தி.
ஊர்க்காறுபாறு-ஊர்க்காரியம், 2. ஊர்விசாரிப்பு, 3. அன்னியருடைய காரிய விசாரிப்பு.
ஊர்க்குருவி—அடைக்கலங் குருவி.
ஊர்ச்சம்—கார்த்திகை மாதம்.
ஊர்ச்சிதம்—உறுதி.
ஊர்தி—வாகனம்.
ஊர்த்தம்—
ஊர்த்துவம்— } சைவபேதம் பதினாறினுள் ஒன்று.
ஊர்த்துவபுண்டரம்—மேனோக்கியிடுந்திரு மண்.
ஊர்ப்புலம்—ஆமணக்கமரம்.
ஊர்மிளை—இலக்குமணன் மனைவி.
ஊர்வசி—சுவர்க்கலோக வேசை.
ஊலுகம்—கோட்டான்.
ஊழலி — (வி) பதனழி, 2. மெலி, 3. இளை, 4. அருவரு.
ஊழல்—கெட்டது, 2. ஊத்தை, 3. நரகம்.
ஊழி — உகமுடிவு, 2. நெடுங்காலம், 3. உறைகாலம், 4. பூமி.
ஊழிகாலம்—உகாந்தகாலம்.
ஊழித்தீ—வடவாமுகாக்கினி.
ஊழிநோய்—பெருவாரிநோய்.
ஊழியம்—தொண்டு.
ஊழியூழிக்காலம்—நித்தியம்.
ஊழ்—(வி) முதிர், 2. வாடு, 3. பதனழி, 4. மலர், 5. நினை.
ஊழ்—பழமை, 2. முறை, 3. குணம், 4. பகை, 5. வெயில், 6. விதி.
ஊழ்த்தல்-புலால், 2. ஊன், 3. மடிப்பு.
ஊளன்—நரி, 2. ஆண் நரி.
ஊளா—
ஊளி— } நெடுவாய் மீன்.

ஊளை — நரி முதலியவற்றினழைக்குரல், 2. சளி, 3. ஊத்தை.
ஊறணி — ஊற்று, 2. கசிவுநிலம், 3. சேற்றுநிலம், 4. வருவாய்.
ஊறல்—ஊறுகை, 2. ஊற்று, 3. மருந்தினூறல், 4. பஞ்சலோகக்கலப்பு, 5. சுளிம்பு, 6. வருவாய்.
ஊறு—தீண்டுகை, 2. இடையூறு, 3. காயம், 4. கொலை, 5. தீமை, 6. பரிசம்.
ஊறு — (வி) நீரூறு, 2. காய் முதலியவூறு, 3. கசி, 4. பால் முதலியனசுர, 5. காயத்திலூன்வளர், 6. மெலிந்தவுடல் தேறு.
ஊறுகாய்—அடைகாய்.
ஊறுகோள்—காயம், 2. கொலை.
ஊறுபாடு—காயம், 2. தீமை, 3. சேதம்.
ஊற்றம்—பற்றுக்கோடு, 2. அசைவின்றி நிற்கை, 3. ஆற்றல், 4 மிகுதி, 5. புகழ், 6. அறிவுடைமை.
ஊற்றாணி—கலப்பை யுறுப்பிலொன்று.
ஊற்றால்—உரோகணிநாள், 2. ஓர் கூடு.
ஊற்று—
ஊற்றுக்கோல்— } ஊன்றுகோல்.
ஊற்று—நீரூற்று, 2. ஈரம்.
ஊற்று—(வி) சிந்து, 2. எண்ணெயூற்று, 3. வார்.
ஊற்றுக்கண்—ஊற்றுத்துவாரம்.
ஊற்றுக்குழி — ஊற்றுப்பள்ளம்.
ஊற்றுமரம் — எண்ணெ யூற்றுமரம், 2. செக்குலக்கை.
ஊனகத்தண்டு—கருவண்டு.
ஊனக்கண் — நேத்திரம், 2. குருட்டுவிழி.
ஊனம்—குறைபாடு, 2. ஈனம், 3. தீமை.
ஊனாங்கொடி.—
ஊனான்— } ஓர் கொடி.
ஊனயம்—பிழை.
ஊனுருக்கி—கயரோகம்.
ஊன் — தசை, 2. மாமிசம், 3. கொழுப்பு, 4. உடல்.
ஊன்றி—பாம்பு.
ஊன்றிக்கொள் — (வி) நிலைபெறு, 2. சார்ந்திரு.

ஊன்றிப்பார் – (வி) நோக்கிப்பார், 2. ஆராய்ந்துபார், 3. கையிலூன்றியெழுந்திப்பார்.
ஊன்றுகால்–உதைகால்.
ஊன்றுகோல்–பற்றுக்கோடு.
ஊன்றுதல் – (தொ. பெ) நிறுத்தல், 2. நியாயத்திற்கு மூலத்தை ஸ்தாபித்தல், 3. இறுகப்பிடித்தல், 4. சாரல், 5. உறுதியாய் நிற்றல்.

## எ

எ–ஏழாமுயிர், 2. ஒரு வினாவெழுத்து.
எஃகம்–எறிபடை, 2. ஈட்டி, 3. சக்கரம்.
எஃகு–கூர்மை, 2. உருக்கு, 3. ஆயுதப்பொது, 4. மதிநுட்பம்.
எஃகு–(வி) நெகிழ், 2. நீள், 3. அவிழ், 4. எதிர்தாக்கு 5. தாழ்ந்தெழும்பு, 6. எட்டு, 7. உதைந்தேறு, 8. பஞ்சு முதலிய கொட்டு.
எகரம்–ஓரெழுத்து.
எகினம்– } அன்னம், 2. கவரிமா, 3. நீர் நாய், 4. புளிய மரம், 5. புளிமா, 6. அழிஞ்சில்மரம்.
எகின்– }
எகுன்று–குன்றிக்கொடி.
எக்கச்சக்கம்–தாறுமாறு, 2. ஒழுங்கின்மை, 3. வித்தியாசம், 4 நிந்தை.
எக்கண்டம்–முழுதும்.
எக்கரணம்– } முக்காரம்.
எக்கரவம்– }
எக்கர்–இடக்கர், 2. சொரிதல்.
எக்கல் – (வி) எட்டல், 2. வயிற்றையெக்கல், 3. ஏறல்.
எக்கழுத்தம்–இறுமாப்பு.
எக்களி–(வி) மிகமகிழ்.
எக்களிப்பு–மிகு மகிழ்ச்சி.
எக்காளம்–ஒருதுகுழல்.
எக்கியம்–யாகம்.
எக்கியோபவீதம்–பூணூல்.
எங்கண்–எவ்விடம்.
எங்கத்து– }
எங்கத்தை– } எவ்விடத்த.
எங்கத்தைய– }
எங்கு– } எவ்விடம்.
எங்கே– }
எங்ஙனம்– } எத்தன்மை, 2. எவ்விடம்.
எங்ஙனே– }
எசமானன்– } வேள்வித்தலைவன், 2. தலைவன், 3. கணவன்.
எசமான்– }
எசமானி–தலைவி.
எசம்–நரம்பு.
எசலாட்டம்–இகலாட்டம்.
எசுசு– } யசுர்வேதம்.
எசுர்– }
எச்சம்–யாகம்.
எச்சம்–குறைபாடு, 2. சேஷம், 3. எச்சில், 4. சந்ததி, 5. பறவை முதலியவற்றின் மலம், 6. பெயரெச்ச முதலியன.
எச்சரிக்கை– } சாக்கிரதை, 2. புத்தி சொல்லுகை, 3. கண்டிப்பு, 4. எச்சரிக்கை கூறுகை, 5. அமைதியாயிருக்கச் சொல்லுகை, 6. ஓர் பாட்டு.
எச்சரிப்பு– }
எச்சன் – யாகசுரூபி, 2. யாகஞ்செய்வோன், 3. ஸ்ரீ மகாவிட்டுணு.
எச்சிலார்–இழிஞர்.
எச்சில்–சேஷம், 2. உச்சிட்டம்.
எச்சிற்றழும்பு–தழுதணை.
எச்சு–உயர்வு, 2. ஒரு வாத்தியக்கருவி.
எஞ்சு–(வி) சுருங்கு, 2. குறை, 3 சேஷமாயிரு, 4. சொல்லெஞ்சிநில்.
எஞ்ஞான்றும்–எப்போதும்.
எடார்–வெளிநிலம்.
எடு–(வி) தூக்கு, 2. ஒன்றிலிருந்தெடு, 3. தொடங்கு, 4 அங்கீகரி, 5. ஆராய்ந்தெடு, 6. இசையெடு, 7. தெரிந்துகொள், 8. சும, 9. வாந்தியெடு.
எடுகூலி–சுமைக்கூலி.
எடுத்தலளவு–நிறை.
எடுபடு–(வி) நீக்கப்படு, 2. எழும்பு, 3. அழிந்துபோ, 4. நியாயந்தவறு, 5. காணமற்போ, 6. தோற்றுப்போ.
எடுப்பு–தூக்குகை, 2. உயரம், 3. தொடங்குகை, 4. இறுமாப்பு, 5. மேட்டிமை, 6. நிந்தை.
எடுப்புச்சாய்ப்பு–உயர்வுதாழ்வு.

எழுடை — தூக்குகை, 2. நிறுக்குந்தொழில், 3. நிறையளவு, 4. ஏற்றுக்கொள்கை, 5. எழுப்புகை.
எட்கடை—எட்பிரமாணம்.
எச்சத்து—எண்ணெய்.
எட்சிணி—ஓர் பெண்பிசாசு.
எட்டக்கரம்—அஷ்டாக்ஷரம்.
எட்டர்—மங்கலபாடகர்.
எட்டாக்கை—தூரம்.
எட்டி—காஞ்சிரைமரம், 2. ஒரு சாதி.
எட்டிகுடி—ஓர் ஸ்தலம்.
எட்டியர் — செட்டிகள், 2. வைசியா பொது.
எட்டு—அ, ஒரெண், 2. இறந்த எட்டாம்நாட் சடங்கு, 3. ஆசை.
எண்—எண்ணிக்கை, 2. விசாரம், 3. இலக்கம், 4. சோதிடநூல், 5. மதிப்பு, 6. வரையறை, 7. எளிமை, 8. இலேசு, 9. எள்ளு.
எண்கணன்—பிரமன்.
எண்காற்புள்—சரபப்பறவை.
எண்கு—கரடி.
எண்குணன் — அருகன், 2. கடவுள், 3. சிவன்.
எண்சுவடி—கணக்கேடு.
எண்டோளி—காளி, 2. துர்க்கை
எண்ணம் — நினைப்பு, 2. நோக்கம், 3. மதிப்பு, 4. இறுமாப்பு, 5. நம்பிக்கை, 6. கனம், 7. விசாரம், 8. ஆலோசனை, 9. கருத்து.
எண்ணர்—கணிதர், 2. மந்திரிகள்.
எண்ணூர்—பகைவர்.
எண்ணிக்கை—மதிப்பு, 2. கணிப்பு.
எண்ணெய்க்காப்பு—எண்ணெயபிஷேகம்.
எண்மை—இலேசு, 2. எளிமை, 3. பரிதாபநிலை.
எதாஸ்து—அப்படியாகட்டும்.
எதாப்பிரகாரம்—இருந்தபடியே.
எதார்த்தம்—உண்மை.
எதி—துறவி.
எதிரல் — (தொ. பெ) எதிர்த்தல், 2. எதிர்ப்படல்.

எதிராளி— } பகைஞன், 2. எதிர்வழக்காளி, 3. எதிரிடைக்காரன்.
எதிரி— }
எதிரிடை — எதிர்க்கை, 2. விரோதம், 3. எதிரித்தனம், 4. சமமாயிருப்பது.
எதிருரை—மறுமொழி.
எதிரேற்றல்—எதிரேவல், 2. தடுத்தல், 3. எதிர்த்தல், 4. பிறன்மேல் வருவதைத் தானேற்றல்.
எதிரொலி—பிரதித்தொனி.
எதிர்தல் — (தொ. பெ) சந்தித்தல், 2. தோன்றுதல், 3. மாறுபடுதல்.
எதிர்நில் — (வி) முன்னில், 2. மாறுபட்டு நில், 3. போர்செய்.
எதிர்ப்படு—(வி) சந்தி, 2. தோன்று.
எதிர்ப்பு — சந்திப்பு, 2. எதிர்க்கை, 3. தடுப்பு, 4. அலைப்பு, 5. இலக்கு, 6. வருங்காலம், 7. எதிர்மொழி, 8. சண்டிவாளம்.
எதிர்ப்பை—கைம்மாறு.
எது—யாது.
எதுகுலகாம்போதி—ஓர் இராகம்.
எதுகுலம்—யதுகுலம்.
எதுகை — ஒரு செய்யுட்டொடை, 2. பொருத்தம்.
எதேச்சை—சுவேச்சை, 2. திருத்தி.
எதேஷ்டம்— } யதேஷ்டம்.
எதேட்டம்— }
எதோத்தேசபட்சம்—ஒரு விஷயத்தை இருவிதமாக ரூபித்துக்காட்டல்.
எத்தனம்— } பிரயத்தனம், 2. கருவி, 3. ஆயத்தம்.
எத்தினம்— }
எத்தனி—(வி) எத்தனஞ் செய்.
எத்தவண— } எவ்வளவு.
எத்துவண— }
எத்து—(வி) வஞ்சி, 2. இதஞ்சொல்.
எத்து—வஞ்சகம்.
எத்தேசகாலமும்—எப்பொழுதும்.
எந்த—வினா.
எந்திரம் — சூத்திரம், 2. திரிகை, 3. ஆலை, 4. பஞ்சுகொட்டுமெந்திரம், 5. தீக்கடைகோல், 6. குலாலச் சக்

கரம், 7. தேர், 8. ஊர்தி, 9. மந்திர சக்கரம், 10. மதிலுறுப்பு.
எந்தை—எமது தந்தை.
எப்படி—எவ்வண்ணம்.
எப்பொருட்குமிறைவன்—கடவுள்.
எப்பொழுது—, எப்போது—, எப்போழ்து— எக்காலம்.
எமகணம்—, எமகிங்கிரர்— நமன்றூதர்
எமநாகம்—அசமதாகம், 2. ஊமத்தஞ் செடி.
எமநாமம்—ஊமத்தஞ்செடி.
எமர்—, எமார்— எம்முடையவர்.
எமன்—எம்முடையவன்.
எமன்—நமன், 2. நாகபாம்பின் பற்களி லொன்று.
எமாஸ்திரம்-இயமனுயுதங்கள் அவை கணிச்சி, தண்டு, பாசம் என்பன.
எம் — எம்முடைய, 2. உளப்பாட்டுத் தன்மைப் பன்மை விகுதி.
எம்பர்—எவ்விடம்.
எம்பி—என் தம்பி.
எம்பிரான்—எங்கள் தலைவன், 2. எங்கள் தேவன்.
எம்புகம்—நிலக்கடம்பு, (ஓர் பூடு.)
எம்மட்டு—, எம்மாத்திரம்— எவ்வளவு.
எம்மான்—எம்பிரான்.
எம்மை—எப்பிறப்பு.
எயில்—மதில், 2. நகரம்.
எயிறு—பல், 2. யானை, பன்றியிவற்றின் கோடு.
எயிற்றி — வேட்டுவப்பெண், 2. பாலைநிலப்பெண்.
எயினன்—வேடன்.
எயின்—வேடச்சாதி.
எய்—முட்பன்றி.
எய்தல் — (தொ. பெ) அடைதல், 2. சம்பவித்தல் 3. பெறுதல், 4. அம்பு முதலியன எய்தல்.
எய்து—(வி) அணுகு, 2. பெற்றுக்கொள், 3. பயனனுபவி, 4 சேர், 5. சம்பவி.
எய்த்தல்—(தொ. பெ) அறிதல், 2. இளைத்தல், 3. மெலிதல், தரித்திரமடைதல்.
எய்ப்பு—இளைப்பு.
எய்யாமை—அறியாமை.
எரல்—சமுத்திரசுண்டி.
எரி—நெருப்பு, 2. நரகம், 3. பிரகாசம், 4. கேட்டை, 5. புநர்பூசம்.
எரி — (வி) பிரகாசி, 2. அழல், 3. புண் முதலிய வெரி, 4. பொறாமைகொள், 5. கோபங்கொள், 6. வயிறெரி.
எரிகாசு—காசுக்கட்டி.
எரிகொள்ளி—கொள்ளிக்கட்டை.
எரிச்சல்—எரிவு, 2. பொறாமை, 3. கோபம், 4. உறைப்பு, 5. மனவெரிவு.
எரிபடுவன்—பிளவை.
எரிமுகி—சேங்கொட்டைமரம்.
எரிவு—எரிகை, 2. உடலெரிவு, 3. கோபம், 4. பொறாமை.
எரு—வயலுக்கிடுமெரு, 2. சாணி.
எருக்கட்டு—கிடைவைக்கை, 2. கிடைவைத்த கொல்லை.
எருக்களம்—எருவிருக்குமிடம்.
எருக்கு—(வி) கொல், 2. சுமத்து, 3. வெட்டு.
எருக்கு—ஓர் செடி.
எருது—இடபம், 2. இடபவிராசி.
எருத்தம்—பிடர், 2. தரவு.
எருத்து—பிடர், 2. ஏற்றயல்.
எருத்துத்திமில்—விடைமுரிப்பு.
எருத்துப்பூட்டு—ஏர்ப்பூட்டு.
எருந்தி—இப்பி.
எருந்து—கிளிஞ்சில், 2. உரல்.
எருமணம்—செங்குவளை.
எருமுட்டை—எருவறட்டி.
எருமை—காரான்.
எருமைக்காஞ்சொறி—ஓர் பூடு.
எருமைநாக்கு—ஓர் மீன்.
எருமையூர்தி—நமன்.
எருவை—உதிரம், 2. கழுகு, 3. செம்பு, 4. கொறுக்கை, 5. கோரை (ஒரு புல்), 6. கரூதை, 7. யானை.
எலி-கள்ளிமரம், 2. பூரநாள், 3. மூஷிகம்.
எலிச்செவி—சவரியார் கூந்தல்.
எலித்திசை—வடமேற்றிசை.

எலிப்பிடுக்கன்—ஓர் பூடு.
எலிப்புலி—பூனை.
எலு—கரடி.
எலுநன்—ஓரரசன்.
எலுமிச்சை—ஓர் மரம்.
எலும்பி—ஓர் மரம்.
எலும்பு—அஸ்தி.
எலும்புருக்கி—ஓர் நோய்.
எலுவன்—சோழன்.
எல் — ஒளி, 2. சூரியன், 3. பகல், 4. நாள், 5. இரவு, 6. வெயில், 7. இகழ்ச்சிக் குறிப்பு.
எல்லரி—கைம்மணி.
எல்லவன்— } சூரியன்.
எல்லோன்— }
எல்லாம்—முழுதும்.
எல்லி—சூரியன், 2. இரவு.
எல்லை — அவதி, 2. அளவு, 3. முடிவு, 4. சூரியன், 5. கூப்பிடுதூரம், 6. நாள், 7. காலவரையறை.
எல்லையிலி—கடவுள்.
எல்லோ—அதிசய விரக்கச்சொல்.
எல்வை—காலம், 2. நாள்.
எவட்சாரம்—வெடியுப்பு.
எவண்—எவ்விடம்.
எவன்-யாவன், 2. யாது, 3. துக்கம், இரக்கம், ஐயமிவற்றைக் காட்டுஞ்சொல்.
எவை—யாவை.
எவ்—எவை.
எவ்வது—எவ்விதம்.
எவ்வம்—துன்பம், 2. தீராநோய், 3. இகழ்ச்சி, 4. தனிமை.
எவ்வளவு—எத்துணை.
எவ்வணம்—இளமை, 2. களிப்பு.
எவ்வாறு—எவ்வழி.
எவ்விடம்—எந்தவிடம்.
எழல்—(வி) எழும்பல்.
எழால் — யாழ்நரம்பினோசை, 2. ஓர் பறவை.
எழிலி—மேகம், 2. கடை யேழுவள்ளலி லொருவன்.
எழில்—அழகு, 2. வண்ணம், 3. இளமை, 4. வலி.
எழினி—திரைச்சீலை, 2. இடைச்சீலை.
எழு—கம்பம், 2. வளைதடி, 3. உருக்கு.
எழு — (வி) எழும்பு, 2. மனங்கிளர், 3. உயிரடைந்தெழும்பு, 4. தலைமைப்படு, 5. பரம்பு, 6. கிளம்பு, 7. ஆரவாரமெழு, 8. உயர், 9. சம்பவி, 10. எதுவாகு, 11. குடியெழும்பு, 12. விலையேறு.
எழுகூற்றிருக்கை — ஒரு பிரபந்தம், அஃது எழறைத்தட்டு விளையாட்டுச் சிறப்புக் கூறுவது
எழுச்சி — எழும்புகை, 2. முயற்சி, 3. இறுமாப்பு, 4. காதிலெழும்பு மோர்புண், 5. கண்ணோயிலொன்று.
எழுச்சிக்கொடி—கண்ணிற்படரு மோர் நோய்.
எழுதகம்—சிற்பவேலையிலொன்று.
எழுதாக்கிளவி—வேதம்.
எழுதுகோல் — தூரியக்கோல், 2. எழுதுங்கோல்.
எழுதுதல்—(தொ. பெ) எழுதல், 2. சித்திரமெழுதல், 3. வசனுதிகளெழுதல்.
எழுத்தாணி—இலேகினி.
எழுத்து—அக்கரம், 2. இலிகிதம், 3. இலக்கணம், 4. உடன்படிக்கைச் சீட்டு, 5. அட்டவணை, 6. தலையெழுத்து.
எழுத்துப்புடவை—சித்திர வஸ்திரம்.
எழுத்துவாசனை—எழுத்து நடை.
எழுநா—நெருப்பு.
எழுந்தருளல் — (தொ. பெ) தோன்றல், 2. பெரியோரெழுதல்.
எழுபவம்—உயர் பிறப்பு, 2. எழுபிறப்பு
எழுப்பம்—எழும்புகை, 2. சஞ்சரிக்கை, 3. உயர்வு.
எழுப்பு—(வி) துயிலெழுப்பு, 2. தூக்கு, 3. உயிரோடெழுப்பு, 4. சண்டை மூட்டு, 5. கிளப்பிவிடு, 6. வீடெழுப்பு, 7. இசை யெழுப்பு.
எழுமான்— } ஓர் பூடு.
எழுமான்புலி— }
எழுமை-எழு, 2. எழுபிறப்பு, 3. உயர்ச்சி.
எழும்பு—(வி) எழு.
எழுவரைக்கூடி — ஓர்வகைப் பாஷாணம்.
எழுவாயெழுஞ்சனி—மகாநாள்.

எழுவாய்—ஆதி, 2. முதல் வேற்றுமை.
எளிசு— } இலேசு.
எளிது— }
எளிஞர்— } தரித்திரர்.
எளியர்— }
எளியார்— }
எளியோர்— }
எளிதரவு—தரித்திரம், 2. தாழ்மை.
எளிமை—நீசத்துவம், 2. இரங்கப்படத் தக்க தன்மை, 3. பலவீனம், 4. எளிது, 5. தனிமை.
எள்—ஒரு தானியம்.
எள்கல்—(தொ. பெ) இகழ்தல்.
எள்ளல் — (தொ. பெ) இழிவாகப்பேசல், 2 தள்ளல், 3. நகைத்தல்.
எள்ளுண்டை—ஓர் சிற்றுண்டி.
எள்ளோரை—எள்ளுச்சாதம்
எறி—(வி) குத்து, 2: தள்ளு, 3. அறை, 4. அலையடி, 5. வெட்டு, 6 அலைவீசு.
எறிகால்—பெருங்காற்று.
எறித்தல் — (தொ. பெ) ஒளிவீசல், 2. வெயில்காலல்
எறிபத்தநாயனார் — சிவனடியார்களுளொருவர்.
எறிப்பு—பிரகாசம், 2. வெயிலெறிக்கை.
எறிமணி—சேமக்கலம்
எறும்பி—யானை.
எறும்பு—பிபீலிகை.
எறுழி—காட்டுப்பன்றி.
எறுழ் — வலி, 2. தண்டு, 3. தடி, 4. தூண்.
எற்றி — (வி) இரங்கு.
எற்று — எத்தன்மைத்து, 2. இரக்கக் குறிப்பு.
எற்று — (வி) எறி, 2. அடி, 3. புடை, 4. வெட்டு, 5. குத்து, 6. சொல்.
எற்றே— } இரக்கச் சொல்.
எற்றோ— }
எற்றை—என்று.
என— } ஓரிடைச்சொல்.
என்னு— }
என்—வினாவினைக்குறிப்பு, 2. ஐயக்கிளவி, 3. இகழ்ச்சிக்குறிப்பு, 4. தன்மையொருமைச் சொல்.

என்பாபரணன்—சிவன்.
என்பு—எலும்பு, 2. புல்.
என்புருக்கி—எலும்புருக்கிநோய், 2. ஓர் பூண்டு.
என்றவன்— } சூரியன்.
என்று— }
என்று—எண்ணிடைச்சொல்.
என்று—எப்போது.
என்றும்—எப்போழுதும்.
என்றூழ்—வெயில், 2. சூரியன்.
என்ன—யாது, 2. என்றுசொல்க, 3. உவமைச்சொல்.
என்னு—என்ன
என்னே—அதிசய விரக்கச்சொல்.
என்னை—என்றந்தை, 2. என்ன.
என்னோ — இரக்கச்சொல், 2. அதிசயவிரக்கச்சொல், 3. ஐயக்கிளவி, 4. இகழ்ச்சிக் குறிப்பு

## ஏ

ஏ — நெட்டுயிரிலொன்று, 2. அம்பு, 3. இடைச்சொல்.
ஏஏ—இகழ்ச்சிக் குறிப்பு.
ஏகதண்டலன்—குபேரன், 2. ஆதிசேடன்.
ஏகசக்கரம் - ஓராழி, 2. ஏகசக்கரபுரம்
ஏகச்சக்கரவர்த்தி - இராசாதிராசன், 2. கடவுள்.
ஏகசரம்—காண்டாமிருகம்.
ஏகதந்தன்—கயமுகாசுரன், 2. விநாயகன்.
ஏகதாளம்- சத்ததாளத்தொன்று
ஏகதேசம் — அருமை, 2. வேற்றுமை, 3. ஒவ்வாமை, 4. சந்தேகம்
ஏகத்துவம்—ஒன்றுயிருக்கை.
ஏகநாதன்— } கடவுள்.
ஏகநாயகன்— }
ஏகபாவனை—ஒரே பாவனை.
ஏகபோகம் — ஒரு தன்மைத்தான வின்பம், 2. மனைவியுங் கணவனும் அன்னியோன்னியமாயிருக்கை, 3. சுகதுக்கங்களைச் சமமாக நினைக்கை, 4. மனதின்படி யனுபவிக்கை

ஏகம்—ஒன்று, 2. ஒப்பற்றது, 3. தனிமை, 4. உடன்பாடு, 5. முழுவதும்.
ஏகம்பட்சாரம்—ஓர்வகை யுலோகம்.
ஏகலைவன் — பாண்டவரிருந்த காலத்துள்ள ஒரு வேடன்.
ஏகல்—உயர்ச்சி.
ஏகன்—ஒருவன், 2. கடவுள், 3. சிவன்.
ஏகாங்கி—பிரமசாரி, 2. சன்னியாசி.
ஏகாசம்—உத்தரீயம், 2. போர்வை.
ஏகாட்சரி—பிரணவம், 2. சத்தி, 3. ஓர்வகைச் செய்யுள்.
ஏகாண்டம்—வெளி.
ஏகாதசம்—பதினொன்று.
ஏகாதசி—பதினோராந் திதி.
ஏகாதிபதி—தனியாட்சி பண்ணுபவன்.
ஏகாத்தியம்—தனிச்செங்கோன்மை.
ஏகாந்தம்-தனித்திருக்குமிடம், 2. தனிமை, 3. தனித்து யோகஞ்செய்கை.
ஏகாம்பரன்—சிவன்.
ஏகார்க்களம்-ஏர்பூட்ட நாட்பார்க்கை.
ஏகார்த்தம் — ஒரே யர்த்தம், 2. ஒரே நோக்கம், 3. ஒன்றறை.
ஏகாலி—வண்ணான், 2. சவுக்காரம்.
ஏகீபவி—(வி) ஒரே தன்மையாகு
ஏகீபாவம்—ஒரு தன்மை.
ஏகு—(வி) போ, 2. கழி.
ஏகோதிஷ்டம்— } இறந்துபோன ஒருவருக்காக விசேடமாகச்செய்யும் அபரக்கிரியை.
ஏகோதிட்டம்— }
ஏகோபி—(வி) ஒன்று படு.
ஏக்கம்—ஏங்குகை, 2. பயம்.
ஏக்கழுத்தம்—இறுமாப்பு, 2. மேன்மை.
ஏக்கற—தாழ்ந்து நிற்க.
ஏக்கன் போக்கன்— } எளியோர்.
ஏக்கி போக்கி— }
ஏங்கல் — ஏங்குதல், 2. மயிற்குரல், 3. அழுதல்.
ஏங்கு—(வி) அழு, 2. வாடு, 3. திகிலுறு, 4. கவலைப்படு, 5. ஒலி.
ஏசம்—வெண்கலம்.
ஏசறவு—துக்கம்.
ஏசல்—ஓர் பாடல், 2. பழிமொழி.
ஏசு—குற்றம், 2. இகழ்ச்சி.
ஏசு—(வி) இகழ்.

ஏட—தோழன் முன்னிலை.
ஏடகம் — சீலை, 2. பூவிதழ், 3. பனை, 4. தெங்கு, 5 பலகை, 6. ஓர் சிவஸ்தலம்.
ஏஷணை— } ஆசை.
ஏடணை— }
ஏடலகம்—அதிமதுரம்.
ஏடல்—கருத்து.
ஏடன்—தோழன், 2. செவிடன்.
ஏடா—தோழன் முன்னிலை.
ஏடாகுடம்— } ஒழுங்கின்மை.
ஏடாகூடம்— }
ஏடு — பூவிதழ், 2. கண்ணிமை, 3. பாலேடு, 4. பனையோலை, 5. கோத்தவேடு, 6. ஏட்டுப்புஸ்தகம்.
ஏட்டிக்குப் போட்டி — ஆமென்பதற்கல்லவெனல்.
ஏட்டின் கல்வி—குருவில்லாக் கல்வி.
ஏட்டை—ஆசை, 2. தளர்வு.
ஏணம்—மான், 2. மான்றோல், 3 வலி, 4. நிலைபேறு.
ஏணல்—வளைவு.
ஏணி—இறைவை, 2. எல்லை, 3. நாடு.
ஏணி—மான்கன்று.
ஏணிச்சீகு—ஓர் புல்.
ஏணிப்பந்தம்—ஒருவகைத் தீவர்த்தி.
ஏவணை—புடவைத்தொட்டில்.
ஏண்—நிலைபேறு, 2. பெருமை, 3. வளைவு, 4. வலி.
ஏண்கோண்—ஒழுங்கின்மை.
ஏண்டா—ஏன் அடா என்பதன் சிதைவு.
ஏண்டாப்பு—இறுமாப்பு.
ஏதடை—எதிரிடை.
ஏதண்டை—பலகைத்தூக்கு, 2. நீர்த்துறையிதணம்.
ஏதம்—துன்பம், 2. குற்றம், 3. கேடு.
ஏதர்—கெட்டவர்கள்.
ஏதலிடுதல் — (தொ. பெ) பொருமையாய்ப் பேசல்.
ஏதி—ஆயுதப்பொது, 2. வாள், 3. துண்டு.
ஏதிலார் — அன்னியர், 2. அயலார், 3. பகைவர், 4. ஏது.
ஏதில்—அன்னியம், 2. அயல்.

ஏது—காரணம், 2. மூலம், 3. திராணி, 4. எத்தனம், 5. நிமித்தம், 6. ஓரலங்காரம்.
ஏது—ஏதம், 2. யாது.
ஏதுகரம்—வழிவகை, 2. ஆயத்தம்
ஏதை—பேதை.
ஏத்து—(வி) துதி, 2. வணங்கு.
ஏந்தல்—உயரம், 2. பெருமை, 3. பெருமையிற் சிறந்தோன், 4. அரசன், 5. மலை.
ஏந்திரம்—திரிகை, 2. இயந்திரம்.
ஏந்திழை—பெண்.
ஏந்து — (வி) தாங்கு, 2. கையேந்து, 3. உயர்.
ஏப்பம்—தேக்கெறிவு.
ஏமகூடம்—பொன்மலை.
ஏமசிங்கி—மிருதார சிங்கி.
ஏமதவஞ்சம்—போகபூமி யாறிலொன்று.
ஏமபத்திரம்—மலையத்திமரம்.
ஏமம்—இன்பம், 2. மயக்கம், 3. இரா, 4. காவல், 5. புதையல், 6 களிப்பு, 7. திரைச்சீலை, 8. விபூதி.
ஏமம்—பொன்.
ஏமரல் — } (தொ. பெ) காக்கப்படுதல், 2. களித்தல்.
ஏமருதல்— }
ஏமவஞ்சம்—போகபூமி யாறிலொன்று.
ஏமவதி—வசம்பு.
ஏமாத்தல் — (தொ. பெ) செருக்குறல், 2. மிகக்களித்தல்.
ஏமாப்பு—செருக்கு, 2. மிகக்களிப்பு, 3. காவல், 4. கருத்து.
ஏமாறல்—மோசம்போதல்.
ஏமாற்றல்—(தொ. பெ) வஞ்சித்தல்.
ஏமி— உடனிகழ்வான்.
ஏமிலாந்தி-திகைத்து நிற்பவன், 2. மதிகேடன், 3. மயக்கமுடையவன்.
ஏமிலாந்து—(வி) திகைத்துநில், 2. மயங்கிநில், 3. நினைவு சிதறு.
ஏமின்கோலா—ஓர் மீன்.
ஏமுறல் — (தொ. பெ) மயங்கல், 2. களிப்புறல்.
ஏம்பு—(வி) ஏக்கமடை, 2. களி.
ஏய்தல் — (தொ. பெ) பொருந்தல், 2. சேரல், 3. இசையல்.
ஏய்த்தல்—(தொ. பெ) வஞ்சித்தல், 2 ஒப்பாயிருத்தல்.
ஏய்ப்பு—வஞ்சகம்.
ஏரகம்—திருவேரகமென்னு மூர்.
ஏரண்டம்—ஆமணக்குச்செடி
ஏரம்பன்—விநாயகன்.
ஏரல்—கிளிஞ்சில்.
ஏரா— } மரக்கலத்தினடிமரம்.
ஏராமரம்— }
ஏராளம்—மிகுதி.
ஏரி—குளம், 2. புனர்பூசநாள், 3. இடபத்தின் முரிப்பு, 4. புரைகுழல்.
ஏரெழுபது—கம்பர் செய்த ஒரு நூல்.
ஏர்—உவமையுருபு, 2. அழகு, 3. உழுபடை, 4. உழவுமாடு, 5. உழவுத்தொழில்.
ஏர்நாழி—கலப்பையிலோருறுப்பு.
ஏர்பு—எழுச்சி, 2. கிரககதி
ஏர்ப்பண்—பூட்டாங்கயிறு.
ஏலம்—ஆஞ்சி, 2 மயிர்ச்சாந்து, 3. வாசனைப்பண்டம்
ஏலம்—விலை கூறுகை.
ஏலவே—ஏற்கவே.
ஏலாதி—ஒரு நூல்.
ஏலாமை—கூடாமை.
ஏலாள்—தோழி.
ஏலி—கள்.
ஏலு — (வி) பொருந்து, 2. தகுதியாகு, 3. கூடு.
ஏலுநன்—சோழன்.
ஏலை—ஏலம்.
ஏல் — (வி) கொள், 2. ஒப்புக்கொள், 3. அங்கீகரி, 4. பிச்சைவாங்கு, 5. கையிடு, 6. எதிர், 7. இசைவாயிரு.
ஏல்வை—காலம், 2. நாள், 3. வாவி.
ஏவம்—குற்றம்.
ஏவல்—ஆணை செலுத்துகை, 2. ஏவுகை, 3. பணிவிடை, 4. தூண்டுகை, 5. ஏவல்வினைமுற்று, 6. நடத்துகை, 7. பிசாசை யேவி விடுகை.
ஏவறை—ஏப்பம்.
ஏவாங்கம்—அசமதாகம்.
ஏவிளம்பி—ஓர் வருடம்.
ஏவு—அம்பு, 2. வருத்தார்.

ஏவு – (வி) கட்டளையிடு, 2 தூண்டு, 3. அனுப்பு, 4. எய், 5. செலுத்து.
ஏழகம்—செம்மறிக்கடா, 2. தருவாட்டேறு.
ஏழமை—ஏழைத்தன்மை.
ஏழாங்கால் – கலியாணத்துக்கு ஏழு நாளைக்குமுன் நடும் பந்தற்கால்.
ஏழிலைம்பாலை—ஓர் மரம்
ஏழு—ஓரெண்.
ஏழை – வறியன், 2. அறிவிலான், 3. பேதை, 4. பெண்.
ஏழைமை—அறியாமை, 2 பேதைமை, 3. வறுமை.
ஏழ்பிறப்பு – ஏழுபிறப்பு, அஃது தேவர், மக்கள், விலங்கு, பறவை, ஊர்வன, நீர்வாழ்வன, தாவரம்.
ஏளனம் – அவமதிப்பு, 2. சரசம், 3. பரிகாசம்.
ஏளிதம்—இகழ்ச்சி.
ஏற—அதிகமாக, 2. உயர
ஏறங்கோட்பறை—முல்லை நிலப்பறை.
ஏறுளர்— } படைவீரர்.
ஏறுழவர்— }
ஏற்றியவீரி—சவ்வீரபாஷாணம்.
ஏறு – உயர்ச்சி, 2. பசு, சிங்கம், எருமை முதலியவற்றினாண், 3. ஆண் சுறு, 4. ஆண்சங்கு, 5. பனைமுதலிய மரத்தினாண், 6. இடபவிராசி, 7. அச்சுவினிநாள், 8. இடி.
ஏறு – (வி) இவர், 2. வாகனமேறு, 3. கப்பலேறு, 4. உயர், 5. தொகை முதலிய வதிகரி, 6. நஞ்சேறு.
ஏறூர்ந்தோன்—சிவன்.
ஏற்போர்—இரப்போர்.
ஏற்ற—தகுதியான, 2. பக்குவமான.
ஏற்றக்கால்—துலாவைத் தாங்குங்கால்.
ஏற்றக்குறைச்சல்— } உயர்வு தாழ்வு,
ஏற்றத்தாழ்ச்சி— } 2. வேற்றுமை.
ஏற்றச்சால்—நீரிறைக்குஞ்சால்.
ஏற்றம்—உயர்வு, 2. மிகுதி, 3. பெருக்கம், 4. நீரேற்றம், 5. ஏற்றமரம், 6. மேன்மை, 7. புகழ்.
ஏற்று—(வி) எழும்பு, 2. பாரமேற்று, 3. உள்வேற்று, 4. உணர்த்து.
ஏற்றுதுறை—துறைமுகம்.
ஏன—ஏனைய.
ஏனக்கோடு – வெதுப்படக்கி, (ஓர் பூண்டு.)
ஏனம்—பாத்திரம், 2. கருவி, 3. பன்றி, 4 காட்டுப்பன்றி, 5. எழுத்தின்சாரியை, 6. ஓலைக்குடை.
ஏனம்—பாவம்.
ஏனல்—தினை, 2. கதிர், 3. தினைப்புனம்.
ஏனவாயன்—பேதை.
ஏனாதி—தளகர்த்தன், 2. மந்திரி, 3. நாவிதன், 4. மறவன், 5. ஓரிலேகியம்.
ஏனாதிநாயனார் – சிவனடியா ரறுபத்து மூவரிலொருவர்.
ஏனும்—ஓர் வினையெச்ச விகுதி
ஏனை—மலங்கு மீன்.
ஏனைய—ஒழிந்தன
ஏன் – என்னை, 2. இரக்கப் பொருளைத் தருமிடைச்சொல், 3. தன்மை யொருமை விகுதி.
ஏன்றல்—இயலல்.
ஏன்றுகொள்—ஏற்றுக்கொள்.

# ஐ

ஐ—ஒன்பதாமுயிர், 2. இரண்டனுருபு, 3. முன்னிலை யொருமை விகுதி, 4. பெயர் விகுதி, 5. சாரியை, 6. தொழிற்பெயர் விகுதி, 7. யானையைப் பாகரதட்டும் ஓசை.
ஐ—கடவுள், 2. யசமானன், 3. அரசன், 4. ஆசான், 5. தந்தை, 6. அழகு, 7. கோழை, 8. இருமல், 9 நுண்மை.
ஐகான்—ஐகாரம்.
ஐக்கம்— } ஒன்றுபடுகை.
ஐக்கியம்— }
ஐங்கணைக்கிழவன்—மன்மதன்.
ஐங்கரற்கிளையோன்—முருகன், 2. வீரபத்திரன்.
ஐங்கரன்—விநாயகன்.
ஐங்காயம்—ஐந்துகாயம், அஃது பெருங்காயம், மிளகு, வெந்தயம், ஓமம், வெள்ளுள்ளி.
ஐங்குரவர்—ஐம்பெரியோர், அவர் அரசன், குரு, தமையன், மாதா, பிதா.

ஐசுவரியம்—
ஐச்சுவரியம்— } செல்வம்.
ஐதிகம் — அஷ்டபிரமாணத்திலொன்று.
ஐது—செறிவின்மை, 2. நுண்மை.
ஐந்தார்—பனைமரம்.
ஐந்திரம்—இந்திரவியாகரணம், 2. சித்தியயோகத்தொன்று, 3 சிற்பநூலிலொன்று.
ஐந்திரி—இந்திராணி, 2. கிழக்கு.
ஐந்து—ஓரெண்.
ஐந்துருவாணி—தேரகத்துச் செறிகதிர்.
ஐந்துறுப்படக்கி—ஆமை.
ஐந்தை—சிறு கடுகு.
ஐந்தொழில்—பஞ்ச கிருத்தியம், அவை: சிருஷ்டி, 2. ஸ்திதி, 3. சங்காரம், 4. திரோபவம், 5. அனுக்கிரகம்.
ஐப்பசி—அச்சுவினிநாள், 2. ஓர் மாதம்.
ஐமிச்சம்—ஐயம், 2. அச்சம்.
ஐமுகி—ஆமணக்குஞ்செடி.
ஐம்மை—நெருக்கம், 2. கூட்டம், 3. தகட்டு வடிவு.
ஐம்பால்—ஐந்துபால், 2. பெண்மயிர்.
ஐம்புலம்—
ஐம்புலன்— } பஞ்சவிஷயம்.
ஐம்பூதம்—பஞ்சபூதம்.
ஐம்பொறி—பஞ்சேந்திரியம்.
ஐயகோ—ஐயோ.
ஐயங்கவீனம்—புதுவெண்ணெய்.
ஐயங்கன்—ஓர் பேய்.
ஐயங்காய்ச்சி—ஓர் பெண்பேய்.
ஐயங்கார்—வைணவப் பிராமணர்.
ஐயஞ்சு—சிலப்பனைக்கிழங்கு.
ஐயம்—சந்தேகம், 2. பிச்சை, 3. இரப்போர்கலம், 4. சிலேட்டுமம்.
ஐயர்—பார்ப்பார், 2. முனிவர், 3. உயர்ந்தோர், 4. வானோர்.
ஐயவி—கடுகு.
ஐயனார்—அரியரபுத்திரன்.
ஐயன்—பிதா, 2. மூத்தோன், 3. குரு, 4. உயர்ந்தோன், 5. அரசன், 6. உபாத்தியாயன், 7. ஐயனார், 8. அருகன்.
ஐயானனம்—சிங்கம்.
ஐயுறவு—சந்தேகம்.

ஐயெனல்—விரைவுக்குறிப்பு.
ஐயே—விளிக்குறிப்பு.
ஐயை—தலைவி, 2. மகள், 3. தவப்பெண், 4. பார்ப்பதி, 5. காளி, 6. துர்க்கை.
ஐயோ—அதிசய விரக்கச்சொல்.
ஐராணி—இந்திராணி, 2. பார்வதி.
ஐராவணம்—
ஐராவதம்— } இந்திரனுடையயானை, 2. கீழ்த்திசை யானை.
ஐராவதி—ஒரு நதி.
ஐவணம்—
ஐவணி— } மருதோன்றிமரம்.
ஐவர்—பஞ்சபாண்டவர், 2. ஐம்புலன்.
ஐவனம்—மலைநெல்.
ஐவிரல்—அத்தநாள்
ஐவேசு—கையிருப்பு.
ஐவேலி—ஓர் சிவஸ்தலம்.

## ஒ

ஒ- ஓருயிரெழுத்து.
ஒகரம்—ஒ. ஓரெழுத்து, 2 மயில்.
ஒக்க - ஒருமிக்க, 2. கூட, 3. சமமாயிருக்க, 4. நிகர்க்க, 5. பொருந்த.
ஒக்கம்—ஊர்.
ஒக்கல் — ஒத்தல், 2. சுற்றம், 3. குடும்பம், 4. மூட்டுகை, 5. இடைப்பக்கம்.
ஒக்குதல்—கொப்பளித்தல், 2. பிற்படவிடல், 3. ஒத்திருக்கை.
ஒக்கோலை — கடல்படு திரவியமைந்திலொன்று, (அம்பர்).
ஒசி—(வி) முறி, 2. ஒடி, 3. அசை.
ஒசிவு—முரிவு, 2. அசைவு.
ஒச்சந்தம்—குறைந்திருக்கை.
ஒச்சம்—கூச்சம்.
ஒச்சித்தல்-(தொ.பெ)வெட்கப்படுதல்.
ஒச்சியம் — கூச்சம், 2. பரிகாசம், 3. நிந்தை.
ஒச்சை — காந்தற்சோறு, 2. உற்றுக்கேட்கை.
ஒஞ்சட்டை—ஒல்லி.
ஒஞ்சரி—(வி)சிறிதுசாத்து, 2. ஒரு பக்கமாய்ப்போ.
ஒஞ்சி—
ஒஞ்சு— } (வி) வெட்கப்படு.
ஒடிசில்—கவண்.

கவாத்து— } ஆயுதபரிட்சை.
கவாய்த்து— }
கவாய்— } மெய்யுறை.
கபாய்— }
கவாளம்—ஓர் மருந்து, 2. கவணம்.
கவான்—தொடை.
கவி—சுக்கிரன், 2. புலவன், 3. குரங்கு, 4. பூனைக்காலிச்செடி, 5. நாற்கவி, 6. பாட்டு.
கவி—(வி) வளை, 2. விரும்பு.
கவிகம்—குக்கில்.
கவிகுருந்தம்—கந்தகபாஷாணம்.
கவிகை—கவிதல், 2. குடை, 3. ஈகை.
கவிசனை—உறை.
கவிசினம்—கோவணம்.
கவிசை—ஓர் வயிற்றுநோய்.
கவிச்சக்கரவர்த்தி—புலவன்.
கவிச்சு—புலால்.
கவிஞன்—புலவன்.
கவிதை—பாட்டு.
கவித்தம்—விளாமரம்.
கவித்துவம்—கவிபாடும் திறமை.
கவிப்பர்—செட்டிகள்.
கவியம்—கடிவாளம்.
கவிரம்—அலரிமரம்.
கவிர்—முண்முருக்கமரம்.
கவிழ்—(வி) தலைகீழாகு, 2. தலையிறங்கு, 3. குனி, 4. கெடு, 5. தோல்வியுறு, 6. இற.
கவினம்—கடிவாளம், 2. வெண்ணெய்.
கவினல்—அழகாயிருத்தல்.
கவின்—அழகு, 2. தக்கபண்பு.
கவீனம்—பசுமேய்ந்த இடம்.
கவுசி—குழைவு, 2. வருத்தம்.
கவுடி—ஓர் பண்.
கவுதாரி—ஓர் பறவை.
கவுல்—உடன்படிக்கை, 2. துர்க்கந்தம்.
கவுள்—கதுப்பு, 2. யானைக்கதுப்பு, 3. யானைமதம் பாயிடம்.
கவுணி — குதிரைப்பற்பாஷாணம், 2. வாசல்.
கவை—மரக்கப்பு, 2. கவர்வழி, 3. காடு, 4. கோட்டை, 5. வேலி.
கவைத்தாள்—நண்டு.
கவைநா—பாம்பு.
கவ்வாணம்—ஓர் பண்.
கவ்வியம்—கௌவியம்.
கவ்வு—கவர், 2. பெருமை.
கவ்வுதல் — (வி) வாயினாற் பற்றுதல், 2. கவர்தல்.
கவ்வை—(கௌவை) காரியம், 2. ஒலி, 3. கள், 4. துன்பம், 5. பழிச்சொல், 6. எள்ளிளங்காய்.
கழகம்— } கல்வி பயிலுமிடம், 2. கல்விச்சங்கம், 3. படைபயிலுமிடம், 4. மல்பயில்சாலை, 5. சூதாடுமிடம், 6. சூது.
கழகு— }
கழங்கம்—சூதாடு கருவி.
கழங்கு—கழற்சிக்கொடி, 2. கழற்சிவிளையாட்டு, 3. வெறியாட்டாளனுடல்.
கழஞ்சு—பன்னிரண்டு பணவெடை.
கழப்பன்— }
கழப்பாளி— } வேலைக்கள்ளன்.
கழப்புணி— }
கழப்பு — (வி) வேலைசெய்யாது காலம் போக்கு.
கழலு— } (வி) நெகிழ்ந்துபோ, 2. பொருத்து விலகு.
கழல்— }
கழலை—புரைகுழல், 2. கழலைக்கட்டி.
கழல்—கால், 2. வீரக்கழல், 3. கொடையாளரணிவது, 4. செருப்பு, 5. கழற்கொடி.
கழற்கொடி— } ஓர் கொடி.
கழற்சி— }
கழற்பதி—பெருங்குமிழ மரம்.
கழற்று — (வி) கழலச்செய், 2. ஆடைமுதலியன கழற்று, 3. நீக்கு.
கழற்றுரை—கடிந்து பேசுஞ்சொல்.
கழனி—வயல், 2. மருதநிலம், 3. சேறு, 4. திரைச்சீலை.
கழாயர்—கழைக்கூத்தர்.
கழாய்—கழுகு.
கழி—நூற்சுருள், 2. உப்பளம், 3. உப்பாறு, 4. யாழினையிசைக்குங்கருவி, 5. கொம்பு, 6. மிகுதி, 7. மெழுகுவர்த்தி.
கழிகடை—அறக்கெட்டது.

கழிச்சல்—கழிதல், 2. பேதியாதல்.
கழிதல் — (வி) கடத்தல், 2. செல்லல், 3. வயிறு பேதித்தல், 4. பிரிதல், 5. மிகுதல், 6. சாதல்.
கழித்தல்—(வி) அகற்றல், 2. நீக்கல், 3 ஒழித்தல், 4. கணக்குக்கழித்தல், 5. குறைத்தல், 6. தள்ளிக்கொடுத்தல், 7. கழற்றல், 8. விலக்கல், 9. காலம்போக்கல்.
கழிநிலம்—உவர்த்தரை, 2. உப்பளம்
கழிபிறப்பு—முற்பிறப்பு.
கழிப்புல்—ஒருவகைப் புல்
கழிமுட்டான்—ஓர் புல்.
கழிவு — கழிகை, 2. மிகுதி, 3. கழிகடை, 4. நீங்குகை, 5. கழிப்புக்கணக்கு, 6. தள்ளுபடி, 7 சேஷம், 8. இழிவு.
கழு—கழுமரம், 2. சூலம், 3 கழுகு, 4. புற்பற்றை.
கழுகு—ஓர் பறவை.
கழுக்கடை—ஈட்டி.
கழுக்காணி—குறளன்.
கழுக்குன்றம்—ஒரு மலை.
கழுது—பிசாசம், 2. பரண், 3. வண்டு, 4. காவல்.
கழுதை—கத்தபம், 2. மூடன், 3. வடமேற்றிசைப்பாலன் குறி.
கழுதைத்திசை—வடமேற்றிசை.
கழுதைவாகனி—மூதேவி.
கழுத்தல்—பொய்.
கழுத்து—கண்டம்.
கழுநீர்—உற்பலம்.
கழுந்து—மரவைரம், 2. தேய்ந்து மழுங்கித் திரண்ட வடிவம்.
கழுமரம்—கழு.
கழுமு—(வி) இணை, 2. மயங்கு, 3. நிறை, 4. மிகு.
கழுமுள்—ஈட்டி, 2. சூலம், 3. கழுமரம்.
கழுவு—(வி) நீராற்கழுவு, 2. மனவழுக்குக்கழுவு.
கழை—மூங்கில், 2. கரும்பு, 3. புகர்பூசம்.
களா—களாச்செடி.
களகண்டம்—குயில்.
களகம்—பெருச்சாளி.
களகம்பளம்—அலைதாடி.
களகளப்பு—ஓர் ஈரடுக்கொலிக்குறிப்பு.
களகளம்—பேரொலி.
களகளவெனல்— } ஈரடுக்கொலிக்குறிப்பு.
களகளெனல்— }
களகொளெனல்—ஒலிக்குறிப்பு.
களக்கர்—புலையர், 2. வேடர்.
களங்கட்டி—ஓர் மீன்.
களங்கம் — அடையாளம், 2. மாசு, 3. குற்றம், 4. கறுப்பு, 5. நீலம், 6. களிம்பு, 7. சிந்தூரகபாஷாணம்.
களங்கன்—சந்திரன், 2. மாசுள்ளோன்.
களங்கு—பலலோகங்களாலுண்டாக்கிய இரசகுளிகை.
களஞ்சி—சூதபாஷாணம்.
களஞ்சியம் — தானியமிருக்கு மிடம், 2. பொக்கசசாலை.
களதவுதம்— }
களதூதம்— } வெள்ளி.
களதௌதம்— }
களத்திரம்—மனைவி, 2. குடும்பம்.
களத்தூர்— } ஓரூர்.
களந்தை— }
களந்துரி—தான்றிக்காய்.
களபம் —யானை, 2. கலவைச்சாந்து, 3. யானைக்கன்று, 4. கலப்பு, 5. சுட்ட சாந்து.
களப்பன்வனை—ஓர் செடி.
களப்பு—கடலிறுழமில்லாவிடம்.
களமர் — உழுநர், 2. மருதநிலமாக்கள், 3. சூத்திரர்.
களமூர்—ஓரூர்.
களம்-இடம், 2. கறுப்பு, 3. விடம், 4. மிடறு, 5. மனைவி, 6. களர்நிலம், 7. நெற்களம், 8. போர்க்களம், 9. கடலின்மேடு.
களரவம்—புறு.
களரி—போர்க்களம், 2. காடு, 3. கருமை, 4. மிடறு, 5. களர்நிலம், 6. பாழ்நிலம், 7. நாடகசாலை, 8. கூட்டம்.
களர்—களர்நிலம்.
களவம்—கலப்பு.

களவன்—கள்வன், 2. நண்டு, 3. கற்கடக விராசி.
களவு—திருட்டு, 2. வஞ்சனை, 3. கள்ளவொழுக்கம், 4. கள்ளவேலை, 5. களாச்செடி, 6. உன்மத்தம்.
களவுதம்—வெள்ளி.
களன்—இடம், 2. மருதநிலம், 3. உன்மத்தம், 4. ஒலி, 5 நட்பு, 6. சபை, 7. கழுத்து.
களா—களாச்செடி.
களாசம்—பிரம்பு.
களாசாத்திரம்—காமநூலி னென்று.
களாபடனம்—தயாவிருத்தி பதினென்கி னென்று; அஃது கற்பித்தல்.
களாவகம்—சிறுகீரை
களி—மகிழ்ச்சி, 2. கள் முதலிய அருந்திக்களிக்கை, 3. மதம், 4. மயக்கம், 5. கள், 6. செருக்குள்ளவன், 7. இறுகிய பழச்சாறு, 8. குழம்பு, 9 மாவாற்கிண்டிய களி.
களி—(வி) சந்தோஷி, 2. மிகுமகிழ்ச்சியடை, 3. களிப்படை, 4. செருக்குறு, 5. இன்புறு, 6 வெறிகொள், 7. களியாடு.
களிகம்—வாலுளுவை, (ஓர் மருந்து.)
களிகை—இளம் பூவரும்பு.
களிக்கண்—கம்மியர் கருவியினொன்று.
களிக்குளம்—ஓரூர்.
களிதம்—வழுக்கல், 2. பெருங்கல்.
களித்துறை—இலங்கைத் தீவில் ஓரூர்.
களிப்பு—அதிக சந்தோஷம், 2. மகிழ்ச்சி, 3. செருக்கு, 4. சிற்றின்பம், 5. மதர்ப்பு, 6. உள்ளக்களிப்பு.
களிமண்—பசைமண்.
களிமம்—எலி.
களிம்பு—மலினம், 2. துரு, 3. குற்றம்.
களியாட்டு—மதுவெறியாட்டு.
களிவாய்நஞ்சன்—ஓர் பாம்பு.
களிறு — ஆண்யானை, 2. ஆண்பன்றி, 3. ஆண்சுறு, 4. அத்தநாள், 5. விலங்கினாண்பொது.
களுக்குக்களுக்கென—ஒலிக்குறிப்பு.
களேபரம் — எலும்பு, 2. பிணம், 3. உடல்.

கவை—பயிர்க்களை, 2. அயர்வு, 3. காந்தி, 4. அழகு, 5. குற்றம், 6. தாளப்பிரமாணம் பத்தினொன்று.
கவை—(வி) சீலை முதலிய களை, 2. களைபிடுங்கு, 3. கொல், 4. அகற்று, 5. கணைக்குக்கழி.
கவைகட்டு—(வி) களைபிடுங்கு.
கவைகண்—ஆதரவு, 2 உதவி.
கவைகொட்டு— } களைகளையுங்கோல்.
கவைகோல்— }
கவைஞர் — பண்டாளர், 2 களைகளைப் பறிப்போர்.
கவைத்தல்—(வி) இளைப்புறல்.
கவையாற்று—(வி) இளைப்பாற்று.
கவைவாரி—களைபறிக்குங்கருவி.
கள்—மது, 2. பன்மைவிகுதி, 3. தேன், 4. களவு, 5. பொய்.
கள்— } (வி) திருடு, 2. வஞ்சி.
கள்ளு— }
கள்வன்—திருடன், 2. கரியன், 3. நண்டு, 4. கர்க்கடகவிராசி, 5. குரங்கு, 6. முசு, (ஓர் நவசைக் குரங்கு) 7. யானை.
கள்ளச்சாதி—ஒரு சாதி.
கள்ளச்சொல் — பொய், 2. திருட்டுப் பேச்சு.
கள்ளம்—வஞ்சகம், 2. களவு, 3. பொய், 4. குற்றம், 5 புண்ணினுட்கள்ளம், 6. கபடம்.
கள்ளல்—(தொ. பெ) களவுசெய்தல்.
கள்ளன் — திருடன், 2. கள்ளச்சாதியான்.
கள்ளி—ஓர் மரம், 2. திருடி.
கள்ளு—மது.
கற — (வி) பால்கற, 2. கவர், 3. பசுப்பால் கொடு.
கறகறெனல்—பேச்சினலலட்டல், 2. ஒலிக்குறிப்பு.
கறங்கல்—பேய், 2. வனைதடி.
கறங்கு—காற்றாடி, 2. சுழற்சி.
கறங்கு—(வி) சுழல், 2. ஒலி.
கறல்—விறகு.
கறவை—பாற்பசு.

கறவா—குள்ளன், 2. வளராத மர முதலியன.
கறள்—கறை, 2. துரு.
கறு—காடைக்குரல்.
கறுர்—நிதானம்.
கறுளி—அடங்காமை.
கறி—பதார்த்தம், 2. மிளகு.
கறித்தல் – (தொ. பெ) கடித்தல், 2. புசித்தல்.
கறிப்புடல்—சாதவண்டு.
கறிமசாலை—கறிச்சரக்கு.
கறு—கோபம்.
கறுத்தல்—(தொ. பெ) கருமையாதல், 2. கறைப்படுதல், 3. கோபித்தல்.
கறுப்பன்—கரியன், 2. ஒரு தேவதை, 3. கார்நெல்.
கறுப்பி – எவக்ஷாரம், 2. கருவண்டு, 3. காகதிமிலை.
கறுப்பு—கருமை, 2. சினக்குறிப்பு, 3. சினம், 4. கறை.
கறுமுறெனல்— } சினக்குறிப்பு.
கறுமொறெனல்— }
கறுவம்—ஆங்காரம், 2. சினம்.
கறுவல் – கரியன், 2. கரியது, 3. கருநிறம், 4. சினக்குறிப்பு.
கறுவு – (வி) சினக்குறிப்புக்காட்டு, 2. சின, 3. சலஞ்சாதி.
கறுவு—சினக்குறிப்பு, 2 சினம், 3. சலஞ்சாதிக்கை.
கறுள்—கடிவாளம்.
கறேரென்றிரு—கறுப்பாயிரு.
கறை—மாசு, 2. குற்றம், 3. கறுப்பு, 4. இரத்தம், 5. உரல், 6. கருங்காலிமரம், 7. குடியிறை, 8. நிறம்.
கறைக்கண்டன்— } சிவன்.
கறைமிடற்றோன்— }
கறையடி—யானை.
கறையான்—செல்.
கற்கசர்—கீழ்மக்கள், 2. உலோபிகள்.
கற்கடகசிங்கி—கடுக்காய்ப்பூ.
கற்கண்டு—கருப்புக்கட்டி.
கற்கம் – பலவகைக் கூட்டு மருந்து, 2. கஷாயவண்டல் முதலிய, 3. இலுப்பைப்பூ, 4. கடைமருந்து.

கற்கரி—கரகம், 2. தயிர்கடைதாழி.
கற்கா—ஒரு கொடுந்தமிழ் நாடு.
கற்கி—குதிரை, 2. விஷ்ணு அவதாரத்திலொன்று, 3. தேவாலயம்.
கற்சூரம்—பேரீந்து.
கற்பகக்கரம்—கோழித்தலைக் கந்தகம்.
கற்பகம்— } பஞ்சதருவிலொன்று.
கற்பகவிருக்ஷம்— }
கற்பளை— } கோட்டையிற் கள்ளவழி.
கற்புழை— }
கற்பம் – பிரமனாயு, 2. உலகமுடிவு, 3. சித்தர்கள் மருந்து, 4. மூப்புவராமற் செய்யுமருந்து, 5. பிரமனோர் நாள், 6. தேவலோகம், 7. ஆயிரங்கோடி, 8. மந்திரசாஸ்திரம், 9. வேதாங்கமாறிலொன்று, 10. நவநிதியிலொன்று.
கற்பரன்—வெள்ளைப் பாஷாணம்.
கற்பனை – புனைந்துரை, 2. கற்பிப்பு, 3. கல்வி, 4. கட்டளை, 5. விதிப்பு, 6. நிருணயம், 7. சாதுரியம், 8. பாவனை.
கற்பாந்தம்—கற்பமுடிவு.
கற்பாரியம்—சிற்பநூலிலொன்று.
கற்பாலவணம்—சிந்துலவணம்.
கற்பாறை—கன்னிலம்.
கற்பி – (வி) படிப்பி, 2. உண்டாக்கு, 3. கட்டளையிடு, 4. விதி, 5. நியமி, 6. பாவனைசெய், 7. தொழிலில் ஸ்தாபி.
கற்பிதம் – போர்யானை, 2. நியமம், 3. விதிப்பு, 4. கட்டளை, 5. பாவனை, 6. அலங்கரிப்பு.
கற்பு – மகளிர்கற்பு, 2. முறைமை, 3. கல்வி, 4. விதி, 5. மதிலுண்மேடை, 6. மதில், 7. நீதிநெறி, 8. கற்பனை.
கற்பூரம்—கருப்பூரம், 2. பொன்னாங்காணி.
கற்று—கன்றையுடைய பசு.
கற்றாழை—ஒரு செடி.
கற்றை—மயிர்த்தொகுதி, 2. வைக்கோற்கற்றை, 3. புற்கற்றை, 4. கதிர்க்கற்றை, 5. தென்னோலைக்கற்றை.

கன—(வி) பாரமாயிரு, 2. பரு, 3. அதிகரி.
கனகசபை—சிதம்பரம்.
கனகதப்பட்டை—ஓர் வாச்சியம்.
கனகதம்—ஒட்டகம்.
கனகதர்—சண்டாளர், 2. புலையர்.
கனகம்—பொன்.
கனகன்—இரணியன்.
கனகாசலம்—மேருமலை
கனங்காய்—ஓர் மரம்.
கனசாரம்—கருப்பூரம்
கனதி — பருமை, 2 பாரம், 3. இறுமாப்பு
கனத்தி—வைப்பரிதாரம்.
கனநய தேசியங்கள்—இராகபேதம்.
கனப்பு — தடிப்பு, 2. பாரம், 3. அழுத்தம், 4. கொழுப்பு, 5. இறுமாப்பு.
கனமழை—பெருமழை.
கனம்—பாரம், 2. பருமை, 3. கனத்த வடிவு, 4. பெருமை, 5. பாரசிந்தனை, 6. மிகுதி, 7. இசைவிகற்பம், 8. செறிவு, 9. வன்மை, 10. அகலம், 11. கூட்டம், 12. மேகம், 13. பொன், 14. கோரைக்கிழங்கு, 15. வட்டம், 16. சீர்மை.
கனருசி—மின்னல்.
கனலி—சூரியன், 2. நெருப்பு, 3. பன்றி.
கனலு—(வி) எரி, 2. காய், 3. கோபி.
கனல்—நெருப்பு.
கனவட்டம் — குதிரை, 2. பாண்டியன் குதிரை.
கனவான்—மதிப்புடையோன்.
கனவிரதம்—நீர்.
கனவு—கனா, 2. நித்திரை, 3. மயக்கம்.
கனறல்—(வி) கனலுதல்.
கனற்கூர்மை—வளையலுப்பு.
கனற்சி—வெப்பம், 2. சினம்.
கனற்சிலை—மந்தாரச்சிலை.
கனற்பு—அழிப்பு.
கனற்று—(வி) சுடு, 2. எரி.
கனனம்—புதைத்தல்.
கனன்றல் — (வி) கனலுதல், 2. சினக்குறிப்பு.

கனா—கனவு.
கனி—பொன்முதலியன பிறக்குமிடம்.
கனி—பழம், 2. முதிர்ந்தபழம், 3. தித்திப்பு.
கனி —(வி) பழு, 2. பழுக்கக்காய், 3. கரை, 4. உருகு, 5. மனங்களி, 6. கோபி, 7. புதை.
கனிகரம்—அன்பு.
கனிஷ்டம்— } சிறுமை, 2. கடைவிரல்.
கனிட்டம்— }
கனிட்டன்—தம்பி, 2. கீழ்மகன்.
கனிட்டிகை—கடைவிரல்.
கனிட்டை—கடைவிரல், 2. பின்பிறந்தாள்.
கனித்திரம்—மண்வெட்டி.
கனியாமணக்கு — ஒராமணக்கஞ்செடி, 2. பப்பாமரம்,
கனிவு — முதிர்வு, 2. இரங்குகை, 3. அன்பு.
கனுக்கு — (வி) சுந்தத்திலசை, 2. சரங்கப்பண்ணு.
கனை—ஒலி, 2. செறிவு, 3. நிறைவு.
கனை—(வி) ஒலி, 2. குதிரை முதலிய கனை, 3. கொக்கரி, 4. கனைத்தொலி.
கனைப்பு—ஒலிப்பு, 2. குதிரை முதலியவற்றின் கனைப்பு, 3. கொக்கரிப்பு.
கன் — சிறு தராசுத்தட்டு, 2 கன்னார் தொழில்.
கன்மகாண்டம்—ஓர் வைத்திய நூல்.
கன்மடம்— } பாவம், 2. அழுக்கு, 3. கறை, 4. ஈயம்.
கல்மஷம்— }
கன்மநிவர்த்தி—பாவப் பிராயச்சித்தம்.
கன்மபரிபாகம்—கன்மவொழிவு.
கன்மபூமி—பூலோகம்.
கன்மம் — பாவம், 2. செய்தொழில், 3. தீவினை, 4. இருவினை.
கன்மி—கருமி, 2. பாவி.
கன்மேந்திரியம்—கிரியைக்குரிய பொறி, அவை உபத்தம், பாணி, பாதம், பாயுரு, வாக்கு.
கன்று—(வி) காயத்தினாற்கன்று, 2. வெயிலினால் முகங்கன்று, 3. பதனழி, 4. விசனப்படு, 5. கடுங்கோபங்கொள்.

கன்று — எருமை, ஒட்டை, கடமை, கவரி, காட்டா, குதிரை, பசு, மரை, மான், யானையிவற்றின் குட்டி, 2. இளமரம், 3. அற்பம், 4. கைவளை.
கன்றுகாலி—மாடு கன்று முதலியன.
கன்னகடூரம்—காதால் கேட்கப்படாத கொடியது.
கன்னகம்— } சுவரகழ் கருவி.
கன்னக்கோல்— }
கன்னக்காரன்—கன்னமிடுபவன்.
கன்னபரம்பரை — வாக்கு மூலமாய் வழங்குவது.
கன்னப்பூ—காதணியி லொன்று.
கன்னமதம்-யானைமும்மதத்திலொன்று.
கன்னம் — கதுப்பு, 2. கன்னக்கோல், 3. காது, 4. யானைச்செவி, 5. நரம்பு, 6. அக்ஷகன்னம், 7. கிரகமார்க்க வளவு, 8. பொற்கொல்லன், 9. தரா சுத் தட்டு.
கன்னல்—கரும்பு, 2 சருக்கரை, 3. கரகம், 4. நாழிகை, 5. நாழிகை வட்டில்.
கன்னவேதம்— } காது குத்தல்.
கன்னவேதை— }
கன்னன்—இடை யெழுவள்ளலி லொருவன்.
கன்ஞ—ஒரு வாச்சியம்.
கன்ஞடம் — ஓர் பாஷை, 2. தேயமைம்பத்தாறிஞென்று.
கன்ஞபின்ஞவெனல்—உருத்தெரியாமற் சொல்லல், 2. குளறல்.
கன்னி—குமரி, 2. ஓரிராசி, 3. ஓராறு, 4. இளமை, 5. கற்புக்கெடாமை, 6. பெண், 7. அத்தநாள், 8. கற்றாழைச்செடி, 9. காக்கணங்கொடி, 10. அழிவில்லாமை, 11. தவப்பெண், 12. தெய்வப்பெண், 13. துர்க்கை, 14. காவிளைப்பூடு.
கன்னிகாரம்—கோங்குமரம்.
கன்னிகை—கன்னிமை யழிவில்லாள், 2. தாமரைப் பூங்கொட்டை, 3. பூவரும்பு.
கன்னித்துவம்— } கன்னித்தன்மை.
கன்னிமை— }
கன்னிநாடு—பாண்டிநாடு.
கன்னிமார் — சிறுபெண்கள், 2. சத்த கன்னிகள்.
கன்னியாகுமரி — இந்தியாவின் தென் கோடிமுனை, 2. ஓர் யாறு
கன்னிறம்—ஓர் செடி.
கன்ஞுவர்—கன்ஞர்.
கன்ஞுறுகம்—சிறுகீரை.
கன்வண—கட்சி

## கா

கா—காவடி, 2. துலாக்கோல், 3. சோலை, 4. பூந்தோட்டம், 5. அசைச்சொல்.
கா—(வி) பாதுகா, 2. காப்பாற்று, 3. விழிப்பாயிரு, 4. காவல்செய், 5. வளர், 6. எதிர்பார், 7. விரதங்கா.
காகதாலியம்-காகமிருக்கப் பனம்பழம் விழுவதுபோலத் தற்செயலாய்ச் சம்பவிப்பது.
காகதுண்டம்—அகிலமரம்.
காகதேரி—மணித்தக்காளிச்செடி.
காகத்துரத்தி — ஆதொண்டை, (ஓர் கொடி.)
காகநதி—காவேரி, 2 காவிரிப்பூம் பட்டினம்.
காகபட்சம்—பக்கக்குடுமி.
காகபதம்—ஓர் காலவளவு.
காகபாஷாணம்—ஓர் பாஷாணம்.
காகப்புள்—அவிட்டநாள், 2. காக்கை.
காகம் — காக்கை, 2. வட கீழ்த்திசைப் பாலன்குறி, 3. கிரி.
காகவாகனன்—சனி.
காகளம்—புள்ளோசை, 2. எக்காளம்.
காகாபிசாசு— } இரத்த முண்ணும் வாவற்பறவை.
காகாவிரிச்சி— }
காகாரி—ஆந்தை.
காகிதம்—கடிதம், 2. கடிதத்தாள்.
காகித்தம்— } குறிஞ்சாச்செடி.
காகித்திரம்— }
காகுத்தன்—ஸ்ரீ இராமபிரான்.
காகுளி—மிடற்றெழுமோசை, 2. மந்தவிசை, 3. இசை, 4. மெத்தை, 5. ஆசனம்.
காகூவெனல்—ஒலிக்குறிப்பு.

காகொடி—எட்டிமரம்.
காகோடகி—வாலுளுவை, (ஓர் மருந்து.)
காகோடியர்—கூத்தர்.
காகோதரம்—பாம்பு.
காகோலம்—அண்டங்காக்கை.
காகோளி—அசோகமரம், 2. கொடிய ரசமரம், 3. தேட்கொடுக்கி, (ஓர்பூடு.)
காக்கட்டான்— } கருவிளை, (ஓர்கொடி.)
காக்கணம்— }
காக்கம்—காக்குறட்டைச்செடி, 2 கோவைக்கொடி.
காக்கன்போக்கன்—துன்மார்க்கன்.
காக்காச்சி—ஒருமச்சி
காக்காய்— } காகம், 2 அவிட்டநாள்.
காக்கை— }
காக்காய்க்கோல்லி—ஓர் செடி.
காக்காய்ப்பொன்—போலிப்பொன்.
காக்காய்மூக்கி—கருமூகிற் பாஷாணம்.
காக்காய்வலி—ஓர் நோய்.
காக்காவெனல்—ஒரொலிக்குறிப்பு.
காக்குறட்டை—காக்கணங் கொவ்வை (ஒரு கொடி.)
காக்கைக்கொடியாள்—மூதேவி.
காக்கைபாடினியம் — ஓரியாப்பிலக்கணம்.
காங்கிசை—விருப்பம்.
காங்கு—நீலப்புடவை, 2. பெரும்பானை.
காங்கேயம்—பொன், 2. ஓர் தேயம்.
காங்கேயன்—குமரன், 2. வீட்டுமாசாரி.
காங்கை—வெப்பம்.
காங்கையன்—வைப்பு நீலப்பாஷாணம்.
காசம்—ஈளைநோய், 2. கோழை, 3. கண்ணிஞ்ரோர் நோய், 4. ஓர் தேயம், 5. கற்பாஷாணம், 6. பொன்.
காசறை—மயிர்ச்சாந்து, 2. மணி, 3. கத்தூரி மிருகம்.
காசனம்—கொலை.
காசரி—காயாசெடி, 2. நாணற்புல்.
காசாண்டி— } ஓர்வகைச்செம்பு.
காசாண்டிச்செம்பு— }
காஷாயம்—காவிச்சிலை.
காசி—ஓர் நகரம், 2. சீரகம்.
காசிக்கல்—காசக்கல்.
காசிபப்பிரமா— } ஓரிருடி.
காசிபன்— }
காசிபம் — தருமநூல் பதினெட்டினுென்று.
காசிரம்—வட்டம்.
காசிரோர்த்தம் — வறட்சுண்டி, (ஓர் செடி.)
காசினி—பூமி.
காசு—பணம், 2. சிறுகாசு, 3. பொன், 4. மணிப்பொது, 5. மாதரணிவடம், 6. கோழை, 7. குற்றம், 8. வெண்பாவிறுதிச் சீருளொன்று.
காசுக்கட்டி—ஓர் மருந்து.
காசுமீரம்— } ஓர் தேயம்
காஸ்மீரம்— }
காசை—நாணற்புல், 2. காயா, (ஓர் மரம்), 3. க்ஷயரோகம்.
காச்சக்கீரை— } புளிச்சக்கீரை.
காச்சாக்கு— }
காச்சிரக்கு— }
காச்சுப் பீச்செனல்— } ஒலிக்குறிப்பு.
காச்சுமூச்செனல்— }
காஞ்சம்—துருசி.
காஞ்சனமாலை—மலயத்துவச பாண்டியன் மனைவி.
காஞ்சனம்—பொன், 2. புன்கமரம்.
காஞ்சனி—மஞ்சள்.
காஞ்சா—கஞ்சாச்செடி.
காஞ்சி—ஒரூர், 2. நாத்தாங்கி, 3. எண்கோவைமணி, 4. ஓர் மரம், 5. ஓர் பண், 6. நிலையின்மை.
காஞ்சிகா— } எட்டிமரம்.
காஞ்சிரம்— }
காஞ்சிரை— }
காஞ்சினி—மஞ்சிட்டி, (ஓர் கொடி.)
காஞ்சுகம்— } சட்டை.
காஞ்சுகி— }
காஞ்சொறி—ஓர் செடி.
காடகம்—சீலை.
காடவிளக்கு—ஒருவகை விளக்கு.
காடன்—ஓர் மீன்.
காடாக்கினி—பெருநெருப்பு.
காடாந்தகாரம்—அனவிருள்.

காடி — புளித்த நீர், 2. புளித்தகள், 3. கஞ்சி, 4. தோண்டுகால், 5. ஓர் வகை வண்டி, 6. நெய், 7. ஊறுகாய்.
காடிகம்—சீலை.
காடிக்காரம்—நெருப்புக்கல்.
காடினியம்—அதிக கடினம்.
காடு—வனம், 2. ஆரணியம், 3. சுடுகாடு, 4. மிகுதி, 5. ஒரு தொழிற்பெயர் விகுதி, 6. இடம், 7. எல்லை, 8. ஊர், 9. பரணிநாள், 10. செத்தை.
காடுகாள்—வடுகன்றாய்.
காடுவாரி—ஓர் கருவி, 2. சேர்ப்பவன்.
காடுவெட்டி—சிறு மண்வெட்டி, 2. மூடன்.
காடேறி—ஓர் பிசாசம்.
காடை—ஒரு புள்.
காடைக்கண்ணி—ஓர் தினை.
காடைக்கழுத்தன்—ஓர் நெல்.
காடைப்புடம்—மூவெருப்புடம்.
காட்சி—பார்வை, 2. தோற்றம், 3. தரிசனம், 4. பிரத்தியட்சப்பிரமாணம், 5. அறிவு, 6. பத்தவத்தையினொன்று அது தலைமகளைத் தலைமகன் தனியிடங் காண்டல்.
காட்சிப்பொருள்—காணப்படுபொருள்.
காட்சியணி—ஓரலங்காரம், அஃது உபமானோபமேயங்களின் காட்சியை ஆரோபித்தல்.
காட்சியர்— } அறிஞர்.
காட்சியவர்— }
காட்டகத்தி—வீழி, (ஓர் செடி)
காட்டத்தி—பேயத்திமரம்.
காட்டம்— } விறகு, 2. வெண்கலம்.
காஷ்டம்— }
காட்டாள்—நாகரிகமில்லாதவன்.
காட்டிலுமிழி—நாகரவண்டு.
காட்டு—(வி) காண்பி, 2. சுட்டிக்காட்டு, 3. தெரிவி, 4. உருபி, 5. நிவேதனஞ்செய், 6. தெரியக்காட்டு, 7. வெளிப்படுத்து, 8. சாயைகாட்டு, 9. நினைப்பூட்டு.
காட்டுமாவிரை—சாரப்பருப்பு.
காட்டுமிருகம்—வனமிருகம், 2. கானக்குதிரை.
காட்டுமிருகாண்டி—முருடன்.
காட்டுமுருங்கை—மாவிலங்கை, (ஓர் மரம்.)
காட்டெருக்கம்பால் — எருக்கம்பால், 2. கள்ளிப்பால், 3. கூகைநீறு, 4. அங்குசரோசனம்.
காட்டேரி—ஒரு துஷ்டதேவதை.
காட்டை—திசை, 2. காலம், 3. காலமட்டம், 4. எல்லை, 5. நுனி.
காணம்—கொள், 2. செக்கு, 3. ஓரளவு, 4. பொன், 5. பொற்காசு.
காணுக்காட்சி—அற்புதக்காட்சி.
காணி — உரிமை, 2. நிலம், 3. காணியாட்சி, 4. ஓரெண், 5. ஓர்நிலவளவு.
காணிக்கை— தட்சணை.
காண்—(வி) பார், 2. மங்கலமாகக்காண், 3. தெரி, 4. உணர், 5. கண்டறி, 6. ஆராய், 7. பெறு, 8. உண்மையறி, 9. வணங்கு, 10. செய், 11. தெளி, 12. பொறியாலறி, 13 தோன்று, 14. நிரம்பு, 15. வெளிப்படு, 16. பலன்படு, 17. உண்டாகு.
காண்—ஓரிடைச்சொல்.
காண்டகம்—காடு, 2. ஊர், 3. நோய், 4. கெண்டிகை, 5. நிலவேம்புச்செடி.
காண்டம்—எல்லை, 2. முடிவு, 3. கமண்டலம், 4. காடு, 5. சீலை, 6. திரைச்சீலை, 7. வாச்சியம், 8. கருவி, 9. மலை, 10. ஆபரணச்செப்பு.
காண்டம்—நூலின் ஓர் பிரிவு, 2. நீர், 3. அம்பு, 4. குதிரை, 5. சமயம், 6. தாள், 7. தீர்த்தம், 8. படைக்கலம், 9. கோல், 10. திரள், 11. நிலவேம்புச்செடி, 12. சரகாண்டபாஷாணம்.
காண்டவம்— } இந்திரன் வனம்.
காண்டாவனம்— }
காண்டவன்— } இந்திரன்.
காண்டாவனன்— }
காண்டாமிருகம்—ஓர் மிருகம்.
காண்டிகை — கருத்துப் பதப்பொருள் உதாரணமென்னு மூன்றோடும் வருமுறை.
காண்டிபம்—அருச்சுனன் வில், 2. சரகாண்டபாஷாணம்.

காண்டியம்—உஷ்ணம்.
காண்டில்—இரசதபாஷாணம்.
காண்டீபம்— } வில், 2. தனுவிராசி,
காண்டீவம்— } 3. அருச்சுனன்வில்.
காண்டீபன்—அருச்சுனன்.
காண்டு—கூப்பிடுதூரம்.
காதகம்—கொலை, 2. பிறரைப்பீடித்தல்.
காதம் — ஏழரை நாழிகை வழிதூரம், 2. கள்.
காதம்—கொலை, 2. சதுரத்தூரவு.
காதம்பம்—இனிதாகப்பாடும் அன்னம்.
காதம்பரி—கள், 2. நாகணவாய்ப் புட்பேடை, 3. ஒரு சம்ஸ்க்ருத வசன காவியம்.
காதரம்— } அச்சம், 2. அமைவு.
காதரவு— }
காதலன்—தலைவன், 2. அன்பன், 3. மகன், 4. சிநேகன், 5. தோழன்.
காதலி—தலைவி, 2. தோழி, 3. மகள்.
காதல்—அன்பு, 2. ஆசை, 3. ஆவல், 4. விரகம், 5. மகன், 6. ஓர் பிரபந்தம், 7. ஆந்தை கெவுளி முதலியவைகளின் ஒலி.
காதி—ஓரரசன், 2. ஓர்வகைக் கன்மம், 3. மிரதபாஷாணம்.
காது—செவி, 2. ஊசியின்காது, 3. துப்பாக்கிக்காது, 4. குடைக்கம்பியின் காது, 5. இராட்டினக்காது.
காது—(வி) கொல், 2. கூறுசெய், 3. தறி, 4. முறி.
காதெழுச்சி—காதில்வரும் ஓர் நோய்.
காதை—சரித்திரம், 2. செய்தி, 3. சொல்லுகை, 4. கொலை.
காதைகரப்பு—மிறைக்கவியிலொன்று.
காதோலை—காதுக்கிடும் ஓலை.
காத்தட்டி— } ஆதொண்டை, (ஓர் கொடி.)
காத்தொட்டி— }
காத்தோட்டி— }
காத்தவராயன்— } காளியால் வளர்க்கப்பட்டவன்.
காத்தான்— }
காத்தியாயனம்—உபநிடத முப்பத்திரண்டிலொன்று.
காத்தியாயனர்—ஓர் முனிவர், 2. வரருசிமுனிவர்.
காத்தியாயனி— } துர்க்கை.
காத்தியாயினி— }
காத்திரம்—கோபம், 2. சினம், 3. கிரி.
காத்திரம்—உடல், 2. உறுப்பு, 3. யானையின் முன்கால், 4. கனம், 5. பருமம், 6. முக்கியம்.
காத்திரவேயம்— } பாம்பு.
காத்திரவேயன்— }
காத்திரி—கிரி, 2. படைக்கலம்.
காத்திரை—ஆயுதம்.
காந்தக்கல் — அயக்காந்தம், ஊசிக்காந்தம், சந்திரகாந்தம், சூரியகாந்தம் முதலியவற்றிற்குப் பெயர்.
காந்தம் — அழகு, 2. குணவலங்காரம் அஃது உலகொழுக்கிறப்பப்புகழ்ந்து சொல்வது, 3. ஸ்காந்த புராணம், 4. ஊசிக்காந்தம்.
காந்தருவமணம் — கன்னியுந் தலைமகனுந் தங்களிற்கூடும் மணம்.
காந்தருவம் — காந்தருவமணம்.
காந்தருவர்—கந்தருவர்.
காந்தள்—கார்த்திகைப்பூ, 2. சவக்காரம்.
காந்தன்—அரசன், 2. தலைவன், 3. எப்பொருட்கு மிறைவன்.
காந்தாரம் — ஓர் தேயம், 2. இசைப்பாட்டு, 3. ஓர் பண், 4. குறிஞ்சியாழ்த்திறம், 5. காடு.
காந்தாரி — தசநாடியில் ஒன்று, 2. ஓர் பண், 3. சத்திசாரம், 4. கொடியவள், 5. திரிதராட்டிரன் மனைவி.
காந்தாளம்—கோபம்.
காந்தி—ஒளி, 2. அழகு, 3. கிரணம், 4. உஷ்ணம், 5. காவிக்கல், 6. வைரீயம், 7. சிலாசத்து.
காந்து — (வி) பிரகாசி, 2. கருகிப்போ, 3. காய், 4. மனம்வேகு, 5. வெப்பமுறு, 6. எரி, 7. பொறாமைகொள், 8. சுவற்று, 9. சுடு, 10. பல்லிறுகோது.
காந்துகம்—வெண்காந்தள.
காபரா—சந்தடி.
காபாலம்—சிவனிருத்தம்.
காபாலி—சிவன்.
காபி—ஓரிராகம்.

காபிலகாலயூபம்–சிற்பநூலில் ஒன்று.
காபினி–நவச்சாரம்.
காப்பியம்–பொருட்டொடர் நிலைச்செய்யுள், அஃது பெருங்காப்பிய வுறுப்புட் சில குறைந்து வருவது.
காப்பியன்–சுக்கிரன்.
காப்பிரி–ஒரு சாதி.
காப்பு – இரட்சாபந்தனம், 2. காவல், 3. கதவு, 4. விபூதி, 5. மதில், 6. தெய்வவணக்கச் செய்யுள்.
காமகாரம்–பொறாமை.
காமக்கிழத்தி–வேசை.
காமக்கோட்டம்–ஓரூர்.
காமக்கோட்டி–பார்வதி.
காமதகனன்–சிவன்.
காமதேனு–தெய்வப்பசு.
காமத்துப்பால்–திருவள்ளுவர் குறளில் அகப்பொருட்பால்.
காமபாலன்–பலதேவன்.
காமம்–ஊர், 2. குடி.
காமம்–ஆசை, 2. காமநோய், 3. உட்பகை, 4. அன்பு, 5. வீரியம்.
காமரசி–நெருஞ்சில், (ஓர் முட்பூண்டு).
காமரம்–அடுப்பு, 2. அத்தநாள், 3. இசைப்பாட்டு, 4. இசைப்பொது, 5. வண்டு, 6. சோலை, 7. அகிலமரம், 8. ஆலமரம்.
காமரி–புளிநறளை, (ஓர் செடி).
காமரீசம்–புல்லூரி, (மரங்களிலுண்டாயிருக்கு மொருவிதபூடு).
காமரூபி–பச்சோந்தி, 2. வித்தியாதரன்.
காமர்–அழகு, 2. அலங்காரம், 3. பேரழகு, 4. ஒளி, 5. ஆசை.
காமவல்லி–கற்பகத்திற் படர்கொடி.
காமவணை–சிறுகிழங்கு.
காமன்–வண்டு, 2. திப்பிலி.
காமன்மைத்துனன்–விநாயகன்.
காமாட்சி–பார்ப்பதி.
காமாட்டி–மண்வெட்டுவோன், 2. மூடன்.
காமாதுரன்–காமி.
காமாபலகை-மரக்கலத்திணோர்பலகை.
காமாலை– } ஓர் நோய்.
காமாளை– }

காமி – உவர்மண், 2. பொன்னிமிளை, 3. காமதூர்த்தன்.
காமி–(வி) விரும்பு, 2. இச்சி, 3. மோகமுறு.
காமிகம்–சைவாகமத்தொன்று.
காமியக்கல்–கோமேதகம்.
காமியம்–இச்சிக்கும் பொருள், 2. ஒன்றைவேண்டிச் செய்யும் பூசை.
காமுகர்–தூர்த்தர், 2. நகரப் பதிவாழ்வோர், 3. நாகரிகர்.
காமுருகி–ஓந்தி.
காம்பி–இறைகூடை.
காம்பிலி–ஓர் தேயம்.
காம்பீரம்– } கம்பீரம், 2. ஆழம், 3. முக்கியம்.
காம்பீரியம்– }
காம்பு–பூ முதலியவைகளின் தாள், 2. கைப்பிடி, 3. மூங்கில் மரம், 4. மலர்க்கொம்பு, 5. பட்டுச்சீலை, 6. பூசினி.
காம்போசம்-ஓர் தேயம், 2. ஒருபாஷை, 3. ஓர் மரம்.
காம்போதி–ஓரிராகம்.
காயகம் – பாடுதல், 2. காமப்பிராந்தி, 3. மோகமயக்கு.
காயகர்–பாடுவோர், 2. மயக்குவோர்.
காயகற்பம் – சரீரத்தைப் பலப்பிக்கும் மருந்து.
காயக்கம்–மருட்டு வித்தை.
காயத்திரி–ஓர் மந்திரம், 2. காயத்திரி சுரூபியா யிருப்பவள், 3. சரச்சுவதி, 4. கருங்காலிமரம்.
காயம் – பெருங்காயம், 2. ஆகாயம், 3. கார்ப்பு, 4. மிளகு, 5. வெண்காயம், 6. காயமருந்து, 7. கறிக்கிடுங்காயம், 8. புண்.
காயம்–உடல்.
காயலா–நோய்.
காயல்–கழி, 2. கழிமுகம், 3. உப்பளம், 4. சுரவியாதி.
காயா– } காசாமரம்.
காயாமரம்– }
காயாபுரி–சரீரம்.
காயாம்பூமேனியன்–ஸ்ரீ மகாவிஷ்ணு.
காய்–கனிக்காய், 2. காய்ப்பு, 3. காய்ப்பரு, 4. சொக்கட்டான்காய்.

காய்—(வி) நீர் முதலியன காய், 2. உலர், 3. குளிர்காய், 4. சுரங்காய், 5. பிரகாசி, 6. மெலி, 7. புண்ணுறு, 8. கோபி, 9. காமத்தால் சோர், 10. சின, 11. கடி, 12. வெறு, 13. வெட்டு, 14. எரி.
காய்ச்சல்—காய்தல், 2. சுரம், 3. பகைமை.
காய்ச்சிரக்கு— } புளிச்சற்கீரை.
காய்ச்சுரை— }
காய்ச்சுறுக்கு— }
காய்ச்சு—(வி) காயச்செய், 2. இரும்பு முதலியன காய்ச்சு, 3. சினமூட்டு, 4. உலர்த்து, 5. கண்டி.
காய்ச்சுக்கட்டி—காசுக்கட்டி.
காய்ச்சுக்குப்பி—ஒரு கண்ணாடிக் குப்பி.
காய்மகாரம்— } பொறுமை.
காமகாரம்— }
காய்மை— }
காய்ஞ்சொறி—ஓர் செடி.
காய்வேவளா—ஓர் பூடு.
காரகம்—காரணத்துவம், 2. கருவி, 3. செயல், 4. வினைமுதல், 5. வினைகொண்டு வேற்றுமை முடிவது.
காரகக்கருவி—கருமத்தினைக் காரணம்.
காரக முதற்கருவி—செய்கையின் முதற் காரணம்.
காரகவேது—கருவி கருத்தா முதலிய காரணமாகக் கூறுமலங்காரம்.
காரகன்—செய்பவன்.
காரடம்— } செப்படிவித்தை.
காரடவித்தை— }
காரணம்—தோற்றத்துக்கு மூலம், 2. மூலம், 3. கருவி, 4. நோக்கம், 5. ஏது, 6. ஆகமம் இருபத்தெட்டி லொன்று.
காரணன்—நிமித்த கர்த்தா, 2. கடவுள், 3. அற்புத கடவுள், 4. அரசன், 5. மிரதபாஷாணம்.
காரணி—உமை.
காரணிக்கம்—சரித்திரம்.
காரண்டம்— } நீர்க்காக்கை.
காரண்டவம்— }
காரம்—கார்ப்புப்பு, 2. சாம்பலுப்பு, 3. சீலை யழுக்குவாங்குங் காரம், 4. சாயமிடுங்காரம், 5. காரியம், 6. பொரிகாரம்.
காரர்—அச்சமுள்ளோரார்.
காரல்—ஒரு மீன்.
காரவல்லி—பாகற்கொடி.
காரன்—காரியஞ் செய்வோன், 2. சோரபாஷாணம்.
காரா—எருமை.
காராகாரம்— } சிறைச்சாலை.
காராகிருகம்— }
காராக்கிரகம்— }
காராடு—வெள்ளாடு.
காராமணி—ஓர் பயறு.
காராமயம்—சிறைச்சாலைத் துன்பம்.
காராம்பசு—கரும்பசு, 2. தெய்வப்பசு.
காராம்பி—இறைகூடை, 2. ஓர் சலசூத்திரம்.
காராளர்—வேளாளர்.
காரான்—எருமை.
காரி—கறுப்பு, 2. கரிக்குருவி, 3. காக்கை, 4. சனி, 5. நஞ்சு, 6. இந்திரன், 7. ஐயனார், 8. வயிரவன், 9. களர்நிலம், 10. கிளி, 11. கடையேழுவள்ளலி லொருவன், 12. தொழில் செய்யிடம், 13. ஆவிரைச்செடி.
காரிகம்—காவிக்கல்.
காரிகை—அழகு, 2. பெண், 3. ஓர் யாப்பு நூல்.
காரிகை—ஓர் ஆரியச்செய்யுள்.
காரிக்கம்—சலவை செய்யாத வெள்ளைப் புதுப் புடவை.
காரிக்கூன்—ஓர் காளான்.
காரிப்பிள்ளை—கரிக்குருவி.
காரிமை—கொடிவேலி.
காரியக்கடிசு—கற்பாஷாணம்.
காரியசாதகம்—காரியத்தில் முயலுகை, 2. காரியசித்தி.
காரியதரிசி—காரியத்தலைவன்.
காரியதுரந்தரன்— } காரியத்தில்வல்லவன்.
காரியஸ்தன்— }
காரியத்தாழ்ச்சி—கைகூடாமை, 2. காரிய நஷ்டம்.
காரியம்—கருமம், 2. செய்கை, 3. விஷயம், 4. பயன், 5. இலாபம்.

காரியவான்—சமர்த்தன்.
காரிரத்தம்—ஆடுதின்னாப்பாலைச்செடி.
காருகத்தொழில்— } செய்தற்றொழில், 2. கைங்கரிய
காருகவினை— } வேலை.
காருகபத்தியம்-வேதாக்கினி மூன்றி னொன்று.
காருகம்—செய்யுந்தொழில், 2. அக்கினியை வணங்குஞ்சமயம், 3 கைங்கரியமான வேலை.
காருகர்—ஓவியர், 2. செய்வோர்.
காருச்சிவல்—கடற்பாசி.
காருடம்—மருக்காரைச்செடி, 2. கறிப்புடோல்
சாருடம்— } கலைஞான மறுபத்து நான்கினொன்று, 2. பதினெண் புராணத்தொன்று, 3 உபநிடத முப்பத்திரண்டினொன்று.
காருடம்— }
காருணியம்— } கிருபை.
காருண்ணியம்— }
காரை—ஓர் செடி, 2. ஓர் மீன், 3. சுண்ணச்சாந்து, 4. சீலை.
காரைக்காலம்மை—ஓர் தவப்பெண்.
காரைக்கால் — தஞ்சாவூர் ஜில்லாவில் நரங்கம்பாடிக் கருகாமையிலுள்ள ஓர் பட்டணம்.
காரோடர்—உறைகாரர்.
கார்—கருமை, 2. இருள், 3. மேகம், 4. நீர், 5. கருங்குரங்கு, 6. வெள்ளாடு, 7. கார்காலம், 8. கார்நெல்.
கார்கோணி—தேள்கொடுக்கி என்னும் செடி.
கார்கோளி—முத்தக்காசு, 2. கோரைப் புல்.
கார்கோள்—கடல்.
கார்க்காய்—சந்திரநாகம்.
கார்க்கோடகன் — அட்டநாகத்தொன்று, 2. கருடக்கல்.
கார்க்கோழி—கருங்கொள், 2. கருஞ்சீரகம்.
கார்த்தபம்—கழுதை.
கார்த்திகேயன்—முருகன்.
கார்த்தவீரியன்— } ஓர் சக்கரவர்த்தி.
கார்த்தவீரியார்ச்சுனன்— }

கார்த்திகை—ஓர் மாதம், 2. கிருத்திகை நட்சத்திரம், 3. கார்த்திகை நாள், 4. காந்தள், 5. துர்க்கை.
கார்த்திகைக்கிழங்கு — கலப்பைக் கிழங்கு.
கார்த்திகைக்கொடி—காந்தள்.
கார்த்திகைப்பூ—காந்தள் மலர்.
கார்நாற்பது—ஒரு நூல்.
கார்நெல்—கார்காலத் தறுக்கும் நெல்.
கார்புகாவரிசி- } ஓர் மருந்துவிதை.
கார்ப்போகரிசி— }
கார்ப்பணியம் -- தரித்திரம், 2. மனத்தளர்வு, 3. உலோபம்.
கார்ப்பாசம் — பருத்திச்செடி, 2. பருத்திப் பஞ்சு.
கார்ப்பான்— } கையாந்தகரை, (ஓர் பூடு)
கார்மணி— }
கார்முகம்—வில்.
கார்வண்ணன்—ஸ்ரீ மகாவிஷ்ணு.
காலகண்டன்—சிவன்.
காலகம்—சேங்கொட்டை.
காலகாலன்—சிவன்.
காலகூடம்—விஷம்.
காலக்கிரமம்—நாளடைவு.
காலசக்கரம் — ஆயுள் நியதிச்சக்கரம், 2 கிரகபலச் சக்கரம், 3. ஆயுட்காலம்.
காலசம்—பேராலவட்டம்.
காலசூத்திரம்—ஓர் நரகம்.
காலக்ஷேபம்— } காலங்கழிக்கை, 2. சீவனம், 3. திருவாய்மொழி யோதல்.
காலட்சேபம்— }
காலதண்டம்—நமனாயுதம்.
காலதருமம்—காலத்தன்மை.
காலத்திரயம்—முக்காலம்.
காலநியமம்—காலநியதி, 2. காலக்கடன்.
காலநேமி—ஓர் அசுரன், 2. காலசக்கரம்.
காலபரிச்சேதம் — ஒரு காலத்துண்டு. ஒரு காலத்தின்றெண்பது.
காலபாசம்—நமன்கயிறு.
காலமழை—பருவமழை.
காலம்—பொழுது, 2. தாளப்பிரமாணம பத்தினொன்று, 3. முடிவு, 4. வித்தியா தத்துவ மேழினொன்று.

காலம்பார்—(வி) சமயம்பார்.
காலம்புரள்—(வி) காலம் வேற்றுமைப்படு.
காலயுத்தி—ஓர் வருடம்.
காலல்—(தொ.பெ) ஒளி முதலிய வீசல், 2. கொப்பளித்தல், 3. சத்திபண்ணல்.
காலவம்—நெருப்பு.
காலவயிரவர்—சங்காரவயிரவர்.
காலன்—கரந்துறைகோள்களிளொன்று, 2. காந்தபாஷாணம், 3. சீலபாஷாணம்.
காலன் — யமன், 2. யமன் ஏவலன், 3. சனி.
காலன்கொம்பு—மாட்டுக்கொம்பு.
காலா—ஓர் மீன்.
காலாந்தகன் — சிவன், 2. துட்டன், 3. சாமர்த்தியவான்.
காலாழ்—குழைசேறு.
காலாள்—நால்வகைத் தானையிலொன்று.
காலாறுதல்—ஓய்தல்.
காலி—கழிவுநாள், 2. கள், 3. பசுக்கூட்டம், 4. காட்டுமுருக்கமரம், 5 ஒரூர்.
காலி—ஒழிவான.
காலிக்க—(வி) உதயமாக.
காலியம்—விடியல்.
காலியாங்குட்டி—ஓர் சிறுபாம்பு.
காலிலி — பாம்பு, 2. காற்று, 3. அருணன்.
காலு— } (வி) ஒக்காளி, 2. விடு, 3. சொரி, 4. கொப்பளி, 5. வடி.
கால்— }
காலூரம்—தவளை.
காலேகம்—கலவைச் சாந்து.
காலேயம்—பசுக்கூட்டம், 2. கஸ்தூரிமஞ்சள், 3. மோர்.
காலேயம்—அகில்.
காலை — பொழுது, 2. விடியற்காலம், 3. சமயம், 4. அடைப்பு.
காலைவெள்ளி — விடியற்காலத் துதிக்கும் வெள்ளி.
காலோலம்—அண்டங்காக்கை.
கால்—பாதம், 2. தூண், 3. தாங்குகால், 4. பூந்தாள், 5. மூலை, 6. அடிப்பக்கம், 7. அட்சரக்கால், 8. கையூன்றுகோல், 9. தேருருள், 10. காற்பங்கு, 11. இரத்தக் கலப்பாமுறவு, 12. வாய்க்கால், 13. மரக்கால், 14. வழி, 15. இடம், 16. காலம், 17. காலன், 18. காற்று, 19. வலிமை, 20. இருள், 21. மகன், 22. குறுந்தறி, 23. புடவை அகலத்தின் கால்.
கால்கட்டு—தடை, 2. தளை.
கால்சீ—(வி) வேரோடுகளை, 2 துடை, 3. இருளை அகற்று.
கால்செய்வட்டம்—விசிறி
கால்தோல்—மரமேறுவோர் காலிலிடுந்தோல்.
கால்நடை—ஆடுமாடுகள்.
கால்மாடு—காற்புறம்
கால்மிதி—காற்சுவடு.
கால்வழி—சந்ததி, 2. சிறுவழி.
கால்வாங்கு — (வி) எழுத்துக்களின் காலிழு, 2. சா, 3 பின்னிடு
கால்வாய்—வாய்க்கால்.
காவகா—சேங்கொட்டை.
காவடி—கா, 2. கோயிற்காவடி, 3. காவுதடியிற்கொண்டுபோம்பொருள்.
காவட்டம்புல்— } மாந்தப்புல்.
காவட்டை— }
காவணம்—பந்தல்.
காவணவன்—ஓர் புழு.
காவதம்—காதம்.
காவந்து— } எசமானன்.
காபந்து— }
காவலன் — காப்போன், 2. அரசன், 3. கணவன், 4. மெய்காப்பாளன்.
காவலாளர்—காப்போர், 2. சேவகர்.
காவல் — காப்பு, 2. அரண், 3. மதில், 4. சிறைச்சாலை.
காவற்கடவுள்—ஸ்ரீ மகாவிஷ்ணு.
காவற்கலி—வாழைமரம்.
காவற்கூடம்— } சிறைச்சாலை.
காவற்சாலை— }
காவன்—சிலந்திப்பூச்சி.
காவா—காட்டுமல்லிகை.
காவாய்—ஓர். வகைப்புல்
காவாலி—இளமை, 2. வீண்பிதற்றன்.

காவாவை — காட்டுமல்லிகை, 2. காய் வேளைப்பூடு.
காவி—ஓர்வகை மண், 2. கருங்குவளை, 3. காவிக்கல்.
காவிதி—மந்திரி, 2. கணக்கன்.
காவியம்—காப்பியம்.
காவியா — கடுக்கன், 2. மரக்கலத்தைத் தரிக்கவிடுங்கல்.
காவிரி—காவேரி.
காவிளா— } காய்வேளைப்பூடு.
காவிளாய்— }
காவு—ஒரு மந்திர மை, 2. பலி.
காவு—(வி) தோள்மேற்சும, 2. சும.
காவேரி—ஒரு நதி.
காவேளா—காய்வேளைப்பூடு
காழகம்—கருமை, 2. ஆடை, 3 கடார மென்னு மூர்
காழி—சீகாழி.
காழியர்—வண்ணார், 2 பிட்டுவாணிகர்.
காழியர்கோன்—சம்பந்தன்.
காழ் — விதை, 2. கொட்டை, 3. பருக்கைக்கல், 4. பளிங்கு, 5 மணிவடம், 6. ஒளி, 7. மரவயிரம், 8. குற்றம்.
காழ்—(வி) கார், 2. வயிரி.
காழ்த்தல்—(தொ. பெ) உறைத்தல்.
காழ்ப்பு—காரம், 2. மரவயிரம்.
காளகண்டம்—குயிற்பறவை.
காளகண்டன்—சிவன்.
காளகம்—எக்காளம், 2 மருக்காரைச் செடி.
காளத்தி— }
காளஸ்தி— } ஒரு சிவஸ்தலம்.
காளஸ்திரி— }
காளபதம்—மாடப்புறு.
காளபந்தம்—ஓர் விளக்கு.
காளபம்—போர்.
காளமுகி—சத்தமேகத்தொன்று, அஃது கல்பொழிவது.
காளமேகம்— } ஓர் புலவன்.
காளமேகன்— }
காளம்—எட்டிமரம், 2. அவுரிப்பூண்டு, 3. சூலம்.
காளம்—விடம், 2. சிறு சின்னம், 3. மேகம்.

காளவனம்—சுடுகாடு.
காளவாய்—கழுதை, 2. சூளை.
காளன்—மாகாளன்.
காளாஞ்சி— }
களாஞ்சி— } தாம்பூலக் கமலம், 2. எச்சிற்படிக்கம்.
களாசி— }
காளாஞ்சி—வாதநோய்.
காளாத்திரி— } பாம்பின் நச்சுப்பல்லி லொன்று.
காளாஸ்திரி— }
காளாமுகம்—உட்சமயம் ஆறினொன்று.
காளான்—ஆம்பி.
காளி—கரியவள், 2. ஐயை, 3. பார்வதி, 4. பரிமளகந்தி, 5. பதினெட்டு உபபுராணத்தொன்று, 6 பாம்பின் நச்சுப்பல்லிலொன்று.
காளிகம்—மணித்தக்காளிச்செடி.
காளிக்கம்—ஒருவித நீலச்சாயம், 2. பித்தளை மலை.
காளிங்கன் - ஓர் பாம்பு, 2. கலிங்க நாதன்.
காளிதம்—களிம்பு.
காளிதாசன்—ஓர் புலவன்.
காளிந்தம்- ஏலம்.
காளிந்தி — யமுனையாறு, 2. தேக்கின் விசேடம், 3. வாகைமரம், 4. நீர்ப்பசு, 5. சுகரன்றாய், 6. கண்ணன்மனைவி.
காளிமம்— } கறுப்பு.
காளிமை— }
காளியன்—ஓர் பாம்பு.
காளினியம்—கத்தரிச்செடி.
காளை—இளவெருது, 2. கட்டிளமையோன், 3. பாலைநிலத் தலைவன், 4. ஆண்மகன்.
காளையங்கம்—போர்.
காறல்— }
காறற்கொட்டி— } ஓர் மருந்துச்செடி.
காறற் கத்தரி—ஒரு கத்தரிச்செடி.
காறுக்கருவணை—ஓர் கிழங்குச்செடி.
காறுப்பி—(வி) காறு.
காறு—காலவெல்லை, 2. கொழு.
காறு—(வி) காறியுமிழ், 2. காறலர்யுருசி.
காறுபாறு—விசாரிப்பு, 2. கண்டிப்பு, 3. அதிகாரத்துவம், 4. வேலை.

காறை—கழுத்தணியிலொன்று, 2. வைக்கோல் முதலியவற்றின் காறை, 3. நிலச்சாந்து.
காற்குளம்—பூச நட்சத்திரம்.
காற்கோடகன்—கார்க்கோடகன்.
காற்சரி— ஒரு காலணி.
காற்பரடு—கரடு.
காற்பாசம்—பருத்திப்பஞ்சு.
காற்றடக்கி—துருத்தி, 2. நீர்க்குமிழி.
காற்ருடி—கறங்கு, 2. காற்ருடிப்பட்டம், 3. நிலையிலி.
காற்றின் சகாயன்—தீ.
காற்று—வாயு, 2 அபானவாயு, 3. சோதி நட்சத்திரம்
காற்றுநாள்—சோதிநாள்.
காற்றுவாக்கு—காற்றுப்பக்கம், 2. சொம்பல், 3. கண்டபாடு.
கானகக்கல்—கரும்புள்ளிக்கல்.
கானகதூமம்—கற்பாஷாணம்.
கானகம்—காடு, 2. குறிஞ்சிநிலம், 3. கருஞ்சீரகம், 4. கால் நகம்.
கானக்குதிரை—மரை, 2. காட்டுக்குதிரை
கானநாடன்—முல்லை நிலத்தலைவன்.
கானம்—வாசனை.
கானம்—இசைப்பாட்டு, 2. இராகம், 3. வானம்பாடிப்புள், 4. வனம், 5. குறிஞ்சிநிலம், 6. முல்லைநிலம்.
கானயூகம்—கருங்குரங்கு.
கானல்—வெண்டேர், 2. சூடு, 3 ஒளி, 4. சூரியகிரணம், 5. கடற்கரைச்சோலை, 6. கழி, 7. உப்பளம்.
கானவர்—குறிஞ்சிநிலமாக்கள், 2. வேடர், 3. முல்லைநிலமாக்கள்.
கானவன்—வேடன், 2. குரங்கு.
கானவிருக்கம்—பாதிரிமரம்.
கானனம்—கானகம்.
கானனுசாரி—நன்னாரிக்கொடி.
காணு—, காணுத்தடி— சுக்கான் கைப்பிடி.
காணுங்கெளிறு—ஓர் மீன்.
காணுங்கோழை—ஓர் பூண்டு.
காணுவாழை—ஒரு செடி.
காணுவேளை—ஒரு செடி.

கானிலம்—, கானிலிந்திரன்— கொடுவேலி.
கானீனன்—கன்னி பெற்றபிள்ளை, 2. வியாதமுனி.
கான்—காடு, 2. மணம், 3. எழுத்துச்சாரியையி னொன்று, 4. கப்பலினறை முதலியன, 5. கான்யாறு.
கான்மரம்—ஆலமரம்.
கான்மா—பன்றி.
கான்மியம்—கன்மமலம்.
கான்முளை—புதல்வன்.
கான்றை—ஓர் முட்செடி.

## கி

கிகிணி—காக்கணங்கொடி, 2. வலியான் குருவி.
கிக்கிரி—மீன்குத்திப்புள்.
கிங்கரர்—ஏவல்செய்வோர், 2. தூதர்.
கிங்கரி—தாசி, 2. வேலைக்காரி.
கிங்கிணி—சதங்கை, 2. கிலுகிலுப்பைச்செடி.
கிசம்—, கிசலை, கிசாலம்— தளிர்.
கிசலம்—, கிசலயம்— தளிர்.
கிசில்—ஓர் சாளரசம்.
கிசுகிசுத்தான்—வாலில்லாக் காற்ருடி.
கிசுகிசெனல்—ஓர் ஒலிக்குறிப்பு, 2. விரைவின்குறிப்பு.
கிச்சடி—ஓர்வகை யுண்டி.
கிச்சலாட்டம்—, கிச்சிலாட்டம்—, கிச்சாட்டம்— தொந்தரை.
கிச்சிலி—ஒரு நாரத்தை மரம்.
கிச்சு—நெருப்பு.
கிச்சுக்கிச்செனல்—ஓர் ஒலிக்குறிப்பு.
கிஞ்சபன்னி—நாயுருவிச்செடி.
கிஞ்சம்—புளிமாமரம்.
கிஞ்சம்—சிறுமை.
கிஞ்சனன்—, கிஞ்சன்— தரித்திரன்.
கிஞ்சி—வேப்பமரம், 2. முதலை.

கிஞ்சிஞ்ஞம்— } சிற்றறிவு.
கிஞ்சிக்கினம்— }
கிஞ்சிதம்— } அற்பம், 2. சிறுமை.
கிஞ்சித்து— }
கிஞ்சித்து—புளிமாமரம், 2. அற்பம்.
கிஞ்சில்—அற்பகாரியம், 2. எளிமை.
கிஞ்சுகம்—சிவப்பு, 2. கேகயப்புள்.
கிஞ்சுகம்—முண்முருக்கமரம், 2. பலாசு மரம்.
கிஞ்ஞா—ஓர் செடி.
கிட—(வி) படு, 2. இரு, 3 தரித்திரு.
கிடக்கை—கிடத்தல், 2. நிலைமை, 3. படுக்கை, 4. பூமி.
கிடங்கு—அகழ், 2. வெற்றிலைக்கிடங்கு, 3. குளம், 4 சிறைச்சாலை, 5. குழி, 6. பொக்கிஷவீடு.
கிடத்து—(வி) கிடக்கச்செய்.
கிடப்பு—கிடக்கை, 2 இருக்கை
கிடா—கடா.
கிடாசு—(வி) கடாவு.
கிடாய்—கடா.
கிடாரம்—கொப்பரை
கிடாரி—கடாரி.
கிடாரை—ஒரு மரம்.
கிடாவு—(வி) கடாவு.
கிடி—பன்றி, 2 மருட்பன்றி.
கிடுகிடு—(வி) நடுங்கு, 2. பல்லோடு பல் லறை, 3. ஒலி
கிடுகிடு—நடுக்கம்.
கிடுகு—கேடகம், 2. தேர்மரச்சுற்று, 3. சட்டப்பலகை, 4. ஓர் பறை, 5. முடைந்த வோலைக்கீற்று.
கிடுக்கட்டி—ஓர் பறை, 2. இருப்பைப் பூவில் இடித்தகட்டி.
கிடுக்கு— } ஒலிக்குறிப்பு.
கிடுக்கட்டி— }
கிடுபிடி—ஓர் வாச்சியம்.
கிடுமுடி—ஓர் பறை, 2. சந்தடி.
கிடை—உவமானம், 2. வேதபா பயிலி டம், 3. சடை.
கிடை—(வி) அடை, 2. எதிர்.
கிடைச்சி— } ஓர் செடி.
கிடைச்சை— }
கிட்கிந்தாபுரி—வாலி சுக்கிரீவன் பட்டணம்.
கிட்கிந்தை—ஓர்மலை, 2. கிட்கிந்தாபுரி.
கிட்டங்கி—கிடங்கு.
கிட்டம்—சமீபம்.
கிட்டம்—இரும்பு முதலியவற்றின் கிட்டம், 2. வண்டல், 3. இறுக்கம், 4. சேறு முதலியவற்றினேடு.
கிட்டலர்—பகைவர்.
கிட்டார்—பகைவர்.
கிட்டி — இடுக்குத்தடி, 2. நுகக்கிட்டி, 3. சிறுவர் விளையாட்டுக் கருவியி லொன்று, 4. கைத்தாளம், 5. நாழி கைவட்டில், 6. சின்னிச்செடி.
கிட்டி—தலையீற்றுப் பசு.
கிட்டிக்கிழங்கு—சின்னிக்கிழங்கு.
கிட்டிணம்—கறுப்பு.
கிட்டிணன்—ஸ்ரீ கிருஷ்ணபகவான்.
கிட்டிணி—கிருஷ்ணநதி.
கிட்டிரம்—நெருஞ்சில் முட்பூண்டு.
கிட்டினர்—உறவோர், 2. சேர்ந்தோர்.
கிட்டினன்—திப்பிலி.
கிட்டு—(வி) அணுகு, 2. அடு, 3. உறவு நெருங்கு, 4. கிடை, 5. எதிர், 6. பூட்டு, 7. வந்தடை.
கிட்டுமானம்—சமீபம்.
கிணகர்—அடிமையானவர்.
கிணறு—கூவல், 2. கேணி.
கிணுங்கு—ஓர் பூடு.
கிணுட்டு—ஒலைநறுக்கு.
கிணி—கைத்தாளம்.
கிணிதி—கிலுகிலுப்பைச்செடி.
கிணுகிணு—(வி) கொசுகு முதலியவை ஒலி, 2. அனுங்கிச்சொல்.
கிவணை—மருதப்பறை.
கிண்— }
கிணீர்— } கிலுங்குமொலி.
கிணீல்— }
கிண்கிணி — சதங்கைப்பட்டிகை, 2. சதங்கைச் சிலம்பு, 3. சதங்கை.
கிண்கிணெனன—(வி) கிண்கிணென் றுசப்திக்க.
கிண்டன்—உரப்புத்துணி.

கிண்டு—(வி) தோண்டு, 2. அகழ்ந்தெடு, 3. பகையெழுப்பு, 4. ஆராய்.
கிண்ணம் — சிறுவட்டில், 2. நாழிகை வட்டில்.
கிண்ணரம்—ஓர் வீணை, 2. ஓர் இசைக் கருவி.
கிண்ணி—கிண்ணம், 2. கத்தியின் கைப்பிடியுறை, 3. சின்னப்பொருள், 4. நண்டின் சிறுகால், 5. குதிரை மேற் குளம்பு.
கிண்ணிக்கர்ப்பூரம்— இரசகர்ப்பூரம், 2. உயர்ந்த கர்ப்பூரம்.
கிதி— } பத்திலட்சங் கோடாகோடி.
க்ஷிதி— }
கித்தான்—ஓர்வகை உரப்புத்துணி.
கிஸ்தி— } நிலமுதலியவற்றின் வரி.
கிஸ்திப்பணம்— }
கிந்திகம்—திப்பிலிமூலம்.
கிந்து—(வி) நொண்டிநட, 2. படங்குந்தி மிதி.
கிமாவெனல்—மொறு மொறுத்தல்.
கிமித்துக்கினம்—புழு, 2. புழுக்கரணம்.
கிம்புரி—தோளணி, 2. யானைக்கொம் பிற்பூண், 3. முடியின் கிம்புரி, 4. பூணுங்கக்கட்டும் ஆபரணம்.
கிம்புருடம்—நவகண்டத்தொன்று.
கிம்புருடர் — பதினெண்கணத்தில் ஒரு வகை.
கிம்புருடன்—கிம்புருடத்து முதல் அரசன்.
கிம்புரோடியம்—உபநிடதம் முப்பத்திரண்டினொன்று.
கியாதம்—புகழ், 2. மேன்மை.
கியாதி—புகழ், 2. மேன்மை, 3. பிருகுவின் மனைவி.
கியால்—இந்துஸ்தானம் பாட்டு.
கியானம்—ஞானம்.
கிய்யாம்—கோழிக்குஞ்சுகளின் சத்தம்.
கிரகசாரம்—கிரகநடை.
கிரகணம்—பற்றுகை, 2. சந்திரசூரிய கிரகணம், 3. கிரகித்தல்.
கிரகணி—கிராணி.
கிரகணி—(வி) கிரகணம் பற்று.
கிரகத்தன்— } இல்லொழுக்கத்திருப்பவன்.
கிரகஸ்தன்— }
கிரகநீதி—இல்லொழுக்கம்.
கிரகபதி—சூரியன்.
கிரகபுடம்—கிரகங்களின் தற்கால நிலையெண்.
கிரகமாலிகை— } கிரகவொழுங்கு
கிரகமாலை— }
கிரகம்—வீடு, 2. கோள், 3. தாளப்பிரமாணம் பத்தினொன்று.
கிரகி—சமுசாரி.
கிரகி—(வி) பற்றிக்கொள், 2. உணர்ந்துகொள், 3. உத்தேசி, 4. ஏற்றுக்கொள், 5. வௌவு, 6. புலனறி, 7. இரசம் வாங்கு, 8. குறிப்பாலறி.
கிரசேமிரம்—பச்சைக் கர்ப்பூரம்.
கிரஞ்சனம்—முருங்கைமரம்.
கிரணம்—கதிர், 2. ஒளி.
கிரணன்—சூரியன்.
கிரது—காணிக்கை, 2. வணக்கம்.
கிரந்தகர்த்தா—நூலாசிரியன்.
கிரந்தம்—கிரந்தவெழுத்து, 2. கிரந்தபாஷை, 3. முப்பத்திரண்டெழுத்தின் கூட்டம், 4. கிரந்தநூல், 5. கிறுது.
கிரந்தி—ஏலத்தோல், 2. நெல்லிப்பருப்பு.
கிரந்தி—இடை பிங்கலை சுழுமுனை நாடி மூன்றின் சந்தி, 2. இலிங்கக்கிரந்தி முதலியன, 3. மேகவூறல்.
கிரந்திகம்— } திப்பிலிமூலம்.
கிரந்திமூலம்— }
கிரந்திப்புண்—ஒரு சிலந்தி.
கிரமம்—முறைமை, 2 நீதிநூன்முறை, 3. ஒழுங்கு, 4. நன்னெறியிற் செல்கை.
கிரமுகம்—கமுகமரம்.
கிரயம்—விலை, 2. கொள்ளுகை.
கிரவுஞ்சம்—அன்றிற்புள், 2. கிரவுஞ்ச தீவு, 3 கிரவுஞ்சமலை, 4. கோழிப் பறவையளவு தூரம்.
கிராகதி—நிலவேம்புச்செடி.
கிராகம்—ஆமை.
கிராக்கி—அரியவிலை.

கிராசாங்குலம்—கிரகணவளவு.
கிராடம்—தேயமைம்பத்தாறினொன்று.
கிராணம்—கிரகணம், 2. சிறு வட்டில், 3. மூக்கு.
கிராணி—ஒரு கழிச்சல் நோய்.
கிராதர்—வேடர், 2. குறவர்.
கிராதன்—வேடன், 2. குறவன், 3. சிவன்.
கிராதி—மரத்தினாற் செய்தவேலி.
கிராந்தி—கிரகச் சாய்வு, 2. கிராந்திமண்டலம்.
கிராந்திமண்டலம்—சூரியவீதி.
கிராந்து—(வி) ஒளி, 2. இணை.
கிராமணி—கிராமத்தலைவன், 2. கிராமியன், 3. சாணுருட் பெரியவன்.
கிராமதேவதை—ஊர்காக்குந் தேவதை.
கிராமம்—நூறுகுடியுள்ள வூர், 2. மருதநிலத்தூர்.
கிராமாந்தரம்—வேறு கிராமம்.
கிராமியம்—இழிசனர் வழக்கு.
கிராமியன்—கிராமமுற்றோன்.
கிராம்பு—இலவங்கப்பூ.
கிராய்—ஒருவகையான தரை, 2. புறபொழி.
கிராய்த்தல் — (வி) சுவர் முதலியவற்றைத் தேய்த்துத் துலக்கல்.
கிராவணம்— } கல், 2. மலை.
கிராவம்— }
கிரி—பிணையாளி.
கிரி—மலை, 2. பன்றி, 3. மருட்பன்றி.
கிரிகன்னி—வெள்ளைக்காக்கணங்கொடி.
கிரிகை—கிரியை.
கிரிகோலம்— } அலங்கோலம்.
கிலிகோலம்— }
கிரிசம்—இளைப்பு.
கிரிசு— }
கிரிசுக்கத்தி— } குற்றுவாள்.
கிறிசு— }
கிரிசை—பார்வதி.
கிரிமல்லிகை—வெட்பாலைமரம்.
கிரிமா—கரிமா.
கிரிமி—கிருமி.
கிரியாகாண்டம் — வேதத்திற் கிரியைகளைப் போதிக்கும் பகுதி.
கிரியாசத்தி—பஞ்சசத்தியினொன்று. அது வினைத்துணையாக நின்று உலகங்களையாக்குவது.
கிரியாத்துச்செடி— } நிலவேம்புச்
கிரியாத்துவேர்— } செடி.
கிரியை—செய்கை, 2. சமயநிஷ்டை, 3. உத்தரகிரியை, 4. தாளப்பிரமாணத்தினொன்று, 5. சைவசமயநிலை நான்கினொன்று.
கிரீசன்—சிவன்.
கிரீடதாரி—முடிதரித்தோன்.
கிரீடம்—முடி.
கிரீடாதிபத்தியம்—அரசாட்சி.
கிரீடாப்பிரமவாதி — வேதாந்திகளிலொருவன்
கிரீடி—அரசன், 2. அருச்சுனன்.
கிரீடி—(வி) விளையாடு.
கிரீடை—விளையாட்டு, 2. மகளிர் விளையாட்டு.
கிரீட்டி—பிரண்டைக்கொடி.
கிரீவம்— } கழுத்து.
கிரீபம்— }
கிருகம்—வீடு.
கிருகரன்—கிருதரன்.
கிருசம்—மெலிவு.
கிருஷி—உழவுத்தொழில்.
கிருஷிகன் — உழவுத் தொழில் செய்வோன்.
கிருஷ்ணபக்கம்—அபரபக்கம்.
கிருட்டி—பன்றி, 2. மருட்பன்றி, 3. ஓரீற்றுப்பசு, 4. பிரண்டைக்கொடி.
கிருட்டிணபாணம்—எட்டிமரம்.
கிருட்டிணபேடம்—கடுரோகிணி.
கிருட்டிணம்— } கறுப்பு, 2. அபரபக்
கிருஷ்ணம்— } கம்.
கிருட்டிணவல்லி—நன்னாரிக்கொடி.
கிருட்டிணன்—ஸ்ரீ கிருஷ்ணபகவான், 2. அருச்சுனன், 3. வியாசன்.
கிருட்டிணி— } காக்கணங்கொடி.
கிஷ்ணி— }
கிருதம் — செய்யப்பட்டது, 2. முதல் யுகம், 3. நெய், 4. செம்முருங்கை மரம்.

கிருதரன் – முகத்திடை நின்று தும்மலுஞ்சினமும் வெம்மையும் விளைக்கும் வாயு.
கிருதன்–கிருதவன்மன், (கிருஷ்ணமூர்த்தியின் மாமன்).
கிருதார்த்தம்–காரியசித்தி.
கிருதி–செய்கை.
கிருது–செருக்கு.
கிருத்தி–தோல், 2. மான்தோல், 3. கிருத்திகை.
கிருத்திகை–கார்த்திகை.
கிருத்திமம்–தோல், 2. பூரகணம், 3. வஞ்சனை, 4. பொய்.
கிருத்தியம்–தொழில், 2. கன்மக்கிரியை, 3. நடக்கை, 4. லௌகிக வேலை, 5. கடமை, 6. சடங்கு, 7. பிதிர்கடன்.
கிருத்திரிமம்–, கிருத்திரமம்– } வஞ்சனை
கிருத்துவம்–, கிறுத்துவம்– } செருக்கு, 2. குரூரம்.
கிருபணம்–உலோபம்
கிருபன்–, கிருபாசாரியன்– } ஓர் வில்லாசிரியன்.
கிருபாளு–கிருபையுடையோன்
கிருபி–துரோணன் மனைவி.
கிருபை–கருணை.
கிருமி–புழு, 2. அரிபுண்
கிருமிக்குன்றம்–வாலுளுவையரிசி.
கிருமிநாசம்–குராசானி யோமம், 2. பலாசவிரை, 3. வேப்பீர்க்கு, 4. பேய்ப்பீர்க்கு, (ஓர் கொடி), 5. பங்கம்பாளைச்செடி.
கிரேதம்–, கிரேதை– } கிரேதாயுகம், (முதல் யுகம்).
கிரேஸ்தன்–கிரகஸ்தன்.
கிரேந்தி–ஏலத்தோல்.
கிரேனிடல்–அஞ்சியொடுங்கல்.
கிரௌஞ்சம்–ஒரு மலை.
கிலம்–சிறுமை, 2. அழிவு.
கிலி–பயம்.
கிலிகோலம்–, கிலியம்பறை– } அலங்கோலம்
கிலீபம்–பேடு.

கிலுகிலு–கிலுகிலென்றொலி.
கிலுகிலுப்பை–ஓர் செடி, 2. ஓர் விளையாட்டுக்கருவி.
கிலுக்கு – (வி) கிலுங்கச்செய், 2. சிறுமணியாட்டு.
கிலுங்கு–(வி) ஒலி
கிலுத்தம்–மணிக்கட்டு.
கிலுமொலெனல் – ஒலிக்குறிப்பு.
கிலேசம் – வருத்தம், 2. துன்பம், 3. நோ, 4. கவலை.
கிலேசி–(வி) துன்பப்படு.
கில்லம்–கழுத்து.
கிழக்கன்–, கிழக்கா–, கிழக்கி–, கிழங்கான்– } ஓர் மீன்.
கிழக்கு–கிழக்குத்திசை.
கிழங்கு–கந்தம்.
கிழடன்–கிழவன்.
கிழடு–முதிர்வயதுள்ளது.
கிழத்தி – மருதத்தலைவி, 2. தலைவி, 3 மனைவி.
கிழமை–உரிமை, 2. சம்பந்தம், 3. கடமை, 4. குணம், 5. மாட்சிமை, 6. வாரம், 7. மூப்பு.
கிழம்–கிழத்தனம்.
கிழலை – திசை, 2. மரக்கலத்தின் சாய்வுப் பக்கம்
கிழவர்–உரியோர், 2. மூப்புடையோர்.
கிழவன்–உரியோன், 2. தலைவன், 3 விருத்தாப்பியன், 4. கணவன்.
கிழவி–மூப்புடையவள், 2. தலைவி, 3. முருங்கைமரம்.
கிழாத்தி–ஓர் மீன்.
கிழார்–இறைகூடை, 2. சலசூத்திரம், 3. தோட்டம்.
கிழாலை–களர் நிலம்.
கிழான் – உரியோன், 2. வேளாளன், 3. சூரியன், 4. தயிர்.
கிழி–கீற்று, 2. கிழிந்ததுண்டு, 3. கிழிடை, 4. கிழிப்பொதி, 5. எழுதுபடம்.
கிழிதல் – பிளத்தல், 2. பீறுதல், 3. கீறுதல்.

கிழித்தல்—கிழியச்செய்தல், 2. கோடு முதலிய கிழித்தல்.
கிழியல்—கிழிந்தநிலை, 2. கிழிவு, 3. பயனற்றவன்.
கிள—(வி) சொல், 2. எழும்பு.
கிளத்தி—நாமகள்.
கிளத்து—(வி) சொல்.
கிளப்பு — (வி) எழுப்பு, 2. பூமியின் கீழிருப்பதைக் கிளப்பு, 3. சுரமுதலியவற்றை எழுப்பு, 4. ஏவிவிடு, 5. மூட்டிவிடு, 6. சுவர் முதலிய கிளப்பு.
கிளம்பு—(வி) எழும்பு, 2. மேலோங்கு, 3. வளர், 4. சுவர் முதலியன கிளம்பு, 5. மூண்டெழும்பு, 6. சினந்தெழும்பு, 7. பக்கத்திற்கிளம்பு, 8. உண்டாகு, 9. புறப்படு, 10. மேலெழும்பு.
கிளர்—ஒலி, 2. பூந்தாது.
கிளர்—(வி) மேலெழும்பு, 2. மேலோங்கு, 3. அதிகரி, 4. இறுமாப்புக்கொள், 5. நிறை, 6. பிரகாசி, 7. சிற.
கிளர்ச்சி—மேலோங்குகை, 2. விருத்தி, 3. உள்ளக்கிளர்ச்சி, 4. நிறைவு, 5. இறுமாப்பு.
கிளர்த்து—(வி) எழுப்பு, 2. ஒளிசெய்.
கிளர்வு—எழுச்சி, 2. பெருக்கம்.
கிளவரி—தண்ணீர்விட்டான் கிழங்கு.
கிளவி—சொல்.
கிளறு—(வி) கிண்டு, 2. கலக்கு, 3. வெளியாக்கு, 4. கிண்டியாராய்.
கிளா—களாச்செடி.
கிளி—கிள்ளை, 2. வெட்டுக்கிளி, 3. ஓர் மீன்.
கிளிகடிகருவி— } தட்டை.
கிளிகடிகோல்— }
கிளிச்சிறை—ஒருவகைப் பொன்.
கிளிஞ்சில்—ஏரல்.
கிளித்தட்டு—ஓர் விளையாட்டு.
கிளிமூக்குக் கிழங்கு—ஆகாச கருடன் கிழங்கு.
கிளியாறு — புதுச்சேரிக்குத் தெற்கிலுள்ள ஓர் நதி.
கிளுகிளெனல் — ஒலிக்குறிப்பு, 2. விருத்திக்குறிப்பு.
கிளுவை—ஓர் பறவை, 2. ஓர் மரம், 3. ஓர் மீன்.
கிளை — மரமுதலியவற்றின் கிளை, 2. தளிர், 3. சுற்றம், 4. கூட்டம், 5. மூங்கில், 6. ஓர் பண், 7. கைக்கிளையென்னுமிசை, 8. யாழிலோர் நரம்பு.
கிளைகூட்டல் — ஆந்தைகள் கூச்சலிடுதல்.
கிளைக்கதை—ஒன்றிலிருந்து பல கதை தோன்றுங்கதை.
கிளைஞர்—உறவோர், 2. தோழர்.
கிளைதல் — அரிசிகளைதல், 2. சிலைகளைதல்.
கிளைத்தல் — மரக்கிளை கிளைத்தல், 2. பெருகல், 3. சுற்றம் பெருகல், 4. கப்புங் கவருமாய் நிறையல், 5. நெருங்கல்.
கிளைமை—உறவு, 2. சினேகம்.
கிளையார்—சினேகர்.
கிளைவழி—வமிசம், 2. கொடி வழி
கிள்ளாக்கு—அதிகாரநறுக்குச்சீட்டு.
கிள்ளாப்பிறண்டு—ஓர் விளையாட்டு, 2. அலட்சியம்.
கிள்ளி—சோழன்.
கிள்ளு—(வி) கையாற்கிள்ளு, 2. இலை முதலியகிள்ளு, 3. கொஞ்சமாயெடு.
கிள்ளை—கிளி, 2 கருங்கிளி, 3. குதிரை
கிள்ளைவிடுதூது—ஓர் பிரபந்தம்.
கிறுக்கி—அருமை.
கிறுய்—பச்சைநிறக் களிமண்.
கிறி—வழி, 2. பொய்
கிறீசு—குற்றுவாள்.
கிறிச்சிடுதல்—ஒலிக்குறிப்பு.
கிறீஸ்துவம்—கிறிஸ்துமார்க்கம்.
கிறு—நிகழ்கால விடைநிலை.
கிறுகிறு — (வி) தலை கிறுகிறு, 2. தடுமாறு.
கிறுகிறுப்பு—தலைச்சுழற்சி, 2. செருக்கு.
கிறுக்கன்—பைத்தியக்காரன்.
கிறுக்கு—பைத்தியம், 2. அகம்பிரமம்.
கிறுக்கு—(வி) கிறுக்கித்தள்ளு.
கிறுங்கல்—(தொ. ப்) அசைதல்.
கிறுசன்—குங்குமப்பூ, 2. மஞ்சள்.

கிறுது—குறும்பு.
கிறுதுவேதன்—பீர்க்கு, (ஓர் கொடி).
கிற்பு—செய்கை, 2. அடிமைத்தனம்.
கிற்றல்—(வி) செய்தல், 2. கட்டுப்படுத்தல்.
கினி—பீடை.
கிணை—கவசம், 2. விளாமரம்.
கின்று—நிகழ்கால விடைநிலை.
கின்னம்—துன்பம்.
கின்னரம்—கின்னரப்புள், 2. ஓர் யாழ், 3. நீர்வாழ் பறவை, 4. ஆந்தை.
கின்னரர்—பதினெண் கணத்தொருவர்.
கின்னரர்பிரான்—குபேரன்.
கின்னரி—கின்னரம்.
கின்னி—மழைக்கிளி.
கின்னிக்கோழி—ஒருவகைக் கோழி

## கீ

கீ—ஓரெழுத்து, 2. கிளி முதலியவற்றின் குரல்.
கீக்கீயெனல் — பறவைப் பார்ப்பின் குரல், 2. கிளிகுரல் காட்டல்.
கீசகம்—குரங்கு, 2. மூங்கில் மரம், 3. தலைச்சீரா.
கீசகன்—ஓரரசன்.
கீசகாரி—வீமன்.
கீசம்பறை— } முறைகேடு.
கீசறை— }
கீச்சான்—ஓர் மீன், 2. ஓர் பறவை, 3. குழந்தை.
கீச்சி—பாசிமணி.
கீச்சிடல்—கீச்சென்று கத்தல்.
கீச்சு—புள்ளொலி, 2. கீச்சமுகை.
கீச்சுக்கிட்டம்—இருப்புக்கறல்.
கீச்சுக்கீச்சுத்தம்பலம் — ஓர் விளையாட்டு.
கீச்சுத்தாரா—ஓர்வகைத்தாரா.
கீச்சுமாச்செனல்— } கூக்குரலிடல்.
கீச்சுமூச்செனல்— }
கீடமாரி—சிறுபுள்ளடிப்பூடு.
கீடம்—புழு, 2. வண்டு, 3. தோற்புழு.
கீணம்— } சிதைவு, 2. கேடு.
க்ஷீணம்— }

கீணர்— } வறியர்.
க்ஷீணர்— }
கீதம் — இசைப்பாட்டு, 2. வண்டு, 3. இசை.
கீதாரி—இடையன்.
கீதி—கீதம், 2. கீதம்பாடுவோன்.
கீதை—பாட்டு, 2. பூர்வசரித்திரமெடுத்துக் காட்டு. இஃது: அவதூதகீதை, இரிபுகீதை, உத்தரகீதை, சிவகீதை, பகவற்கீதை, பிரமகீதை முதற் பல வகைப்படும்.
கீயாக்கணக்கு — வடமொழியின் கூட்டெழுத்துக்கள்.
கீரம்—கிளி, 2. கருங்கிளி, 3. பால்.
கீரன்—நக்கீரன்.
கீரி—நகுலம், 2. கள்ளிமரம்.
கீரிப்பாம்பு— } வயிற்றிலுள்ள ஓர் வகைப் புழு.
கீரிப்பூச்சி— }
கீரை—இலைக்கறி.
கீரைக்குத்தண்ணீரிறைத்தல் — ஓர் விளையாட்டு.
கீரைநார்ப்பட்டு—ஓர் பட்டு.
கீரோமாரோவெனல்—பிள்ளைகள் கூக்குரலிடல்.
கீர்—சொல்.
கீர்கீரெனல்—ஒலிக்குறிப்பு.
கீர்த்தனம்— } புகழ்ச்சி, 2. தேவகீர்த்தனை.
கீர்த்தனை— }
கீர்த்தி—புகழ்.
கீர்த்திபூஷணன்—இடைச்சங்க காலத்திறுதிக்கண் அரசுசெய்த பாண்டியன்.
கீர்த்திப்பிரதாபம்—மிகுகீர்த்தி.
கீர்த்திமான்—புகழுடையோன்.
கீர்வாணம் — சமஸ்கிருதபாஷையினோர் பகுதி.
கீலக—நாற்பத்தெட்டாவது வருடம்.
கீலகம்—ஆணி, 2. பொறுப்பிடம், 3. தந்திரம்.
கீலம்—வெட்டு, 2. இழிவு, 3. கீல்.
கீலம்—ஆணி, 2. சுவாலை.
கீலாலம்—நீர், 2. இரத்தம், 3. காடி.
கீலு—(வி) கிழி, 2. கிண்டு.
கீல்—யாக்கையின்சந்து, 2. கிசெல்.
கீல்—தண்மை, 2. கதவின்கீல்.

கீழறு—(வி) பூமியிற் சுரங்கஞ்செய், 2. சதிசெய்.
கீழறை—நிலவறை, 2. வளை.
கீழாறு — பூமியினுள்ளோடு மாறு, 2. கொங்குதேசத்தாறு.
கீழாநெல்லி—கீழ்க்காய் நெல்லிப்பூடு.
கீழ்—கீழிடம், 2. கிழக்கு, 3. பள்ளம், 4. கீழுலகம், 5. மறதி, 6. கடிவாளம், 7. கீழ்மக்கள்.
கீழ்க்கண்—கீழ்ப்பார்வை, 2. கண்ணின் கீழ்ப்பக்கம்.
கீழ்க்கதி—தாழ்ந்தபதம்.
கீழ்க்குரல்—அடிக்குரல், 2. மந்தவொலி.
கீழ்சாதி—தாழ்ந்தசாதி, 2. கீழ்ப்பிறப்பு.
கீழ்தல்—(தொ. பெ) அழித்தல், 2. கிழித்தல், 3. பிளத்தல்.
கீழ்ப்படிவு—அமைவு.
கீழ்ப்பயிர் — பெரும்பயிருக்குணிற்குஞ் சிறுபயிர்.
கீழ்ப்பாடு—கீழ்ப்பக்கம், 2 அடக்கம்.
கீழ்மகன்—ஈனன், 2. சனி.
கீழ்மை—ஈனம், 2 தாழ்மை.
கீளி—ஓர்வகைச் சிறுமீன்.
கீறு—வரி, 2. பிளவு, 3. கீற்று, 4. தென்ஞோலை அல்லது பனங்கிழங்கின் பாதி, 5. எழுத்து.
கீறு—(வி) வரிகீறு, 2. எழுது, 3. வறண்டு, 4. ஆயுதத்தாற்கீறு, 5. கிழி, 6. பிள, 7. உரைகல்லிலுரை, 8. குறிப்புக்காட்டு.
கீற்று—வரி, 2. பிளவு, 3. கீறல்.
கீற்றுமதி—மூன்றாம்பிறைச் சந்திரன்.
கீனம்—இழிவு, 2. குறைபாடு.
கீனன் — குலமில்லான், 2. குறைவானவன்.

# கு

கு—ஓரெழுத்து, 2. நான்கனுருபு, 3. ஒரு சாரியை.
கு—பூமி, 2. சிறுமை.
குகம்—மலைக்குகை.
குகரம்—மலைக்குகை, 2. குடவறை, 3. ஓரெழுத்து.
குகன் — முருகன், 2. ஸ்ரீராமபிரானின் தோழன்.
குகு—அமாவாசை, 2. கூகையொலி, 3. தசநாடியிலொன்று.
குகுதன்—தசநாடியிலொன்று.
குகுரம்—ஓர் தேசம்.
குகுலா—கடுரோகிணி, 2. தேனீ.
குகை—அளை, 2. மலைக்குகை, 3. முனிவரிருப்பிடம், 4. பொன் முதலியவுருக்கும் பாத்திரம், 5. சமாதியறை.
குகைக்காமன்—கல்நார்.
குகைமேனுதத்தீ—சொன்னபேதி.
குக்கல்—நாய், 2. இருமல்.
குக்கன்—நாய்.
குக்கி— } வயிறு.
குக்ஷி— }
குக்கிலம்—அதிவிடயம், (ஒரு பூண்டு).
குக்கில்—செம்போத்துப்பறவை, 2. குங்கிலியம்.
குக்கு—(வி) கக்கு, 2. குந்து.
குக்குடசர்ப்பம்—பறவைநாகம்.
குக்குடச்சூட்டு—கோழித்தலைக்கந்தகம்.
குக்குடபுடம்—கோழிப்புடம்.
குக்குடம்—கோழி.
குக்குரம்—கோடகசாலைப்பூடு.
குக்குலு— } குங்கிலியம்.
குங்குலு— }
குக்குறுப்பான்— } ஓர் பறவை.
குக்குறுவான்— }
குக்கூவெனல்—ஒலிக்குறிப்பு.
குங்கிலிகம்—வாலுளுவை யரிசி.
குங்கிலியக்கலயர் — அறுபத்துமூன்று நாயன்மார்களுளொருவர்.
குங்கிலியம்—குங்குலியம்.
குங்குதல்—(தொ. பெ) குறைதல்.
குங்குமப்பூ—ஓர் மருந்து.
குங்குமம்—ஒருமரம், 2. செஞ்சாந்து, 3. குங்குமப்பூ, 4. குங்குமநிறம்.
குங்குமவர்ணி—மஞ்சட்கல், 2. அரிதாரம்.
குங்குலு—குங்கிலியம்.
குசக்கலம்—மட்கலம்.
குசத்தனம்—மூடத்தனம்.
குசத்தி—குசப்பெண், 2. பூநீறு. (இலிங்க ஒரு மருந்து).
குசந்தனம்—செஞ்சந்தனமரம்.

குசமசக்கு—வீண்மயக்கு.
குசம்—புறங்கூறல்.
குசம்—தருப்பைப்புல், 2. நீர், 3. மரப்பொது, 4. முலை.
குசலம்—மிகுந்தகல்வி, 2. சாமர்த்தியம், 3. சுகம், 4. தந்திரம், 5. மாந்திரிகம்.
குசலர்—மிகவல்லோர், 2. அறிஞர்.
குசலவர்—ஸ்ரீ இராமபிரான் மைந்தர்.
குசவர்—குயவர்.
குசவாரம்—செவ்வாய்க்கிழமை.
குசவளை—
குசவலை— } தடை.
குசன்—செவ்வாய், 2. சீராமன் புதல்வரிலொருவன்.
குசாக்கிரம்—தருப்பை நுனி.
குசால்—உல்லாசம், 2. களிப்பு.
குசினி—சமையல்வீடு, 2. சிறியது.
குசு—அபானவாயு.
குசுகுசெனல்—
குசுகுசுப்பு— } காதுக்குள் ஓதுதல்.
குசுமம்—புட்பம்.
குசும்பம்—ஒரு பூ, 2. ஒரு மரம்.
குசும்பா—செந்திருக்கம் பூமரம், 2. மிகுசிவப்பு, 3. ஓர்வகைப் பானம்.
குசேசயம்—தாமரைப்பூ.
குசேலன்—ஸ்ரீ கிருஷ்ணபகவானின் ஓர் பிராமணதோழன்.
குசை—கடிவாளம், 2. குதிரை கட்டுங்கயிறு, 3. குதிரையின் பிடர்மயிர், 4. தருப்பைப்புல்.
குசையன்—வீரவேகி.
குசோத்தியம்—தந்திரம், 2. பரிகாசம்.
குச்சத்தின்பாதி—சிறுபுள்ளடிப்பூடு.
குச்சம்—புறங்கூறுகை, 2. நாணற்புல், 3. குன்றிக்கொடி, 4. பற்படகம், (ஒரு மருந்துப்பூடு).
குச்சம் — நூல்முதலியவற்றின்கொத்து, 2. நெற்குஞ்சம்.
குச்சரம்—ஓர் தேசம்.
குச்சரர்—குச்சிலியர்.
குச்சரி—ஓர் பண்.
குச்சி—கூர்ச்சு, 2. மயிர்க்குச்சு.
குச்சிதம்—அரோசிகம்.
குச்சிலி—அங்காடிக்கடை.
குச்சிலியர்—குச்சரர்.
குச்சில்—சிறுகுடில்.
குச்சு—சிறுகுடில், 2. மரக்குச்சு, 3. பாவாற்றி, 4. சிறுகம்பு, 5. தலைமயிர்க்குச்சி, 6. குஞ்சம்.
குச்சுக்காரி—விபசாரி.
குச்சுப்புல்-அழுக்கெடுக்கக்கட்டியபுல்.
குச்சை—கொய்சகம்.
குஞ்சம்—குச்சு, 2. பூங்கொத்து, 3. குன்றிக்கொடி, 4. ரயோட்டி, 5. கதிர்க்கொத்து, 6. கூன், 7. குறள், 8. கோட்சொல்லல், 9. நாழி, 10. பாவாற்றி, 11. புளி நறளைச்செடி, 12. சீதாங்கபாஷாணம்.
குஞ்சரம்—யானை, 2. உச்சிதம், 3. கருங்குவளை.
குஞ்சராசனம்—அரசமரம்.
குஞ்சி — குடுமி, 2. சிற்றப்பன், சிறியதாய், 3. பறவைக்குஞ்சு, 4 மயிர்.
குஞ்சிச்சடை—சிறுசடை
குஞ்சிதம்—வளைவு, 2. குந்திநிற்கை.
குஞ்சிரிப்பு—புன்னகை.
குஞ்சு—பல்லி—ஓந்தி — பறவை முதலியவற்றின் குஞ்சு, 2. ஆண்குறி.
குஞ்சுரம்—குன்றிக்கொடி.
குஞ்சுறை—பறவைக்கூடு.
குடகம்—தேசமைம்பத்தாறினொன்று, 2. ஓர் மலை.
குடகரம்—உத்தாமணிச்செடி.
குடகு—ஒரு தேசம்.
குடக்கி—வளைவானது.
குடக்கியன்—கூனன்.
குடக்கினி—கருங்காலிமரம்.
குடக்கு—மேற்கு.
குடக்கோ—
குடக்கோன்— } சேரன்.
குடங்கர்—குடம், 2. கும்பவிராசி, 3. குடிசை.
குடங்கை—உள்ளங்கை.
குடசப்பாலை—கொடிப்பாலைச்செடி.
குடசம்—வெட்பாலைமரம், 2. மலைமல்லிகை.
குடஞ்சுட்டு—பசு.
குடதிசை—மேற்குத்திசை.

குடத்தி—கழுதைக் குடத்தி, (ஓர் மிருகம்), 2. முல்லை நிலப்பெண்.
குடந்தம்—திரட்சி, 2. நால்விரல்மடக்கிப் பெருவிரல் நிறுத்தி நெஞ்சிடைவைக்கை, 3. குடம், 4. கும்பகோணம்.
குடந்தை—கும்பகோணம்.
குடப்பம்—இருப்பைமரம்.
குடப்பாலை—ஒரு மரம்.
குடமணம்—கருஞ்சீரகம்.
குடமாடல்—மாயோன்கூத்து.
குடமுழா—ஒரு முழவு, (வாத்தியம்).
குடமுருட்டி—காவிரியின் ஒருகிளை.
குடம்—மருதநிலத்தூர், 2. ஊர்ப்பொது, 3. பசு, 4. கைகொட்டிக் குவிக்கை, 5. மாயோன்கூத்து, 6. கொடுந்தமிழ் நாட்டிலொன்று, 7. பூசம்.
குடம்—கும்பம், 2. கும்பவிராசி, 3. சருக்கரை, 4. திரட்சி.
குடம்பை—பறவையின்கூடு, 2. முட்டை.
குடரி—யானைத்தோட்டி.
குடர்—குடல்.
குடலேறுதல்—குடல்பிசகி மேலிடுதல்.
குடலை—கதிர்க்குடலை, 2. ஓலைக்கூடை, 3. கிணற்றுக்குடலை, 4 பழக்கூடு, 5. ஓலைக்கூடு.
குடல்—குடர்.
குடல்வாதம்—ஒருவகை நோய்.
குடவம்—பித்தளை.
குடவர்—இடையர்.
குடவளப்பம்—இருப்பைமரம்.
குடவன்—பித்தளை, 2. ஒரு கொட்டைக்காய், 3. கோட்டம், (ஒரு பூண்டு).
குடவு—குமரனுடல், 2. வளைவு, 3. குகை.
குடவு—(வி) வளை.
குடா—குடைவு, 2. கடற்குடா, 3. கோணம்.
குடாக்கு—உக்கா, 2. உக்காமருந்து.
குடாக்கை—வயலின் மூலை.
குடாசகம்—கடடம், 2. எய்ப்பு, 3. மாயம், 4. துர்ப்போதனை.
குடாப்பு—கூடு.
குடாரம்—கோடாலி, 2. தயிர்கடைதாழி, 3. தயிர்கடைதறி.
குடாரி—கோடாலி, 2. யானைத்தோட்டி.
குடாரு—தயிர்கடைதாழி.
குடாவடி—கரடி.
குடாவு—குடா.
குடான்—செம்முள்ளிச்செடி.
குடி—குடும்பம், 2. கோத்திரம், 3. குடியானவன், 4. குடியிருப்பு, 5. ஊர், 6. மருதநிலத்தூர், 7. வீடு, 8. மனைவி, 9. உடம்பு.
குடி—(வி) பருகு, 2. உறிஞ்சு, 3. மதுவுண், 4. முலையுண், 5. உட்கொள்.
குடிகாரன்—சுராபாணி.
குடிகேடன்—துஷ்டன்.
குடிகேடி—வியபிசாரி.
குடிகொள்—(வி) வாசமாயிரு.
குடிக்காடு—ஊர்ப்பொது, 2. மருதநிலத்தூர்.
குடிக்கூலி—வாடகை.
குடிசை—குடில்.
குடிஞை—ஆறு, 2. பறவைப்பொது, 3. கோட்டான், 4. பதி.
குடித்தனக்காரன்—இல்லாச்சிரமி, 2. பயிரிடுவோன்.
குடித்தனம்—இல்வாழ்க்கை.
குடிநிலம்—குடியிருக்கத்தக்க நிலம்.
குடிப்பிறப்பு—ஒழுக்கமுடைய குடியிற்பிறத்தல்.
குடிமகன்—முக்குலத்தோர்க்கு மேவல் செய்வோன், 2. அம்பட்டன்.
குடிமக்கள்—பணிசெய்யும் பதினெண் வகைச் சாதியார்.
குடிமதிப்பு—குடியிறை.
குடியரசு—குடியாட்சி.
குடியிறை—அரசனுக்குக் குடிகள் கொடுக்கும் வரி.
குடிரம்—காரை, (ஒரு செடி).
குடிலச்சி—ஒரு கருவண்டு.
குடிலம்—வளைவு, 2. வஞ்சகம், 3. சடை, 4. ஆகாயம், 5. குராமரம்.
குடிலை—பிரணவம்.
குடில்—சிற்றில், 2. குடிசை, 3. ஆகாயம்.
குடு—கள்.
குடுகு—குடுக்கை.
குடுகுடா—
குடுகுடி— } உக்கா.

குடுகுடு—ஒலிக்குறிப்பு.
குடுகுடுகிழவன்—தளர்ந்தவயதோன்.
குடுகுடுக்கை—காய்ந்தொலிக்குந் தேங்காய்.
குடுகுடுப்பை — அறக்காய்ந்து வற்றலானது, 2. சிற்றுடுக்கை, 3. மரமணி.
குடுக்கை—கமண்டலம், 2. தேங்காய் முதலியவற்றின் குடுக்கை.
குடுமி—ஆண்மயிர், 2. சிகை, 3. உச்சி, 4. மலையுச்சி, 5. வெற்றி, 6. கதவின் குடுமி, 7. யெழிக்குடுமி, 8. பாம்பு பிடிப்பவன்.
குடுமிதட்டு—(வி) தானிய அளவிற்றலை வழி.
குடுமிப்பருந்து—ஓர்வகைப் பருந்து.
குடும்பத்தானம்—களத்திரத்தானம்.
குடும்பம்—ஒரு குடியிலுள்ளார், 2. உறவின் முறையார், 3. குடி.
குடும்பன்—பள்ளர் தலைவன்.
குடும்பி—குடும்பத்தலைவன்.
குடும்பினி—மனைவி.
குடும்பு—பூ முதலியவற்றின் கொத்து.
குடுவை—சிறுகலசம்.
குடை—கவிகை, 2. பாதகுறட்டின் குமிழ், 3. குடைவேல், 4. குமரனுடல்.
குடை—(வி) கடை, 2. துளை, 3. தாதுகுடை, 4. குளி, 5. நோவுபடு, 6. மனதை வருத்து.
குடைக்காளான்—ஓர் காளான்.
குடைக்கிழங்கு—சிற்றரத்தைச்செடி.
குடைச்சல்—குடைதல், 2. வருத்தம்.
குடைதல்—(வி) தோண்டல், 2. நீராடுதல்.
குடைப்புல்—ஓர் புல்.
குடைவு—குகை, 2. வளைவு.
குடோரி—இற்று, 2. மருந்துக்குடோரி, 3. வங்கமணல், 4. வெங்காரம், 5. வெள்ளைப்பாஷாணம்.
குட்டம்—ஆழம், 2. குளம், 3. கொடுந்தமிழ் நாட்டி னொன்று, 4. கோட்டம், (ஒரு பூண்டு), 5. சிறுமை.
குட்டரி— } தொழுநோய்.
குட்டம்— }
குட்டாரி—மலை.
குட்டன்—குழந்தை, 2. மகன், 3. ஆட்டுக்குட்டி.
குட்டான்—சிறு ஓலைப்பெட்டி.
குட்டி—ஆடு முதலியவற்றின் குட்டி, 2. சிறு பெண்பிள்ளை, 3. குழந்தை, 4. ஆதாயம்.
குட்டிச்சாத்தான்—ஒரு பேய்.
குட்டிச்சுவர்—சிறு சுவர், 2. மடையன்.
குட்டிப்பலா—ஓர் செடி.
குட்டிமம்—கற்படுத்த இடம்.
குட்டியம்—சுவர்.
குட்டியிடுக்கி—சிற்றரத்தைச்செடி, 2. கோட்டம், (ஒரு பூண்டு), 3. பயிருடன் முளைக்குமோர்புல்.
குட்டினம்—கருஞ்சீரகம்.
குட்டினி — சங்கம் வாங்குபவள், 2. வசவி.
குட்டு — மானம், 2. குட்டுதல்.
குட்டு—(வி) தலையிற்குட்டு.
குட்டுவன்—சேரன்.
குட்டை—குள்ளம், 2. சிறு குளம், 3. கைத்துண்டு, 4. தொழுமரம், 5. ஒரு வியாதி.
குணகண்டி—சிவதைக்கொடி.
குணகம்—பெருக்குந்தொகை.
குணகாங்கியம்—ஓர் ஆரியநூல்.
குணகாரம்—பெருக்குக்கணக்கு.
குணகு—பிசாசம்.
குணக்கு—கோணல், 2. எதிரிடை, 3. கிழக்கு.
குணங்கர்—பிசாசம்.
குணங்கு—(வி) வளை, 2. சோர், 3. மனந்தளர்.
குணட்டு—கதிரின்குலை.
குணட்டு—(வி) மயக்கிப்பேசு, 2. செல்லங்கொஞ்சு, 3. துள்ளி விளையாடு.
குணத்திரயம் — முக்குணம்; அவை: இராசதம், சாத்துவிகம், தாமதம் என்பன.
குணபத்திரன்—கடவுள், 2. அருகன், 3. நிகண்டுசெய்த மண்டலவனின் குரு.
குணபம்—பிணம், 2. பிசாசம்.

குணபலம்—அதிவிடயம், (ஒரு பூண்டு).
குணம்—பண்பு, 2. தன்மை, 3. நற்குணம், 4. இலட்சணம், 5. மேன்மை, 6. சுகம், 7. சொஸ்தபுத்தி, 8. வியாதியின்குறி, 9. சீர்மை, 10. தத்துவம், 11. கயிறு, 12. நாணி, 13 சத்து, 14. உடற்குணம், 15. குடம்.
குணலி—சீந்திற்கொடி
குணலை—வீராவேசத்தாற் கொக்கரிக்கை, 2. ஓர் கூத்து.
குணவாகடம்—ஓர் வைத்திய நூல்.
குணவான்—நற்குணன்.
குணனம்—பெருக்கல், 2. விவரம்.
குணனீயம்—பெருக்கப்படுந்தொகை.
குணாதீதன்—கடவுள்.
குணும்பு—கோமாளம்.
குணுலம்—ஓர் தேசம், 2. ஓர் புள்
குணுலை—வீராவேசத்தாற் கொக்கரித்தல்.
குணி—மூடவன், 2. குணத்தையுடையது.
குணி—(வி) எண்பெருக்கு, 2. கணி, 3. உத்தேசி.
குணிதம் — பெருக்கிக்கண்டபலம், 2. மடங்கு.
குணில்—பறையடிக்குந்தடி, 2. குறுந்தடி, 3. கவண்.
குணு—புழு.
குணுகுணெனல்— } ஒலிக்குறிப்பு, 2.
குணுகுணுக்க— } முணுமுணெனல்.
குணுக்கு—மாதர் காதணியிலொன்று, 2. குதம்பை, 3. வலையில் தொடுத்திருக்கு மீயக்குண்டு, 4. வெள்ளி.
குணுங்கர்—சண்டாளர், 2. தோல்வினைஞர், 3. தோற்கருவியாளர்.
குணுங்கு—பிசாசம்.
குண்டகன்—சோரபுத்திரன்.
குண்டக்கிரியம் — } ஓரிராகம்.
குண்டக்கிரியை— }
குண்டணி—குறளை.
குண்டம் — குடுவை, 2. பானை, 3. குளம், 4. குழி, 5. ஓமமுதலிய குண்டம்.
குண்டலகேசி — ஓரிலக்கியநூல், (சிறுபஞ்சகாவியங்களிலொன்று).
குண்டலம் — குழை, 2. வட்டம், 3. வானம், 4. ஆகாயம்.
குண்டலன்—பலராமன், 2. குண்டலந்தரித்தவன்.
குண்டலி-சீந்திற்கொடி, 2 மூலாதாரம், 3. காளி, 4. பாம்பு, 5. இசங்குசெடி.
குண்டனி—வசவி
குண்டன்—குண்டகன், 2. அடிமை.
குண்டா—பானை.
குண்டாணிக்கொடி— } ஓர் கொடி.
குந்தாணிக்கொடி— }
குண்டான்—ஒருவித பானை.
குண்டி — ஆசனபக்கம், 2. ஈரல், 3. இருதயம், 4. மீன்சினை, 5. பழத்தின் கீழ்ப்புறம்.
குண்டிகை—கமண்டலம்.
குண்டியம்—குறளை, 2. இரகசியங்களைத் தூற்றல், 3. பொய்.
குண்டில்—சிறுசெய், 2. முதுகு.
குண்டினம்— } விதர்ப்பதேசத்திராசதானி.
குண்டினபுரம் — }
குண்டு — திரண்டவடிவு, 2. பீரங்கிக்குண்டு, 3. கஞ்சா முதலியவற்றிற்செய்த திரளை, 4. ஆழம், 5. தாழ்வு, 6. விதை, 7. ஆண் குதிரை, 8. சிறுசெய்.
குண்டு—நீர்த்தடாகம், 2. குழி.
குண்டை—எருது, 2. இடபவிராசி, 3. சட்டி, 4. ஈகைக்கொடி.
குண்டோதரன்—ஒரு பூதன், 2. பெருந்தீனிக்காரன்.
குண்ணியம் — பெருக்கப்படுந்தொகை, 2. பொருட்டன்மை.
குதக்கு—(வி) வாயில் ஆகாரம் அடை.
குதக்கேடு—சீர்கேடு.
குதட்டு—(வி) மெல், 2. குதப்பு.
குதப்பு—(வி) குதட்டு.
குதம் — வெங்காயம், 2. கிடங்கு மிகுதி.
குதம்—மலவாயில், 2. தருப்பைப்புல்.
குதம்பு—(வி) அலைசு, 2. கொதி, 3. சின.

குதம்பை—காதிடுசவடீ, 2. ஓர் காதணி, 3. ஒரு பூடு.
குதம்பைச்சித்தர்—ஓர் சித்தர்.
குதர்—(வி) பிரித்துக்கோது.
குதர்—பிரிவு.
குதர்க்கம் — முறைகெட்டதர்க்கம்.
குதலை—மழலைச்சொல், 2. மாதருடைய மொழி, 3. மூடன், 4. எதிரிடை.
குதறு — (வி) சிதற, 2. கிண்டு, 3. குலை.
குதனம்—
குதவண—
குதவணக்கேடு— } துப்புரவின்மை, 2. சாதுரியமின்மை.
குதாவிடை—தடை.
குதானன்—தாளிச்செடி.
குதி—காலின்குதி.
குதி—(வி) பாய், 2. இரசமுதலியன குதி, 3. பெருமையிலே துள்ளு, 4. கட, 5. கடந்துபோ.
குதி—குதிப்பு, 2. முயற்சி.
குதிப்பிளவை—
குதிக்கள்ளன்— } குதியில் வரும் ஓர் புண்.
குதிப்பு—ஓர் மீன்.
குதிரை — பரி, 2. கயிறு முறுக்குங் கருவி, 3. யாழின் ஒருறுப்பு, 4. துப்பாக்கியினோருறுப்பு, 5. நீரையடைக் குமரம், 6. ஊர்க்குருவி.
குதிரைக்கல்லவண—சேணம்.
குதிரைக்குளம்பு—நீர்க்குளிரிச்செடி.
குதிரைப்பந்தி—குதிரைச்சாலை.
குதிரைப்பிடுக்கன்—பீநாறிமரம்.
குதிரைமுகம்—நளகம்.
குதிரையாளி—வைரவன்.
குதிரைவாலிச்சம்பா—ஓர் நெல்
குதிர்—நெல் முதலியவைக்குங் கூடு.
குதிர்தல்—
குதிர்படுதல்— } (தொ. பெ) செவ்வைப் படுதல்.
குதுகலம் —
குதூகலம்— } அகக்களிப்பு.
குதும்பகர்—தும்பைப்பூடு.
குதுவை—அடகு.
குதை—[illegible]ணிப்பூட்டு, 2. விற்குதை, 3. [illegible]ம்பின்குதை.
[illegible]—பதி.

குத்தகை—பராதீனமில்லாமை.
குத்தரசம்—பெருங்காயம்.
குத்தாலம்—காட்டாத்திமரம்.
குத்தாலா—கடுகுரோகணி.
குத்தி—குற்றி.
குத்தி—அடக்கம், 2. மண், 3. சிறு குடுவை.
குத்திக்கொல்லர்—பணங்கொண்டுபோகிறவர்.
குத்திரம்—வஞ்சகம், 2. குரூரம், 3. பொய், 4. மலை, 5. சுடுசொல், 6. சீக்கிரம், 7. சணற்பயிர்.
குத்தினி—
குத்துனி— } ஓர் பட்டுச்சீலை.
குத்து—சணற்பயிர்.
குத்து—(வி) ஊசி முதலியவற்றாற்குத்து, 2. ஈட்டி முதலியவற்றாற்குத்து, 3. உலக்கையாற்குத்து, 4. நெரி, 5. கையினாற்குத்து, 6. கிறுக்கிக்குத்து, 7. கொம்பினால்முட்டு, 8. பறவை குத்து, 9. புள்ளிகுத்து, 10. கிண்டு, 11. பறி, 12. துப்பாக்கியைக்கெட்டி, 13. விதையூன்று, 14. சுடுவார்த்தை பேசு, 15. தடங்கற்செய், 16. பிரை குத்து, 17. வயிறு முதலிய குத்து.
குத்துக்கோல்—தாற்றுக்கோல், 2. முட்கோல்.
குத்துத்திராய்—ஓர் கீரை.
குத்துப்பகன்றை—ஓர் செடி.
குத்துப்போர்—நிறுதிட்டமாய்வைக்குஞ் சூடு, 2. மற்போர்.
குத்துவாள்—உடைவாள்.
குத்தெனவீழ—(வி) தலைகீழாய்விழ, 2. நிறுதிட்டமாய்விழ.
குந்தகம்—
குந்தக்கம்— } தடை.
குந்தம்—நோய், 2. ஓர் கண்ணோய், 3. குதிரை, 4. குருந்தமரம், 5. கற்பாஷாணம், 6. கோளகபாஷாணம், 7. தாலம்பபாஷாணம்.
குந்தம்—நவநிதியிலொன்று, 2. குந்துருக்கம், 3. சவளம், 4. கைவேல், 5. பெருஞ்சவளம்.

குந்தளம் — பெண்மயிர், 2. மயிர்ப்பொது, 3. மயிர்க்குழற்சி, 4. ஓர் தேசம்.
குந்தனம்—பணியில் மணிபதித்தல்.
குந்தா—துப்பாக்கியின் அடி, 2. கப்பலின் பிற்பக்கம்.
குந்தாணி—பெருவுரல், 2. குந்தநோய்.
குந்தாலி— } கிணறுவெட்டுங் கருவியிலொன்று.
குந்தாலம்— }
குந்தாளி—(வி) களித்துக்குதி.
குந்தி—பாண்டவர் தாய், 2 கள்ளு.
குந்திருக்கம்—குங்கிலியம்.
குந்து—ஓட்டுத்திண்ணை, 2. தும்பு.
குந்து-(வி) குந்தியிரு, 2. காற்படங்குந்து.
குந்துரு— } ஒரு வாசனைத் திரவியம்.
குந்துருக்கம்— }
குபசுபா—எட்டிமரம்.
குபலம்—அபலம், 2. கெடுதல்.
குபீர் குபீரெனல்— } விரைவுக் குறிப்பு
குபீல் குபீலெனல்— }
குபேரகம்—சின்னிப்பூடு
குபேரன்—தனதன், 2. சந்திரன்.
குபையம்—சிறுபுள்ளடிப்பூடு
குப்பக்காடு—நாட்டுப்புறம்.
குப்பம்—கடற்கரையூர், 2 அச்சிநாணயம்.
குப்பல்—குவியல், 2. கூட்டம்.
குப்பாயம்—சட்டை.
குப்பி—ஓர்வித குடுவை, 2. மாதர் சிரசணியுளொன்று, 3. வீணையின் முறுக்காணி, 4. குப்பிக்கடுக்கன்.
குப்பிச்சாரம்—காசிச்சாரம்.
குப்பிலவணம்—வளையலுப்பு.
குப்புழாய்— } ஒரு செடி.
குப்புழை— }
குப்புறு — (வி) முகங்குப்புறவிழு, 2. தலைகுனி, 3. கட, 4. பாய்.
குப்பை—குவியல், 2. கூட்டம், 3. மேடு, 4. குப்பைமேடு.
குப்பைக்கீரை—முட்கீரை.
குப்பைமேனி—ஓர் பூடு.
குப்பையன்—அழுக்கடைந்தவன்.
குமஞ்சம்— } தூபவர்க்கம்; அஃது ஆண்குமஞ்சான், பெண்குமஞ்சான் என விருவகை.
குமஞ்சான்— }
குமடு—கன்னம்.
குமட்டு—ஓக்காளம்.
குமட்டு—(வி) வாய்குமட்டு, 2. அரோசி.
குமதி—புத்திகேடன்.
குமரகண்டம்—ஓர் வலிப்பு.
குமரம்-கொம்பில்லாவிலங்கு.
குமரம்—ஓரிலக்கண நூல்.
குமரன்—பாலியன், 2. கௌமாரன், 3. புதல்வன், 4. முருகன், 5. வயிரவன்.
குமரி — பருவமுடையவள், 2. கன்னிகை, 3 புதல்வி, 4. அழிவின்மை, 5 கற்றாழைச்செடி, 6. கன்னியாகுமரியாறு, 7. காளி, 8 கௌமாரி.
குமர் — மணமுடியாதவள், 2. கன்னிகை.
குமல்—அரிவாள்
குமாரத்தி—புத்திரி, 2. இராசகுமாரி.
குமாரன் — புத்திரன், 2 பாலியன், 3 இராசகுமாரன், 4. விடலை, 5. முருகன்.
குமாரி—குமரி, 2. புதல்வி, 3. துர்க்கை, 4. சுவர்ணபேதி.
குமார்க்கம்—அமார்க்கம்.
குமி—(வி) மிகக்குத்து, 2. குவி.
குமிகை—வெள்ளொள்ளு.
குமிடக்கல்—கிட்டக்கல்.
குமிட்டி—(வி) திரளு.
குமிதிகம்—தேக்கமரம்.
குமிலம்—பேரொலி.
குமிழி—நீர்க்குமிழி, 2. மிதியடிக்குமிழ்.
குமிழ்—நீர்க்குமிழி, 2. திரண்டவடிவம், 3. ஓர் மரம், 4. நாணற்புல், 5. எருத்துத்திமில், 6. உள்ளங்காற்கட்டி.
குமிழ்ப்பு—புடைப்பு, 2. புளகம்.
குமிளி—நீர்மேற்குமிழி.
குமுகுமெனல்—மிகுமணக் குறிப்பு.
குமுக்கு—மொத்தம், 2. பெருந்தொகை, 3. திரட்சி, 4. உதவி.
குமுணன்-முதலெழு வள்ளல்களிலொருவன்.-
குமுதகம்—ஓர் சித்திரக்கம்பி.

குமுதசகாயன்—சந்திரன்.
குமுதம்—அடுப்பு, 2. பேரொலி, 3. படையிலோர் தொகை அஃது சேனாமுகம் மூன்று கொண்டது, 4. தருப்பைப் புல், 5. வக்கிராந்த பாஷாணம், 6. வெள்ளைப் பாஷாணம், 7. கருவிழி நோயிலொன்று, 8. மிருதி.
குமுதம்—வெள்ளாம்பல், 2. செவ்வாம்பல், 3. தென்மேற்றிசையானை.
குமுதன்—குரங்குப்படைத்தலைவரிலொருவன்.
குமுந்தம்—கற்பாஷாணம்.
குமுலி—துளசிச்செடி.
குமுறு—(வி) மேகமுழங்கு, 2. இரை, 3. கொதி, 4. பேசலாலொலி.
குமை — (வி) குழையவேவு, 2. மயங்கு, 3. சோர், 4. வெப்பத்தாற் புழுங்கு, 5. அழி.
குமைஞ்சான்—குமஞ்சான்.
குமைத்தல் - (தொ. பெ) குழையவேவித்தல், 2. துவைத்தல், 3. அழித்தல், 4. உரலிற்குத்தல்.
கும்பகம்- சுவாசபந்தனம், 2. தொட்டிப் பாஷாணம், 3. சாலாங்க பாஷாணம்.
கும்பகன்னன்— } இராவணன் றம்பி.
கும்பகர்ணன் - }
கும்பகாம்போதி—ஓரிராகம்.
கும்பகோணம்—ஒருபட்டணம், 2. மோசம்.
கும்பஞ்சான்—சிவதைக்கொடி.
கும்பமுனி—அகஸ்தியன்.
கும்பம் — கலசம், 2. கரகம், 3. கும்பராசி, 4. யானைமத்தகம், 5. நெற்றி, 6. பிடரிக்கும்பம், 7. குவியல், 8. தாலம்ப பாஷாணம், 9. தோட்கும்பம்.
கும்பயோனி — அகஸ்தியன், 2. துரோணாசாரியன், 3. வசிட்டன்.
கும்பல்—குவியல், 2. திரள், 3. கூட்டம்.
கும்பளமோசு—சுரைமீன்.
கும்பளம்—பூசணிக்கொடி.
கும்பளா—ஓர் மீன்.
கும்பன்—ஓர் இராட்சதன்.
கும்பா—ஓர் கலம்.
கும்பி—சேறு, 2. சுடுசாம்பல், 3. வயிறு, 4. குவியல்
கும்பி—யானை, 2. நரகம்.
கும்பி — (வி) பிராணவாயுவை யுள்ளே நிறுத்து
கும்பிஜீ- வளைங்குகை.
கும்பிடு—(வி) கைகுவி, 2. கைகுவித்து வணங்கு, 3 ஆராதி, 4. கெஞ்சு.
கும்பிடுசட்டி—தீச்சட்டி.
கும்பிபாகம்—ஏழுநரகத்திலொன்று.
கும்பு- கூட்டம்.
கும்பு (வி) அடிப்பற்று.
கும்மட்டம் - விளக்கேற்றக் காகிதமுதலியவற்றாற் கட்டுங்கூடு, 2. கோவிலின்தூபி, 3. வளைவு, 4. ஓர்வாத்தியம்.
கும்மட்டி — குதிகொண்டு விளையாடல், 2 ஒரு வாத்தியம்.
கும்மலி பருத்தவள்.
கும்மல்—அரிவாள்.
கும்மாயம்- பண்ணைம்பு
கும்மாளம்—குதித்துவிளையாடுகை.
கும்மி - ஓர்விளையாட்டு, 2. ஓர்வகைப் பாட்டு
கும்மு — (வி) சீலை கும்மு.
கும்மெனல்—இருட் குறிப்பு.
குயக்காலம் -நிலக்கடம்புப்பூடு.
குயத்தினலிசை—நிலவாகைப்பூடு.
குயபீசகம்- எட்டிமரம்.
குயம்—முலை, 2. இளமை, 3. கொடுவாள், 4. தருப்பைப்புல்.
குயவரி- புலி.
குயவன்—குசவன்.
குயவு—தேர்.
குயா—கோஙகுமரம்
குயிலாயம்—பறவைக்கூடு, 2. மட்கலம் வனையுங்கூடம், 3. சுவர்நறை.
குயிலு — (வி) இரத்தினம்பதி, 2. சொல், 3. கூப்பிடு, 4. செய், 5. பின்னு, 6. கட்டு, 7. துளை, 8. நெருங்கு.
குயிலுவம் — நரம்பு முதலிய கருவித் தொழில்.
குயில்—சொல், 2. ஓர் பறவை, 3. துளையுடைப்பொருள்.

குயிற்று—(வி) பதி, 2. செய், 3. சொல்.
குயின்—மேகம்.
குயின்மொழி — குயிலின்குரல், 2. அதி மதுரம்.
குயுத்தி—கெட்டயுத்தி.
குய்—தாளித்தகறி, 2. நறும்புகை.
குய்யகர்—ஓர் தேவகணம்.
குய்யம் — மறைவு, 2. பெண்குறி, 3. ஆண்குறி, 4. அபானவாயில், 5. கபடம்.
குரகதம் — குதிரை, 2. குதிரைப் பற்பாஷாணம்.
குரகம்—நாகணவாய்ப்புள், 2. நீர்வாழ் பறவை.
குரகர்—சாகதிவார்.
குரக்கன்—கேழ்வரகு.
குரங்கம்—எட்டிமரம்.
குரங்கம்—மான், 2. விலங்கின்பொது.
குரங்கன்சுறு-ஒருமீன்.
குரங்கி—சந்திரன்
குரங்கு—வானரம், 2. முசுமுசுக்கைக் கொடி, 3. விலங்கின்பொது.
குரங்கு—(வி) குனி, 2. வளைந்துதாழ், 3. வணக்கஞ்செய், 4. இரங்கு.
குரங்கு—தொடை, 2. கொளுக்கி.
குரங்குகடியன்—பழுதுற்ற தேங்காய்.
குரங்குச்சேட்டை—குணங்கெட்ட செய்கை.
குரங்குவலி—ஓர் நோய்.
குரச்சை—குதிரைக்குளம்பு.
குரஞ்சி—ஓரிராகம்.
குரண்டகம்—மருதோன்றிமரம்.
குரண்டம்- கொக்கு.
குரத்தம்—ஆரவாரம்.
குரத்தி—தலைவி, 2. குருவின் மனைவி, 3. ஐயை.
குரப்பம்—குதிரைதேய்க்குங் கருவி.
குரமடம்—பெருங்காயம்.
குரம்—குதிரை முதலியவற்றின் குளம்பு, 2. தருப்பைப்புல், 3. பசு, 4. பாகற் கொடி.
குரம்பு—செய்வரம்பு, 2. செய்கரை.
குரம்பை—உடல், 2. சிறுகுடில், 3. பறவைக்கூடு, 4. முட்டை.

குரல் — மிடற்றூற் பிறக்கும் இசை, 2. சத்தம், 3. ஓசை, 4. மிடறு, 5. மிடற் றிசை, 6. யாழ்நரம்பிளுேரோசை, 7. யாழின் ஓர் நரம்பு, 8. பாதிரிமரம்.
குரல்- மயிர்ச்சுருள், 2. பெண்மயிர், 3. இறகு, 4 திணை, 5. கதிர்.
குரவகம்—வாடாக்குறிஞ்சிமரம், 2. மருதோன்றிமரம்.
குரவம் - பேரீந்துமரம், 2. கோட்டம், (ஒரு பூண்டு), 3. ஓர் மரம், 4 நறுமணம்.
குரவாரம்- குறிஞ்சாக்கொடி.
குரவர்—பெரியோர், 2. குருக்கள்.
குரவன்—பிரமன்.
குரவு—ஓர் செடி, 2. நறுமணம்.
குரவை - கூத்து, 2. கைகோத்தாடல், 3. ஒலி, 4 கடல்.
குரா—குரவுமரம்.
குராசானி—ஓர் பூடு
குரால்- கபிலநிறம், 2 பசு, 3. கோட்டான்.
குரிகிற்றளி—ஓர் கிழங்கு.
குரிசில்—பெருமையிற் சிறந்தோன், 2. அரசன், 3 ஆண்மகன்.
குரீஇ- குருவி
குரு—ஆசான், 2 வியாழன், 3. பாரம், 4. காத்திரம், 5. பெருமை, 6. இருமாத்திரை, 7. கொடில், 8. சிவன், 9. திவ்வியம், 10. உலோகங்களை வேதிக்குஞ் சிந்தூரமுதலியவை, 11. பிரகாசம், 12. அங்கீரிரன் புதல்வரில் ஒருவன், 13. குருவருடம், 14. குருகுல வம்சத்து முதல் அரசன், 15. குருபூமி, 16. வேர்ச்குரு, 17. குருவியாதி, 18. தருசி.
குரு—(வி) கோபி.
குருகு—இளமை, 2. வெண்மை, 3. பறவைப்பொது, 4. நாரை, 5. கோழி, 6. கைவளை, 7. மூலநாள், 8. குருக்கத்தி மரம், 9. உலைமூக்கு, 10. ஓர் தேசம்.
குருகுமணல்—வெண்மணல்.
குருகூர்—ஆழ்வார் திருநகரி.
குருக்கத்தி—ஓர் மரம்.
குருக்கன்—மெலிவிக்குநோய்.

குருக்கு—பிரமதண்டுச் செடி.
குருக்குத்தி—ஓர் முட்செடி, 2. பயிரில் விழும் ஓர் வியாதி.
குருசம்—வேர்தோன்றிக் கிழங்கு.
குருச்சி—சீனக்காரம்.
குருடன்—கண்ணில்லாதவன், 2. சுக்கிரன், 3. திருதராட்டிரன்.
குருடு—பார்வையில்லாமை, 2. சாந்தியில்லாமை, 3. குருட்டுப்பக்கம், 4. புத்தியீனன்.
குருட்டுப்பத்தி—அறியாமையான பத்தி.
குருணி — ஓரளவு; அஃது எட்டுபடி கொண்டது.
குருதி—சிவப்பு, 2. இரத்தம், 3 செவ்வாய், 4. மூளை.
குருது—குதிர், 2. கிருதம்.
குருத்து—ஓலை முதலியவற்றின் குருத்து, 2. மூளை, 3. இளமை, 4. வெண்மை, 5. காதுக்குருத்து.
குருத்தோலப்பெருநாள் — கிறிஸ்தவர்களின் ஓர் திருநாள்.
குருநாடி—ஒரு நாடிவிதிநூல்.
குருநாதன் — பரமகுரு, 2. குமரக்கடவுள்.
குருந்தம்— } ஓர்வகைக்கல்.
குருந்தக்கல்— }
குருந்து—குருந்தமரம், 2 குழந்தை, 3. குருந்தக்கல்.
குருபரன்—பரமகுரு.
குருபூசை—இறந்த குருவைக் குறித்துச் செய்யும் அன்னதானம்
குருப்பு—பரு.
குருமலை—சுவாமிமலை.
குருமன்— } சிறுவுரு.
குருமான்— }
குருமி—(வி) ஒலி.
குருமுறை—சவக்காரம், 2. கோடாசுழிப்பூடு.
குருமூர்த்தம்—தெய்வம் குருவாக வருதல்.
குருமை—பெருமை.
குரும்பி—புற்றுஞ்சோறு.
குரும்பை—பனைதெங்குகளின் பிஞ்சு, 2. புற்றுஞ்சோறு, 3. காதுக்குரும்பை.
குருவாரம்—வியாழக்கிழமை.
குருவால்—இத்திமரம்.
குருவி—சிறுபறவை, 2. மூலநாள்.
குருவிக்காரர்-குருவிபிடிக்குமொருஜாதியார்.
குருவிக்கார்—ஓர் நெல்.
குருவிச்சி— } புல்லுருவிப் பூடு.
குருவிச்சை— }
குருவிந்தம்—கோரைக்கிழங்கு, 2. வாற்கோதுமை, 3. ஓர்வகை மாணிக்கம், 4. சாதிலிங்கம், 5. ஓர் படர்கொடி.
குருவுக்காதி—பச்சைக்கர்ப்பூரம்.
குருவளை—இளமை, 2. ஒருசார்விலங்கின் குட்டி, 3 ஆமை
குருள்—முன்கொண்டை, 2. பெண்மயிர்.
குரூபம்—அவலட்சணரூபம்.
குரூபி—அவலட்சணரூபி.
குரூரம்—கொடுமை.
குரை—ஒலி, 2. குதிரை, 3. குளம்பு, 4 ஓரசைச்சொல்.
குரை—(வி) ஒலி, 2. நாய்குரை.
குரைமுகன்—நாய்.
குரோசம்—கூப்பிடுதூரம்.
குரோட்டம்—நரி, 2. பன்றி.
குரோதம்—உட்பகை, 2. விரோதம்.
குரோதன—ஓராண்டு.
குரோதன்—வீரபத்திரன்.
குரோதி—ஓராண்டு.
குரோதி—(வி) பகைசாதி.
குலகன்னி—பதிவிரதை.
குலகாயம்—பேய்ப்புடல்கொடி.
குலகாலம்—இலக்கடம்புப்பூடு.
குலக்கு—இணுக்கு.
குலசுவேதகன்—சவரிலோத்திரம்.
குலசேகராழ்வார் — பன்னிரு ஆழ்வார்களிலொருவர்.
குலப்பம்—செம்புமணல், 2. கக்குவான்.
குலமகள்—குலஸ்திரீ.
குலம்—சாதி, 2. கூட்டம், 3. இனம், 4. மனை, 5. அரமனை, 6. உயர்குலம், 7. குடி, 8. இரேவதி.
குலம்பா—பேய்ச்சுரைக்கொடி.
குலவரை-சிரேஷ்டமான மலை, 2. அத்தநாகம்.

குலவு – (வி) பிரகாசி, 2. உலாவு, 3. கொண்டாடு, 4. நட்புறு, 5. வளை, 6. பொருந்து.
குலவுகாசம்–நாணற்புல்.
குலவுரி – சந்தனமரம், 2. செஞ்சந்தனமரம்.
குலவை–குரவை.
குலாங்கனை–உயர்குலத்தவள்.
குலாங்குலி–காவட்டம்புல்.
குலாசாரம்–குலநடை.
குலாதனி–கடுரோகிணி.
குலாபு–முட்செவ்வந்திச்செடி.
குலாயம்–பறவைக்கூண்டு.
குலாரி–ஓர்வகை வண்டி.
குலாலன்–குயவன்.
குலால்–செவ்வை.
குலாவு – (வி) சஞ்சரி, 2. அளாவளாவு, 3. பிரகாசி, 4. கொண்டாடு, 5. புகழ், 6. வளை.
குலிகம் – சிவப்பு, 2. சாதிலிங்கம், 3. இருப்பைமரம்.
குலிங்கம்–ஊர்க்குருவி, 2. காக்கை, 3. ஒரு தேசம்.
குலிசபாணி–கந்தன், 2. தேவேந்திரன்.
குலிசம்–வச்சிராயுதம், 2. வச்சிரக்கவசம், 3. இலுப்பைமரம், 4. வன்னிமரம், 5. கற்பரிபாஷாணம்.
குலிசல்–நாகபாஷாணம்.
குலிந்தம்– ஓர் தேசம்.
குலிரம்–நண்டு.
குலிலி–படைமுகவொலிக்குறிப்பு.
குலீனன்–குலமுள்ளோன்.
குலுகுலு–(வி) குருகுரு.
குலுக்கு–அசைப்பு, 2. பிலுக்கு.
குலுக்கு – (வி) அசை, 2. ஆட்டியிறுகச்செய், 3. பிலுக்குக்காட்டு.
குலுக்கை–குதிர்.
குலுங்கு–(வி) அசை, 2. நடுங்கு.
குலுத்தம்–கொள்.
குலுமமூலம்–இஞ்சிக்கிழங்கு.
குலுமம்–சேனையில் ஓர் தொகை.
குலை–கொத்து, 2. விற்குதை, 3. அம்பின்குதை, 4. செய்கரை, 5. ஈரற்குலை முதலியன.

குலை – (வி) கட்டவிழ், 2. கலை, 3. தளர், 4. கற்பழி, 5. சீர்குலை, 6. மனந்தடுமாறு, 7. நடுங்கு, 8. பயப்படு, 9. சினக்குறிப்புக்காட்டு, 10. அழிந்துபோ.
குலைத்தல்–(தொ. பெ) அழித்தல், 2. ஒழுங்கறச்செய்தல்.
குலைப்பன்–சீதநோய், 2. சக்குவான்.
குலைவு–கட்டுக்குலைவு, 2. தாறுமாறு, 3. அழிவு, 4. கலைவு.
குலோமி–வெள்ளறுகம்புல்.
குலோமிசை–வசம்பு.
குல்லம்–முறம்.
குல்லரி–இலந்தைமரம்.
குல்லா– } தலைக்குல்லா.
குல்லாய் – }
குல்லான்–சலாகைப்பாரை.
குல்லி–ஓர் பூடு.
குல்லிரி–வீராவேசவொலி.
குல்லை–கஞ்சாச்செடி, 2. துளசிச்செடி, 3. வெட்சிமரம்.
குல்வலி–இலந்தைமரம்.
குவடு–திரட்சி, 2. மலை, 3. குன்று, 4. மலையுச்சி, 5. மரக்கொம்பு, 6. சங்கபாஷாணம்.
குவட்டிலுதித்தோன்–சொன்னபேதி.
குவலம்–அவுபலபாஷாணம்.
குவலயம் – பூமி, 2. கருங்குவளை, 3. செங்குவளை, 4. நெய்தற்கிழங்கு.
குவலயாபீடம் – கிருஷ்ணபகவானை எதிர்க்கவந்த ஓர் யானை.
குவலயானந்தம்–ஓர் அலங்காரநூல்.
குவலிடம்–ஊர்.
குவலையன்–குருசி.
குவவு–திரட்சி, 2. பெருமை, 3. கூட்டம், 4. பூமி, 5. மேடு.
குவளச்சி–புற்றும்பழம்.
குவளை–ஓர் நீர்ப்பூங்கொடி, 2. மணிபதிக்குங்குவளை, 3. கடுக்கன்குவளை, 4. கண்மடல், 5. கண்குழி, 6. கண், 7. கண்குவளை, 8. ஓர்வகைப்பாத்திரம், 9. கண்கோளகை, 10. பாத்திரத்தின் விளிம்பு.
குவா–ஓர் கிழங்கு.

குவால்—கூட்டம், 2. குவியல், 3. மேடு.
குவிதல்—(தொ. பெ) சேருதல், 2. ஒடுங்குதல், 3. கைகுவிதல், 4. நெருங்குதல், 5. திரளுதல்.
குவித்தல் — (தொ. பெ) நென்முதலிய குவித்தல், 2. பணைஞ்சேர்த்தல், 3. கைகுவித்தல். 4. ஒளித்தல்.
குவிந்தன்—சேணியன்.
குவிப்பு—குவிக்கை, 2. சேர்க்கை, 3. கைகுவிப்பு.
குவில்—அறுத்தல் 2. கைபிடியரி.
குவை—குப்பை, 2. கூட்டம், 3. திரட்சி, 4. மேடு.
குழகம்— } அழகு, 2. சிறுவர்க்குரிய
குழகு— } ஓர் நூல்.
குழகன்—முருகன், 2. சிவன்.
குழங்கல்—ஓர் மாலை.
குழந்தை—பிள்ளை.
குழப்பம் — } தாறுமாறு, 2. மண்கலக்
குழப்படி — } கம், 3. கலசம், 4. இராசகலகம், 5. கொந்தளிப்பு.
குழப்பு—(வி) கல, 2 ஒழுங்கைக்கலை, 3. தாறுமாறாக்கு, 4. மனதைக்குழப்பு, 5. தடு, 6. அலைக்கழி, 7. குழப்பஞ் செய்.
குழம்பு — குழம்பலான பதார்த்தம், 2. குழைசேறு, 3. கஞ்சி
குழம்பு—(வி) கலங்கு, 2. மனந்தளும்பு, 3. நிலைகுழம்பு, 4. தத்தளி, 5. கலை.
குழலப்பம்—ஒரு தின்பண்டம்.
குழலு—(வி) சுருட்டி முடி.
குழல்—துளையுடைப்பொருள், 2. ஊதுகுழல், 3. இசைப்பாட்டு, 4. மயிர்க்குழற்சி, 5. பெண்மயிர், 6. உட்டுளை, 7. ஓர் மீன்.
குழவி—குழந்தை, 2. விலங்கின்பிள்ளை, 3. மரக்கன்று, 4. அம்மிக்குழவி, 5. இளமை, 6. வாலசந்திரன், 7. பெருமை.
குழவு—இளமை.
குழற்சி—குழன்றிருத்தல்.
குழற்பிட்டு—தூர்வைப்பிட்டு
குழாம்—கூட்டம், 2. திரள்.
குழாய்—துளையுடைப்பொருள், 2. துளை.
குழி—பள்ளம், 2. சதுரஅடிக்குழி, 3. கனவடிக்குழி, 4. பன்னீரடிச்சதுரக்குழி, 5. கிணறு, 6. குளம், 7. வயிறு, 8. பிரேதக்குழி.
குழிசி—பானை, 2. மிடா.
குழிதல்—குழியாதல்.
குழித்தல்—(தொ. பெ) குழியாக்கல்.
குழித்தாமரை — ஆகாசத்தாமரைப்பூண்டு.
குழிநாவல்—ஓர் மரம்.
குழிப்பு—குழிசெய்கை, 2. சந்தக்கவி.
குழிமி—மதகு, 2. பாத்திரத்தின் மூக்கு.
குழிமிட்டான்—நத்தைச்சூரிப்பூண்டு.
குழியம்—திரட்சி, 2. பாராவலையம்.
குழு—கூட்டம், 2. மாதர்கூட்டம், 3. ஆடு மாடு முதலியவற்றின் கூட்டம்.
குழுவன்—குறவனின் பாங்கன்.
குழுவு—(வி) கூடு, 2. சேர்.
குழூஉ—கூட்டம்.
குழூஉக்குறி — ஒவ்வொரு கூட்டத்தார் தம்மில் வழங்குஞ்சொல்.
குழை—தளிர், 2. சேறு, 3. குண்டலம், 4. துளையுடைப்பொருள், 5. நெய்தற்பூண்டு.
குழைச்சு — கயிற்றின்குளசு, 2. யாக்கைப்பூட்டு, 3. ஆயுதக்குளசு, 4. முடிச்சு.
குழைதல்—(தொ. பெ) மனமிளகல், 2. மலர்முதலியன வாடல், 3. தைரியங்குறைதல், 4. வளைதல்.
குழைத்தல்—(தொ.பெ) குழையச்செய்தல், 2. வளைத்தல், 3. தளிர்த்தல்.
குழையல்—குழைந்தது.
குழைவு— இளக்கம், 2. உருக்கம், 3. வாடல்.
குளகம்—மரக்கால், 2. ஆழாக்கு.
குளகம் — பலபாட்டொரு வினைகொள்ளுஞ் செய்யுள், 2. குற்றெழுத்துத் தொடர்ந்தசெய்யுள், 3. பலபாவிற் செல்லும் பொருட்டொடர்பு.
குளகன்—குமரன்.
குளகு — இலையுணவும் விலங்குணவு, 2. இலைக்கறி.

குளகுளெனல்— } (தொ. பெ) நெகிழ்ந்து
குளகுளத்துப்போதல்— } கெட்டுப்போதல்.
குளக்கோடு—குளக்கரை.
குளக்கோட்டன்—இலங்காபுரியில் தருமத்திற்சிறந்த ஓர் அரசன் பெயர்.
குளசு—குழைச்சு.
குளஞ்சி—கிச்சிலிமரம்.
குளந்தை—குளத்தூர்.
குளம்-தடாகம், 2. வெல்லம், 3. நெற்றி.
குளம்பு—விலங்கின்காற்குளம்பு.
குளவி—மலைப்பச்சை மரம், 2. காட்டுமல்லிகைச்செடி.
குளவிந்தம்—ஓர் மஞ்சள்.
குளறு—(வி) உளறு, 2. நரி பேய் முதலிய குளறு
குளன்—குளம்.
குளி—(வி) நீராடு, 2. மூழ்கு, 3. மறை
குளிகன் — அஷ்டநாகத்தொன்று, 2. காணப்படாத ஓர் கோள்.
குளிகை—மாத்திரை.
குளிசம் — இரட்சாபந்தனம், 2. விந்தமேருமற்கட்டுங்குளிசம்.
குளிசீலை—கோவணம்
குளிப்பச்சை—ஆற்றுப்பச்சை, (ஓரிரத்தினம்).
குளியம்—உருண்டை, 2 புலி.
குளிரி—பீலிக்குஞ்சம், 2. நீர்க்குளிரிச்செடி, 3. வெற்றிலை மூக்கரிகத்தி.
குளிர் — குளிர்ச்சி, 2. சுரக்குளிர், 3. பனிக்காற்று, 4. வெண்குடை, 5. கவண், 6. மழு, 7. சூலம், 8. மீனெழுங்கு, 9. முழவு, 10. அச்சக்குறிப்பு.
குளிர்—நண்டு, 2. கர்க்கடகவிராசி.
குளிர்—(வி) குளிர்கொள், 2. குளிர்ச்சியுறு, 3. இதமாகு, 4. சாந்தமுறு.
குளிர்சுரம்—சீதசுரம்.
குளிர்ச்சி—சீதளம், 2 திருத்திகரம்.
குளிர்ந்தபார்வை—தயைநோக்கு.
குளிர்ந்தபேச்சு—மதுரவசனம்.
குளிர்ந்தவேளை—சாயங்காலம்.
குளிர்மை—சீதம், 2. அன்பு.
குளிறு—ஒலி.
குளிறு—(வி) பேரொலிசெய், 2. இரை, 3. ஒலி.
குளீரம்—நண்டு.
குளுகுளுக்க — (வி) சோகைபற்ற, 2. அழுகிப்போக.
குளுகுளுப்பை—காமாலை.
குளுவன்—கோழிக்காரரில் தலைவன்.
குவளச்சு—கால்.
குள்ளக்கெண்டை—ஓர் மீன்.
குள்ளத்தாரா—குள்ளவாத்து.
குள்ளம்—குறுமை, 2. கொடுமை, 3. தந்திரோபாயம்.
குறங்கு—தொடை, 2. கொளுவி.
குறங்குசெறி—தொடையாபரணம்.
குறஞ்சனம்—வெண்காரம்.
குறஞ்சி—செம்முள்ளிச்செடி.
குறடு—கம்மியர்குறடு, 2. மரத்துண்டு, 3. திண்ணை, 4. திண்ணைக்குறடு, 5. பலகை, 6 புத்தகத்தூக்குக்கயிற்றுக்குறடு, 7. நண்டு, 8. புடைப்பு.
குறட்டாரியம்- குறைகூறல்.
குறட்டுவாதம் ஓர் வலிப்பு.
குறட்டை நித்திரையில்விடு மொலி மூச்சு, 2 காக்கணங்கொவ்வைக்கொடி.
குறண்டி ஓர் பண், 2 ஓர் முட்செடி.
குறண்டு—(வி) வளை, 2. சுருண்டுகொள்.
குறத்தி- குறிஞ்சிநிலப்பெண்
குறத்திப்பாட்டு—ஒரு பிரபந்தம்.
குறம்—குறச்சாதி, 2. குறத்திசொல்லுங்குறி, 3. குறத்திப்பாட்டு.
குறவஞ்சி — ஓர் பிரபந்தம், 2. குறப்பெண்.
குறவணவன்—ஓர் புழு.
குறவன்—ஓர் சாதியான், 2. இரதம்.
குறவை—ஓர் மீன்.
குறளி—ஒரு பிசாசு, 2. வசவி, 3. குறியவள்.
குறளை—குள்ளம், 2. கோட்சொல்லல்.
குறள்—சிறுமை, 2. பூதம், 3. இருசீரடி, 4. குறள்வெண்பா, 5. திருவள்ளுவர் குறள்.
குருவு—(வி) சுருங்கு, 2. மெலி, 3. சோர், 4. வாடு.

குருள்—மறிக்குட்டி
குறி—அடையாளம், 2. குறிப்பு, 3. சகுனம், 4. குணம், 5. தரம், 6. இலக்கு, 7. அடி, 8. இவை இன்னவென மனத்தாற்றெளிந்துரைப்பது.
குறி—(வி) கருது, 2. மதி, 3. விதி, 4. குறித்துக்கொள், 5. சுட்டிக்காட்டு, 6. பெயர்குறி, 7. நோக்கு, 8. முன்னறிவி.
குறிக்கோள்—ஒற்றுமை, 2. கிரகித்தல், 3. மேன்மைப்பாடு.
குறிச்சி—கிராமம், 2. சிறு கிராமம், 3. குறிஞ்சிநிலத்தூர்.
குறிஞ்சா- ஒரு கொடி.
குறிஞ்சி—குறிஞ்சிமரம், 2 செம்முள்ளிச்செடி, 3. மருதோன்றிமரம், 4. மலைச்சார்நிலம், 5. மருதநிலத்தினோர் வகையிசை, 6. குறிஞ்சிநிலத்திராகம், 7. ஓர் பண், 8. மருதயாழ்த்திறம், 9. எந்துமரம்.
குறிஞ்சிக்கருப்பொருள்— குறிஞ்சிநிலத்துற்பத்திப்பொருள், அவைசேய்முதற்சுனையாடலீருயவாம்.
குறிஞ்சிப்பாட்டு—ஒரு தமிழ்நூல்
குறிஞ்சிவலக்கல்—ஈரற்கல்.
குறிஞ்சில்—தொட்டிப்பாஷாணம்.
குறிஞ்சிவேந்தன்—குமரன்.
குறிப்பு—அபிப்பிராயம், 2. ஒருமை; 3. சைகை, 4. உட்கருத்து, 5. அடையாளம், 6. ஞாபகக்குறிப்பு, 7. பொழிப்பு, 8. காரியவிவரம், 9. குறிப்புக்குறி, 10. இலக்கு, 11. உருவக்குறிப்பு.
குறிப்போலை — காரியங் குறித்திருக்குமோலை.
குறில்—குற்றெழுத்து.
குறுகலர்—பகைவர்.
குறுகு—(வி) குள்ளமாகு, 2. சுருங்கு, 3. அணுகு, 4. மாத்திரையிற்குறை.
குறுகுத்தாளி—சிறுதாளிச்செடி.
குறுகுறுத்தல்—, குறுகுறுப்பு— } அசங்கோஷக்குறிப்பு.
குறுகுறுப்பு—, குறுகுறுப்பை— } குறட்டை.
குறுகுறெனல் — விரைவுக்குறிப்பு, 2. அசங்தோஷக்குறிப்பு.
குறுக்கம்—சுருக்கம், 2. கௌரிபாஷாணம்.
குறுக்கு — திரியக்கு, 2. விட்டம், 3. தடை, 4. சுருக்கம், 5. இடையீடு.
குறுக்கையர்—திருநாவுக்கரையர்.
குறுங்கண்—பலகணி.
குறுங்காடு—சிறுகாடு.
குறுங்குடியாள்—நாளகம்.
குறுஞ்சிரிப்பு- புன்னகை.
குறுணி-ஓரளவு; அது எட்டுபடிகொண்டது.
குறுவணை—சிறு நோய்.
குறுதல்—(தொ. பெ) தறித்தல், 2. குத்தல்.
குறுநடை--தளர்நடை.
குறுநிலமன்னர்—சிற்றரசர்.
குறுந்தடி—குறியதடி, 2. பறைமுதலிய அடிக்குந்தடி
குறுந்தொகை—ஒரு தமிழ்நூல்.
குறுந்தொட்டி-சிறுகாஞ்சொறிக்கொடி.
குறுமாக்கள்—சிறுவர்.
குறுமுட்டு—மதிப்பின்மை, 2. கெடுஅவசரம், 3. ஒடுக்கம், 4. பலாத்காரமாய்க்கேட்கை, 5. சடுதியிலெதிர்ப்படுகை
குறுமுனி—அகத்தியன்.
குறுமை—சுருக்கம், 2. குறுகுகை, 3. சிறுமை, 4. பாவம்.
குறும்பர்—வேடர், 2. குறுநிலமன்னர், 3. கீழ்மக்கள், 4. குறும்பிடையர்.
குறும்பாடு—பள்ளையாடு.
குறும்பி—காதுள்ளழுக்கு.
குறும்பிடி—உடைவாள்.
குறும்பு—பாலைநிலத்தூர், 2. போர், 3. அரணிருக்கை, 4. குறும்பர்சாதி, 5. குறும்புத்தன்மை.
குறும்பூழ்—காடை.
குறும்பொறி—உதரபந்தம்.
குறும்பொறை—காடு, 2. குறிஞ்சிநிலத்தூர், 3. சிறுமலை, 4. மலை.
குறுவாழ்க்கை—வறுமை.
குறுளுப்பட்டை—மலாம்பூசினதகடு.
குறை—[illegible], 2. தரித்திரம், 3. குறும்[illegible] 4. [illegible]ஞ்சல், 5. சேடம், 6.

குற்றம், 7. வெறுப்பு, 8. தெய்வக் குறை, 9. அரசிறை, 10. சொல்லின் குறை.
குறைதல்—(தொ. பெ) சிறுகல், 2. கெடுதல், 3. எஞ்சுதல், 4. ஈனமாதல், 5. சொற்குறைந்துவருதல், 6. அருமையாயிருத்தல்.
குறைத்தல்—(தொ. பெ) சுருக்குதல், 2. தறித்தல், 3. அழித்தல்.
குறைபாடு—ஈனம், 2. குறைவு, 3. தரித்திரம்.
குறேட்டை—காக்கணங்கொடி.
குற்குலு—குங்கிலியம்.
குற்சிதம்—அருவருப்பு.
குற்சை—நவரசத்திலொன்று.
குற்பகம்—நாணற்புல்.
குற்பம்—பரடு.
குற்றம்—பிழை, 2. தீங்கு, 3. சூதகம், 4. குறை, 5. அபராதம், 6. நோய்.
குற்றல்—(தொ. பெ) இடித்தல்.
குற்றி—தறி.
குற்று—(வி) ஊசிமுதலியவற்றாற்குற்று, 2. நெரி, 3. பறி, 4. இடி.
குனட்டம்—அறிவிடயம், (ஒரு பூண்டு.)
குனஷ்டை— } சேட்டை.
குனட்டை— } சேட்டை.
குனட்டு— } சேட்டை.
குனசகம்—சிறுகாஞ்சொறிக் கொடி.
குனசம்—குன்றிக்கொடி.
குனி—வில்.
குனிதல்—(தொ. பெ) வணங்குதல், 2. வளைதல், 3. தாழ்தல், 4. இரங்குதல்.
குனித்தல்—(தொ. பெ) வளைத்தல், 2. அசைத்தல், 3. ஆடல்.
குனிப்பு—ஆடல், 2. கூத்தின் விகற்பம், 3. வளைப்பு.
குனுகுதல்—(தொ. பெ) சிணுங்கிப்பேசல்.
குனை— } கூர்ப்பக்கம்.
கோனை— } கூர்ப்பக்கம்.
குன்மம்—ஓர் நோய், 2. குன்மம் அஃது சேனைமுகம் மூன்றுகொண்டது, 3. தூறு.
குன்றத்துச்சித்தி—தாலம்பபாஷாணம்.
குன்றம்—மலை.
குன்றல்—குன்றுதல்.
குன்றவர்— } குறிஞ்சிநிலமாக்கள், 2. வேடர்.
குன்றவாணர்— } குறிஞ்சிநிலமாக்கள், 2. வேடர்.
குன்றவில்லி—சிவன்.
குன்றி—ஒருகொடி, 2. மனோசிலை.
குன்று — சிறுமலை, 2. மலை, 3. சதய நாள்.
குன்று — (வி) குறை, 2. குலை, 3. பொன்று, 4. கெடு.
குன்றெறிந்தோன்—குமரன்.
குன்றேந்தி—கிருஷ்ணபகவான்.

## கூ

கூ—ஒரெழுத்து, 2. பூமி, 3. கூக்குரல்.
கூகனம்—மறைத்தசொல்.
கூகாகம்—கமுகமரம்.
கூகை—பேராந்தை, 2. கோட்டான்.
கூகைநீறு—காட்டெருமைப்பால்.
கூக்குரல்—கூப்பிடுமொலி, 2. முறையீடு.
கூசனம்—உதாசினம்.
கூசா—ஓர் மட்பாத்திரம்.
கூசு—(வி) நாணு, 2. கண்முதலிய கூசு, 3. அச்சக்குறிப்புக்காட்டு, 4. கூச்சங்கொள்.
கூச்சம்— } நாணம், 2. பல் முதலிய கூசுகை, 3. அச்சம்.
கூசல்— } நாணம், 2. பல் முதலிய கூசுகை, 3. அச்சம்.
கூச்சல்—கூக்குரல்.
கூச்சி—சவரிலோத்திரம்.
கூச்சிதம்— } கடம்பமரம்.
கூச்சிரம்— } கடம்பமரம்.
கூச்சு—கூர்.
கூஷ்மாண்டம் — கலியாண பூசனிக்கொடி.
கூடகம்—வஞ்சனை.
கூடஸ்தம்—நிருவிகாரம்.
கூடஸ்தன் — ஆத்துமா, 2. பரப்பிரமம், 3. முதன்மையுள்ளோன்.
கூடபாகலம்—சூலை, 2. யானைநோய்.
கூடமார்க்கம்—கள்ளவழி.
கூடம்—வீடு, 2. இல்லின்கூடம், 3. வஞ்சகம், 4. பொய், 5. மாயம், 6. கொல்லன் சம்மட்டி, 7. மலையிலுச்சி, 8. மறைவு, 9. புதைபொருள்.

10. ஏகாந்தம், 11. கோளகபாஷாணம், 12. எள்ளுச்செடி.
கூடம்பில்–சுரைக்கொடி.
கூடலர்–பகைவர்.
கூடலூர்–ஓர் பட்டணம்.
கூடல் – மதுரை, 2. சுழிக்குங்கூடல், 3. கழிமுகம், 4. அடர்த்தியான தோப்பு.
கூடலுயகன் – சோமசுந்தரக்கடவுள்.
கூடாக்கு–புகையிலை.
கூடாங்கம்–ஆமை.
கூடாரம்–படாம்வீடு, 2. வண்டிக்கொளசனை.
கூடார்–பகைவர்.
கூடிலி–தசை தின்போன்.
கூடு–பறவைக்கூடு, 2. விலங்கின்கூடு, 3. மைக்கூடு, 4. சரீரம், 5. உறை, 6. புழுக்கூடு, 7. மீன்பறி, 8. கூடாரம், 9. கழுந்துக்கூடு.
கூடு–(வி) பொருந்து, 2. கூட்டங்கூடு, 3. சந்தி, 4. இணங்கு, 5. இயல், 6. தகுதியாகு, 7. பிரயோசனப்படு, 8. அடை, 9. தொகைசேர், 10. சித்தி, 11. தொடங்கு, 12. தேடு.
கூடை–பிரம்பு முதலியவற்றிற் செய்த கூடை, 2. மழைக்கூடை, 3. கூத்தின் விகற்பம்.
கூட்டம்–கூடுகை, 2. திரள், 3. சனக்கூட்டம், 4. தொகுதி, 5. இனம், 6. போர், 7. அனேகம், 8. மிகுதி, 9. பிண்ணாக்கு.
கூட்டு – சேர்க்கை, 2. சம்பந்தம், 3. உறவு, 4. பங்கு, 5. கூடத்தகுந்தது, 6. ஒப்பு.
கூட்டு–(வி) இணை, 2. சேர், 3. கல, 4. தொகைப்படுத்து, 5. அதிகரிக்கச்செய், 6. கூடச்சேர், 7. சவைமுதலியவற்றிற்கூட்டு, 8. சேகரி, 9. பெருக்கு, 10. கூட்டுகை, 11. உண்டாகு.
கூட்டுறவு–இணைந்த உறவு.
கூண்டு–பறவைக்கூடு.
கூதல்–குளிர், 2. காய்ச்சற்குளிர்.
கூதளம்–கூதாளிச்செடி, 2. வெள்ளரிக்கொடி, 3. தூதுளைக்கொடி.
கூதறை–இழிந்தது.
கூதனம்–மறைத்தசொல்.
கூதாரி–வெள்ளரிக்கொடி.
கூதாளம்– } கூதளம்.
கூதாளி– }
கூதிர் – குளிர், 2. பனிக்காற்று, 3. காற்று, 4 கூதிர்ப்பருவம்.
கூதை–பனிக்காற்று, 2. காற்று.
கூத்தரிசி–குத்தினிற்குமரிசி.
கூத்தன்–உயிர், 2. சிவன், 3. நாடகன், 4. தருசி
கூத்தன்குதம்பை – மூக்கொற்றிப்பூண்டு.
கூத்தி–நாடகக்கணிகை.
கூத்து – நடனம், 2. நாடகம், 3. திருக்கூத்து, 4. ஆச்சுமசேட்டை, 5. விளையாட்டு, 6 பிரபஞ்சநடிப்பு, 7. நூதனசெய்கை, 8. கோலாகலம், 9. பரிகாசக்கூத்து
கூத்துக்களரி–நடனசாலை.
கூந்தல்–பெண்மயிர், 2 மயிற்றோகை, 3. குதிரைப்பிடரிமயிர், 4. கமுகுபனைபிவற்றினோலை, 5. கூந்தற்பனைமரம், 6. கூந்தற்சல்லி, 7. கமுகங்குலைக்கூந்தல், 8. யானைக்கழுத்துமயிர்.
கூந்தற்பனை–ஒருமரம்.
கூந்தாலம்– } குந்தாலி.
கூந்தாலி– }
கூபம்–கிணறு.
கூபரம்–முழங்கை.
கூப்பல்–(தொ. பெ) கூப்புதல்.
கூப்பிடு–(வி) அழை, 2. முறையிடு, 3. வரவழை, 4. கூவு, 5. மிருகங்கூப்பிடு.
கூப்பிடுதூரம்–கூப்பிட்ட சத்தங்கேட்கு மெல்லை.
கூப்பு–(வி) குவி, 2. கைகுவி.
கூமரை–கோங்குமரம்.
கூமா–ஒருமரம்.
கூம்பல்–குமிழமரம்.
கூம்பல்–(தொ.பெ) குவிதல், 2. ஒடுங்கல்.
கூம்பு–பாய்மரம், 2. தேர்க்கொடிஞ்சி, 3. சேறு.

கூரணம்—கோடகசாலைப்பூண்டு.
கூரம்—பாகற்கொடி, 2. ஓரூர், 3. கோடகசாலைப்பூண்டு.
கூரம்—பொறாமை, 2. கொடுமை.
கூரல்—பெண்மயிர், 2. புள்ளிறகு, 3. ஓர் பெருமீன்.
கூரன்—நாய், 2. கூர்நெல்.
கூரிலவணம்—அமரியுப்பு.
கூரை—வீட்டுக்கூரை, 2. சிறுகுடில்.
கூர்—இலைக்காம்பு, 2. நென் முதலிய வற்றின்கூர், 3. காரம், 4. கூர்மை, 5. குற்றுதலான பேச்சு.
கூர்கேவு—வெண்கடுகு.
கூர்ச்சம்—கால்.
கூர்ச்சம்-தருப்பைப்புல், 2. தருப்பைக் குச்சம்.
கூர்ச்சரம்—ஒரு தேசம்.
கூர்ச்சரி—ஓரிராகம்.
கூர்ச்சு—கூருள்ள தடி.
கூர்தல்—(தொ.பெ) ஆராய்தல், 2. கூர்மையாதல்.
கூர்த்தல்—(தொ. பெ) உவர்த்தல், 2. மிகுத்தல்.
கூர்த்திகை—ஆயுதப்பொது.
கூர்ப்பரம்—முழங்கை.
கூர்மம்—ஆமை, 2. ஆமை அவதாரம், 3. ஓர் சிவபுராணம்.
கூர்மன்—தசவாயுவிலொன்று.
கூர்மாண்டர்—ஓர்வகை உருத்திரர்.
கூர்மை—கூர், 2. நுண்மை.
கூர்மைக்கரிவாள்—சவக்காரம்.
கூலம்—பலபண்டம், 2. கடைவீதி, 3. காராமணி, 4. பாகற்கொடி, 5. விலங்கின் வால், 6. குரங்கு, 7. முசு, 8. மரை, 9. பசு.
கூலம்—புனற்கரை, 2. கடற்கரை, 3. வரம்பு.
கூலி—சம்பளம், 2. வண்டி முதலியவற்றின்கூலி, 3. கூலிக்காரன்.
கூவம்—கிணறு, 2. சிவஸ்தலங்களிலொன்று.
கூவலர்—நூல் வல்லோர்.
கூவல்—கிணறு, 2. குழி.
கூவியர்—மடையர், 2. அப்பவாணிகர்.
கூவிரம்—வில்வமரம்.
கூவிரம்—தேர், 2. தேர்க்கொடிஞ்சி, 3. தேரிடக்கியம்.
கூவிரி—தேர்.
கூவிளம் — வில்வமரம், 2. நேர் நிரை நிரைச் சீர்க்கு வாய்பாடு.
கூவிளி—கூவுகை.
கூவிளை—வில்வமரம்.
கூவு—(வி) சேவல் முதலியன கூவு, 2. பறவையொலி, 3. கூப்பிடு, 4. அதட்டு.
கூவை—ஒரு கிழங்கு.
கூழம்—எள்ளு.
கூழன்— } ஓர் பலாமரம்.
கூழன்பலா— }
கூழா—நறுவிலிமரம்.
கூழாங்கல்—கோளாங்கல்
கூழாமணி—கூழ்முன்னைக்கீரை.
கூழான்—கண்டகிக்கல்.
கூழை—படையின் பின்னணி, 2. படை வகுப்பு, 3. இறகு, 4. பெண்மயிர், 5. மயிற்றோகை, 6. சேறு, 7. பொன், 8. நடு, 9. ஓர் பாம்பு, 10. கடையின்மை, 11. கவியுறுப்பிலொன்று.
கூழைக்கடா—நீர்வாழ் பறவையி லொன்று.
கூழ்—மாவினுற் சமைத்த உணவு, 2. சோறு, 3. பயிர், 4. பொன், 5. நறுவிலிமரம்.
கூழ்முன்னை—ஓர் கீரை.
கூழ்வரகு—கேழ்வரகு.
கூளம்—குப்பை, 2. திப்பி.
கூளி—பேய், 2. பூதம், 3. வலிமை, 4. பொலிவெருது, 5. எருது, 6. பெருங்கழுகு, 7. சுற்றம், 8. தொகுதி, 9. குற்றம், 10. குள்ளம்.
கூளியர்—படைவீரர், 2. வேடர்.
கூறு—பங்கு, 2. இயற்கைக் கூறு, 3. விகாரத்தன்மை, 4. பகுதி, 5. கூறுபாடு, 6. காரண காரியங்களின் வகை, 7. அறிவிக்கை, 8. என்னு.
கூறு—(வி) பிரசித்தஞ்செய், 2. விலை முதலிய கூறு, 3. சொல், 4. வில்.
கூறுபாடு—பங்கு, 2. பிரிவு, 3. தன்மை.

கூறை—சீலை, 2. கூறைச்சேலை.

கூற்றம்— } யமன், 2. கொடிய சத்
கூற்றன்— } துரு.
கூற்றுவன்— }

கூற்றுதைத்தான்—சிவன்.

கூனல்—வளைவு, 2. கூனல் முதுகு, 3. நத்தை, 4. சங்கு, 5 பிறைச்சந்திரன்.

கூனி—கூனுடையவள், 2. வசவி, 3. மந்தரை.

கூனிரும்பு—அரிவாள்.

கூனு—(வி) கோணு, 2. முதுகுவளை, 3. ஒடுங்கு.

கூனை—கருப்பஞ் சாறுகூன், 2 வேள்விக்குண்டம், 3. கொடிப்பட்டை.

கூன்—கோணல், 2. முதுகுக்கூனல், 3. கூனன், 4. நத்தை, 5. ஆந்தை, 6. கருப்பஞ் சாறுகூன்.

கூன்பாண்டியன்-ஓர்பாண்டியராசன்.

கூன்முதுகு—ஆமையோடு.

## கெ

கெ—ஓர் உயிர் மெய்யெழுத்து.

கெக்கட்டம்—மிகச்சிரிக்கை.

கெக்கரி—(வி) மிக இளி, 2. கொக்கரி.

கெக்கலி—(வி) கைகொட்டி யொலி.

கெக்களி—(வி) கெளி, 2. வளை, 3. தோல்விகாட்டு.

கெசகன்னி—வெருகு, (ஓர் கிழங்கு.)

கெசமாமுட்டி—எட்டிமரம்.

கெசம் — யானை, 2. இரண்டு முழங் கொண்ட அளவு.

கெசாசனை—அரசமரம்.

கெசானைநா—கையாந்தகரைப்பூடு.

கெச்சம்—முல்லைக்கொடி.

கெச்சுக் கெச்செனல்-பல்லியோசை, 2. வருத்தல்.

கெச்சை— } காற்சதங்கை.
கெச்சம்— }

கெஞ்சு—(வி) வருந்தியிர.

கெடலணங்கு—மூதேவி.

கெடிவரல்—மகளிர் விளையாட்டு.

கெடாரம்—கடியாரம்.

கெடி—கீர்த்தி, 2. பயம், 3. அதிபத்தியம், 4. தருக்கம்.

கெடியன் — அஞ்சாதவன், 2. கெடி வீரன், 3. திறமுள்ளோன்.

கெடிலணங்கு—மூதேவி.

கெடிலம்—ஓர்நதி, 2. ஆழமான ஓடை, 3. கெபி, 4. ஒடுங்கிய பாதை.

கெடு—(வி) அழி, 2. கேடுறு, 3. வறுமையுறு, 4. கற்பழி, 5. நிலைகெடு, 6. உருவழி, 7. தோல்வியுறு, 8. குணங்கெடு, 9. நாசமுறு, 10. காணுமற்போ, 11. பொருளழி, 12. சிதை, 13. வினைகெடு, 14. விகாரத்தாற்கெடு.

கெடுதலை — அழிவு, 2. நஷ்டம், 3. இடையூறு, 4. இழிவு.

கெடுதி—இழப்பு, 2. நஷ்டம், 3. ஆபத்து, 4. அழிவு, 5. கேடு, 6. இழந்த பொருள்.

கெடுத்தல்—(தொ. பெ) அழித்தல், 2. ஒழுக்கங்கெடுத்தல், 3. அவமாக்கல், 4 தடுத்தல், 5. தோஷத்தைநீக்குதல், 6. முறியடித்தல், 7. சுருக்குதல், 8. ஒழித்தல், 9. விஷத்தை முறித்தல்.

கெட்டம்—தாடி.

கெட்டார கெட்டி — மிகுந்த சாமர்த்தியம்.

கெட்டி—உறுதி, 2. சாமர்த்தியம், 3. உலோபகுணம்.

கெட்டு—பக்கக்கிளை.

கெண்டன்—மிண்டன்.

கெண்டி— } ஓர் செம்பு.
கெண்டிகை— }

கெண்டை—கயல்மீன், 2. கெண்டைக் கால், 3. சரிகைத்தலைப்பு.

கெதம்—கதம்.

கெதி—கதி.

கெத்து—தந்து, 2. உபாயம்.

கெந்தகம்—நாய்வேளைப்பூடு.

கெந்தகம்—கந்தகம்.

கெந்தம்—வாசனை.

கெந்தனம்—கோடகசாலைப்பூண்டு.

கெந்திகம்—பாம்புகொல்லிப்பூண்டு.

கெந்திபரம்—ஆடுதின்னுப்பாலைச்செடி.

கெந்திவாருணி — பேய்த் திமிட்டிக் கொடி.

கெந்து—(வி) கெவி.

கெபி—மலைக்குகை.
கெம்பத்து—இடம்பம்.
கெம்பீரம்—பரிமளிப்பு, 2. மேன்மை.
கெம்பு— } பதுமராகம்.
கெம்புக்கல்— }
கெம்பு—(வி) உரத்தெழும்பு, 2. இரத்தங்கொதி, 3. ஆரவாரி.
கெய்— } ஓர் மீன்.
கெய்மீன்— }
கெரடி—சிலம்பம்.
கெருடன்—கருடன்.
கெர்வம்—கர்வம்.
கெலி—(வி) வெல், 2. ஆசைப்படு, 3. அஞ்சு.
கெலிப்பு—வெற்றி.
கெவரி—வெள்ளைக் காக்கணங்கொடி.
கெவுடு—அட்சரபந்தனம்.
கெவுரா—துளசிச்செடி.
கெவுரிசங்கம்— } இரட்டை யுருத்திராட்சம்.
கௌரிசங்கம்— }
கெவுளி—பல்லி.
கெவுனி—நகரவாயில்.
கெழு—நிறம், 2. பிரகாசம்.
கெழுதகை— } நட்பு, 2. உரிமை.
கெழுதகைமை— }
கெழுமு—(வி) பொருந்து, 2. நிறை, 3. முளை, 4. கல்.
கெழுமை—பிரகாசம், 2. நிறம்.
கெழுவு—(வி) பொருந்து, 2. நிறை.
கெளிசு— } உடல் வீக்கம்.
கெலிசு— }
கெளிதம்—பெருங்கல்.
கெளிர்ச் சல்லியம்—மீனெலும்பு.
கெளிறு—ஓர் மீன்.
கெறுவம்—ஆங்காரம்.
கெற்சிப்பு—முழக்கம்.
கெற்பாதானம்—கருப்பந்தரித்த நாலாமாதஞ்செய்யுமோர் சடங்கு.
கெற்பு—திராணி.

## கே

கே—ஓர் உயிர் மெய்யெழுத்து.
கேகம்—வீடு.
கேகயம்-மயில், 2. அசுணமா, (ஓர்புள்), 3. ஓர்தேயம்.
கேகயன்—கேகயதேசத்தரசன்.
கேசகன்—நாவிதன்.
கேசதம்—கையாந்தகரைப்பூடு.
கேசம்-மயிர்ப்பொது, 2. குதிரைமயிர்.
கேசரம்—பூந்தாது, 2. பூங்கூந்தல், 3. மகிழமரம், 4. வண்டு.
கேசரர்—வித்தியாதரர்.
கேசரி — சிங்கம், 2. ஆகாய கமனம், 3. குதிரை.
கேசரிகம்—நாயுருவிச்செடி.
கேசவம்-அட்டாதசதருமநூலிலொன்று, 2. வண்டு, 3. பெண்வண்டு.
கேசவன் — நிறைமயிருள்ளோன், 2. மகாவிஷ்ணு, 3. சோழராசாக்களிலொருவன்.
கேசாதிபாதம்—முடிமுதல் அடிவரை, 2. ஓர் பிரபந்தம், அஃது கவிவெண்பாவான் முடிமுதலடியளவுங்கூறுவது.
கேசினி—சங்கங்குப்பிச்செடி.
கேடகம்—பரிசை, 2. ஓர் விமானம், 3. மலைசெறிந்த ஊர், 4. பாசறை.
கேடம்—சிளியாறு.
கேடயம்— } பரிசை.
கேடையம்— }
கேடிலுவகை—மோட்சம்.
கேடு—அழிவு, 2. சிதைவு, 3. கெடுதி, 4. துரோகம், 5. தீமை, 6. வறுமை, 7. அந்தக்கேடு, 8. குறைவு, 9. கெடுதல் விகாரம்.
கேட்டி— } மிலாறு.
கேட்டிக்கம்பு— }
கேட்டை—கேட்டை நட்சத்திரம், 2. மூதேவி.
கேணி—தடாகம், 2. கிணறு, 3. துரவு, 4. அகழி.
கேண்மை—சினேகம், 2. கண்ணோட்டம், 3. உறவு.
கேதகை— } தாழைமரம்.
கேதகி— }
கேதம்—துன்பம், 2. துக்கம்.
கேதனம்—பெருங்கொடி, 2. விருதுக்கொடி, 3. படர்கொடி.

கேதாரகவுளம்—ஓர்ராகம்.
கேதாரம்—ஓர் ஸ்தலம், 2. மயில்.
கேது—ஓர்கோள், 2. அடையாளம், 3. கொடி, 4. வெளிச்சம்.
கேது—(வி) அழை.
கேதுமாலம்—நவகண்டத்தொன்று.
கேதுமாலன் — அங்கிதிரன் புதல்வரி லொருவன்.
கேதுரு—ஓர் மரம்.
கேத்திரகணிதம்—இரேகாகணிதம்.
கேத்திரபாலன்—வயிரவன்.
கேத்திரம்— } விசேஷித்த தலம், 2.
க்ஷேத்திரம்— } விளைநிலம்.
கேந்திரம்—வட்டத்தின் மத்தியம், 2. உதயம், 3. இலக்கினத்திற்கு ஏழா மிடம், நான்காமிடம், பத்தாமிடம்.
கேந்துமுறியம்—நாய்வேளைப்பூடு.
கேப்பை—கேழ்வரகு.
கேமாச்சி—வெள்ளைக்காக்கணங்கொடி.
கேயம்—இசைப்பாட்டு, 2. புகழ்.
கேயிகம்—செங்கல்.
கேயூரம்—தோளணி.
கேரண்டம்—காக்கை.
கேரளம்—ஓர் தேயம், 2. ஓர் பாஷை, 3. சோதிட சாஸ்திரத்தொன்று.
கேரளன்—சேரன்.
கேரவா—இசைப்பாட்டு.
கேரு—(வி) கோழிகத்து, 2. குரல்கம்மு, 3. திகைத்துப்போ.
கேலம்—மகளிர் விளையாட்டு.
கேலி-பரிகாசம், 2. விகடம், 3. நிந்தை.
கேவணம்—மணிபதிக்குங் குழி.
கேவலம்—தனிமை, 2. ஒருங்கு, 3. மோக்கம், 4. இன்மை, 5. மெலிவு, 6. மோசம், 7. விடுதல்.
கேவு—(வி) மூச்சுத்திணறு.
கேழல்—பன்றி.
கேழ்—நிறம், 2. ஒளி, 3. உவமை.
கேழ்வரகு—கேப்பை.
கேளன்—தோழன்.
கேளா—வாளா.
கேளார்—பகைவர், 2. செவிடர்.
கேளி—மகளிர் விளையாட்டு, 2. தெங்கு மரம்.
கேளிக்கை—விநோதாடம்பரம்.
கேளிர்—தோழர், 2. உறவினர், 3. கணவன்.
கேள்—(வி) செவியாற்கேள், 2. புத்திகேள், 3. வினவு, 4. இர, 5. ஆராய், 6. கொடுக்கச்சொல், 7. கண்டி, 8. விலைகேள், 9. உறுத்து.
கேள்வன்—தலைவன்.
கேள்வி—கல்வி, 2. காது, 3. பேச்சு, 4. வினா, 5. பாரம்பரியம், 6. கற்கை, 7. கீழ்ப்படிவு, 8. வழக்குக் கேட்கை.
கேள்வு—தோணிக்கூலி.

## கை

கை—ஓர் உயிர் மெய்யெழுத்து, 2. கரம், 3. யானைத்துதிக்கை, 4. படைவகுப்பு, 5. ஒழுக்கம், 6. சிறுமை, 7. பக்கம், 8. பகுதி, 9. இடம், 10. வரிசை, 11. ஒப்பனை, 12. கைகொண்ட அளவு, 13. சட்டையின் கை, 14. சாமர்த்தியம், 15. கைமரம்.
கைகண்டது—சித்தியுள்ளது, 2. தேறினது.
கைகயன்—கேகயன்.
கைகலு—(வி) ஒன்றாய்க்கூடு, 2. யுத்தங்கல.
கைகாட்டு—சைகைகாட்டல்.
கைகுவி—(வி) கும்பிடு.
கைகூடு—(வி) சித்தியாகு.
கைகேயி— } பரதன் தாய், (தசரதன்
கைகேசி— } மனைவிகளிலொருத்தி.)
கைகொடு—(வி) உதவிசெய்.
கைகோத்தாடு—(வி) குரவையாடு.
கைகோள்—ஒழுக்கம்.
கைக்காரன்—பணக்காரன், 2. சமர்த்தன்.
கைக்கொள்— (வி) ஒப்புக்கொள், 2. பேணிக்கொள், 3. அங்கீகரி.
கைகோளர்— }
கைக்கிளவர்— } செங்குந்தர்.
கைக்குளர்— }
கைக்கிளை—ஒருதலைக்காமம்.

கைக்குழந்தை—இடுக்குப்பிள்ளை.
கைக்கூலி—பரிதானம்.
கைங்கரியம்—பணிவிடை.
கைசருவு—(வி) எதிர்.
கைசலி—(வி) கைதளர்.
கைசெய்—(வி) அலங்கரி.
கைச்சரசம்—இன்பவிளையாட்டு.
கைச்சாத்து—கையெழுத்துத்துண்டு.
கைச்சிமிட்டு—செப்படிவித்தை.
கைடவன்—ஓரரக்கன்.
கைதப்பு—(வி) தவறு, 2. நீங்கு.
கைதர—(வி) உதவ, 2. கைகூட
கைதவம்—சூது, 2. வஞ்சனை, 3. பொய், 4. துன்பம்.
கைதவன்—வஞ்சகன், 2. பாண்டியன்.
கைதளர்—(வி) சோர்.
கைதூக்கு—(வி) இரட்சி
கைதை—தாழைமரம்.
கைதொடு—(வி) உண், 2. தொடங்கு, 3. மணஞ்செய்.
கைத்தலம்—கை.
கைத்தல் – (தொ. பெ) கசத்தல், 2. வெறுத்தல், 3. கோபித்தல்
கைத்தாய்—செவிலித்தாய்.
கைத்திட்டம்—கை மதிப்பு.
கைத்து—பொன்.
கைத்தொண்டு—குற்றேவல்
கைநாட்டு—கைக்கீறல்.
கைந்நீட்டு – (வி) அடிக்கமுந்து, 2. களவெடு.
கைந்நெகிழ்—(வி) விட்டு விடு.
கைந்நொடி—மாத்திரைப் பொழுது.
கைபார்—(வி) கைக்குறிபார், 2 சோதி, 3. நாடிபார், 4. மட்டறி.
கைபிடி—(வி) கலியாணமுடி, 2. நாடியறி.
கைபுனை-(வி) அலங்கரி, 2. பூத்தொடு.
கைபோடு—(வி) பிரமாணிக்கஞ் செய்.
கைப்பட்டை – கைப்பலகை, 2. நீர் முகக்குஞ் சிறுபட்டை.
கைப்பணி—மணியாசிப்பலகை.
கைப்பதட்டம்—விரைவு, 2. திருட்டு.
கைப்பற்று – (வி) பெற்றுக்கொள், 2. கலியாணம் செய்.

கைப்பாடு—கைவேலை, 2. கைவசம், 3. கைநஷ்டம்.
கைப்பிடி—பிடியளவு, 2. ஆயுதப்பிடி, 3. பாணிக்கிரகணம்.
கைப்பு—கசப்பு, 2. வெறுப்பு.
கைப்புடை—கைக்கவசம்.
கைப்புட்டில்—விரலுறை.
கைமட்டு— } உத்தேசம், 2. கையளவு, 3. கைக்குமட்டம்.
கைமட்டம்— }
கைம்பெண்—விதவை.
கைம்மணி—கைத்தாளம்.
கைம்மதியம்—கைம்மட்டு.
கைம்மயக்கு—ஒருவசியமருந்து.
கைம்மலை—யானை.
கைம்மறி—(வி) தடு.
கைம்மா—யானை.
கைம்மாறு—பிரத்தி யுபகாரம்.
கைம்மாற்று—உடன்மாற்று.
கைம்மிகு – (வி) அதிகப்படு, 2. கைகடந்து.
கைம்முடக்கம்—பொருள் முட்டு.
கைம்மூலம்—அக்குள்.
கையடை—அடைக்கலம்.
கையமர்த்தல்—(தொ. பெ) அமயார்தஞ்செய்தல்.
கையயர்—(வி) கைசோர்.
கையரியம்—இரும்பு.
கையர்—கீழ்மக்கள், 2. திருடர்.
கையலுத்தல்-(தொ.பெ) கைசலித்தல்.
கையறல்— } செயலின்மை, 2. ஒழுக்கமின்மை.
கையறவு— }
கையறை— }
கையறுதி—அறுதியாக விற்கை, 2. முற்றாக நீங்குகை.
கையறுநிலை—வாட்போரிலிறந்த வேந்தனைப்பார்த்து யாழ்ப்பாணருஞ் சுற்றத்தாரும் அவன் பட்ட பாட்டைச் சொல்லி இரங்குதல். இதனை யொரு பிரபந்தமாகக் கூறுவர்.
கையறை—செயலின்மை, 2. ஒழுக்கமின்மை.
கையாடு—(வி) பழி, 2. ஆள், 3. பெண்டாள், 4. களவாடு, 5. கற்பழி.

கையாந்தகரை—கரிசாலைப்பூடு.
கையாள்—குற்றேவலாள்.
கையாறு — ஒழுக்கம், 2. துன்பம், 3. சரித்திரம்.
கையிகத்தல் — (தொ. பெ) கடத்தல், 2. மிகுதல்.
கையிருப்பு—கையுரொக்கம்.
கையிழ—(வி) காணமற்போ.
கையிறுக்கம்—உலோபத்தன்மை.
கையுறை-கைக்கவசம், 2. காணிக்கை.
கையெழுத்து—கையாலெழுது மெழுத்து, 2. கைரேகை, 3. தன்பேரெழுத்து.
கையேந்து—(வி) இரந்து வாங்கு.
கையை—தங்கை.
கையொப்பம்—கையெழுத்து.
கையோங்கு—(வி) கைநீட்டு, 2 செழித்தோங்கு.
கைரவம் — குமுதம், 2. வஞ்சகம், 3. வெள்ளாம்பல்.
கைரிகம்—காவிக்கல், 2. பொன்.
கைலாகு— } கைகொடுத்தல்.
கைலாகை— }
கைலாசம்— } கயிலைமலை.
கைலாயம்— }
கைவசம்—கைக்குட்படல்.
கைவரல்—கைப்பழக்கம்.
கைவல்லபம்—கைச்சாமர்த்தியம்.
கைவல்லியம்-உபநிடத முப்பத்திரண்டிலொன்று, 2. தனிமை, 3. மோட்சம்.
கைவளை—தொடி.
கைவாசி—கைச்சித்தி
கைவாட்சம்பா—ஒருவிதநெல்.
கைவாரம்—வாழ்த்து, 2. கூலி.
கைவாறு—கைத்தாங்கல்.
கைவிசேஷம்—கைவாசி.
கைவிடுதல் — (தொ. பெ) கைவிட்டு விடுதல், 2. தள்ளிப்போடுதல்.
கைவிட்டம்—குறுக்குவிட்டம்.
கைவிரி—(வி) மறு.
கைவிலங்கு — யானை, 2. கைக்கிடும் விலங்கு.
கைவிளக்கு—சிறுவிளக்கு.
கைவினை—[illegible]த்தொழில்.
கைவினை[illegible]—கம்மாளர்.
கைவேல்—கைவிடாவேல்.
கைனி—அத்தநாள், 2. கைம்பெண்.

## கொ

கொ—ஒரு உயிர் மெய்யெழுத்து, 2. ஒலிக்குறிப்பு.
கொக்கட்டி—ஓர் செடி, 2. குறண்டற்பனங்கிழங்கு.
கொக்கரி—(வி) கோழி முதலியன கூவு, 2. ஆரவாரஞ்செய்.
கொக்கரிப்பு — கெற்சிப்பு, 2. ஆர்ப்பரிப்பு.
கொக்கரை-வலம்புரிச்சங்கு, 2. பாம்பு, 3. வலை, 4. வில், 5. பனை தெங்கு முதலியவற்றின் பிள்ளை மடல்.
கொக்காம்பாளை—ஓர் செடி.
கொக்கான்—ஓர் விளையாட்டு.
கொக்கி—கொழுவி.
கொக்கு—குரண்டம், 2. மாமரம், 3. குதிரை, 4 மூலநாள், 5. செந்நாய்.
கொக்குக்கல்—சிலமான்கல்.
கொக்குமந்தாரை—ஒரு பூமரம்.
கொக்குமீன்—ஒரு மீன்.
கொக்குமுத்து—கொக்கின் கண்டத்தில் பிறந்த முத்து.
கொக்கேறி—நெட்டிப்புல்.
கொக்கை — கொழுவி, 2. ஓர்வகைத்தோட்டி.
கொக்கோகம்—ஒரு காமநூல்.
கொக்கோவெனல்—ஒலிக்குறிப்பு.
கொங்கணம்—ஓர் தேயம்.
கொங்கணர் — கொங்கண தேசத்தார், 2. ஒரு சித்தர்.
கொங்கணி—ஓர் தென்னோலைக் கூடு.
கொங்கம்—கோளக பாஷாணம்.
கொங்காணி—கொங்கணி.
கொங்கு—ஓர் தேயம், 2. வாசனை, 3. பூந்தாது, 4. கள், 5. தேன், 6. கருஞ்சுரைக்கொடி.
கொங்கை — முலை, 2. மரத்தின்முருடு, 3. கம்புமி.
கொசு— } கொசுகு.
கொசுகு— }
கொசுறு—பிசுக்கு.

கொச்சகம்—ஒரு கலி.
கொச்சாவளா—ஓர்மீன்.
கொச்சி—ஓரூர், 2. சவரிமேலாத்திரம், 3. நெருப்பு.
கொச்சிக்குழந்தை—வைப்பரிதாரம்
கொச்சை — இழிவு, 2. இழிந்தோர் பேச்சு, 3. வெள்ளாடு, 4 இளைத்தல்.
கொஞ்சம்-சிறிது, 2. சுருக்கம், 3. இழிவு
கொஞ்சி—ஓர் செடி.
கொஞ்சு—(வி) மழலைபேசு, 2 செல்லங் கொஞ்சு, 3. முத்தமிடு.
கொடி — படர்கொடி, 2. துவசம், 3. வஸ்திரம் போடுங்கொடி, 4. காற்றுடிப்பட்டம், 5. கயிறு, 6. நீளம், 7. காக்கை, 8. குமரனுடல், 9. தொப்பூழ்க்கொடி, 10. கண்வரி.
கொடிகட்டுதல் — ஜயக்குறிப்பு
கொடிக்கவி—ஒரு தமிழ் நூல்
கொடிக்கால்—வெற்றிலைக்கொடி.
கொடிச்சி—குறத்தி, 2. இடைச்சி
கொடிஞ்சி—தேர், 2 தேர்மொட்டு.
கொடித்தக்காளி-ஒருதக்காளிச்செடி
கொடித்தரம்—அஷ்டமிச்சந்திரன்
கொடிப்படை—முற்படை.
கொடிப்பாலை—ஓரிசை, 2. ஒருசெடி.
கொடிப்பூ—நால்வகைப் பூவிலொன்று.
கொடியேற்றம் — திருவிழாத் தொடக்கம்.
கொடிவேலி—கொடுவேலிச் செடி.
கொடிறு—கதுப்பு, 2. யானைக்கதுப்பு, 3. பூசநக்ஷத்திரம்.
கொடு—(வி) ஈ, 2. கட்டளையளி.
கொடுகு — (வி) குளிராலொடுங்கு, 2. பற்கூசு.
கொடுகொட்டி—சிவன்கூத்து, 2. குமரனுடல்.
கொடுக்கி—கதவின் கொடுக்கி, 2. பணிப்பூட்டு, 3. தேட்கொடுக்கிப்பூடு.
கொடுக்கு—தேள்முதலியவற்றின் கொடுக்கு, 2. பின்கோவணம், 3. கவைத்தாள்.
கொடுங்கண்—கொடும்பார்வை.
கொடுங்கை—உள்வளைந்த கை, 2. கொடுமை, 3. வீட்டின் வெளிப்பக்கம்.

கொடுங்கோபிச்சிலை—மஞ்சட்கல்.
கொடுங்கோல்—அநீதி.
கொடுங்கோளூர்—திருவஞ்சைக்களம்.
கொடுதி—மர ஆணி.
கொடுநுகம்—மக நக்ஷத்திரம்.
கொடுப்பை—பொன்னுங்காணிக்கை.
கொடுமரம்—தனுராசி, 2. வில்.
கொடுமுடி—மலையுச்சி, 2. தேரினுச்சி, 3. கோபுரத்தினுச்சி.
கொடுமை—கொடுங்கோன்மை, 2. குரூரம், 3. வளைவு, 4. கோரம், 5. தீமை, 6. அநீதி, 7. கூர்மை, 8. கடுமை.
கொடும்பாவி—அநீசன், 2. மழையில்லாதகாலத்திற் கட்டியிழுக்கும் ஓர் உரு.
கொடும்பை — அருவி, 2. குளம், 3. தூம்பு, 4. ஓர் பச்சிலை.
கொடுவரி—புலி.
கொடுவாய்—ஓர் மிருகம், 2. ஓர் மீன், 3. வெறும்புறங்கூறுகை.
கொடுவாள்—அரிவாள்.
கொடுவேலி—கொடிவேலிச்செடி.
கொடூரம்—கடுமை.
கொடை—ஈகை.
கொடைமடம் — வரையாது கொடுத்தல்.
கொட்கு—(வி) சுழல், 2. வெளிப்படு.
கொட்டகை— } தொழுவம்.
கொட்டகம்— }
கொட்டங்கைச்சி— } தேங்காயோடு.
கொட்டாங்கைச்சி— }
கொட்டடி—சாமானறை.
கொட்டணை—ஓர் பூடு.
கொட்டம்—தொழுவம், 2. கடுகடுப்பு, 3. ஓர் மருந்து, 4 மூங்கிற்கொட்டு.
கொட்டறை—கொட்டடி.
கொட்டன்— } கொட்டாப்புளி, 2. பருத்தவன், 3. தேங்காய்.
கொட்டான்— }
கொட்டாப்பி—(வி) உண்.
கொட்டாப்புளி— } மரச்சுத்தியல்.
கொட்டாப்பிடி— }
கொட்டாய்—கொட்டகை.
கொட்டாரம்—முதல்வாச[illegible] சாலை.

கொட்டாவி — வாயால்விடு நெட்டுயிர்ப்பு.
கொட்டி—ஓர் பூடு.
கொட்டியம்—எருது, 2. பொதிபெருத்துமந்தை.
கொட்டில் — ஒதுக்கிடம், 2. மாட்டுக்கொட்டில்.
கொட்டு — மண்வெட்டி, 2. சரீரம், 3. மத்தளக்கொட்டு, 4. பனந்துண்டு.
கொட்டு — (வி) பறை இன்னரமுதலிய கொட்டு, 2. கம்மியரடி, 3. கைகொட்டு, 4. கும்மியடித்தாடு, 5. அப்பு, 6. குட்டு, 7. போடு, 8. தேள் முதலிய கொட்டு, 9. சொரி, 10. சிந்து.
கொட்டுமேளம்—நட்டுவமேளம்.
கொட்டுவாய் — சிறுசெந்துக்கள் குற்றின குற்றுவாய்.
கொட்டுவான்—தேள், 2. கொட்டாப்புளி, 3. கொட்டுவேலைசெய்யுங் கன்னான்.
கொட்டை — பழத்தின் கொட்டை, 2. வித்து, 3. பீசம், 4. பஞ்சுக்கொட்டை, 5. திரி, 6. ஓர் காதணி, 7. பாதகுறட்டின் குமிழ், 8. சும்மாடு, 9. தலையணை, 10. தாமரைக்கொட்டை, 11. பலாப்பிஞ்சு.
கொட்டைநூற்றல்—(தொ. பெ) நூல்நூற்றல்.
கொட்டைபோடுதல்—(தொ. பெ) சாதல், 2. பலாமரம் பிஞ்சுபிடித்தல்.
கொட்டைப்பாக்கு—காய்ந்தபாக்கு.
கொட்டைமுத்து—ஆமணக்கு முத்து.
கொட்டையூர்—ஒரு சிவஸ்தலம்.
கொட்பு—சுழற்சி, 2. திரிவு, 3. வளைவு.
கொணர்—(வி) கொண்டுவா.
கொண்கன் — கணவன், 2. நெய்தனிலத் தலைவன்.
கொண்டகுளம்—எட்டிமரம்.
கொண்டக்காரர் — மீன்காரரிலோர் வகுப்பு.
கொண்டக்கிரி—ஓர் பண்.
கொண்டச்சானி — நஞ்சறுப்பான்பூண்டு.
கொண்டம்—குறிஞ்சாக்கொடி.
கொண்டலாத்தி—கொண்டைக்கிளாறு பறவை.
கொண்டல்—கீழ்காற்று, 2. முன்பனிப் பருவக்காற்று, 3. கிழக்கு, 4. மேகம், 5. கொண்டான் விளையாட்டு.
கொண்டல்வண்ணன்—திருமால்.
கொண்டவன் — மணஞ்செய்த கணவன்
கொண்டாடு — (வி) கூடிவிளையாடு, 2. குலாவு, 3. புகழ், 4. கைக்கொள், 5. சீராட்டு, 6. ஆசரி
கொண்டாட்டம்—சந்தோஷம், 2. சீராட்டு, 3. பொழுதுபோக்கு.
கொண்டி—கதவிற்குடுமி, 2. கொள்ளை.
கொண்டிமாடு—பட்டிமாடு.
கொண்டியம்—வெறும் புறங்கூறல்.
கொண்டியாரம்—நிந்தை, 2. செருக்கு, 3. பிறர் காரியத்திற் கையிடுகை, 4. சிறப்பு.
கொண்டேசன்—சுக்கு.
கொண்டை—மயிர்முடி, 2 ஆணிமுதலியவற்றின் தலை, 3. பறவைச் சூட்டு.
கொண்டைகட்டி—ஒரு வேளாளன்.
கொண்டைமுசு—ஒரு குரங்கு.
கொண்டையன்—ஒரு பருந்து.
கொண்மூ—மேகம், 2. ஆகாயம்.
கொதி—நீர்க்கொதி, 2. சூடு, 3. கோபம், 4. காய்ச்சல், 5. கொதிக்கழிச்சல், 6. துக்கம்.
கொதி—(வி) பொங்கு, 2. சுடு, 3. சுரங்காய், 4 வயிறு நழுக்கு, 5. கடுக்கு, 6. கோபி, 7. பரிதபி, 8. மனநோகு, 9. நிலமுதலிய கொதி
கொதிப்பு—பொங்குகை, 2. மூர்க்கம், 3. துடிப்பு, 4. காய்ச்சல், 5. சூடு.
கொதுகு—கொசுகு.
கொதுக்குக் கொதுக்கெனல் — ஒலிக்குறிப்பு.
கொத்தடிமை—பழ அடிமை.
கொத்தமல்லி—ஒரு சரக்கு.
கொத்தம்—எல்லை.
கொத்தவால் — சந்தை விசாரணைக்காரன்.
கொத்தளம்—அரண்.

கொத்தளி—கொத்தளிப்பாய்.
கொத்தவணா—ஓர் மீன்.
கொத்தான்—ஒரு செடி.
கொத்து—பூ முதலியவற்றின் கொத்து, 2. திரள், 3. குடும்பம், 4. ஊழி, 5. கொத்துதல், 6. உணவு.
கொத்து—(வி) பூமியைக்கொத்து, 2. தறி, 3. இரைகொத்தியெடு, 4. வெட்டு.
கொத்துச்சரப்பளி—ஓராபரணம்.
கொத்துத்தாழ்வடம்—சிறு ருத்திர மணிக்கோவை.
கொத்துப்பசலை—ஒரு கீரை.
கொத்துமல்லி—கொத்தமல்லி.
கொத்தை—சொத்தை.
கொந்தளம்—பெண்மயிர், 2. மயிர்க்குழற்சி, 3. கூத்தின் விகற்பம், 4. காண்டாமிருகம்.
கொந்தளி—(வி) பொங்கியெழு.
கொந்தாலி—கல்லுவெட்டு மோர்கருவி.
கொந்தாழை—ஓர் கடற்றாழை.
கொந்தாளம்—ஓர் மருந்து.
கொந்து—பூங்கொத்து.
கொந்து—(வி) கொத்து, 2. பழமுதலியன கொந்து, 3. மூர்க்கங்கொள்.
கொப்பம்—யானைபடுகுழி
கொப்பரம்—மல்யுத்தத்தி லோர்விகம்.
கொப்பரி— } கடாரம்.
கொப்பரை— }
கொப்பளம்—கொப்புளம்.
கொப்பளி—(வி) உமிழ், 2. சொரி.
கொப்பறா—அறக்காய்ந்த தேங்காய்.
கொப்பாட்டன்—மூன்றாம் பாட்டன்.
கொப்பி—கொம்மை.
கொப்பு—கொம்பு, 2. காதணியிலொன்று, 3. கொண்டை.
கொப்புளம்—குமிழ்ப்பு.
கொப்புளி—(வி) கொப்புளங்கொள், 2. துளி, 3. சொரி, 4. உமிழ்.
கொப்புளிப்பான்—சிறு வசூரி.
கொப்புள்—குமிழி, 2. கொப்புளம், 3. கொப்பூழ்.
கொப்பூழ்—உந்தி.
கொப்பேன—விரைவுக்குறிப்பு.
கொம்பரக்கு—பொன் மெழுகு.

கொம்பர்—விலங்கின் கொம்பு.
கொம்பன்—ஆண்யானை, 2. ஒரு மீன்.
கொம்பு—விலங்கின்கொம்பு, 2. மரக்கொம்பு, 3. பூங்கொம்பு, 4. கோல், 5. ஊதுகொம்பு, 6. யானைமுதலியவற்றின் தந்தம், 7. அக்கரத்தின்கோடு, 8. சிவிகையின் கொம்பு, 9. மேன்மை, 10. ஏரிக்கோடி.
கொம்பேறிமுக்கன்— } ஒரு பாம்பு.
கொம்பேறிமூர்க்கன்— }
கொம்மட்டி—ஓர் கொடி.
கொம்மட்டிமாதவளை—ஓர் மாதளைமரம்.
கொம்மெனல்—அனுகரணவோசை, 2. ஒலிக்குறிப்பு.
கொம்மை—திரட்சி, 2. முலை, 3. அழகு, 4. இளமை, 5. வட்டம், 6. கைவிரித்துக்கொட்டுகை, 7. வலி, 8. கொத்தளம், 9. கொம்மட்டிக்கொடி.
கொய்—ஓர் மீன்.
கொய்—(வி) அறு, 2. கத்தரி, 3. சீலைகொய், 4. மூச்சுதொய்.
கொய்சகம்—அரையில் உடுக்குஞ் சீலையிற் கொய்து விடும் தலைப்பு.
கொய்யடி— } ஓர் நாரை.
கொய்யடிநாரை— }
கொய்யா—ஓர் மரம்.
கொய்யுளை—குதிரைப்பிடர்மயிர், 2. குதிரை.
கொய்யோவெனல்—கொய்யோக்குறி.
கொரிக்கம்—எழுத்தாணிப்பூண்டு.
கொருடன்—கொவ்வைக்கொடி.
கொலு—திமிர்ச்சி, 2. சமுகம், 3. கொலுமண்டபம், 4. சேவை.
கொலுகொலு—(வி) சழல், 2. தோல்வியடை.
கொலுகொலுப்பு—ஆடம்பரம்.
கொலுக்கூடம்—கொலுமண்டபம்.
கொலுசு—சங்கிலி.
கொலுமண்டபம்—உல்லாசவீற்றிருப்பு மண்டபம்.
கொலை—உயிர்வதை, 2. கொலைக்குற்றம்.
கொலைக்களம்—கொல்லப்படுமிடம்.
கொலைஞர்—கொலைபாதகர், 2. வேடர்.

கோவலப்பாதகம்—கொல்லுதலாகிய பெரும் பாவம்.
கொல்—அசைச்சொல், 2. ஐயக்கிளவி, 3. ஒலிக்குறிப்பு, 4. வருத்தம், 5. கொல்லன், 6. கொல்லற்று, 7. குறுக்குத்தாழ்.
கொல்—(வி) கொலைசெய், 2. இரசமுதலியவற்றைக்கொல், 3. அலட்டு.
கொல்லங்கோவ்வை— } ஆகாச கருடன்கொடி
கொல்லங்கோவை— }
கொல்லம்—ஒரூர்.
கொல்லம்பாகல்—ஓர் பாகற்கொடி.
கொல்லர் — கருமார், 2. பொக்கசங்காப்போர்.
கொல்லறு—கரணை.
கொல்லன்பகை — அஞ்சனபாஷாணம்.
கொல்லாவேதன்—அருகன்.
கொல்லி—ஓர்பண், 2. ஓர்மலை, 3 நெருப்பு, 4. வில்.
கொல்லித்திறம்—ஒரு பண் விகற்பம்.
கொல்லிவெற்பன்—சேரன்.
கொல்லுலை—கம்மாளர் உலைமுகம்
கொல்லை—புன்செய், 2 சோலை, 3. புறக்கடை.
கொல்லைப்பல்லி—ஓர் பூடு.
கொவிந்தம்—செம்முள்ளிச்செடி.
கொவிளமரம்— } ஓர் மரம்
கொவிள்— }
கொவ்வை—ஒரு கொடி
கொழி — (வி) புடை, 2 ஒதுக்கு, 3. தெளி, 4. வார், 5. குற்றங்கொழி.
கொழிஞ்சி — ஒரு நாரத்தை மரம், 2. பூவாது காய்க்குமரம்.
கொழிப்பூண்டு—குப்பைமேனிப்பூடு.
கொழியல்—தவிடெடுபடாத வரிசி.
கொழு—காறு, 2. மழு, 3. கொழுப்பு.
கொழு—(வி) மதர்த்துத்தழை, 2. தழைத்துச் செழி, 3 மேட்டிமை கொள்.
கொழுகொம்பு — கொடியேறு கொம்பு, 2. தஞ்சம்.
கொழுக்கட்டை—ஒரு பண்ணிகாரம்.
கொழுங்கிரி—மல்லிகைச்செடி.
கொழுஞ்சி — கொழுமிச்சைமரம், 2 கொள்ளுக்காய்வேளைப்பூடு
கொழுது—(வி) கோது.
கொழுநன்—கணவன், 2. இறைவன்.
கொழுந்தன் — புருஷனின் சகோதரன்.
கொழுந்தி—மனைவியின் தங்கை.
கொழுந்து—இளந்தளிர், 2. சுவாலை, 3. வெற்றிலைக்கொடி, 4. மருக்கொழுந்து.
கொழுந்து—(வி) சுவாலி, 2. வெய்யிலிற் கருகு.
கொழுப்பு—நிணம், 2. புஷ்டி, 3. செழுமை, 4. நிலவளம், 5. செருக்கு
கொழுமிச்சை—கொழுஞ்சிமரம்.
கொழுமை—கொழுப்பு, 2. வளமை, 3 நிறம்.
கொழும்பு— } ஒரூர்
கொளும்பு- }
கொளகொளெனல்—ஈரடுக்கொலி.
கொளஞ்சி—குளஞ்சிமரம்.
கொளுக்கி— } கொக்கை.
கொளுவி— }
கொளுத்து—சந்து, 2. மூட்டு
கொளுத்து—(வி) தீப்பற்றுவி, 2. சண்டைமூட்டு, 3. வீணை முதலியன வாசி, 4. அறிவு கொளுத்து, 5. பாணங்கொளுத்து, 6. தூற்று, 7. கண்டி, 8. வெயிற்கொளுத்து.
கொளுவு—(வி) பூட்டு, 2. அகப்படுத்து, 3. கூட்டுச்சேர், 4. தந்திரஞ்செய், 5. செருப்பு முதலியதொடு, 6. பற்று, 7 குடல் தூக்கிக்கொள்.
கொவா—இசைப்பாட்டு.
கொள்— } ஒரு தானியம.
கொள்ளு— }
கொள்— } (வி) வாங்கிக்கொள், 2. அடக்கிக்கொள், 3. விலைக்குக்கொள், 4. அங்கீகரி, 5. பெண்கொள், 6. உணவு முதலிய கொள், 7. பெற்றுக்கொள், 8 அடங்கு
கொள்ளு— }
கொள்கலம் — அணி, ஆடை, சாந்து முதலிய பெய்கலம், 2. இரப்போர் கலம்

கொள்கை—குணம், 2. சிநேகம், 3. கோட்பாடு, 4. அறிவு.
கொள்வனை—, கொள்வனவு—, கொள்வினை— வியாபாரக்கொள்ளுகை, 2. பெண் கொள்ளுகை.
கொள்வோன் — விலைக்கு வாங்குகிறவன், 2. கற்போன்.
கொள்ளம்—குழைசேறு.
கொள்ளாமை—அடங்காமை, 2.பகை.
கொள்ளார்—பகைவர்.
கொள்ளி—, கொள்ளிக்கட்டை— நெருப்பு விறகு.
கொள்ளி—(வை. அ) எருமை நாக்கிப்பூண்டு.
கொள்ளிக்கண்ணன் — கண்ணூறுகாரன், 2. கொடியவன்.
கொள்ளிக்கரப்பன் — ஒரு கரப்பன் நோய்.
கொள்ளிக்காற்குதிரை — ஒருகால் வெள்ளையான குதிரை.
கொள்ளிடம்—ஓர் யாறு
கொள்ளிவாய்ப்பேய்—நெருப்புக காலுமாவி.
கொள்ளிவைத்தல் — (தொ. பெ) பிணஞ்சுடல், 2. தீங்குசெய்தல்.
கொள்ளியம்—(வை. அ) உமரிச்செடி, 2. புன்குமரம்.
கொள்ளை — பிறர்பொருளைக் கவர்கை, 2. மிகுதி, 3. பெருவாரிநோய்
கொள்ளைக்காரர்—பறிகாரர்.
கொறடா—குதிரைச்சவுக்கு.
கொறி—செம்மறியாடு, 2. மேடவிராசி.
கொறி—(வி) பல்முதலியவற்றாற்கொறி, 2. கொஞ்சங் கொஞ்சமாயுண், 3. கட்டுவிட்டொலி.
கொறிதலை—கிலவேம்புச்செடி.
கொறு—கன்று பாலூட்டாதபடி முகத்திற் கட்டுமியற்று.
கொறுக்கச்சி—எருவைப்புல்.
கொறுக்காய்—ஒருமரம்.
கொறுக்கை—கொறுக்கச்சிப்புல், 2. ஓர் மீன், 3. குறட்டை.
கொற்கை—மதுரைக் கருகில் ஓரூர்.
கொற்றம் — வெற்றி, 2. வல்லபம், 3. அரசியல்.
கொற்றவன்—அரசன், 2. வெற்றிசிறந்தோன், 3. முடக்கற்றான்பூண்டு.
கொற்றவை—துர்க்கை.
கொற்றன்—கற்சிற்பன்.
கொற்றி—துர்க்கை, 2. பசுவிளங்கன்று.
கொற்று-கொற்றுத்தொழில், 2. கொற்றர்.
கோன் — பயனின்மை, 2. காலம், 3. அச்சம், 4. பெருமை, 5. நரகம்.
கொன்றை—கடுக்கை மரம்.
கொன்றைசூடி—சிவபெருமான்.
கொன்றைவேந்தன் — ஒளவைசெய்த ஒரு நீதிநூல்
கொன்னார்—பாவிகள்
கொன்னித்தல்—(தொ.பெ) பேசநாத் திரும்பாதிருத்தல்.
கொன்னு—(வி) கொன்னையாகப்பேசு.
கொன்னெச்சன்—ஓர்வகை ஈ.
கொன்னை—சொற்றிருந்தாமை.

## கோ

கோ — ஓர் உயிர் மெய்யெழுத்து, 2 அழைப்புக்குறி, 3. அரசன், 4. ஆண்மகன், 5 மேன்மை, 6. இலந்தை மரம்.
கோ—பசு, 2. எருது, 3 ஆகாயம், 4. சுவர்க்கம், 5. பூமி, 6. நீர், 7 திசை, 8. அம்பு, 9. வச்சிராயுதம், 10. கண், 11. பொறி, 12. மலை.
கோகண்டம்—நெருஞ்சிற்பூண்டு.
கோகத்தி—, கோவதை— பசுக்கொலை.
கோகநதம்—, கோகநகம்— செந்தாமரை.
கோகந்தம்—கந்தகபாஷாணம்.
கோகம்—சக்கரவாகப்புள், 2.செந்நாய், 3. உலர்ந்த பூ.
கோகரணம்— ஓர் வித்தை.
கோகர்ணம்—, கோகன்னம்— ஓர் சிவஸ்தலம்.
கோகலி—கடம்பமரம்.
கோகழி—ஓர் சிவஸ்தலம்.

கோகனம் – கையாந்தகரைப்பூடு, 2. நிலக்கடம்புப்பூடு.
கோகிலம்–குயில், 2. பல்லி, 3. குரங்கு, 4. சிறுகுறிஞ்சாக்கொடி.
கோகிலாட்சம் – நீர்முள்ளிச்செடி, 2. கொம்மட்டி மாதளைமரம்.
கோகு–கழுதை, 2. புயம்.
கோகுடி–ஒருபூ.
கோகுத்தம்–மல்லிகைச்செடி.
கோகுலம்–குரங்கு, 2. துளையுடைப் பொருள், 3. இடையரூர்.
கோங்கம்–நெல்லிமரம்.
கோங்கு–, கோங்கிலவு– } கன்னிகாரம், (ஒருமரம்).
கோசமம்–பீர்க்கங்கொடி.
கோசம்–(வை. அ) சாதிக்காய்.
கோசம்–முட்டை, 2. ஆண்குறி, 3. உறை, 4. பலபண்டம், 5. பண்டசாலை, 6. புத்தகம், 7. மதிலுறுப்பு, 8. வீதி, 9. கவசம்.
கோசரம்–மகிழமரம்.
கோசரம்–விடயம், 2. உணர்வு, 3. ஊர், 4. அடங்கல்.
கோசலம்–அயோத்தியாதேயம், 2. பதினெண்பாடையிலொன்று, 3. பசுமூத்திரம்.
கோசலை–கோசலதேசம், 2. இராமன்றாய்.
கோசவனை–, சோசவனை– } பேரொலி.
கோசன்–சீர்பந்தபாஷாணம்.
கோசாங்கம்–நாணற்புல்.
கோசாமி – துறவி, 2. திருவாணதவத்தி.
கோசாரம்–இராசி.
கோசாரி–(வை. அ) பீர்க்கங்கொடி.
கோசிகம்–பட்டுச்சீலை, 2. சாமவேதம்.
கோசிகன்–விசுவாமித்திரன்.
கோசு–ஒரெல்லையளவு, 2. வீதி, 3. தோணிப்பாயின் முற்புறத்தின் கயிறு, 4. ஓர் தடவை, 5. பிரதிகூலம், 6. காரியம்.
கோஷவனை–, கோஷம்–, கோடம்– } ஒலி, 2. பேரொலி.
கோஷி–(வி) ஒலி, 2. முழங்கு.
கோஷை–சத்தம், 2. சம்பாஷணை.
கோடகசாலை–ஓர் பூடு.
கோடகம்–குண்டிகை, 2. முடியுறுப்பினொன்று, 3. நாற்றெருக்கூடுமிடம், 4. புதுமை.
கோடகம்–குதிரை.
கோடங்கி – வருங்காரியஞ் சொல்வோன்.
கோடங்கிழங்கு–, கோடைக்கிழங்கு– } சிற்றரத்தைச் செடி.
கோடவனை–பேரொலி, 2. ஒலி, 3. வாச்சியப்பொது, 4. கொடுமை.
கோடரம்–மரக்கொம்பு, 2. மரப்பொது, 3. சோலை, 4. குரங்கு, 5. எட்டிமரம்.
கோடரம்–மரப்பொந்து, 2. தேர்மொட்டு, 3. குதிரை, 4. மயிர்ச்சாந்து.
கோடரி–கோடாலி.
கோடல் – கொள்ளல், 2. வளைதல், 3. வெண்காந்தள்மலர்.
கோடவதி–வீணை.
கோடா–சாராயவண்டல்.
கோடாங்கி–வேஷக்கூத்து, 2. மாதராடை, 3. கோடங்கி.
கோடாசுழி–, கோடாசூரி– } கோடகசாலைப்பூண்டு, 2. கோடகசாலை மாத்திரை.
கோடாசொரி–ஓர் பாஷாணம்.
கோடாய்–செவிலித்தாய்.
கோடாலி–கோடரி.
கோடி – புதுமை, 2. புதுச்சீலை, 3. சீலை, 4. இருபதுகொண்டது, 5. முடியுறுப்பு.
கோடி–நூறுலட்சம், 2. முனை, 3. தரைமுனை, 4. மூலை.
கோடி–(வி) பிரார்த்தி.
கோடிகம்–அணிகலச்செப்பு, 2. கெண்டிகை, 3. சீலை, 4. பூந்தட்டு.
கோடியர்–கூத்தர்.
கோடிரவம்–சதுரக்கள்ளிமரம்.

கோடிலம்—கோஷ்ட மரம்.
கோடீசுவரன்—கோடிப் பொன்னுக்கு அதிபதி.
கோடீரம்—சடை, 2. முடி.
கோடு—வளைவு, 2. வடிவம், 3. கீற்று, 4. சங்கு, 5. விலங்கின்கொம்பு, 6. ஊதுகொம்பு, 7. எழுத்தின்கொம்பு, 8. மரக்கொம்பு, 9. மலையினுச்சி, 10. நீர்க்கரை, 11. வரம்பு, 12. அரணிருக்கை, 13. வஞ்சனை, 14. திரள், 15. பக்கம், 16. பிறைக்கோடு, 17. நீதிஸ்தலம்.
கோடு—(வி) வளை, 2. கோணு, 3. நடுவு நிலைகோணு, 4. வெறுப்புறு, 5. முறி.
கோடை — வேனிற்காலம், 2. மேல் காற்று, 3. காற்று, 4. வெயில், 5. செங்காந்தள், 6. வெண்காந்தள், 7. ஒரு கிழங்குப்பூடு.
கோடை—குதிரை.
கோட்டகம்—குளம், 2. கோயில்.
கோட்டம்—இடம், 2. சுடுகாடு, 3. நாடு, 4. மருதநிலத்தூர், 5 வயல், 6. குளம், 7. குராமரம்.
கோட்டம்— } ஆன்கொட்டில், 2. பசுக்
கோஷ்டம்— } கூட்டம், 3. கூட்டம், 4. தேவலோகம், 5. கோயில், 6. ஓர் மருந்து, 7. வாசனைப்பண்டம், 8. ஆரவாரம், 9. வீணை.
கோட்டரவு—மனவிசாரம்.
கோட்டாலை—துன்பம், 2. சரசம்.
கோட்டான்—கூகைப்புள்.
கோட்டி— } சபை, 2. கூட்டம், 3.
கோஷ்டி— } கோபுரவாயில், 4. பகிடி, 5. நிந்தை.
கோட்டி—அழகு, 2. துன்பம்.
கோட்டியாழ்—நால்வகை யாழிலொன்று.
கோட்டு—(வி) வளை, 2. சித்திரமுதலிய வரை.
கோட்டுவான்—ஓர் நீர்ப்புள்.
கோட்டை — முகத்தலளவைக் கோட்டை, 2. நென்முதலியவற்றின் கோட்டை.
கோட்டை—அரண், 2. அரணிருக்கை, 3. பரிவேடம், 4. பூட்டிலொருறுப்பு.
கோட்பதம்—மாட்டுக்குளம்பு, 2. குளம்பின் சுவடு.
கோட்பறை—நெய்தனிலப்பறை.
கோட்பாடு — கொள்கை, 2. மதவொழுங்கு, 3. கொள்கைத்திறம்.
கோட்பு—கொள்ளுதல்.
கோட்புலிநாயனார்—சிவனடியார்களுள் ஒருவர்.
கோணங்கி- உடற்கோணியாடுவோன், 2. கோமாளி.
கோணமலை— } திரிகோணமலை.
கோணுமலை— }
கோணம்—மூலை, 2. பதினாறுகோணத்தொன்று, 3. எட்டாக்கை, 4. வளைவு, 5. வளைந்தவாள், 6. யானைத்தோட்டி, 7. முடுக்குத்தெரு, 8. மூக்கு, 9. குதிரை.
கோணன்—கூனன்.
கோணுமுகம்—சூழ்கழியிருக்கை, பேரிருக்கை.
கோணாய்—தோண்டான், 2. ஆணரி.
கோணி—பன்றி, 2. சாக்குக்கந்தை, 3. சாக்கு, 4. பதினுயிரங்கோடா கோடி.
கோணு—வளை, 2. கோணலாயிரு, 3. நெறிபிறழ், 4. மாறுபடு.
கோவண—அழிவின்மை, 2. கொடுமை, 3. வளைவு.
கோண்—வளைவு, 2. கொடுங்கோன்மை, 3. மாறுபாடு, 4. பாத்திரத்தின் மூக்கு.
கோண்டம்—குறிஞ்சாக்கொடி.
கோண்டை—இலந்தைமரம், 2. இலந்தைக்கனி.
கோதண்டம்—வில், 2. பள்ளிச் சிறுவர் கண்டனையிலொன்று.
கோதந்தி—கன்னம், 2. தாடை.
கோதமநதி—கோதாவரி.
கோதமம்— } ஓர் தீவு.
கோதமதீவு— }
கோதமன்—கௌதமன்.
கோதம்—சீதாங்கபாஷாணம்.
கோதல்—(தொ. பெ) கொந்தல்.
கோதனம்—பசுவின்கன்று.
கோதா—உடும்பு.

கோதாரி – வாந்திபேதி, 2. பெருவாரி நோய்.
கோதாவரி– } ஓர் யாறு.
கோதாவிரி– }
கோதி–கோதுமை.
கோது–சக்கை, 2. குற்றம், 3. தவறு.
கோது–(வி) பறவை மூக்கினுற் கோது, 2. மயிர்கோது, 3. சிறிது சிறிதாக வுண், 4. குழாயாக்கு, 5. இதழ்கோது.
கோதுமை–ஓர் தானியம்.
கோதை–பூமாலை, 2. பெண்மயிர், 3. பெண், 4. சேரன், 5. ஒழுங்கு, 6. காற்று, 7. நெற்சுமை.
கோதை – முன்கைத்தோற்கட்டு, 2. கோதாவரியாறு.
கோத்தனி – முந்திரிகைமரம், 2. திராட்சப்பழம்.
கோத்தனிகை–முந்திரிகைமரம்.
கோத்திரம்–ஓர் நெட்டிப்புல், 2. வரகு, (ஓர் தானியம்).
கோத்திரம்–குலம், 2. வர்க்கம், 3. பூமி, 4. மலை
கோத்திரவம்–வரகு, (ஓர் தானியம்).
கோத்திரி–முந்திரிகைமரம்.
கோத்திரிகை -முந்திரிகைமரம்.
கோத்திரை–பூமி, 2. மலை.
கோத்தை–குருடன், 2. பீளை.
கோநாய்–தோண்டான், 2. ஆணரி.
கோந்தளங்காய்–சமுத்திராப்பழம்.
கோந்தி–குரங்கு.
கோந்து–பிசின்.
கோந்துரு–பாட்டனது பாட்டன், 2. ஆசியம்.
கோபகுண்டம்–எட்டிமரம்.
கோபங்கம்–சரகாண்டபாஷாணம்.
கோபம்–சினம், 2. வெறுப்பு, 3. கோபக்குணம், 4. உடம்பெரிச்சல், 5. இந்திரகோபம், 6. துத்தபாஷாணம்.
கோபனம்–இரகசியம், 2. கிலெ.
கோபன்–இடையன், 2. காப்போன்.
கோபாக்கினி–மகாகோபம்.
கோபாலன்–இடையன், 2. கண்ணன்.
கோபி–இடைச்சி, 2. ஓர் மண்.
கோபி– } (வி) வெகுள், 2. சின.
கோவி– }
கோபிசந்தனம் – ஓர் மண்.
கோபுரம்–சிகரி, 2. கோயிலின்வாயில்.
கோப்பியம்–இரகசியம், 2. கண்ணியம், 3. கோலம்பண்ணல்.
கோப்பு–கோத்தல், 2. பெருமை, 3. சீர்.
கோமகள்–இராஜகுமாரத்தி, 2. தலைவி.
கோமகன்–அரசன், 2. இராசகுமாரன், 3. தலைவன்.
கோமட்டி–கோமுட்டி, (ஒரு சாதி).
கோமணம்–கோவணம்.
கோமணிக்குன்றம்–வெண்கலமலை.
கோமதி– } ஓராறு.
கோமதை– }
கோமளம்–இளமைப்பருவம், 2. செவ்வி, 3. குருகு.
கோமாட்டி– } தலைவி.
கோமாள்– }
கோமாயு–நரி.
கோமாளம்–சந்தோஷம்.
கோமான்–அரசன், 2. குரு, 3. தலைவன்.
கோமுகம்–ஆதனத்திலொன்று.
கோமுநை–அபிஷேக நீர்போம்வழி.
கோமேதகம் – நவரத்தினத்திலோர் வகை.
கோமேதம்–ஓரியாகம்.
கோம்பி–பச்சோந்தி.
கோம்பு–(வி) சின, 2. சினக்குறிப்புக் காட்டு.
கோம்பை–தேங்காய் முதலியவற்றின் கவசம்.
கோயில்–அரமனை, 2. ஆலயம், 3. கடவுளிருக்குமிடம், 4. இலிங்கசம்புடம், 5. விபூதிசம்புடம், 6. சிதம்பரசிரங்கஸ்தலம், 7. கோயிற்பற்று.
கோயில்வலம்வரல் – ஆலயப்பிரதட்சிணம்.
கோய்–பரணி.
கோரகம் – இளம்பூவரும்பு, 2. வட்டில்.
கோரகை–குயில், 2. இளம்பூவரும்பு.

கோரக்கநாதர்— } ஓர் சித்தர்.
கோரக்கர்— }
கோரங்கி—(வை. அ) சிற்றேலம்.
கோரங்கி—ஓர் பட்டணம்.
கோரசம்—சிவல், (ஓர் புள்.)
கோரணி—ஓர்வியாதி, 2. முகங்கோட்டுகை, 3. ஒகைகால் வளைக்கை, 4. ஆசியம், 5. சேஷ்டை.
கோரணிக்காரன்—ஆசியக்காரன்.
கோரண்டம்-குறிஞ்சிமரம், 2. மருதோன்றிமரம்.
கோரதந்தம்— } வக்கிரதந்தம், 2. பாம்பின் நச்சுப்பல்.
கோரப்பல்— }
கோரம்—அச்சம், 2. நஞ்சு, 3. கொடுமை, 4. உட்டணம், 5. சீக்கிரம், 6. குதிரை, 7. சோழன் குதிரை, 8. வட்டில்.
கோரம்பர்—கழாய்க்கூத்தர்.
கோரம்பலம்—உபாயம், 2. தாறுமாறு, 3. வேடிக்கை.
கோரவாரம்—சந்தனமரம்.
கோராவாரி—பெருங்காற்றுமழை.
கோரான்— } ஓர் செடி.
கோரான்செடி— }
கோரி—கல்லறைக்கும் மட்டம்.
கோரிகை— } அகப்பை, 2. களஞ்சியம்.
கோரியை— }
கோரிக்கை—வேண்டுகோள், 2. விருப்பம்.
கோரு—(வி)வேண்டிக்கொள், 2. விரும்பு.
கோரை—ஒரு கிழங்கு, 2. ஒரு புல்.
கோரோசனை—ஒரு மருந்து.
கோர்க்கலம்—மட்கலம்.
கோலச்சங்கு—முட்சங்கு, (ஓர் செடி.)
கோலம்—உருவம், 2. அழகு, 3. அலங்கரிப்பு, 4. உடைக்கோலம், 5. படைக்கோலம், 6. நடைக்கோலம், 7. சுபாவக்கோலம், 8. மாக்கோலம், 9. சந்தனக்கோலம், 10. நீரோட்டம், 11. பாக்கு, 12. பீர்க்கங்கொடி, 13. பறவை.
கோலம்—பன்றி, 2. தெப்பம், 3. இலந்தைக்கனி, 4. மருட்பன்றி, 5. விரதைநகர்.
கோலரம்—மூங்கில்.
கோலலவணம்—துருசு.
கோலா— } பறவைமீன்.
கோலாமீன்— }
கோலாகலம்—பேரொலி, 2. சம்பிரமம், 3. விலங்கினுலெழுமொலி.
கோலாங்கூலம்—முசு.
கோலாச்சி—ஒருமீன்.
கோலாஞ்சி—அதிகோலம், 2. டம்பம்.
கோலாட்டம்—ஒரு விளையாட்டு.
கோலாரிக்கம்—போர்க்களைகூவல்.
கோலி—இலந்தைமரம், 2. மயிர், 3. கோலிக்குண்டு.
கோலிகர்— } நெய்வோரிலோர் சாதி.
கோலியர்— }
கோலு—(வி) சூழ், 2. வளை, 3. உண்டாக்கு, 4. முகந்தள்ளு.
கோல்—தடி, 2. ஊன்றுகோல், 3. அளவுகோல், 4. அஞ்சனக்கோல், 5. அம்பு, 6. செங்கோல், 7. துலாக்கோல், 8. துலாவிராசி, 9. முத்திரைக்கோல், 10. குதிரைச் சம்மட்டி, 11. மரக்கொம்பு, 12 யாழினரம்பு, 13. தூண்டில், 14. இலந்தைமரம், 15. தெப்பம், 16. அழகு.
கோல்கொடு — (வி) குருடருக்குப் பற்றுக்கோடு கொடு.
கோல்கோடு—(வி) அரசுமுறைதவறு.
கோவணம்—கௌபீனம்.
கோவம்—கோபம், 2. பொன்.
கோவர்—இடையர்.
கோவர்த்தனம் — கிருஷ்ண பகவான் தனது சுண்டுவிரலால் தாங்கிய ஒரு மலை.
கோவர்த்தனர்—இடையர்.
கோவலர்—இடையர்.
கோவலன்—இடையன், 2. கிருஷ்ண பகவான், 3. சிலப்பதிகார கதாநாயகனை ஒரு வைசியன்.
கோவளம்—ஒருபட்டினம்.
கோவா—ஓர் பட்டினம்.
கோவிதன்—அறிஞன்.
கோவிந்தர்—இடையர்.
கோவிந்தன்—ஸ்ரீமகாவிஷ்ணு.

கோவில்—இராசமனை, 2. தேவாலயம்.
கோவை—கோத்தல், 2. கோத்தமாலை, 3. தொடுத்தபூமாலை, 4. அணிவடம், 5. ஓர் பிரபந்தம், 6. வரிசை, 7. தொடர்ச்சிப் பொருள், 8. கொவ்வைக்கொடி.
கோவைசியர் — மூவைசியரிலொருவர், அவர் இடையர்.
கோழி—குக்குடம், 2. உறையூர்.
கோழிக்கல்—குறிஞ்சிக்கல்.
கோழிக்கூடு—கள்ளிக்கோட்டை.
கோழிக்கொடியோன் — முருகன், 2. ஐயனார்.
கோழித்தலைக்கந்தகம் — ஓர் பாஷாணம்.
கோழிமூலையான்—மூக்குளிப்பூண்டு.
கோழியவரை—ஓர் கொடி.
கோழியுள்ளான்—ஒரு குருவி.
கோழிவேந்தன்—சோழன்.
கோழை—கபம், 2. சிலேட்டுமம், 3. பழுது, 4. கூச்சம், 5. நாணமுள்ளவன், 6. கொடுமை.
கோழைத்தனம்—அச்சத்தன்மை.
கோளகம்—திப்பிலி, 2. மிளகு, 3. கோளகபாஷாணம், 4. மண்டலிப்பாம்பு, 5. பட்டுச்சீலை.
கோளகன்—கைமை பெற்றமகன்.
கோளகை-உருண்டைவடிவம், 2. வட்டம், 3. அண்டகடாகம், 4. அண்டமுகடு, 5. மண்டலிப்பாம்பு, 6. கவச முதலியன.
கோளம்—உண்டை, 2. வட்டம், 3. கோளபடம்.
கோளம்பம்—ஒரூர்.
கோளரி—சிங்கம்.
கோளா—ஓர்வகை உண்டைக்கறி.
கோளாங்கல்—கூழாங்கல்.
கோளாறு—முறைபிறழ்வு, 2. சண்டை, 3. மாறுபாடு.
கோளி—ஆலமரம், 2. அத்திமரம், 3. பூவாது காய்க்கு மரம், 4. கொள்வோன்.
கோளிகை—பெட்டைக்கழுதை.
கோளேசம்—குங்குமப்பூ.
கோவளா—எலி.
கோள்—கொள்ளுகை, 2. குறளை, 3. புறங்கூற்றல், 4. இடையூறு, 5. கொலை, 6. பொய், 7. வலி, 8. குணம், 9. திமை, 10. கிரகம், 11. நட்சத்திரம், 12 கோட்பாடு, 13. நாள்.
கோறல்—(தொ. பெ) கொல்லுதல்.
கோறை—துளை, 2. குவளை, 3. பழுது.
கோற்கொடி—இலந்தைமரம், 2. சுரைக்கொடி.
கோனுன்—இடையரின் சங்கைப்பேர்.
கோனிச்சி—இடைச்சி.
கோன்—அரசன், 2. இடையன்.
கோன்மை—ஆளுகை.

## கௌ

கௌ—ஓர் உயிர்மெய்யெழுத்து, 2. கௌவென்னேவல்.
கௌசலம் — ஒரு தேசம், 2. வேலைத்திறம்.
கௌசலை—ஸ்ரீராமன் தாய்.
கௌசனம்—கௌபீனம்.
கௌசனை—உறை, 2. குதிரை முதலியவற்றின் மேற்போடும் மெத்தை.
கௌசாம்பி—ஒரு நகரம்.
கௌசிகம்—கூகை, 2. பட்டுச்சீலை, 3. ஓர்பண், 4. விளக்குத் தண்டு, 5. சாமவேதம்.
கௌசிகன்—இந்திரன், 2. விசுவாமித்திரன், 3. பாம்பாட்டி.
கௌடம்—ஓர்தேசம், 2. கௌடநெறி, 3. ஓர் கொடி, 4. ஒருபாஷை.
கௌடி—ஒருபண், 2. பலகறை.
கௌடில்யம்—வளைவு.
கௌணம்—முக்கியமல்லாதது.
கௌணியர்—திருஞானசம்பந்தர்.
கௌண்டர்—சண்டாளர், 2. ஓர் சாதியார்.
கௌண்டிகர்—தோல்வினைஞர்.
கௌதமநதி—கோதாவரி நதி.
கௌதமம்—அஷ்டாதச தருமசாஸ்திரத்தொன்று.
கௌதமன் — சத்த விருஷிகளிலொருவன், 2. ஆதிபுத்தன்.

கௌதமி— } கோதாவரி, 2. கோ
கௌதமை— } ரோசனை, 3. ஓர்பசு.
கௌதம்—சிச்சிலிக்குருவி.
கௌத்துவம்—வஞ்சனை.
கௌத்துவம்— } ஸ்ரீ மகாவிஷ்ணுவின்
கௌஸ்துபம்— } மார்பணி, 2. பதும ராகம், 3. மாணிக்கம், 4. அத்தநாள்.
கௌந்தி—தவப்பெண், 2. குந்திதேவி, 3. மிளகுக்கொடி.
கௌபீனம்—கோவணம்.
கௌப்பு—பெருமை.
கௌமாரம்—இளமை, 2. ஆடவர் பருவத்தொன்று, 3. குமரன் சத்தி, 4. குமரசமயம், 5. அட்டாதசகீதபுராணத்தொன்று.
கௌமாரி—சத்தமாதரிலொருத்தி.
கௌமுதி—நிலவு.
கௌமோதகி — ஸ்ரீ மகாவிஷ்ணுவின் தண்டாயுதம்.
கௌரம்—வெண்மை, 2. சுத்தம், 3. பொன்மை.
கௌரவம்—மேன்மை.
கௌரவர்—குருகுலவேந்தர்.
கௌரி—பத்தாண்டுப்பெண், 2. காளி, 3. துர்க்கை, 4. பார்வதி, 5. மஞ்சள் நிறம், 6. கடுகு, 7. புளிநறளைச்செடி.
கௌரிகேணி — வெள்ளைக்காக்கணங் கொடி.
கௌரிசங்கரமணி — இரட்டையுருத்திராட்சம்.
கௌரிபாஷாணம்—ஓர் பாஷாணம்.
கௌரியன்—பாண்டியன்.
கௌவியம் — பசுவினிடத்துண்டாய பால் தயிர் நெய் கோசலம்கோமயம்.
கௌவு—(வி) வாயினாற்பற்று, 2. ஆயுதத்தாற்பிடி, 3. கையினாற்பற்று, 4. கருத்தினாற் பற்று, 5. நிலைபெறு.
கௌவுதடி—கவைத்தடி.
கௌவை—காரியம், 2. ஒலி, 3. கள், 4. துன்பம், 5. பழிச்சொல், 6. எள்ளிளங்காய், 7. ஆயிலியநாள்.
கௌளம்—ஓரிராகம்.
கௌளி—பல்லி, 2. நூறு வெற்றிலை கொண்டகட்டு.

## ஞ

ஞ—ஓர் உயிர் மெய்யெழுத்து, 2. குறுணிக்குறி.
ஞனம்—இடம், 2. தன்மை.

## ச

ச—ஓர் உயிர் மெய்யெழுத்து.
சஃகுல்லி—அப்பவர்க்கத்தொன்று.
சக—கூட.
சககமனம்—உடன்கட்டை யேறல்.
சககாரம்—தேமாமரம்.
சகசண்டி—முருடன்.
சகசம்—இயற்கை, 2. உண்மை, 3. கூடப்பிறந்தது, 4. வட்டில், 5. இஷ்டம்.
சகசரம்—சிறுகுறிஞ்சா, (ஒருகொடி.)
சகசரி—மருதோன்றிமரம், 2. வாடாக்குறிஞ்சிமரம்.
சகசன்—சகோதரன்.
சகசா—குறிஞ்சாக்கொடி.
சகசாலம்—உலகமாயம்.
சகசை—உடன்பிறந்தாள்.
சகச்சை—(வை. அ) பொன்னாங்காணிக்கீரை.
சகடம் —பண்டி, 2. சகடாசுரன், 3. பாண்டில் பூண்டவூர்தி, 4. உரோகிணி நட்சத்திரம், 5. சகடபலம், 6. ஊர்க்குருவி, 7. வட்டில், 8. தமரத்தைமரம்.
சகடு—பண்டி, 2. சகடாசுரன், 3. உரோகிணிநாள், 4. அயிர்ப்பு, 5. சராசரி.
சகடை—ஓர் வாச்சியம், 2. முரசு, 3. பண்டி.
சகடோல்—அம்பாரி.
சகண்டை—சகடை, 2. முரசு.
சகதாமத்தி—தகரைச்செடி.
சகதி—சேறு, 2. பொல்லாநிலம்.
சகதேவன்— } பாண்டவருளிளை
சகாதேவன்— } யோன்.
சகதேவி—பூமாதேவி.
சகத்திரபேதி— } கல்வேதியென்னு
சகத்திரவேதி— } மருந்து.
சகத்திரம்— } ஆயிரம், 2. சிவாகமமி
சகஸ்திரம்— } ருபத்தெட்டினொன்று.

சகஸ்திரநாமன்—மகாவிஷ்ணு.
சகத்து—உலகம்.
சகநாதம்—ஓர் ஸ்தலம்.
சகநாயகன்—காந்தம்.
சகமார்க்கம்—யோகமார்க்கம்.
சகம்—உலகம், 2. ஓர் தேயம், 3. சகவருடம், 4. மார்கழிமாதம், 5. பாம்புச்சட்டை.
சகரச்சாரி—சத்திசாரம்.
சகரர்—சகரபுத்திரர்.
சகரன் — முதலேழுவள்ளலி லொருவன்.
சகரிகம்—நாயுருவிச்செடி.
சகலகம்—வெள்ளாட்டுக்கடா.
சகலப்பாடி—, சகலன்—, சகலை— ஒரு குடியிற் பெண் கொண்டோன்.
சகலமங்கலை—பார்வதி.
சகலம்—அனைத்து.
சகலாத்து—ஓர்வகைக் கம்பளி.
சகலாவத்தை—ஓரவத்தை.
சகல்—கொசுகு.
சகளம்—சடத்துவம்
சகளன்—சகலபாடி.
சகனம்—கடிதடம், 2. பொறுமை.
சகன்—கூட்டாளி.
சகன்மகம்—செய்பொருளுறுவினை.
சகன்மோகினி — உலக மெல்லாம் மயக்கும் மோகினி.
சகா—தோழன், 2. உதவி.
சகா—, சகாதி— (வை. அ) பாம்புகொல்லிப் பூண்டு.
சகாடி—பீர்[illegible]கொடி.
சகாதேவ[illegible]ண்டவர்களிலிளையோன்.
சகாதேவி — (வை. அ) நெய்ச்சிட்டிச் செடி.
சகாத்தம்—, சகாப்தம்— சகன் ஆண்டு.
சகாயம்—உதவி, 2. சுகம், 3. துணை, 4. மலிவு.
சகாசகுக்ஷி—வியாசர்.

சகாரி—முதலேழுவள்ளலி லொருவன்
சகாளு—ஓரிராகம்.
சகி—தோழி.
சகி—(வி) பொறு, 2. மன்னி.
சகிதம்—கூடியிருத்தல்.
சகுடம்—சேம்பு.
சகுண்டை—சிற்றகத்திமரம்.
சகுட்டகம்—, சகுட்டம்— ஆடுதின்னாப்பாளைச் செடி.
சகுட்டம்—ஓர் கிழங்கு.
சகுந்தம்—கழுகு, 2. வல்லூறு, 3. புட்பொது.
சகுலி—ஓர்மீன், 2. ஒலி.
சகுனம்—பறவை, 2. நிமித்தம், 3. கிழங்கு.
சகுனி — பறவை, 2. நிமித்தம் பார்ப்போன், 3. கூகை; அது: கரணம் பதினொன்றி னொன்று, 4. துரியோதனன் மாமன், 5. சகுனிபோன்றவன்.
சகுன்மம்—(வை. அ) கருணைக்கிழங்கு.
சகேரா—பண்டசாலை.
சகோடம்—, சகோடயாழ்— நால்வகையாழி னொன்று.
சகோதரன்—உடன்பிறந்தான்.
சகோரம் — சக்கரவாகப்புள், 2. செம்போத்துப்பறவை.
சகோரயாழ்—சகோடயாழ்.
சக்கட்டம்—, சக்கந்தம்— பரிகாசம்.
சக்கட்டை—இளப்பம்.
சக்கரபதி—தகரைச்செடி.
சக்கரபாணி-மகாவிஷ்ணு, 2. துர்க்கை.
சக்கரம்—வட்டம், 2. சக்கராயுதம், 3. உருளை, 4. ஆயுட்சக்கரம், 5. கிரகவட்டம், 6. கிரகபலச் சக்கரம், 7. சக்கர எந்திரம், 8. கோட்டியந்திரம், 9. சக்கர வாகப்புள், 10. பூமி, 11. சக்கரயூகம், 12. மலை, 13. கடல், 14. மலைமல்லிகை, 15. ஆக்கினாசக்கரம், 16. பெருமை, 17. ஓர் தண்டனைக்கருவி, 18. பிறவி, 19. சக்கரப்பணம், 20. ஓர் மிறைக்கவி.
சக்கரவர்த்தி — மற்றொருவரைப் பணியாது தனியாள்வோன்

சக்கரவாகம்—சக்கரவாகப்புள்.
சக்கரவாளம் – ஒருமலை, 2. வட்டவடிவு.
சக்கரன்—இந்திரன், 2. மகாவிஷ்ணு.
சக்கரை—சருக்கரை.
சக்கல்—மக்கல், 2. சாரமற்றது.
சக்களத்தி – கொழுநனின் வேறுமனைவி.
சக்களமை—சக்களத்திகளுக்குள் விரோதம், 2. கடும்பகை.
சக்களி- (வி) சப்பளி.
சக்கவளயன்—சோம்பேறி.
சக்காரம்—தேமாமரம்.
சக்கிமுக்கி—தீத்தட்டுங்கருவி.
சக்கியம்—சினேகம், 2. இயல்வது.
சக்கியன்—சமர்த்தன், 2. தோழன்.
சக்கிரதரன்— } திருமால்.
சக்கிரபாணி— }
சக்கிரம்—சக்கரம்.
சக்கிரி—இந்திரன், 2. திருமால், 3. அரசன், 4. குயவன், 5. செக்கான், 6. மண்டலிப்பாம்பு.
சக்கிலி— } தோல்வினைஞன்.
சக்கிலியன்— }
சக்கிலிச்சி—சத்திச்சாரம்.
சக்கு—பூஞ்சு.
சக்கு—கண்.
சக்குச்சக்கெனல்—ஒலிக்குறிப்பு.
சக்குபு—(வை. அ) கரிசாலைப்பூடு.
சக்கை—கோது, 2. துப்பாக்கித் தக்கை, 3. கானப் பலாக்காய், 4. சிராய்.
சங்க—கக்கம்.
சங்கங்குப்பி—பீச்சு விளாத்தியென்னும் ஒருவகைச்செடி.
சங்கஞ்செடி—இசங்கஞ்செடி.
சங்கடம்—நெருக்கம், 2. தடைவாசல், 3. ஓர்வகை மிதவை.
சங்கடை—மரணத்தறுவாய்.
சங்கட்டம்—வியாதி, 2. மரணாவஸ்தை, 3. சங்கடம்.
சங்கதம் – தேவபாஷை, 2. பொருந்துகை, 3. நட்பு, 4. முறைப்பாடு.
சங்கதி – சமாசாரம், 2. இசைவு, 3. இசைவிகற்பம்.
சங்கநிதி—சங்குருவாய்க் கிடக்கு நிதி, 2. வட்டக் கிலுகிலுப்பைச்செடி.
சங்கபதம்—ஓர் தருமநூல்.
சங்கபாஷாணம்—ஓர் பாஷாணம்.
சங்கபாலன்—அஷ்டநாகத்தொன்று
சங்கபீடம்—நாணற்புல்.
சங்கபுங்கி— } கடுரோகிணி.
சங்கரிங்கி— }
சங்கமம் – கூடுகை, 2. ஆறுங் கடலுங் கூடுமிடம், 3. புணர்ச்சி, 4. கிரகங்கள் சேருகை, 5. வீரசைவர், 6. இயங்குதிணை.
சங்கமன்—இலிங்கதாரி.
சங்கம்—சேர்கை, 2. சனக்கூட்டம், 3. ஆலோசனைக்கூட்டம், 4. புணர்ச்சி, 5. புலவர்கூட்டம், 6. தமிழ்ச்சங்கம், 7. புலவர், 8. சங்கு, 9. நெற்றி, 10. நெற்றியெலும்பு, 11. ஓர் எண், 12. படையிலோர்தொகை, 13. சங்கநிதி, 14. கணைக்கால், 15. தாலம்பபாஷாணம்.
சங்கரர்—போர்செய்வோர்.
சங்கரன்—சிவன், 2. சங்கராசாரியர்.
சங்கராசாரியர்—சண்மதஸ்தாவனாசாரியர்.
சங்கராபரணம்—ஓரிசை.
சங்கரி—(வி) அழி.
சங்கரி—பார்வதி.
சங்கரிப்பு—நிருமூலமாக்குகை.
சங்கருடணம்—இழுத்தல்.
சங்கருடணன்—பலபத்திரன்.
சங்கலர்— } போர்புரிவோர்.
சங்கலார்— }
சங்கலனம் – கலப்பு, 2. எண் கூட்டுகை.
சங்கலிதம்—கலப்பு, 2. [illegible]டுகை, 3. தருமநூலிலொன்று, [illegible]. எண்களின் தொடர்.
சங்கவளை—மணற்கேணியின் பலகை.
சங்கற்ப நிராகரணம் – ஒரு தமிழ் நூல்.
சங்கற்பம் – மனோநிச்சயம், 2. மனப்பொருத்தனை, 3. நியமனம், 4. எண்ணம், 5. மனோகற்பனை.

சங்கற்பி — (வி) நிருணயி, 2. பிரார்த்தனைசெய், 3. பிரார்த்தனை அறிவி, 4. விதி.
சங்கனனம்—நரம்பு.
சங்காசம்—உவமை.
சங்காதம்—சங்காரம், 2. ஓர்வகை நடிப்பு, 3. கூட்டம், 4. ஓர் நரகம்.
சங்காத்தம்—சினேகம்.
சங்காத்தி—சினேகிதன், 2. தோழன்.
சங்காயம்—கரும்புச்சருகு.
சங்காரம்—அழிக்கை, 2. பஞ்சகிருத்தியத்தொன்று, 3. கடிதல்.
சங்காரி — (வை. அ) குதிரைவாலிப்பயிர்.
சங்காரித்தம் — சத்தமூகிலிஞென்று; அது: பூப்பொழிவது.
சங்காவியம்—அச்சத்தாலாயசோர்வு.
சங்கி — (வி) சந்தேகப்படு, 2. கனம்பண்ணு.
சங்கிதை—பொழிப்பு, 2. சாகை.
சங்கியை—எண்.
சங்கிரகக்கூர்மை—சிந்துலவணம்.
சங்கிரகம்—சுருக்கத்திரட்டு.
சங்கிரந்தனன்—இந்திரன்.
சங்கிரமணம்—சூரியன் வேறு ராசிக்குச் செல்லுங்காலம்.
சங்கிரமம்—கிரகநடை, 2 மாதப்பிறப்பு.
சங்கிரம்—காடு.
சங்கிராந்தம்—, சங்கிராந்தி— } மாதப்பிறப்பு.
சங்கிராமம்—போர்.
சங்கிருதம்—சமஸ்கிருதம்.
சங்கிலி—ஓராபரணம், 2. தொடர்.
சங்கினி — மூன்ருஞ் சாதிப்பெண், 2. ஓர் நாடி.
சங்கின்குழியான்—நாகரவண்டு.
சங்கீதம் — இராகசாத்திரம், 2. வாச்சியத்தோடு பாடுகை, 3. சங்கீதப்பாட்டு.
சங்கீரணம்—கலப்பு, 2. ஓரலங்காரம்.
சங்கீர்தம் — எழுத்துப்புணர்ச்சி, 2. புணர்ச்சி.
சங்கீர்த்தனம்—துதிக்கை.
சங்கு—பணிலம், 2. கைவளை, 3. நெற்றி, 4. கனைக்கால், 5. கூடுகை, 6. ஓர் எண், 7. ஓர்செடி, 8. ஓர் படைக்கலம், 9. சாயாமாணியினுள்சி.
சங்கு—(வி) தைரியங்கெடு.
சங்குநிதி—கிலுகிலுப்பைச்செடி.
சங்குபுட்பம்—ஞாழற்செடி.
சங்குமடப்பளி—ஓர்சாதி.
சங்குமரு—(வை. அ) வேப்பமரம்.
சங்குமூர்த்தினி—உச்சி.
சங்குவடம்—பரிசு.
சங்கூபிலம்—ஓர் புராணம்.
சங்கேதம் — நியமம், 2. ஏற்பாடு, 3. குழூஉக்குறி, 4. கட்டுப்பாடு, 5. குறிப்பு, 6. துராலோசனை.
சங்கேபம்—சுருக்கம்.
சங்கை—ஐயம், 2. அச்சம், 3. அளவு, 4. கனம், 5. வழக்கம், 6. சுக்கு.
சங்கோசம்—சுருங்கல், 2. கூச்சம்.
சங்க்ஷேபம்—சஞ்சேபம்.
சசம் — முயல்.
சசம்பரி—(வை. அ) ஆமணக்கஞ்செடி.
சசாபம்—(வை. அ) சிறுநன்னாரிப்பூடு.
சசி — சந்திரன், 2. கர்ப்பூரம், 3. இந்திராணி.
சசிசேகரன்—சிவன்.
சசியம்—ஆச்சாமரம், 2. கஞ்சாச்செடி, 3. நிலப்பனங்கிழங்கு.
சசியம்—கனி.
சசுபம்—அசோகமரம்.
சசேலஸ்நானம் — உடையோடு முழுகுகை.
சச்சடம்—(வை. அ) தாமரை.
சச்சடி—சந்தடி.
சச்சம்—மெய்.
சச்சரவு—, சச்சரை— } கலகம்.
சச்சரி—ஓர் வாச்சியம்.
சச்சற்புடம்—பஞ்ச தாளத்தொன்று.
சச்சிதானந்தம்—அழியாவறிவின்பம்.
சச்சிதானந்தன் — கடவுள், 2. ஓர் முனிவன்.
சச்சு—பறவைமூக்கு, 2. நீர்ச்சுண்டிச்செடி, 3. சந்தடி, 4. கொஞ்சம், 5. கெட்ட புகையிலை.

சஞ்சம்—பூநூல், 2. கஞ்சு.
சஞ்சயம்—கூட்டம்.
சஞ்சயனம்—காடாற்றுகை.
சஞ்சயன்—வியாசர் சீடரிலொருவன்.
சஞ்சரி (வி) உலாவிக்கொண்டிரு, 2. திரி, 3. வாசஞ்செய், 4. சம்பாஷி.
சஞ்சரிகம்—
சஞ்சரீகம்— } வண்டு.
சஞ்சலம் அசைவு, 2. நிலையில்லாமை, 3. மின்னல், 4. மனக்கவலை, 5 துன்பம்.
சஞ்சலை—மின்னல்.
சஞ்சாயம் குத்தகையல்லாதவேலை, 2. குடிவாரம், 3 பண்ணை பார்த்தல், 4. இலவசம்.
சஞ்சாரம்—சஞ்சரிக்கை, 2. வாசஞ்செய்கை, 3. ஆரோகணை அவரோகணைக் கலப்பு, 4 யானைக்கூடம்.
சஞ்சாரி—சஞ்சரிப்போன்
சஞ்சாலி—பெருந்துப்பாக்கி.
சஞ்சாளிகம்—வண்டு.
சஞ்சிதம்—ஈட்டியது, 2. கட்டுப்பட்ட வினை.
சஞ்சிலேடம் — விஷமுதலியவுட்பரவுகை.
சஞ்சீவகரணி — உயிர்தரு மருந்து, 2. புளியமரம்.
சஞ்சீவனி—
சஞ்சீவி—
சஞ்சீவினி— } உயிர்தருமருந்து.
சஞ்சீவன்—(வை. அ) மாமரம்.
சஞ்சு—பறவைமூக்கு, 2. ஆமணக்கஞ்செடி, 3. வருணச்சிரம், 4. சாயல்.
சஞ்சுவம்—மூஸ்திப்பு.
சஞ்சேபம்—சுருக்கம்.
சடகம்—ஊர்க்குருவி, 2. வட்டில்.
சடாக்கரம் — குமரக்கடவுள் மந்திரமாகிய ஆறெழுத்து.
சடக்குச்சடக்கெனல் — ஈரடுக்கொலிக் குறிப்பு.
சடக்கோதன்—வசம்பு.
சடங்கம் — அறுவகைச் சாத்திரம்; அவை: சிக்ஷை, கற்பம், வியாகரணம், நிருத்தம், சந்தோபிசிதம், சோதிடம், 2. வருத்தம், 3. தூக்கு, ஓர் நிறை, 4. பயணமூட்டை, 5. சடங்கு.
சடங்கு—செய்முறை.
சடசடெனல்—ஈரடுக்கொலிக் குறிப்பு
சடபம்—அறுகம்புல்.
சடபுடெனல்—ஒலிக்குறிப்பு.
சடம்—உடல், 2. அசேதனப்பொருள், 3. கொடுமை, 4. பொய், 5. ஆறு.
சடரம்—வயிறு.
சடர்—அறிவீனர்.
சடலம்—உடல், 2. பருத்தவுடல்.
சடவுப்பு—அமரியுப்பு, 2. சமாதியுப்பு.
சடாகம்—
சடாதரம்— } அருநெல்லிமரம்.
சடாதாரி—(வை. அ) கொடியாள் கூந்தற்கொடி.
சடாமாஞ்சி—ஓர் மருந்துப்புல்.
சடாயு—ஓர் கழுகரசன்.
சடாய்—(வி) துப்பாக்கிகெட்டி, 2. அதட்டு, 3. செழி.
சடாரி—கவசம், 2. நம்மாழ்வார்.
சடாரிடுதல்—
சடாரெனல்— } ஒலிக்குறிப்பு.
சடிதி—விரைவு, 2. கச்சோலம்.
சடிதிவு—கச்சோலம்.
சடிலம்—சடை, 2. அடர்த்தி, 3. குதிரை.
சடினம்—வசம்பு, 2. சடைமரம்.
சடு—ஆறு.
சடுக்கா—கெதி.
சடுதி—சீக்கிரம்.
சடுத்தம்—போராட்டம், 2. தொந்தரவு பண்ணுகை.
சடுத்தி—சோதனை.
சடுலம்—நடுக்கம்.
சடை—மயிர்ப்பின்னல், 2. சடைத்தது, 3. ஓர்மரம், 4. வேர், 5. ஆணியின் சடை, 6. அடைப்பு.
சடைக்கந்தகம்—(வை. அ) வசம்பு.
சடைச்சி—நெட்டிப்புல், 2. பாசி, 3. கிரிப்பூண்டு, 4. பொன்னிமிளை.
சடைத்தல்—(தொ.பெ) கிளைத்துநெருங்குதல்.
சடைநாகம்—ஓராபரணம்.

சடைப்பாசி—ஒரு வகைப்பாசி.
சடைப்பில்லை—ஒரு தலையணி.
சடையநாயனர்—சுந்தரமூர்த்தி நாயனரது தகப்பனர்.
ட்—ஆறு.
சட்சு—கண்.
சட்டகப்பை—தட்டகப்பை.
சட்டகம்—வடிவு, 2. உடல், 3. மனுடர் படுக்கைப்பொது.
சஷ்டகல்லி—, சட்டகல்லி— வீண்பேச்சு.
சட்டங்கட்டுதல்—(தொ.பெ) ஒழுங்குபடுத்தல்.
சட்டதிட்டம்—ஒழுக்கு.
சட்டமுனி—ஒரு முனிவர்.
சட்டம்—மரச்சட்டம், 2. ஏற்பாடு, 3. எழுதுஞ்சட்டம், 4. திட்டம், 5. மாதிரிச்சட்டம், 6. புனுகுசட்டம்.
சட்டம்பிப்பிள்ளை—, சட்டம்பிள்ளை—, சட்டாம்பிள்ளை— பள்ளிக்கூடத்தில் தலைமையானபிள்ளை.
சட்டம்பியார்—உவாத்தியார்.
சட்டாட்டம்—வாதாட்டம்.
சட்டி—ஓர் பாத்திரம்.
சஷ்டி—, சட்டி— ஆறுந்திதி, 2. அறுபது
சட்டி—(வி) அழி, 2. கொல்.
சட்டினி—, சட்னி— ஓர்வகையரையல்.
சட்டு—அழிவு.
சட்டுவம்—அகப்பை.
சட்டுவர்க்கம்-இலக்கினத்திலிருந்து பிரியுமாறு வருக்கம்.
சட்டென—விரைவுக்குறிப்பு.
சட்டை — தைத்தவுடை, 2. பாம்புச்சட்டை, 3. கனம், 4. பொதி, 5. தைவேலைப்பூண்டு.
சட்டைக்காரர்—பறங்கிக்காரர்.
சட்டைநாதன்—வயிரவன்.
சட்பதம்—வண்டு.
சட்பம் — அறுகம்புல், 2. சிறுபயிர், 3. மயிர்.
சட்பிதாபுத்திரிகம் — பஞ்சதாளத்தொன்று

சணகம்—, சனகம்— புளியாரைக்கீரை.
சணப்பு—சணற்பயிர்.
சணம்—கணம், 2. கண்ணியக்குறி.
சணல்—ஓர் பயிர்.
சனுய்—(வி) சணை, 2. காமங்கொள்.
சவணை—(வி) கொழு.
சண்டப்பிரசண்டம்—மிகுவேகம்.
சண்டப்பை—கருப்பை.
சண்டம்—கொடுமை, 2. விரைவு, 3. பேடு, 4. கருப்பம்.
சண்டன்—காலன், 2. நமன், 3. துடிதுடித்தவன், 4. சூரியன், 5. சிவன், 6. பேடு.
சண்டாளம் — இழிவு, 2. கீசன், 3. பேய்.
சண்டாளன்—இழிஞன், 2. புலைஞன், 3. பதிதன், 4. பார்ப்பனஸ்திரீயிடத்திற் சூத்திரனுக்குப் பிறந்தோன்.
சண்டி—நாணமில்லோன், 2. துர்க்கை, 3. ஓர் மரம்.
சண்டிகை—துர்க்கை, 2. காளி.
சண்டித்தனம்—பிடிவாதம்.
சண்டிவாளம் — முன்தீர்த்த விலையையழிக்கும்படி கொடுக்கிற பணம்.
சண்டு—பதர், 2. ஓர் வண்டு.
சண்டேசர்—ஒரு சிவனடியார்.
சண்டை—சொற்போர், 2. போர்.
சண்ணித்தல்—(தொ. பெ) பூசுதல்.
சண்ணுதல்—(தொ. பெ) சாதித்தல்.
சண்பகம்—செண்பகமரம்.
சண்பனி—யோகினி.
சண்பை—சீகாழி.
சண்பையர்கோன்—சம்பந்தன்.
சண்மதம்—அறுவகைச் சமயம்.
சண்முகன்—குமரன்.
சதகம்—(வை. அ) தான்றிமரம்.
சதகம்—நூறு செய்யுட்கொண்ட பிரபந்தம்.
சதகுப்பி—, சதகுப்பை— ஓர் பூடு.
சதக்கல்—, சதுக்கல்—, சதுவல்— இளகனிலம்

சதங்கை—ஓர் காலணி.
சதங்கைப்பூரம்—
சதங்கைப்பூரான்— } ஓர்வகைப் பூரான்.
சதசதப்பு—சொதசொதப்பு.
சதசு—பிராமணசபை.
சததம்—நித்தியம்.
சததளம்—
சதபத்திரம்— } தாமரை.
சதபத்திரி — ஆடுதின்னுப்பாளைச்செடி, 2. தாமரை, 3. தாமரையிலை.
சதபுட்பம்—சதகுப்பிப்பூடு.
சதம்—நூறு, 2. இலை, 3. இறகு, 4. அறுபடுபயிர், 5. நித்தியம்.
சதயம்—
சதயநாள்— } ஓர் நட்சத்திரம்.
சதருபை—சுவாயம்பு மநுவின் மனைவி.
சதர்—சிரேஷ்டம்.
சதவீரியம்—வெள்ளறுகம்புல்.
சதவீரு—(வை. அ) மல்லிகைச்செடி.
சதளம்—கூட்டம்.
சதனம்—இலை, 2. இறகு, 3. வீடு.
சதா—மரக்கலம், 2. பழுது, 3. தாமதம்.
சதா—எப்பொழுதுமுள்ள.
சதாகதி—காற்று, 2. மாருதசலனம்
சதாசிவம்—முடிவிலாதன்மை, 2. சதாசிவன்.
சதாபடம்—
சதாபூடம்— } எருக்கஞ்செடி.
சதாபதி—மரவட்டை.
சதாபலம்—எலுமிச்சைமரம்.
சதாபுசம்—வண்டு.
சதாப்பு—ஓர்பூடு.
சதாமூர்க்கம்—பாம்புகொல்லிப்பூண்டு.
சதாமூலம்—
சதாவேரி— } தண்ணீர்விட்டான்.
சதானந்தன்—கடவுள், 2. பிரமன், 3. ஓர் ரிஷி.
சதி—வஞ்சனை, 2. வட்டம், 3. உரோகிணி, 4. தாளவொத்து, 5. சோறு, 6. சீக்கிரம்.
சதி—கற்புடையாள், 2. பார்வதி, 3. அனுமரணம்.
சதிரம்—(வை. அ) ஓர்கக்கரிக்கொடி, 2. தேகம்.
சதிரிசம்—உவமை.
சதிர்—குறைந்தவிலை, 2. இலகு, 3. நாட்டியசபை, 4. எல்லை.
சதீனகம்—
சதீனம்— } (வை. அ) பயறு.
சது—நான்கு.
சதுக்கம்—
சதுஷ்கம்— } நான்கு, 2. நாற்றெருக்கூடுமிடம், 3. சதுரம், 4. தலை உறுமால்.
சதுக்கல்—வழுக்கல்.
சதுங்கம்—பறவை.
சதுஷ்டயம்—
சதுட்டயம்— } நான்மடங்கு கொண்டது.
சதுஷ்பாதம்—
சதுட்பாதம்— } நாற்கால்மிருகம், 2. நாய்.
சதுப்பு—சதசதப்பான நிலம்.
சதுமுகன்—பிரமன், 2. அருகன்.
சதும்பை—பேய்மருட்டிச்செடி.
சதுரகிரி—ஒரு மலை.
சதுரங்கம்—ரத கஜ துரக பதாதியாகிய நால்வகைச்சேனை, 2. ஒரு விளையாட்டு, 3. நாற்கோணம்.
சதுரப்பாடு—விவேகம், 2. சதுரம்.
சதுரம்—நாற்கோணவடிவம், 2. விவேகம், 3. திறமை, 4. நாகரிகம்.
சதுரன்—காரிய சமர்த்தன், 2. அர்த்தலோபி.
சதுரி—(வி) சரி சதுரமாக்கு, 2. எண்ணைச் சதுரி.
சதுர்—நான்கு, 2. சபைகூடிச்செய்யு நடனம், 3. திறம், 4. நன்மை.
சதுர்—(வி) அப்பு.
சதுர்கூலி—ஆவிரைச்செடி.
சதுர்த்தசி—பதினான்காந்திதி.
சதுர்த்தி—நான்காந்திதி.
சதேகரு—இலவங்கப்பட்டை.
சதை—மாமிசம், 2. பழத்தின் சதை, 3. முன்னைமரம், 4. பாலைமரம் 5. சோறு.
சதைதல்—(தொ. பெ) நசுங்குதல்.
சதைத்தல்—(தொ. பெ) நெரித்தல், 2. புஷ்டியாதல்.
சதோகநாதர்—நவ சித்தரிலொருவர்.

சதோகரு—
சதோகுரு— } இலவங்கப்பட்டை.
சத்தகம்—ஓர் கத்தி.
சத்தகம்—எழுகூடியது.
சத்தசிப்பி—கிளிஞ்சில்.
சத்தபருணி—எழிலைப்பாலைமரம்.
சத்தமி—எழாந்திதி.
சத்தம்—எழு, 2. ஒலி, 3. இசை, 4. குரல், 5. மொழி, 6. பெரியோர் மொழி, 7. மாடுமுதலியவற்றிற்குச் கொடுக்குங் கூலி.
சத்தரிஷிகள் — அங்கிரசன், அத்திரி, கிரது, மரீசி, புலகன், புலத்தியன், வசிட்டன் ஆகிய எழுரிஷிகள்
சத்தன்—சிவன்.
சத்தார்—சாய்வு.
சத்தி—சூலம், 2. சாரிடக்கியம், 3. விருதுக்கொடி.
சத்தி—கக்கல், 2 கக்குகை, 3. கொம்மட்டிக்கொடி, 4. பேய்ப்புடல்கொடி, 5. நீர்முள்ளிச்செடி, 6. வல்லமை, 7. பராசத்திமுதலியன, 8. பார்வதி, 9. ஆவிடையார், 10. கைவேல், 11. கந்தகம், 12. சவக்காரம், 13. திப்பிலி, 14. குடை.
சத்திசம்—குதிரை.
சத்திகர்—கடவுளருளாலறப்புசெய்வோர்.
சத்திக்கூற்றோன்—நவக்ஷாரம்.
சத்திக்கொடி—கொம்மட்டிக்கொடி.
சத்திசாரவண—மூக்கிரட்டைச்செடி.
சத்திசாரம்—ஓர் உப்பு.
சத்திநாதம்—பொன்னிறம், 2. பொன்னிமிளை, 3. எமாப்பிரகம்.
சத்திநிபாதம்—சிவ சத்தி பதிதல்.
சத்திநிபாதர்—மனதையடக்கித் தெய்வம் வழிபடுவோர்.
சத்தியபாமை—கிருஷ்ணன் மனைவிகளிலொருத்தி.
சத்தியம்—உண்மை, 2. சபதம், 3. சத்தியசோதனை, 4. குறிஞ்சாக்கொடி.
சத்தியயுகம்—கிரேதாயுகம்.
சத்தியலோகம்—பிரமலோகம்.
சத்தியவதி—வியாசன்றாய்.
சத்தியவான்—மெய்யன்.
சத்தியவேதம்—விவிலியநூல், 2. மெய்வேதம்.
சத்தியோசாதம் — சிவனைம் முகத்திலொன்று.
சத்திரம்—அன்னசாலை, 2. யாகம், 3. கைவிடாப்படை, 4. சத்திரக்கத்தி, 5. கைவேல், 6. இரணவைத்தியம், 7. பாவனம், 8. குடை, 9. வெண்குடை, 10. கவிழ்தும்பைச்செடி.
சத்திரவித்தை—இரணவைத்திய சாத்திரம்.
சத்திராட்சி—(வை.அ) அரத்தைச்செடி.
சத்திரியர் — இரண்டாம் வருணத்தோர், அவர் அரசர்.
சத்து—உண்மை, 2. நன்மை, 3. சாரம், 4. அறிவு, 5. ஞானி, 6. உள்ளது, 7. பிரமம்.
சத்துமொத்து—ஒலிக்குறிப்பு.
சத்துரு—பகைவன்.
சத்துருக்கன்—இலக்குமணன் தம்பி.
சத்துவம்—வலி, 2. சுபாவகுணம், 3. முக்குணத்திலொன்று, 4. ஓர் விசேஷகுணம்.
சத்துவாரி—சாலேசரம்; இது: பார்வை மங்கல் என்பர்.
சத்தை—இருப்பு, 2. சாரம், 3. நன்மை.
சந்தகம்—இடியப்பம்.
சந்தகை—இடியப்பவுரல்.
சந்தசு—ஆரியயாப்பிலக்கணம்.
சந்தடி—சனத்திரள், 2. இரைச்சல்.
சந்ததம்—எப்பொழுதும்.
சந்ததி—மகன், 2. பிள்ளை, 3. வமிசம், 4. சந்தானம்.
சந்தப்பாணம்—ஓர் மருந்துச்சேர்வை.
சந்தம் — கவிவண்ணம், 2. நிறம், 3. அழகு, 4. வடிவு, 5. சந்தனம், 6. பழக்கம்.
சந்தயம்—
சந்தையம்— } சந்தேகம்.
சந்தர்ப்பம்—தருணம்.
சந்தனக்காப்பு—சந்தனாபிஷேகம்.
சந்தனக்குழம்பு—இழைத்த சந்தனம்.
சந்தனம்—சந்தனமரம், 2. இரதம்.

சந்தனுசலம்—பொதியமலை.
சந்தனு—வீடுமன்றந்தை.
சந்தாபம்—வெப்பம், 2. துன்பம், 3. மனஸ்தாபம்.
சந்தாயம்—சஞ்சாயம்.
சந்தானகரணி — அற்ற உறுப்புகளைப் பொருத்துமருந்து, 2. அறுகம்புல்.
சந்தானகுரவர் — சைவசித்தாந்தாசாரியர்.
சந்தானசருவோத்தம் — ஓர் சைவாகமம்.
சந்தானதீபிகை—ஓர் சோதிடநூல்.
சந்தானம் — சந்ததி, 2. வமிசம், 3. தொடர்பு, 4. குருபாரம்பரை, 5. ஐந்தருவிலொன்று.
சந்தி—இசைப்பு, 2. சந்திக்குமிடம், 3. விகுதிமுதலியவற்றின் புணர்ச்சி, 4. மாலைநேரம், 5. யுகசந்தி, 6. நட்பாதல், 7. மூங்கில்மரம், 8. சந்தியாவந்தனம், 9. தறுவாய்.
சந்தி—(வி) எதிர்ப்படு, 2. கண்டுகொள், 3. அடை, 4. சார்பாகு.
சந்திப்பு—இசைப்பு, 2. கூடுமிடம், 3. யுகசந்திப்பு, 4. இறும்.
சந்திமான் — இடையெழுவள்ளலிலொருவன்.
சந்திரகம்—மயிற்றோகைக்கண், 2. பொன்வண்டு, 3. செந்திருக்கம்.
சந்திரகாம்புயம்—வெண்டாமரை.
சந்திரகாவி—செங்காவிமண், 2. ஓர்வகைப் புடவை.
சந்திரகுத்தன் — யமன்கணக்கரிலொருவன், 2. ஓரரசன்.
சந்திரசேகரன்—சிவன்.
சந்திரசைலம்—ஓர் மலை.
சந்திரஞானம்—ஓர்சைவாகமம்.
சந்திரதிலகம்—சந்தனம், 2. சந்தனப்பொட்டு.
சந்திரபூரம்—பச்சைக் கர்ப்பூரம்.
சந்திரப்பிறை — மகளிர் தலையணிகளுளொன்று.
சந்திரமதி—அரிச்சந்திரன் மனைவி.
சந்திரம்—கர்ப்பூரம், 2. பொன்.
சந்திரன்—திங்கள்.
சந்திரிகம்—செந்துருக்கம், (ஒரு செடி.)
சந்திரிகை—சந்திரனொளி, 2. நிலவு, 3. பேரேலம்.
சந்திரேகம்—கார்ப்போகரிசிவிதை.
சந்தில்—சனி.
சந்திவிக்கிரகம்—அடுத்துக்கெடுத்தல்.
சந்து—மூட்டு, 2. சரீரமூட்டு, 3. இடுப்பு, 4. நாற்றெருகூடுமிடம், 5. முடுக்குத் தெரு, 6. பிளப்பு, 7. தூது, 8. தூதன், 9 சமையம், 10. சந்தனமரம், 11. சீவபிராணி.
சந்துசெய்தல்—(தொ பெ) பொருத்தல்.
சந்துஷ்டம்— } சந்தோஷம்.
சந்துஷ்டி— }
சந்துநயத்தான்—தூதுவிலைக்கொடி.
சந்தேகம்—ஐயம், 2. அசாத்தியம், 3. நிலையாமை.
சந்தேகி—(வி) ஐயப்படு.
சந்தை—கூடுங்கடை, 2. வேதமோதுமிடம்.
சந்தோஷம்— } பூரிப்பு, 2 மகிழ்ச்சி.
சந்தோடம்— }
சந்தோஷி—(வி) மகிழ்.
சந்தோபிசிதம்— } வேதாங்கத் தொன்று.
சந்தோபிசிதி— }
சந்நத்தன்—போருக்காயத்தமானோன்.
சந்நிதானம்— } அண்மை, 2. சமுகம், 3. மூலஸ்தானம்
சந்நிதி— }
சந்நிபம்—உவமை.
சந்நியம்—போர்.
சந்நியாசம்—துறவு.
சபக்கம்— } ஒத்தபட்சம்.
சபட்சம்— }
சபதம்—ஆணை, 2. ஆணைப்பாடுசெய்தல், 3. பிரதிக்கினை, 4. மெய், 5 ஒட்டம்
சபதரி—(வி) ஆதரி.
சபதி—விரைவு.
சபம்—ஆலமரமுதலியவற்றின் வீழ், 2. மூங்கில்மரம், 3. செபம், 4. சவம்.
சபரம்—கெண்டைமீன்.
சபர்—கடல்யாத்திரை.
சபலம்—இரசம், 2. மின்னல், 3. நடுக்கம், 4. இலாபம், 5. நிறைவேற்றுகை, 6. அனுகூலம்.

சபலா—திப்பிலி.
சபலை—மின்னல், 2. இலக்குமி.
சபாநாதன்— } சபைக்கிறைவன், 2.
சபாநாயகன்— } நடராஜமூர்த்தி.
சபாப்பு— } மறுமொழி.
சவாப்— }
சபி—(வி) சாபமிடு.
சபிண்டர்—பிதிர்பிண்டமிடுதற்குரியோர்.
சபிண்டி— } பிதிர்பூசை.
சபிண்டீகரணம்— }
சபினம்— } வசம்பு.
சபீனம்— }
சபை—மண்டபம், 2. அவை, 3. கூட்டம், 4. புலவர் சபை.
சப்ஜா—செந்திருக்கம்விதை.
சப்தி—ஆளுகையை மறித்தல்.
சப்பங்கி—ஓர்தேசம், 2. ஓர் மரம், 3. வீரமற்றவன்.
சப்பட்டை—சப்பளிந்தது, 2. தோட்பட்டை, 3. சிறகு, 4. பதர், 5. மடையன்.
சப்பணம்—அட்டணைக்காலிடல்.
சப்பரம்— } கேடகம், 2. சப்பரத்தேர்,
சப்பிரம்— } 3. யானைமேற்றவிசு.
சப்பளாத்தி—சமர்த்தற்றவன்.
சப்பளி—(வி) தட்டையாகு.
சப்பன்னம்—ஐம்பத்தாறு.
சப்பாணி — பிள்ளைக்கவியிலோருறுப்பு, 2. முடவன், 3. கைகொட்டல்.
சப்பாத்து—பாதரட்சை, 2. நாகதாளி மரம்.
சப்பி—சாவி.
சப்பியம்—சபைக்கேற்ற வார்த்தை.
சப்பு—(வி) மெல்லு, 2. குதப்பு.
சப்புச்சவர்—கழிகடை, 2. சவர்நிலம்.
சப்பை—தட்டை, 2 சந்து, 3. வலியின்மை.
சம்ஸ்காரம் — கிரியாசாந்தி, 2. பூருவ வாசனை, 3. கரணம், 4. திதஸ்தாபகம்.
சம்க்கிருதம்— } ஆரியமொழி.
சமஸ்கிருதம்— }
சமங்கை — ஆடுதின்னாப்பாலைச்செடி.

சமசி— } பூர்த்தி, 2. கவியாசை.
சமசை— }
சமசு—கலகக்கூட்டம்.
சமஷ்டி— } முழுமை.
சமட்டி— }
சமட்டு—(வி) காலாலே துவை.
சமணம்— } சமணமதம்.
சமண்— }
சமணி—(வை. அ) இலவமரம்.
சமதக்கினி—பரசிராமன் றந்தை.
சமதலை — அடிமுன்றுனை, 2. ஈருங்கடை.
சமதன்—சங்காத்தி.
சமதீதம்—ஐக்கியம்.
சமதை—சமானம்.
சமஸ்தம்— } எல்லாம்.
சமத்தம்— }
சமஸ்தானம்—அரசசபை.
சமத்து—வல்லமை.
சமத்துக்காரம்—திராணி.
சமம் — மேடுபள்ளமின்மை, 2. ஒப்பு, 3. சரி, 4. நடு, 5. மிகைகுறைவின்மை, 6. நடுநிலை, 7. போர், 8. அமைவு, 9. கிரகசமநிலை, 10. அகக்கரணதண்டம், 11. எல்லாம்.
சமயதீட்சை-தீட்சை வகையிலொன்று; அது: சமயாநுசரிப்பின் முதலுபதேசம்.
சமயபேதம்—காலவிகற்பம்.
சமயம்—தருணம், 2. காலம், 3. மார்க்கம்.
சமயாதீதன்—சமயங்கடந்த கடவுள்.
சமரசம்—ஒப்பு.
சமரம்—போர்.
சமரி—தர்க்கை.
சமர்—போர், 2. முட்பன்றி.
சமர்த்தகம்—உபகாரம்.
சமர்த்தி—(வி) முடிவாக்கு.
சமர்த்து—திண்மை, 2. சாமர்த்தியம்.
சமர்ப்பகம்— } கொடை, 2. உயர்ந்தோர்க்குக் கொடுக்கை.
சமர்ப்பணம்— }
சமர்ப்பணை— }
சமலம்— } அசுத்தம், 2. மும்மலம்.
சமலை— }

சம்வாசம்—சகவாசம்.
சமவாதம்—தர்க்கம், 2. சமாதானதருக்கம்.
சமவாயம்—கூட்டம், 2. தற்கிழமை.
சமவிருஷ்டி—மத்திமமழை.
சமழ்—(வி) நாணு, 2. வருந்து.
சமழ்ப்பு—வருத்தம், 2. வெட்கம்.
சமழ்மை—தாழ்வு.
சமற்பகம் — உயர்ந்தோர்க்குக் கொடுக்கை.
சமனம்—வசம்பு, 2. புழுக்கொல்லிச் செடி.
சமனுதம்—உவர்மண்.
சமனியகரணி — இரணத்தழும்பாற்று மருந்து.
சமன்—சமானம், 2. துலாக்கோலின் சமவரை, 3. நடு, 4. நமன், 5. காலன்.
சமா—
ஜமா— } கூட்டம்.
சமாசம் — தொகைப்படுவது, 2. மொழியாக்கம்.
சமாசாரம்—செய்தி.
சமாதானம்—கலக்கமின்மை, 2. சம்மதம், 3. ஒப்புரவு, 4. தக்கவுத்தரம், 5. மனவமைவு, 6. யோகநிஷ்டை.
சமாதி—அங்கயோகத்தொன்று, 2. ஞானசமாதி, 3. சமாதிதரிசனை, 4. பிணம் புதைக்குங்குழி, 5. ஓரலங்காரம், 6. மரணம்.
சமாது—(வை. அ) ஊமத்தஞ்செடி.
சமாபந்தி — (துரைத்தனத்தார்) வருவாய் நிர்ணயம்.
சமாப்தம்—
சமாப்தி— } முடிவு.
சமாயுதம்—ஓரலங்காரம்.
சமாராதனை — பிராமண போஜனத்தாற் சாந்தி கழித்தல்.
சமாலம்—பீலிக்குஞ்சம்.
சமாலுகம் — (வை. அ) குறிஞ்சாக்கொடி.
சமாவருத்தனம்—
சமாவருத்தனை— } வைதிக கருமத்தொன்று, சமுசாரத்துக்குட்படுகை.
சமாளம்—சந்தோஷம்.
சமாளி—(வி) திடங்கொள், 2. தாங்கு, 3. விருந்து முதலியன சரிக்கட்டி நடத்து.
சமானகரணி — இரணத்தழும்பாற்று மருந்து.
சமானம்—ஒப்பு, 2. சமம்.
சமானன்—தசவாயுவிலொன்று.
சமானியம்—பொது.
சமானோதகர்—பிதிர்களுக்கு நீர் விடுதற்குரியோர்.
சமி—அருகன், 2. தணக்குமரம், 3. வன்னிமரம், 4. வாழைமரம்.
சமி—(வி) சீரணி, 2. சுவறு, 3. பதனழி, 4. ஏங்கிப்போ, 5. சகி, 6. அடக்கு.
சமிக்ஞை—சயிக்கை, 2. சங்கேதப் பெயர், 3. சீரணிக்கை.
சமிதி—போர்.
சமிதை—ஓமவிறகு.
சமித்தம்—ஓமமண்டபம்.
சமித்து—சமிதை, 2. கஞ்சாச்செடி.
சமிப்பாகம்—(வை. அ) கொன்றை மரம்.
சமிப்பு—சீரணிப்பு, 2. பொறுத்தல்.
சமியன்—அருகன்.
சமிலாகி—(வை. அ) திப்பிலி.
சமீகம்—போர், 2. கோல்.
சமீபம்—அண்மை.
சமீபி—(வி) அணித்தாகு, 2. கிட்டு.
சமீரணம்—(வை. அ) கிடாரைமரம்.
சமீரணன்—
சமீரன்— } காற்று, 2. வாயுதேவன், 3. வாயுபுத்திரன்.
சமீரம்—போர்.
சமீன்—நிலம்.
சமு—படையிலோர் தொகை.
சமுகம்—சந்நிதி, 2. கூட்டம்.
சமுக்கா—தூரதிருஷ்டிக் கண்ணாடி, 2. காந்தப்பெட்டி.
சமுக்காளம்—நூற்கம்பளம்.
சமுசயம்—சந்தேகம், 2. அச்சம்.
சமுசாரம் — இல்வாழ்க்கை, 2. குடும்பம், 3. உலகப்பற்று, 4. பிறவிக்கேதுவானவை, 5. உலகசஞ்சாரம், 6 மனைவி.
சமுசு—கலகக்கூட்டம்.

சமுச்சயம்—சமுச்சயவுவமை, 2. கூட்டம், 3. சந்தேகம்.
சமுஸ்காரம்—சமஸ்காரம்.
சமுதாடு— } ஓர்வகைக்கத்தி.
சமுதாளி— }
சமுதாயம் — கூட்டம், 2. சங்கம், 3. திரள், 4. பொது, 5. சமாதானம்.
சமுதாய்—(வி) சமாளி, 2. சமாதானப்படுத்து.
சமுதிதம்— } பொது.
சமுதீதம்— }
சமுத்தி — செய்யுட் சமன்முடிவு, 2. நிறைவு.
சமுத்திரசோகி-வட்டத்திருப்பிச்செடி.
சமுத்திரபாலை—கடம்பு மரம்.
சமுத்திரம்— (வை அ) முடக்கற்றான் பூண்டு.
சமுத்திரம் — கடல், 2. படையிலோர் தொகை, 3. ஓரெண், 4. மிகுதி.
சமுத்திரராசன்—வருணன்.
சமுத்திராந்தம் — சிறுகாஞ்சொறிக் கொடி, 2. பருத்திச்செடி, 3 சாதிக்காய்.
சமுத்திராப்பழம்—கொந்தளப்பழம்
சமுப்பவம்—தைவேளைப்பூண்டு.
சமுற்கம்—ஓர் மிறைக்கவி.
சமுன்னதி—அகந்தை.
சமூகம்—கூட்டம், 2. சபை, 3. முன்னிலை.
சமூலம்—அனைத்தும், (வேர்முதல் இலையீறுவரை.)
சமேதம்- கூடவிருக்கை.
சமேதார்— } இராணுவவுத்தியோகஸ்தன்.
சமைதார்— }
சமை—வருஷம், 2. மனமடக்குகை.
சமை—(வி) பருவமடை, 2. பாகமாகு, 3. ஆகு, 4. எத்தனமாகு, 5. ஒழி.
சமைகடை—முடிவு.
சமையம்—சமயம்.
[illegible]மையல்-சமைக்கப்படுதல், 2. செய்

[illegible] 2. பிறப்பு, 3. நன்மை, 4. பூரணம் 5. சுத்தம்.
சம்க்ஷேபம்—சங்க்ஷேபம்.

சம்பகம்—சண்பக மரம்.
சம்பங்கி—செண்பகமரம்.
சம்பங்கோரை—ஓர் புல்.
சம்பங்கோழி- ஒருகோழி.
சம்படம்—சீலை, 2. சோம்பல்.
சம்பத்து—செல்வப்பெருக்கு.
சம்பத்துவேட்டம் —தாளமைந்திலொன்று.
சம்பந்தம் — இணக்கம், 2. உறவு, 3. மேற்கோளமைதி.
சம்பந்தர்—சிவனடியாரி லொருவர்.
சம்பந்தி—(வி) உறவாயிரு.
சம்பம்—வச்சிராயுதம், 2. இடம்பம், 3. மரவயிரம்.
சம்பரம்—நீர், 2. சீலை, 3. எண்காற்புள்.
சம்பரன் — ஓரசுரன், 2. இந்திரனாற் கொலையுண்ட வசுரன்.
சம்பராரி—இந்திரன், 2. காமன்.
சம்பரி—நேர்வாளக்கொட்டை.
சம்பவம்—பிறப்பு, 2. சம்பவிக்குங்காரியம், 3. இணக்கம்.
சம்பவி—(வி) நிகழ்.
சம்பளம் — மாதாந்தக்கூலி, 2. வழியுணவு, 3. வழிக்குவேண்டும்பொருள், 4. கரை, 5. பொறுமை, 6. பலபண்டாரம், 7. எலுமிச்சைமரம், 8. செம்மறிக்கடா.
சம்பளி— } அடைப்பை, 2. சாமான்பை.
சம்பிளி— }
சம்புளி— }
சம்பன்னம்—நிறைவு, 2. பாக்கியம், 3. உடைமைச் சிறப்பு.
சம்பா—ஒருவகை நெல், 2. ஓர் விளையாட்டு, 3. ஓர் தாயம், 4. நால்விரலளவை.
சம்பாகம்—நாடு, 2. நன்றாய்ச் சமைத்தது.
சம்பாஷணம்— } கூடிப்பேசுகை.
சம்பாஷணை— }
சம்பாடணை— }
சம்பாஷி—(வி) கூடிப்பேசு.
சம்பாதனை— } தேட்டம்.
சம்பாதிதம்— }
சம்பாத்தியம்— }
சம்பார்த்தனை }

சம்பாதி--(வி) தேடு.
சம்பாரம்—கூட்டுவர்க்கம், 2. கைமரந் தாங்கி.
சம்பால்—ஓர்வகைப் பச்சடி.
சம்பாவனம்— } காணிக்கை, 2. மனோ
சம்பாவனை— } மய சிந்தனை, 3. ஆசாரவுபசாரம்.
சம்பாலிதம்—சம்பவிக்கக்கூடியது.
சம்பான்—தோணி.
சம்பிரதம்—சித்து.
சம்பிரதாயம் — குருபாரம்பரியம், 2. குலாசாரம், 3. சாமர்த்தியம், 4. சாதுரியம்.
சம்பிரதி— } தலைமைக் கணக்கன்.
சம்பிருதி— }
சம்பிரமம் — மனக்களிப்பு, 2. இடம்பம், 3. ஐம்பம், 4. பறங்கிப் பாஷாணம்.
சம்பிரேட்சியம்—ஆராய்ந்தறிந்தது.
சம்பீரம்—எலுமிச்சைமரம்.
சம்பு—சிவன், 2. பிரமன், 3. அருகன், 4. விஷ்ணு, 5. சூரியன், 6. நாவல் மரம், 7. ஒரு தீவு, 8. எலுமிச்சை மரம், 9. நரி, 10. ஓர் கோரைப்புல், 11. சடைச்சி என்னும் பூண்டு.
சம்புகம்—நரி.
சம்புகேஸ்வரம்—திருவானைக்கா.
சம்புடம் -செப்பு.
சம்புத்தி—விளிவேற்றுமை.
சம்புரோட்சணம்— } ஆலயப் பிரதிஷ்
சம்புரோட்சணை— } டை.
சம்பூதம்— } பிறப்பு.
சம்பூதி— }
சம்பூரணம் — நிறைவு, 2. போதுமான அளவு, 3. திருத்தி.
சம்பை—சம்பங்கோரைப்புல், 2. செழிப்பு, 3. மக்கல், 4. மீன்பொது.
சம்பை--மின்னல், 2. தாளத்தினொன்று.
சம்போகம்—புணர்ச்சி.
சம்போக்கு—கப்பற்கூட்டம்.
சம்போதனை—விளிவேற்றுமை.
சம்மட்டி — சவுக்கு, 2. கொல்லன் சம்மட்டி.
சம்மணம்—அட்டணைக்காலிடல்.
சம்மதம்—உடன்பாடு, 2. அங்கீகாரம், 3. கொள்கை.
சம்மதி—அங்கீகரிப்பு.
சம்மதி—(வி) உடன்படு.
சம்மந்தம்—சம்பந்தம்.
சம்மனசு—மோக்ஷவாசி.
சம்மாதம்—மாற்றுவரி கொடுத்தல்.
சம்மாரம்—அழிவு.
சம்மானம்—மரியாதை,2.சர்வமானியம்.
சம்மான்—சிறுதோணி.
சம்மியத்துவம் — குறைவில்லாத வுசாரத்துவம்.
சம்மியாகம்—(வை.அ) கொன்றைமரம்.
சம்மோகம்—மயக்கம்.
சம்மோதிதம்—சந்தோஷித் தருளிச்செய்யும் பலன்.
சம்யோகம்—புணர்ச்சி.
சம்ரட்சணை—பரிபாலனம்.
சம்வர்த்தம்-சததமேகத்தொன்று. அது மணி பொழிவது.
சம்வற்சரம்—வருடம்.
சம்வாகம்—மலையூர், 2. ஊர்.
சம்வாதம்—தர்க்கம்.
சய—ஓர் வருஷம், 2. போற்றி.
சயகண்டை—பரந்தவட்டிகை.
சயகம்—பூவரும்பு.
சயசய—போற்றி போற்றி.
சயதாளம்—தாளமொன்பதிலொன்று.
சயத்திரதன்—ஓரரசன்.
சயந்தனம்—தேர்.
சயந்தன்- இந்திரன்மகன், 2. சந்திரன்.
சயந்தி—(வை. அ) வாதமடக்கி மரம்.
சயபாளம் — (வை. அ) நேர்வாளக் கொட்டை.
சயமகள்—துர்க்கை, 2. மிதுனவிராசி.
சயமரம்—கன்னிகை நாயகனைத் தானே தெரிந்து வரித்துக்கொள்ளுதல்.
சயம்-வெற்றி, 2.சூரியன், 3.சருக்கரை, 4. ஆம்பல், 5. கூட்டம், 6. மாலை, 7. கை, 8. சயரோகம், 9. சிதைவு.
சயம்பு—தானுயிருத்தல், 2. கட[illegible] சிவன், 4. அருகன்.
சயனம்—நித்திரை, 2. படுக்குமனை; 3. புணர்ச்சி.

சயனி-(வி) படு, 2. நித்திரைசெய்.
சயா-(வை. அ) வாதமடக்கிமரம்.
சயி-(வி) தாங்கு.
சயிகை- } சைகை.
சயிக்கினை- } சைகை.
சயிக்கை- } சைகை.
சயிக்கம்-மென்மை.
சயிக்கா- } அரசமரம்.
சயித்தி- } அரசமரம்.
சயித்தகம்-சிற்பநூலிலொன்று.
சயித்தியம்-குளிர்ச்சி.
சயித்திரம்-சித்திரை.
சயித்திரியம்-மாய்கை.
சயிந்தலவணம்- } இந்துப்பு.
சயிந்தவம்- } இந்துப்பு.
சயிந்தனம்- } இந்துப்பு.
சயிந்தவம் - இந்துப்பு, 2. குதிரை, 3. தலை.
சயிந்தவி-ஓர்ராகம்.
சயிரேகம் - மேகவண்ணப் பூவுள்ள மருதோன்றிமரம்.
சயிலங்கமலை-வெட்டிவேர்
சயிலம்-மலை.
சயினி-(வை. அ) திப்பிலி.
சயை - மூன்றும் எட்டாம் பதின்மூன்றுந்திதிகள்.
சயோத்தியம்-நண்பு.
சரகம்-தேனீ, 2. வண்டு.
சரகாண்டபாஷாணம் - பாஷாணம் முப்பத்திரண்டிலொன்று.
சரகாண்டம்-ஓர் பாஷாணம், 2. அம்புக்கூடு.
சரகூடம்-அத்திரத்தாற்றொடுக்கும் பின்னற்செறிவு.
சரக்கு - கறிச்சரக்கு, 2. சம்பாரச் சரக்கு, 3. வியாபாரச்சரக்கு, 4. சாராயம், 5. மருந்துச்சரக்கு.
சரசம்-இனியகுணம், 2. பரிகாசம், 3. கிரீடைச்சேஷ்டை.
சரசனெல்-ஒலிக்குறிப்பு.
சரசி-பரிகாசக்காரன்.
சரசு-குளம்.
சரசுவதி-கலைமகள், 2. சரசுவதியாறு, 3. குணவதி.

சரச்சிறு-(வை. அ) குறிஞ்சாக்கொடி.
சரடம்-ஓந்தி.
சரடு-முறுக்கிழை, 2. வரிசை, 3. தந்திரம்.
சரணம் - பாதம், 2. சிந்து முதலிய செய்யுளடி, 3. நமஸ்காரம், 4. அடைக்கலம், 5. வீடு, 6. மருதநிலத்தூர், 7. மயிற்றேகை, 8. மயில், 9. அரசமரம்.
சரணுகதம்- } அடைக்கலம்.
சரணுகதி- } அடைக்கலம்.
சரணாரவிந்தம்-பாதபங்கயம்.
சரண்-பாதம், 2. அடைக்கலம்.
சரதம்-மெய்.
சரதலம்-கிரககதியறிகைக்குறி.
சரதார்-தலைவன்.
சரபடி-வமிசம்.
சரபம் - எண்காற்புள், 2. வரையாடு, 3. குறும்பாடு.
சரமம்-முடிவு.
சரம்-அசைவு, 2. அசையும் பொருள், 3. சுவாசநடை, 4. சுவாசம், 5. மணிவடம், 6. பூமாலை, 7. கோவை, 8. அம்பு, 9. நாணற்புல், 10. கொறுக்கைப்புல், 11. நோவு.
சரயு- } ஓர் நதி.
சரயுநதி- } ஓர் நதி.
சரவடி-வமிசவரிசை.
சரவட்டை-அற்பசொற்பம்.
சரவணம்-கொறுக்கைப்புல், 2. நாணற்புல், 3. தாமரை, 4. ஓர் தடாகம்.
சரவாச்சம்-கறியுப்பு.
சரவீணை-கருவண்டு.
சரவை - மாலை, 2. ஒத்திடாதபிரதி, 3. எழுத்துப்பிழை, 4. அற்ப சொற்பம்.
சரளம்-தகுதி, 2. ஒழுங்கு, 3. தடையின்மை, 4. சிவதைக்கொடி.
சரளி-சத்தசுரப்பயிற்சி, 2. கோழை.
சரற்காலம்-மாரிகாலம்.
சராகம்-வண்டு 2 தேர்வழி, 3. தேசப்பிரிவு.
சராகை-வட்டில்.
சராங்கம்-தடையின்மை.

சராங்கு—லஸ்கரர்களுக்குக் கண்காணி.
சராசந்தன்—மகதனுட்டிலிருந்தரசன்.
சராசரம்—நடையுள்ளது மில்லது மாகிய பிரபஞ்சம்.
சராசரி—சரிபங்கு
சராசனம்—அரசமரம், 2. வில்.
சராப்பு—பண இருப்பு.
சராயு—கர்ப்பாசயம்.
சராவம்—அகல், 2 சலாகை.
சராளம்—தாராளம், 2. நேர்வழி
சராளி—(வி) பேதியாகு.
சரி—மலைச்சாரல், 2. கைவளை, 3. வழி, 4. ஒழுங்கு, 5. சமம், 6. ஒப்பு, 7. ஒரு தன்மை, 8. கூட்டம், 9. சம்மதிக்குறிப்பு.
சரிகமபதநி—சத்தசுரங்களின் அக்ஷரம்.
சரிகாண்—(வி) அத்தாட்சிகாண், 2. நிறைவேற்று, 3. கொல்லுவி.
சரிகை—உலோகநூல்.
சரிசு—கைவளை.
சரிதம்—காதை.
சரிதர்—சஞ்சரிப்போர்.
சரிதல்—(தொ. பெ) சாய்தல், 2. சரிந்து செல்லுதல், 3. நழுவுதல், 4. மேலிருந்து இழுருளல், 5. படுத்தல், 6. பட்டுமுதலியன கூடிப்போதல், 7. இரகஞ் சாய்தல், 8. சரிவாயிருர்தல், 9. பின்னிடல்.
சரிதை—சரித்திரம், 2. நான்கு பாதத்திலொன்று, 3 ஒழுக்கம், 4 பிச்சை.
சரித்தல்— (தொ. பெ) சரியச்செய்தல், 2. தானிய முதலிய சரித்தல், 3. சஞ்சரித்தல்.
சரித்திரம்—சரிதம், 2. ஒழுக்கம், 3. நடக்கை, 4. இயல்பு.
சரித்திரை—புளியமரம்.
சரித்து—கங்கை.
சரிபம்—அசோகமரம்.
சரியம்—சிறுநன்னாரி, (ஒரு பூடு.)
சரியை — சைவசாதனத்தொன்று, 2. ஒழுக்கம், 3. பிச்சை.
சரிவர—(வி) இணங்க, 2. சமஞ்சு, 3. திர.
சரிவு—சாய்வு, 2. தானியமுதலியசரிகை, 3. மலைச்சரிவு, 4. பக்கச்சரிவு, 5. குடற்சரிவு.
சரிளப்பா—(வை. அ) வெண்கடுகு.
சரிற்பதி—சமுத்திரம்.
சரிற்புதல்வன்—வீடுமன்.
சரீரக்கூறு—சரீரவியல்பு.
சரீரத்திரயம்—தூல சூக்கும காரண சரீரங்கள்.
சரீரப்போக்கு—உடம்பின் தன்மை.
சரீரம்—மனிதருடல், 2. மிருகாதிகளினுடல்.
சரீரி—சரீரமுள்ளது.
சரு—சோறு, 2. தேவர் பிதிரருணவு.
சருகட்டை—மரவட்டை.
சருகு—உலர்ந்த இலை.
சருகுசன்னியம்—இருப்புச்சுவடு
சருகொட்டி— } ஓர் பறவை.
சருவொட்டி— }
சருக்கம்— } படலம்.
சர்க்கம்— }
சருக்கரை—சர்க்கரை.
சருக்கரைவள்ளி — ஒரு கிழங்குககொடி.
சருச்சரை — எண்வகையூறிலொன்று, அஃது ஒப்பரவின்மை.
சருச்சை— } இகழ்ச்சி.
சர்ச்சை— }
சருத்தி — தேரிடக்கியம், 2. விருதுக்கொடி.
சருப்பம்— } பாம்பு
சர்ப்பம்— }
சருப்பராசி—(வை. அ) நாணற்புல்.
சருப்பராச்சி—சங்கங்குப்பிச்செடி.
சருமம்— } தோல், 2. தோற்பாய், 3. புளியம்புறணி.
சர்மம்— }
சருமன்—சக்கிலியன், 2. வேதியனுக்கிட்ட பட்டப்பெயர்.
சருவகர்த்துருத்துவம்—சர்வ அதிகாரம்.
சருவகாரணன்—கடவுள்.
சருவக்கியத்துவம்—சருவஞ்ஞத்துவம்.
சருவசங்கபரித்தியாகம் — முற்றத்துறத்தல்.
சருவசித்து-இருபத்தோராவதுவருடம்.

சருவசீவதயாபரன்—கடவுள்.
சருவஞ்ஞத்துவம்—எல்லாவற்றையுமறியுந் தன்மை.
சருவஞ்ஞன்—கடவுள்.
சருவதாரி—ஓர் வருஷம்
சருவத்தியாகம்—முற்றுந்துறத்தல்
சருவம்—ஓர்வகைப் பாத்திரம்.
சருவம்—
சர்வம்— } அனைத்தும்.
சருவரி—இருள்.
சருவு—(வி) சரசஞ்செய், 2. தழுவு, 3. தாக்கு, 4. சொழுவு, 5. சைகை காட்டு.
சரேரெனல்—
சரேலெனல்— } விரைவுக் குறிப்பு.
சரை—சருகினாற்கட்டுங் கவசம்.
சரை—நரை, 2. வார்த்திகம்
சரோசம்—
சரோருகம்— } தாமரை.
சர்க்கம்—படலம், 2. சிருஷ்டிப்பு.
சர்க்கரை—கரும்பின்கட்டி.
சர்க்கார் — தாழ்வாரம், 2. துரைத்தனம்.
சர்ச்சரை—சச்சரவு, 2. கரடுமுரடு.
சர்தார்—மேல்விசாரணைக்காரன்.
சர்ப்பதிஷ்டம்—பாம்புக்கடி.
சர்ப்பம்—பாம்பு.
சர்ப்பனை—வஞ்சகம்.
சர்ப்பிராசி—
சர்பரா— } சவதரிப்பு.
சர்மம்—தோல்.
சர்வசித்து—ஒரு வருஷம்.
சர்வதா—எப்போதும்.
சர்வதாரி—சருவதாரி, (ஓர்வருஷம்).
சர்வம்—எல்லாம்.
சர்வாணி—பார்வதி.
சலகந்தி—சீகஸ்திரபேதி.
சலகாமி—நீர்மேல்நடக்குங் குதிரை.
சலகு—விதையடித்தல்.
சலகை—உலுப்பை, 2. தானிய அளவு, 3. தெப்பம்.
சலக்கம்—நீராட்டு.
சலக்கரணை—சகாயம், 2. நயம்.

சலக்கு—நவக்ஷாரம்.
சலங்கு—கட்டுப்படவு
சலங்கை—காலணி.
சலசம் - தாமரை.
சலசரம்—மீன் பொது, 2. மீனவிராசி.
சலசல—சரசர, 2. ஒலிக்குறிப்பு.
சலசலப்பு—ஒலிக்குறிப்பு, 2. வெறுமை.
சலசலோசனன் -தாமரைக்கண்ணான், 2. விஷ்ணு.
சலசூசி—நீரட்டை.
சலசை—இலக்குமி.
சலஞ்சலம்—வலம்புரியாயிரஞ் சூழ்ந்த சங்கு
சலணி—(வை. அ) வால்மிளகு.
சலதரம் – குளம், 2. சமுத்திரம், 3. முகில்.
சலதாரை—நீர்க்கால், 2. சிறுநீர்த்தாரை, 3. நீரோட்டம்.
சலதி—
சலநிதி—
சலபதி— } கடல்.
சலபம்—விட்டிற்பறவை.
சலம்—நீர், 2. புண்ணீர், 3. சிறுநீர், 4. அசைவு, 5. வைராக்கியம், 6. பொய், 7. தணியாக்கோபம், 8 பன்றிமுள்.
சலம்பிடி—(வி) சீழ்கொள், 2 பிடிவாதஞ்செய்.
சலராசி—கடல்.
சலரோகம்—நீரழிவு.
சலலம்—
சலலி— } பன்றிமுள்.
சலலியம்—முட்பன்றி.
சலவகு—இலவம்பிசின்.
சலவர்—நெய்தனிலமாக்கள், 2. பகைவர்.
சலவாதி—தணியாக் கோபமுள்ளவன், 2. குரோதமுடையோன், 3. மரணசெய்தி சொல்வோன், 4. சிறுநீர் விடுதல்.
சலவாழைக்காய்—மீன்.
சலவை—வெளுப்பு, 2. சீதளம், 3. பிசக்கு, 4. எண்ணுறை, 5. விதையெடுக்கை.

சலனம்-அசைவு, 2. சஞ்சலம், 3. கலக்கம், 4. கால், 5. காற்று, 6. முடிவு.
சலன்-கால்.
சலாகு-கோல், 2. துப்பாக்கிச் சலாகை, 3. ஊசிக்காந்தம், 4. இரணவைத்திய சலாகை.
சலாகை-கோல், 2. துப்பாக்கிச் சலாகை, 3. எட்டி, 4. ஊசிக்காந்தம், 5. தெய்வவகன்மணி, 6. வலிச்சல்.
சலாக்கியம்-சிலாக்கியம், 2. மேன்மை.
சலாங்கு-பொய்யாப்புள்.
சலாஞ்செய்தல்-(தொ. பெ) வணங்கல்.
சலாத்தி-திரைச்சீலை.
சலாபத்து-தாராளம்.
சலாபம்-முத்துக்குளித்தல்.
சலி-(வி) சல்லடையினுற் சலி.
சலிகை-பரிபாலனம், 2. அதிகாரம்.
சலித்தல்-(தொ.பெ) மனஞ்சலித்தல், 2. இளைத்தோய்தல், 3. அசைவு கொள்ளுதல், 4. ஒலித்தல்.
சலிப்பு-சஞ்சலம், 2. மனச்சலனம், 3. அசைவு.
சலிலம்-நீர்.
சலினி-திப்பிலி.
சலுகை-செல்வாக்கு, 2. உரிமை.
சலுப்பு-சலதோஷம், 2. துண்டு, 3. துணிக்கிளை.
சலோபாதை-சலவாதை, (சிறுநீர் விடுதல்.)
சலோர்க்கம்- } குங்கிலியம்.
சலோர்ச்சம்- }
சல்லகி-குந்துருமரம், 2. இலவு, (ஓர்மரம்), 3. கறுவாப்பட்டை.
சல்லக்கடுப்பு- } உடற்கடுப்பு.
சள்ளைக்கடுப்பு- }
சல்லடம்-குறுங்காற்சட்டை.
சல்லடை- } தாணிய முதலியவற்றைச் சல்லுங் கருவி.
சல்லெடை- }
சல்லபம்-முட்பன்றி.
சல்லம்-பன்றிமுள்.
சல்லரி-பம்பைமேளம், 2. கைத்தாளம்.
சல்லரி-(வி) நறுக்கு.
சல்லா-ஓர்வகைக் கவணி.
சல்லாபம்-சம்பாஷணை, 2. கூடிப்பேசுகை.
சல்லாரி-அலசற்சீலை, 2. கூடாதவன், 3. ஓர் மரம், 4. கைத்தாளம்.
சல்லாலி-கோணங்கிவேஷம்.
சல்லி-உடைந்ததுண்டு, 2. சங்குமுதலியவற்றின் சிற்றோடு, 3. துட்டு, சல்லிக்காசு, 4. தொங்கல்கள், 5. பொய்.
சல்லியகரணி-வேல்தைத்தபுண் மாற்றுமருந்து.
சல்லியம்-சச்சரவு, 2. ஆயுதநுனி, 3. முள், 4. பாணம், 5. முட்பன்றி, 6. எலும்பு, 7. செஞ்சந்தனமரம், 8. மாயவித்தை, 9. ஓர் கருநூல்.
சல்லியர்-ஓர் சாதியார்.
சல்லியன்-ஓரரசன், 2. சுக்கிரன்.
சல்லு-(வி) சல்லடையாற்சலி, 2. நீர் தெளி.
சவக்களி-(வி) வாயரோசிகமாயிரு.
சவக்காரம் -- சவுக்காரம், (ஓர்வகைச்சரக்கு).
சவக்காலை-பிரேதம் புதைக்குமிடம்.
சவக்குச்சவக்கெனல் - (தொ. பெ) வளைந்துகொடுக்கை.
சவங்கல்-மழுங்கல்.
சவங்கு-(வி) சோர், 2. உடல்மெலி, 3. மனமெலி.
சவசவவெனல்-மிகுதிக்குறிப்பு.
சவடி-ஓராபரணம், 2. காறையெலும்பு.
சவடிப்பொட்டு-தாலிப்பொட்டு.
சவடு-வண்டல், 2. உவட்டுமண்.
சவட்டு (வி) அழி, 2. வளை, 3. மெல், 4. வாயைக்குதட்டு, 5. விழுங்கு, 6. மிதி.
சவண்டலை- } ஓர் மரம்.
சவண்டிலை- }
சவதம்-சபதம், 2. விலைக்குறைவு.
சவதரி-(வி) சம்பாதி.
சவதலை-பின்முந்தானை.
சவம்-பிரேதம், 2. பிசாசம், 3. சக்கிரம்.

சவரட்சணை—பரிபாலனம்.
சவரணை—எத்தனம், 2. சேர்த்தி.
சவரம்—சாமரம், 2. ஓர் பொற்காசு, 3. சிரைத்தல்.
சவரர்—வேடர்.
சவரி—கவரி, 2. குறட்டைப்பூடு.
சவர்—உப்பூறனிலம்.
சவர்—கடல் யாத்திரை.
சவர்க்களி—(வி) வாயரோசிகமாயிரு.
சவர்க்காரம்—ஓர் மருந்து.
சவலம்—பிரயோசனம்.
சவலை—மெலிவு, 2. பிள்ளை, 3. இளைமையுள்ளது.
சவலைப்புத்தி—பிள்ளைமை.
சவளக்காரர்—செம்படவர்.
சவளச்சி—சதுசாரம்.
சவளம்—குந்தாயுதம், 2. சங்கபாஷாணம், 3. ஓர் மீன், 4. நடுக்கம்.
சவளி—, சவுளி— } சீலை, 2. ஓரணிகலம்.
சவளு—, சவள்— } (வி) வளை, 2. துவள், 3. துவட்டப்படு.
சவளை—(வை. அ) வங்கமணல்.
சவள்தடி—தோணியோட்டுங்கோல்.
சவற்சலம்—(வை. அ) கல்லுப்பு.
சவனம்—வேகம்.
சவனிகை—, சவனிக்கை— } கட்டுதிரை, 2. இடுதிரை, 3. திரையின் பின்னிறகை, 4. இலைப்பாறுமண்டபம்.
சவாசு—வியப்பிடைச்சொல்.
சவாது—ஒரு வாசனைப் பண்டம், 2. பிரதி.
சவாப்—, ஜவாபு— } பிரதியுத்தரம்.
சவாரி—சாரிபோதல், 2. வாகனம்.
சவால்—ஓர் பாட்டு.
சவான்—, ஜவான்— } சவியன், 2. சேவகன்.
சவி—பிரகாசம், 2. அழகு, 3. சரமணிக்கோவை, 4. செவ்வை, 5. பலம்.
சவி—(வி) சபி.
சவிகம்—விஷ்ணுகரந்தைப்பூடு
சவிகற்பம்—ஐம்பேதம்.
சவிகி—, சவிகை— } சதுக்கம்.
சவிக்கை—ஆயத்துறை; "இரேகு".
சவிசங்கம்—, சவிசங்கவாதம்— } ஓர் வாதநோய்.
சவிஸ்தாரம்—விரிவு, 2. விரிவுரை, 3. முக்கியகாரியம்.
சவிதா—சூரியன்.
சவித்திரு—துவாதசாதித்தரிலொருவன்.
சவிர்சங்கி—சிறுபீரங்கி.
சவுகரியம்—சௌகரியம்.
சவுக்கம்—சதுரம், 2. தலைக்குட்டை.
சவுக்களித்தல்—(தொ. பெ)புளித்தல்.
சவுக்காரம் — சவக்காரம், (ஒருவகைச் சரக்கு.)
சவுக்கியம்—சௌக்கியம்.
சவுக்கு—கசை.
சவுக்கை—சதுரமான திண்ணை, 2. விலைநயம், 3. ஆயத்துறை.
சவுக்கைதார்—ஆயத்துறைத் தீர்வைக்காரன்.
சவுங்கு—(வி) சோர், 2. மனந்தளர்.
சவுசம்—சுசிகரம்.
சவுசயம்—முருக்கமரம்.
சவுசன்னியம்—சினேகபட்சம்.
சவுடால்—இடம்பம்.
சவுடு—சவடு.
சவுண்டம்—திப்பிலி.
சவுண்டிகர்—மதுவடிப்போர்.
சவுதம்—ஈனக்கிரயம், 2. கட்டுக்கிடை, 3. இளைப்பு.
சவுதரி—(வி) ஆதாயப்படுத்து, 2. சம்பாதி.
சவுத்திராந்திகம்—ஓர் நூல்.
சவுத்து—மாதிரி.
சவுந்தரம்—, சவுந்தரியம்— } அழகு.
சவுபாக்கியம்—வாழ்வு, 2. ஓர் சோதிடயோகம்.
சவுமம் — சிற்பநூரன் முப்பத்திரண்டிலொன்று.
சவுரம்—சிரைத்தல், 2. சூரியசம்பந்தமானது.

சவுரி—விஷ்ணு, 2. சனி, 3. முதியாள் கூந்தல்.
சவுரிக்கயிறு—தென்னைநார்க்கயிறு.
சவுரியம்—பலம், 2. வீரம்.
சவுளகம்— } மயிர் கழிக்கை.
சவுளம்— }
சவை—அம்பலம், 2. கூட்டம், 3. புலவர் சங்கம்.
சவைமகள்—மிதுனவிராசி.
சவ்வரிசி—ஓர் மரச்சோற்றிலரிசி.
சவ்வாசு—சவாசு.
சவ்வாது—சவாது.
சவ்வியம்—இடப்பக்கம்.
சவ்வீரம்—ஓர் மருந்து, 2. ஓர் தேசம்.
சவ்வு—குடற்சவ்வு, 2. கண்சவ்வு, 3. புண்ணசடு, 4. கொட்டைச்சவ்வு, 5. புண்சவ்வு, 6. சவ்வரிசி.
சழக்கு—குற்றம், 2. ஒலிக்குறிப்பு, 3. அறியாமை, 4. பொய்.
சழக்கு— } முதுமைத் தளர்ச்சி.
சழங்கு— }
சழி—(வி) கீழேயமர்ந்து பிரி, 2. தளர்.
சழுங்கு—(வி) நெகிழ், 2. மழுங்கு.
சளகந்தம்—வசம்பு.
சளக்குப்புளக்கெனல்—ஈரடிக்கொலிக் குறிப்பு.
சளசண்டி—சகசண்டி.
சளசள—(வி) சேருகு, 2. அலப்பு, 3. மழையடி, 4. கறிகுழை, 5. கோழையாய்ப்போ.
சளசளவெனல்— } ஒலிக்குறிப்பு, 2. நீர்பாயுமொலி.
சளசளேனல்— }
சளப்பு—(வி) பிதற்று.
சளம்—தொந்தரை, 2. மூர்க்கம்.
சளம்—அசத்து, 2. வஞ்சனை.
சளவட்டை—இளந்தது.
சளாரெனல்—ஒலிக்குறிப்பு.
சளி—மூக்குச்சளி, 2. கோழை, 3. சலதோஷம்.
சளி—(வி) சளிகொள், 2. பதனழி.
சளுகம்— } அட்டை.
சளூகம்— }
சளுக்கு—இடம்பம், 2. செருக்கு.
சளுக்குவேந்தர்—சாளுவவேந்தர்.

சள்ளட்டியெனல்—ஒலிக்குறிப்பு.
சள்ளல்—சேறு, 2. அபானவாயுபறிகை, 3. சிக்கல்.
சள்ளு— } தொந்தரவு.
சள்வளை— }
சள்ளு—(வி) இளகு, 2. அபானவாயு பறி, 3. சிக்கிக்கொள்.
சள்வளை—இடுப்பு, 2. ஓர் மீன்.
சறுகு—(வி) நழுவு.
சறுக்கு—(வி) வழுவு, 2. வழுக்கு, 3. நழுவு, 4. தத்து.
சறுக்கு—வழுக்குகை, 2. சறுக்குக்கட்டை, 3. நெம்புதடி, 4. போக்கு, 5. நழுவுகை.
சறுதாகம்—வேங்கைமரம்.
சறுவம்—சமஸ்தம்.
சற்—நல்ல.
சற்கரி—(வி) உபசரி.
சற்காரம்—உபசாரம்.
சற்சுகாதி—(வை. அ) பெருமருந்துக் கொடி.
சற்பனை—சதி.
சற்பாத்திரம்—ஒழுக்கமுடையோன்.
சற்று—அற்பம், 2. சிறிதுநேரம்.
சனகந்தம்—வசம்பு.
சனகம்— } (வை. அ) புளியாரைக்கீரை.
சனசித்திரம்— }
சனகன்—ஓர் முனிவன், 2. சீதையின் பிதா, 3. பிதா.
சனசமூகம்—சனக்கூட்டம்.
சனந்தன்—பிரமபுத்திரர் நால்வரிலொருவன்.
சனபதம்—சனம், 2. நாடு.
சனமாலி—இலவமரம்.
சனமேசயன் — குருகுலவரசரிலொருவன்.
சனம்—மக்கட்சாதி, 2. இனம், 3. மீன் முதலியவற்றின் கூட்டம்.
சனலோகம்—மேலோகத்தொன்று.
சனற்குமாரன்—பிரமபுத்திரர் நால்வரிலொருவன்.
சனனசக்கரம்—திருநந்தி தேவர்செய்த ஓர் நூல்.
சனனம்—பிறப்பு.

சனனி—தாய், 2. சனனமெடுத்தவன்.
சனுதன்—பிரமபுத்திரர் நால்வரி லொரு வன்.
சனுர்த்தனன்—மகாவிஷ்ணு.
சனி—ஓர் கிரகம், 2. சனிக்கிழமை, 3. சனிபோன்றவன்.
சனி—(வி) கருப்படு, 2 உதி.
சனிப்பு—பிறப்பு.
சனியன்—ஓர்வகைக் குற்றாயுதம், 2. ஓர் கிரகம்.
சனு— } பட்சம், 2. சரசன்.
சனுவு— }
சனு—பிறப்பு.
சன்—நன்மையைகாட்டுமோ ருபசருக் கம்.
சன்மம்—பிறப்பு, 2. சருமம்.
சன்மன்—கண்ணியக்குறி.
சன்மார்க்கம்—ஞானமார்க்கம்.
சன்மானம்—வெகுமானம்.
சன்மி—(வி) உதி, 2. பிற.
சன்மினி—காளியேவல் செய்பவள்.
சன்னசாலம்— } வெண்கடுகு.
சன்னசாலை— }
சன்னதம்—ஆவேசம், 2. தெய்வங்கூறல், 3. உத்தண்டம், 4. வீருப்பு
சன்னதி—சமீபம்.
சன்னது—சாதனம்.
சன்னத்தம்—யுத்தத்துக்கெத்தனம்.
சன்னராஷ்டகம்— } சிற்றரத்தைநச் செடி.
சன்னராட்டிரம்— }
சன்னலவங்கப்பட்டை—கருவாப்பட்டை.
சன்னல்—பலகணி.
சன்னல்பின்னல்—சிக்குபிக்கு.
சன்னாகம்—போர்க்கவசம்.
சன்னாசம்—சன்னியாசம்.
சன்னாசி—சன்னியாசி.
சன்னி—சீதநோய்.
சன்னிதானம் – திருமுன், 2. தேவ சன்னிதி.
சன்னிதி—சமீபம், 2. திருமுகம், 3. கோயில், 4. உயர்ந்தோன்.
சன்னிநாயகம்—கருஞ்சீரகம், 2. தும்பைப்பூண்டு.
சன்னியம்—(வை. அ) மரமஞ்சள்.
சன்னியாசம்—துறவு.
சன்னியாசி—துறவி.
சன்னிரோதம்—நடை.
சன்னை—சமிக்கை, 2. நேரியசுருமரம்

## சா

சா—ஓருயிர்மெய், 2. பேய், 3. மரணம்.
சா—(வி) இற, 2. கெடு, 3. காய்ந்துபோ.
சாகசம்—வீரம், 2. மெய்மை, 3. யானை
சாகதன்—வீரன்.
சாகமனம்—உடன்கட்டை யேறுதல்.
சாகம் – வெள்ளாடு, 2 வெள்ளாட்டுக் கடா, 3. தேனீ, 4. கீரை, 5. சிறுகீரை, 6. தேக்கமரம், 7. சாகதீவு, 8. சகவருடம், 9. இலைச்சாறு.
சாகரணம்—துயிலொழிகை, 2. விழிப்பு.
சாகரம்—சாகரர் தொட்டகடல், 2. பதினாயிரங்கோடி, 3. துயிலொழிகை.
சாகரி—ஓர் இராகம்.
சாகாடு—வண்டி, 2. உரோகிணி நட்சத்திரம்.
சாகாதுண்டம் – அகிலமரம், 2. ஓர் மூலிகை.
சாகாமிருகம்—அணில், 2. குரங்கு.
சாகாமூலி—சீந்திற்கொடி.
சாகி – மரப்பொது, 2. ரச்சமரம், 3. கிராய்.
சாகித்தியம்—புலமை.
சாகியம்—கூட்டம்.
சாகிரதை—சாக்கிரதை.
சாகினி – சிறுகீரை, 2. சேம்பு, (ஒருசெடி), 3. வெள்ளாட்டுக்கடா.
சாகீர்— } மானியம்.
ஜாகீர்— }
சாகுபடி—பயிர்செய்தல்.
சாகேதம்—அயோத்தி.
சாகை—மரக்கொம்பு, 2. இலை, 3. வேதசாகை, 4. வட்டில், 5. தங்குமிடம், 6. இல்லம்.
சாக்கடை—சாலகம், 2. சேறு.
சாக்காடு—சாவு.
சாக்கி—சாட்சி.
சாக்கிபாக்கி—கொசறு.

சாக்கியநாயனூர்—ஏறிபத்தர்.
சாக்கியம்—புத்தமதம், 2. கூட்டம்.
சாக்கியர்—பௌத்தர், 2. ஆதிபுத்தன்.
சாக்கிரம்—நனவு, 2. ஓரவத்தை.
சாக்கு—போக்கு, 2. தானியப்பை, 3. சட்டைச்சாக்கு, 4. பொன்.
சாக்குருவி—ஆந்தை.
சாக்கை—புரோகிதன், 2. கருமத்தலைவன்.
சாக்தேயம் — சத்திபூசை செய்யுமோர் வகுப்பு.
சாங்கம் — பூரணங்கம், 2. குறைவின்மை, 3. சாயல், 4. கிரமம், 5. சங்கபாஷாணம்.
சாங்கரன்—உதவியாளன், 2. சூதிற்பங்காளி.
சாங்கரிசம்— } கலக்கம்.
சாங்கரியம்— }
சாங்கியம்—கபிலர்மதம்.
சாங்கியாயநீயம்—உபநிடதத்தொன்று.
சாங்கு—ஓராயுதம்.
சாங்குகௌரி—(வை. அ) புளிநறளை.
சாங்குசித்தன் — ஆகமம்படிக்கு மூவகையாரிலொருவன்.
சாங்கேதிகம்—கட்டுப்பாடு.
சாங்கோபாங்கம் — அங்க உபாங்கங்களோடு கூடியது.
சாசற்புடம்—பஞ்சதாளத்திலொன்று.
சாசனம்—அரசணை, 2. தானபத்திரிகை, 3. அதிகாரபத்திரிகை, 4. அதிகாரச் சின்னம், 5. சமயச்சின்னம், 6. ஆணை, 7. இறையிறுக்காதவூர், 8. தண்டனை, 9. வலையர்சேரி, 10. வெண்கடுகு.
சாசி—(வை. அ) திராய்ப்பூண்டு.
சாசிபம்—தவளை.
சாசுவதம்—அழியாமை, 2. நிச்சயம், 3. அசையாநிலை, 4. மோட்சம்.
சாச்சா—சவரிலோத்திரம்.
சாடா— } முழுவதும்.
ஜாடா— }
சாடி—தாழி, 2. கும்பவிராசி, 3. ஆண்மயிர், 4. சீலை, 5. புறங்கூறல், 6. திப்பிலி.

சாடி — (வி) தண்டி, 2. நொறுக்கு, 3. திட்டு, 4. இருபுடையுமசை.
சாடிலி—தசைதின்போன்.
சாடு—சாதுரியம், 2. முகமன், 3. புலவர்கூட்டம், 4. பண்டி, 5. மணிமுற்றுத சோளம், 6. சாட்டுக்கூடை.
சாடு—(வி) ஓர்புறஞ்சாய், 2. விலகு, 3. இருபுடையுமசை, 4. கிளைசாய்ந்தாடு, 5. அசை, 6. மோதியடி, 7. ஒடி, 8. கடிந்துகொள், 9. கொல், 10. கைகாலெறி.
சாடுமலி— } விளக்குக்காரியம் பார்க்கிறவன், 2. பெருக்கி.
ஜாட்மாலி— }
சாடை—சமிக்கை, 2. கோள், 3. சாய்வு, 4. ஒப்பு, 5. தாட்சணியம், 6. குறிப்பு, 7. அற்பம்.
சாட்குலி—தசைதின்போன்.
சாட்சாது— } முகாமுகமாய், 2. பிரத்தியட்சமாய், 3. சொயம்பான.
சாட்சாத்— }
சாட்சி — கண்டவன், 2. சொல்லுஞ்சாட்சி, 3. உதாரணம், 4. சீவசாட்சி, 5. ஈச்சுரசாட்சி, 6. சைதன்னியம்.
சாட்டாங்கம்— } தெய்வவணக்கம், 2. பணிதல்.
சாஷ்டாங்கம்— }
சாட்டி—கசை, 2. பம்பரமாட்டுங் கயிறு, 3. விதையாநிலம்.
சாட்டியம்—வஞ்சகம், 2. வருத்தம், 3. நோய்.
சாட்டு—போக்கு.
சாட்டு—(வி) ஒப்பி, 2. குற்றஞ்சாற்று, 3. போக்குச்சொல், 4. அடி.
சாட்டுவம்—நாபி.
சாட்டுவலம்—பசும்புற்றரை.
சாட்டை—கசை, 2. திரிச்சுச்சாட்டை, 3. மரச்சாட்டை.
சாட்டைக்கூடை—ஒருபெரியகூடை.
சாணகம்—சாணி.
சாணத்தனம்—வம்பு.
சாணம்—சாணகம், 2. சாணைக்கல்.
சாணன்—நிபுணன்.
சாணுகமுக்கன்—ஓர் பாம்பு.
சாணுகம்—சாணி.

சாணுக்கி—எருமைநாக்கிப்பூடு, 2. மயிர் மாணிக்கப்பூண்டு.
சாணுக்கு—ஓர் பாத்திரம், 2. சாணுக் குக்கறி.
சாணுங்கி—சாணுகம்.
சாணுன்—ஓர் சாதியான்.
சாணி — ஆப்பிமுதலியன, 2. குதிரைச் சாணி.
சாவண—சாணைக்கல், 2. சாணைச்சீலை.
சாவணக்கூறை — பெண்ணை விவாகம் பண்ணிக்கொள்ளும்படி சாணையிற் பெண்பிள்ளைக்கிட்ட புடவை.
சாண்—ஓரளவு.
சாதகசுணசலம்—கந்தகம்.
சாதகச்சீர்த்தி— } இரத்த பாஷாணம்.
சாதகவர்னத்தி— }
சாதகப்புட்பம்—கடனுரை.
சாதகப்புள்—வானம்பாடி.
சாதகம்—பிறப்பு, 2. சாதகப் பத்திரிகை, 3. பிறவிக்குணம், 4. அப்பியாசம், 5. துணைக்காரணம், 6. காரிய வாய்ப்பு, 7. பிரமாணம், 8. பூதகணம், 9. வானம்பாடி.
சாதகராகத்தி — (வை. அ) கோழித் தலைக்காந்தம்.
சாதகும்பம்—பொன்.
சாதம்—சோறு, 2. உண்மை, 3. பிறப்பு, 4. பூதம்.
சாதரூபம் — நால்வகைப் பொன்னி லொன்று.
சாதல்வாரத்—சில்லறைச் செலவுகள்.
சாதவண்டு — (வை. அ) கறிப்புடல் வண்டு.
சாதவாகனன்—ஐயனார்.
சாதவேதா—நெருப்பு, 2. கொடுவேலி, (ஓர் செடி).
சாதனம்—உறுதிப்பத்திரிகை, 2. அடையாளம், 3 உறுதி, 4. எத்தனம், 5. ஏது, 6. தகுதி, 7. துணைக்காரணம், 8. இடம், 9. ஊர்.
சாதனை—விடாதமுயற்சி, நடித்துக்காட்டுகை, 3. சலஞ்சாதிக்கை, 4. பொய்.
சாதா—பருப்படியானவேலை.
சாதாக்கியம்—சதாசிவ தத்துவத்திலிருக்குமொரு புவனம்.
சாதாரண—நாற்பத்துநாலாவதாண்டு.
சாதாரணம்—பொது, 2. கீழ்மை, 3. எளிது.
சாதாரி—ஓர்பண், 2. முல்லை நிலத்திராகம்.
சாதாவேலி—தண்ணீர்விட்டான்.
சாதாழை—ஓர் கடற்பூண்டு, 2. பலவீனன்.
சாதாளநிம்பம்—எருக்கமிலை.
சாதான்மம்—ஓர் தருமநூல்.
சாதி—பிரம்பு, 2. தேக்கமரம், 3. சிறுசண்பகமரம், 4 கள், 5. சீந்திற்செடி, 6. ஆடாதோடைச்செடி
சாதி—குலம், 2. மரபு, 3. இனம், 4. சாதிக்காய் மரம், 5. சாதியிலுயர்ந்தது, 6. தாளப்பிரமாணம் பத்தினொன்று, 7. மரப்பொது.
சாதி—(வி) உறுதியாகச்சொல், 2. சலஞ்சாதி, 3 வெல், 4. நிறைவேற்று, 5. தேய், 6 அப்பியாசி, 7. அருள், 8. அனுமி
சாதிகம்— } சாதியின் தன்மை.
சாதீகம்— }
சாதிக்காய்—ஒரு வாசனைச்சரக்கு.
சாதிசம்—(வை. அ) நறும்பிசின்.
சாதிபத்திரி—வசுவாசி.
சாதிப்பதங்கம்—சாதிலிங்கம்.
சாதிரம்—விஷ்ணுகரந்தை, (ஓர் பூடு.)
சாதிரிசியம்— } உபமானம், 2. பிரத்தியட்சம், 3. திருஷ்டாந்தம்.
சாதிருசியம்— }
சாதிரேசம்—(வை. அ) குங்குமப்பூ.
சாதிலிங்கம்—ஒரு சரக்கு.
சாதினி — கம்பளிச்செடி, 2. பீர்க்கஞ்செடி.
சாதீயம்—சாதிக்கடுத்தது.
சாது—(வை. அ) தயிர்.
சாது—சாந்தம், 2. சற்குணம், 3. நன்மை, 4. சற்குணன், 5. அருகன்.
சாதுரங்கம்—சதுரங்கசேனை.
சாதுரியம் — சதுர்ப்பாடு, 2. சாமர்த்தியம், 3. கல்வித்திறம்.

சாதுருசியம்—ஒப்புமை.
சாதுர்ப்பாகம்—நாலிலொருபங்கு.
சாதேவம்—குழிநாவல்மரம், 2. சிறுநாவற்செடி.
சாதேவன் — பஞ்சபாண்டவரி லொருவனான சகாதேவன்.
சாத்தவர்—குதிரைவீரர்.
சாத்தன் — அரியரபுத்திரன், 2. அருகன், 3. வயிரவன், 4 தண்டிப்போன், 5. அறிவிப்போன்.
சாத்தாதவன்—சாத்தானி.
சாத்தாவாரி—நீர்மீட்டான்.
சாத்தானி— } ஓர் சாதிப்பிரஷ்டன்.
சாத்தானியன்— }
சாஸ்தி— } அதிகரிப்பு.
ஜாஸ்தி— }
சாத்திகம் — முக்குணத்திலொன்று, 2. சிற்பநூலிலொன்று.
சாத்தியம் — சாதிக்கத்தக்கது, 2. குணமாக்கத்தக்கது, 3. அநுகூலம், 4. அனுமேயம், 5. இருபத்தேழு யோகத்திலொன்று.
சாத்தியவதேயர்—வியாசன்.
சாத்திரம்— } கலைநூல், 2. சோதிடம்,
சாஸ்திரம்— } 3. ஆருடம், 4. வேதாகம முதலியன, 5. விதிப்பிரமாணம்.
சாத்திரவேதி—சகஸ்திரவேதி.
சாத்திரவேரி—தண்ணீர்விட்டான்.
சாத்திரீகம்—சாஸ்திரசம்பந்தமானது.
சாத்திரை—கிராமதேவி திருவிழா.
சாத்தீகம்—சாத்துவிகம்.
சாத்து—(வி) சந்தன முதலிய அப்பு, 2. ஆடைமுதலிய அணி, 3. கதவு முதலிய மூடி, 4. ஒன்றின்மேற் சார்த்து, 5. அடி.
சாத்துப்படி—மாலை முதலியன சாத்தி அலங்கரிதல்.
சாத்துவிகம் — முக்குணத்தொன்று; அஃது; அருள், ஐம்பொறியடக்கல், ஞானம், தவம், பொறை, மேன்மை, மோனம், வாய்மையென்னு மெண்வகைப்படும்.
சாத்தேயம்—ஓர் சமயவகுப்பு
சாத்மீகம்—சாந்தகுணம்.
சாஸ்த்ரீகம்— } சாஸ்திர சம்பந்தமானது.
சாஸ்த்ரீயம்— }
சாநித்தியம்—சமுகம்.
சாந்தகம்—சாந்தம்.
சாந்தபனம்—ஓர் தபவிரதம்.
சாந்தம் — அமைவு, 2. சாதுத்தன்மை, 3. பொறுமை, 4. நவரசத்தொன்று, 5. சந்தனம், 6. சாணி, 7. குளிர்ச்சி.
சாந்தரூபம்—யோகநிஷ்டை.
சாந்தவாரி—தண்ணீர்விட்டான்.
சாந்தன்—சாந்தமுடையோன், 2. அருகன், 3. புத்தன்.
சாந்தாற்றி—ஆலவட்டம், 2. விசிறி, 3. பீலிக்குஞ்சம்.
சாந்தி—தணிவு, 2. கழிப்பு, 3. பரிகாரம், 4. சாந்தம்.
சாந்தியாதீதம்— } பஞ்சகலையி லொன்று.
சாந்தியாதீதை— }
சாந்திரம்—நிறைவு, 2. நெருக்கம், 3. சந்திரசம்பந்தமானது, 4. சந்திரகாந்தம்.
சாந்திராயணம்—ஓர் திங்களோர்விரதம்.
சாந்து — சுண்ணச்சாந்து, 2. கலவைச்சாந்து, 3. சந்தனமரம், 4. பூந்தாது, 5. கந்தப்பொடி, 6. பொடி, 7. மலம்.
சாந்தை—கங்கை, 2. பூமி, 3. சாந்தமானவள்.
சாந்தோக்கியம் — உபநிடதங்களிலொன்று.
சாபத்திரி—சாதிபத்திரி.
சாபம்—சபிப்பு, 2. வில், 3. தனுவிராசி, 4. குட்டி.
சாபலம்— } அநித்தியம்.
சாபலாச்சிரயம்— }
சாபலன்—ஆட்டுவாணிகன்.
சாபல்லியம்—அனுகூலம்.
சாபாலம்—உபநிடதத்தொன்று.
சாபிக்க—(வி) சபிக்க.
சாபிதா— } அட்டவணை.
ஜாப்தா— }
சாப்பா—முத்திரை.
சாப்பாடு—உணவு.
சாப்பாய்—முழுவதும்.

சாப்பிட—(வி) உட்கொள்ள, 2. உண்ண.
சாப்பு—துப்பாக்கிசாப்பு.
சாப்புதாளம்—ஓர் தாளம்.
சாப்பை — புற்பாய், 2. திராணியற்றவன்.
சாமக்கிரி— } சாமான், 2. பலபண்டம்.
சாமக்கிரியை— }
சாமத்தியம்—சாமர்த்தியம்.
சாமந்த—அடுத்த.
சாமந்தம்—ஓரிராகம்.
சாமந்தர் — அமைச்சர், 2. அரசர்தோழர், 3. படைத்தலைவர்.
சாமந்தி—ஒரு பூமரம்.
சாமம் — ஏழரை நாழிகைகொண்ட காலம், 2. இடைச்சாமம், 3. பஞ்சம், 4. சாமவேதம், 5. ஒருபாயம், 6. பச்சை, 7. கருமை, 8. இரா, 9. அறுகம்புல், 10. பொன்.
சாமரம்—(வை. அ) சிவதைக்கொடி.
சாமரம்— } கவரி; இஃது அட்டமங்கலத்தொன்று.
சாமரை— }
சாமர்த்தியம்—வல்லமை, 2. பலம், 3. ஏற்றதிறம், 4. பக்குவம்.
சாமளம்—பச்சை.
சாமளாதேவி— } காளி, 2. பார்வதி.
சாமளை— }
சாமன்—புதன், 2. மன்மதன்றம்பி.
சாமாசி—மத்தியஸ்தன், 2. தூதன்.
சாமாதி—தூதன்.
சாமாத்தியம்— } கெட்டித்தனம்.
சாமார்த்தியம்— }
சாமானியம்—பொது, 2. முழுவதும், 3. சாதாரணம்.
சாமான் — பண்டங்கள், 2. கறிச்சாமான், 3. பிரயாணச்சாமான்.
சாமி—ஓர் தானியம்.
சாமி — கடவுள், 2. அருகன், 3. முருகன், 4. மூத்தோன், 5. குரு, 6. எசமானன், 7. தலைவி, 8. பொன்.
சாமிபோகம்—மேல்வாரம்.
சாமீகரம்—பொன்.
சாமீபம்— } சமீபம், 2. கடவுளின் சமீபத்தில் வாழ்தல்.
சாமீப்பியம்— }
சாமீன்— } பிணை.
ஜாமீன்— }
சாமுண்டி—துர்க்கை, 2. அவுரிப் பூண்டு.
சாமுதம்—கடுக்காய், 2. கோரைப்புல்.
சாமுத்திரிகம்—அங்கவிலக்கணநூல்.
சாமை—ஓர் தானியம்.
சாமோபாயம் — நாள்குபாயத்தினென்று; அஃது: இணக்குமுபாயம்.
சாம்ப—(வி) கூம்ப, 2. ஒடுங்க, 3. சாய, 4. அடிக்க, 5. இழுக்க.
சாம்பர்—சாம்பல்.
சாம்பல் — அடலைநீறு, 2. பழம்பூ, 3. நாவல்மரம்.
சாம்பவம்—ஒருபுராணம்.
சாம்பவன்-சிவன், 2. சம்புவை வழிபடுவோன், 3. ஸ்ரீ இராமபிரான் படைத்தலைவரி லொருவன்.
சாம்பவி—பார்வதி, 2. நாவல்மரம்.
சாம்பவியார் விந்து—கௌரிபாஷாணம்.
சாம்பான்—பறையன்.
சாம்பிராச்சியம் — அரசாட்சி, 2. செல்வம்.
சாம்பிராணி—தூபவர்க்கத்தொன்று.
சாம்பு—பறை, 2. சீலை.
சாம்புநதம்—மேருமலைக்குத் தெற்கிலுள்ள நாவல்ரச ஆறு.
சாம்புவந்தன்— } ஸ்ரீ இராமர் படைத்தலைவரிலொருவன்.
சாம்புவான்— }
சாம்பூநதம் — பொன், 2. நால்வகைப் பொன்னினொன்று.
சாயகம் -அம்பு, 2. வாள்.
சாயங்காலம்— } அந்திப்பொழுது.
சாயந்திரம்— }
சாயம்—சாயங்காலம், 2. நிறம், 3. சாயவேர்.
சாயரட்சை—அந்தி.
சாயரி—ஓர் பண்.
சாயர்—தீர்வை.
சாயல்—ஒப்பு, 2. மாதிரி, 3. அழகு, 4. நிறம், 5. மஞ்சள், 6. மனிதர் படுக்கை, 7. மேன்மை, 8. நுண்மை, 9. நிழல், 10. சாய்வு.
சாயனம்—கள், 2. கிரகபுடம்.

சாயாகவளம்—ஓரிசை.
சாயாக்கிரகம்—இராகுகேதுக்கள்.
சாயாதனயன்—சனி.
சாயாதேவி—சூரியன் மனைவியரி லொருத்தி.
சாயானதம்—ஓர்தி.
சாயி—மை.
சாயி—படுத்திருப்பவன்.
சாயித்தியம்—கீதம்பாடுந்திறம், 2. பொருத்தம்.
சாயுச்சியம் — ஐக்கியம், 2. நான்காம் பதவி.
சாயை—நிழல், 2. பிரதிவிம்பம், 3. நாழிகையறியுஞ் சாயை, 4. சாயாக்கிரகம், 5. நிறம், 6. சூரியன்றேவி.
சாய்— } ஓர்வகைக்கோரைப்புல்.
சாய்க்கோரை— }
சாய்தல்—(தொ. பெ) சரிதல், 2. அசைதல், 3. மெலிதல், 4. அழிதல், 5. திரும்புதல், 6. தோற்றோடல்.
சாய்த்தல்—(தொ. பெ) அசைத்தல், 2. சரித்தல், 3. திருப்புதல், 4. தோற்கச்செய்தல்.
சாய்ப்பு — தாழ்வு, 2. மலைச்சரிவு, 3. இறப்பு, 4. தாழ்வாரம், 5. இரிதல், 6. ஓட்டிக்கொண்டுபோதல், 7. வாரபட்சம், 8. இழப்பு வெற்றிலை, 9. முகச்சாய்ப்பு.
சாய்மரம்—சிவதைக்கொடி.
சாய்மானம்—சார்வு.
சார—(வி) சாய, 2. பற்றிக்கொள்ள, 3. அடைய, 4. அணுக, 5. கிட்ட, 6. ஓர்பாற்சார, 7. அனுசாரமாக, 8. நடுநிலைகோண, 9. அடுக்க, 10. பொருந்த.
சாரங்கதரன்—ஓரரசன்.
சாரங்கபாணி—மகாவிஷ்ணு.
சாரங்கம் — மான், 2. சாதகப்புள், 3. யானை, 4. மேகம், 5. மயில், 6. திருமால்வில், 7. ஓரிராகம், 8. வண்டு, 9. வானம்பாடி, 10. குறிஞ்சாக்கொடி, 11. சிறுகுறிஞ்சாக்கொடி.
சாரங்கி—ஓர்யாழ்.
சாரசம்—இனியவோசை, 2. வெண்ணாரை, 3. தாமரை, 4. குருகு, 5. அவுபலபாஷாணம்.
சாரசியம்—இனிமை.
சாரணர் — வேவுகாரர், 2. சமணரிலிருத்தி பெற்றோர்.
சாரணை— }
சாரணத்தி— } ஓர் பூடு.
சாரடை— }
சாரதம்—பூதம்.
சாரதம்—இனியவோசை, 2. ஓர்வகைக்கவி.
சாரதா— } சரச்சுவதி.
சாரதாம்பாள்— }
சாரதி—தேர்ப்பாகன், 2. புலவன்.
சாரத்தியம்—சாரதித்தொழில்.
சாரப்பருப்பு—காட்டுமாவிரை.
சாரமேயன்—நாய்.
சாரம்—இரசம், 2. இனிமை, 3. கருத்து, 4. பயன், 5. மரவைரம், 6. நவச்சாரம், 7. வண்ணான்காரம், 8. காரச்சாம்பல், 9. சாரமரம், 10. நடை, 11. கிரகசாரம், 12. மேடு, 13. நிலாமுகிப்புள், 14. இலுப்பைமரம், 15. கொட்டை முந்திரிகைமரம், 16. பாலடை.
சாரர்—வேவுகாரர், 2. சோரநாயகர்.
சாரலி—ஓர் நெல்.
சாரல்—மலைச்சாரல், 2. மருதயாழ்த்திறம், 3. தூறல், 4. சாய்தல்.
சாராயம்—வெறிகொள்ளு மோர்பானம்.
சாரி— } திரும்பல்.
ஜாரி— }
சாரி—நடை, 2. வாகனமீது செல்கை, 3. உலாவல், 4. வட்டமாயோடல், 5. சுழல்காற்று, 6. சூதாடுகருவி, 7. அஞ்சனபாஷாணம்.
சாரிகை—வட்டமாயோடல், 2. சுழல்காற்று, 3. சூதாடுகருவி, 4. நாகணவாய்ப்புள், 5. சங்கம், 6. கவசம்.
சாரிசம்—கறியுப்பு.
சாரிசாதன்—கஸ்தூரிமிருகம்.
சாரிதம்—இனியகுரல்.
சாரித்திரம்—ஒழுக்கம், 2. சரித்திரம்.

சாரிபம்—நன்னாரிக்கொடி.
சாரியம்—எட்டிமரம்.
சாரியல்—இந்துப்பு.
சாரியை – சார்ந்து வருமிடைச்சொல்.
சாரீரம் – சரீர சம்பந்தமானது, 2. இனியகுரல், 3. உபநிடதத்தொன்று.
சாரு—கிளி.
சாருகன்—கொலையாளி.
சாருசம்—கல்லுப்பு.
சாருதல்—(தொ. பெ) சாய்தல்.
சாருவபூமம் – சார்வபூமம், (யாவற்றினும் பெரிது.)
சாருவாகம்—உலகாயதமதத்தினோர் பேதம்.
சாரூபம்— } கடவுளுருப்போன்று வாழ்தல்.
சாரூப்பியம்— }
சாரூரகம்— } (வை. அ) கல்லுப்பு.
சாரூரசம்— }
சாரை—நீளமானவரை, 2. ஓர் பாம்பு.
சாரைவாலன் – நீண்டவாலெருது, 2. ஓர்வகைப் புகையிலை.
சாரோசி—நவட்சாரம்.
சார்—அணைக்கரை, 2. திண்ணை, 3. தாழ்வாரம், 4. வகை, 5. பக்கம், 6. பாகம், 7. இடம், 8. எழுனுருபு, 9. அழகு.
சார்ங்கம்—வில், 2. மகாவிஷ்ணுவின் வில்.
சார்ச்சி—சார்வு, 2. அடைகை.
சார்த்தூலம்—புலி.
சார்ந்தார்— } சுற்றத்தார், 2. சிநேகர்.
சார்ந்தோர்— }
சார்பு—இடம், 2. உதவி, 3. பற்று, 4. அடைக்கலம், 5. தயவு, 6. வாரபட்சம், 7. கிட்டுகை, 8. மனச்சாய்வு, 9. கூட்டுறவு, 10. உரிமை, 11. இணைப்பு, 12. அணுகுகை, 13. சேர்கை, 14. பொருத்தம்.
சார்வகாலம்— } எப்பொழுதும்.
சார்வதா— }
சார்வபூமம்— } வடதிசையானை.
சார்வபௌமம்— }
சார்வரி—ஓர் வருடம்.
சார்வாகம் – உலோகாயதம்; இஃது அறுவகைப் புறச்சமயத்தினொன்று.
சார்வாரம் – கச்சின் கடைக்கயிறு, 2. முன்றானை.
சால—மிகு, 2. மிகவும்.
சால—(வி) மிக, 2. அமைய, 3. நிறைய.
சாலகடங்கடர்—இராக்கதர்.
சாலகம்—வலை, 2. பலகணி, 3. சிலந்திப்பூச்சிவலை, 4. பறவைக்கூடு, 5. இளம்பூவரும்பு, 6. சலதாரை, 7. அதலலோகத்தொன்று, 8. உபாயம்.
சாலகிரி – அழுக்ககற்றுமிடம், (கக்குசு.)
சாலக்— } குசால், 2. சாலம்.
ஜாலக்— }
சாலக்கிராமம் – ஓரூர், 2. ஓர்வகைச் சிலை.
சாலம்—மாயவித்தை, 2. வஞ்சகம், 3. கூட்டம், 4. விலங்கின் கூட்டம், 5. வலை, 6. பலகணி, 7. இளம்பூவரும்பு, 8. இறுமாப்பு, 9. அரண், 10. ஆச்சாமரம், 11. மரப்பொது, 12. சத்திசாலம், 13. சித்தர்நூல், 14. செடி, 15. கடம்பமரம்.
சாலர்—தொங்கல்கள்.
சாலர்—நெய்தனிலமாக்கள்.
சாலவம் – ஐம்பத்தாறு தேசங்களிலொன்று.
சாலாங்கம்—(வை. அ) ஓர் பாஷாணம்.
சாலி – நென்மணி, 2. அருந்ததி, 3. நெற்பயிர், 4. கள், 5. கவசம்.
சாலிகை—கவசம்.
சாலியன்—ஓர் சாதியான்.
சாலிவாகனன் – ஓர் அரசன்.
சாலினி – கள்வாணிச்சி, 2. பீர்க்கு, (ஒரு கொடி), 3. தேவராட்டி.
சாலுகம்— } சாதிக்காய்.
சாலூகம்— }
சாலூரம்—தவளை, 2. மேன்மை.
சாலேகம் – பலகணி, 2. இளம்பூவரும்பு, 3. சந்தனம், 4. சிந்தூரம்.
சாலேசரம்—சத்துவாரி.
சாலேயம்—நெல்விளை நிலம்.

சாலை—கூடம், 2. மரச்சாலை, 3. சபை கூடுமிடம், 4. அரமனை, 5. தவச்சாலை, 6. அறத்தின்சாலை, 7. குதிரைச் சாலை.
சாலோகம்— } ஓர் பதவி, அஃது
சாலோக்கியம்— } கடவுளதுலகத் திருத்தல்.
சால் — நீர் நிரப்புஞ்சால், 2. நீரிறைக் குஞ்சால், 3. உழவுசால், 4. விதைச் சால், 5. மிகுதி.
சால்பு—மேன்மை, 2. பண்பு, 3. ஊக்கம், 4. மாட்சிமை, 5. கல்வி.
சால்வை—உத்தரீயம்.
சாவகர்—சமணர், 2. ஓர்பாஷைக்காரர்.
சாவகன்—சனி.
சாவகன்குறிஞ்சி — குறிஞ்சித் திறந்தி னொன்று.
சாவகாசம்—வசதி, 2. விரைவின்மை.
சாவகாரி—தனவியாபாரி.
சாவகாரியம்—பகுத்தறிவு.
சாவசம்—பதினெண்பாடையினொன்று.
சாவடி—வழிப்போக்கர் தங்குமிடம், 2. கிராமச்சாவடி, 3. கச்சேரி.
சாவட்டை—சாவட்டையீர், 2. சாவி, 3. மெலிந்தோன், 4. வெற்றிலைச் சாவட்டை, 5. பட்டாம்பூச்சி.
சாவணம்—கம்மியர் கருவியிலொன்று, 2. நாசிரோமம் பிடுங்குங்கருவி.
சாவதானம் — எச்சரிக்கை, 2. தவறுமை.
சாவல்—சேவல்.
சாவளி—ஓர்வகைப் பாட்டு.
சாவற்பண்வண—கோழிக்கொண்டைச் செடி.
சாவாசம்—வங்கணம், 2. சமயம், 3. சேர்க்கை.
சாவி—திறவுகோல்.
சாவி—பயிர்ச்சாவி.
சாவித்திரி—பிரமன் மனைவிகளிலொருத்தி.
சாவு—மரணம், 2. பேய்.
சாவுன்—(வை. அ) சவக்காரம்.
சாவெழுத்து—நச்செழுத்து.
சாவேரி—ஓரிராகம்.
சாவ்கார்—தன வியாபாரி.
சாழல்—மகளிர் விளையாட்டு, 2. ஓர் பாடல், 3. கரடி.
சாழை—குடிசை, 2. கைகொட்டல்.
சாழையகத்தி—ஓரகத்திமரம்.
சாளக்கிராமம்—ஒருவகைச்சிலை.
சாளம்—குங்கிலியம், 2. மணல்.
சாளரம்—பலகணி.
சாளா—ஓர் மீன்.
சாளிகம்—வண்டு.
சாளிகை—வண்டு, 2. பணப்பை, 3. சாடி.
சாளியா— } ஓர் மருந்துவிரை.
சாளியாவிரை— }
சாளுவம்—ஓர் தேசம்.
சாளுவர்—சாளுவதேசத்தார், 2. சளுக்குவேந்தர்.
சாளேசரம்—சாலேசரம், (கண்மங்கல்.)
சாவள—ஓர் மீன், 2. குடிசை.
சாற — (வி) பீளைசாற, 2. எண்ணெய் சாற, 3. வழுக்க, 4. சரிய.
சாறடை— }
சாறணத்தி— } ஓர் பூடு.
சாறவண— }
சாறு — இலைமுதலியவற்றின் சாறு, 2. மிளகுநீர், 3. மரத்தில் வடியுஞ்சாறு, 4. கள், 5. திருவிழா, 6. குலை, 7. கொத்து.
சாற்சமந்தம்—மலையாத்திமரம்.
சாற்ற—(வி) சொல்ல, 2. பறைசாற்ற.
சாற்றமுது—மிளகுநீரசம்.
சானகம்—வில்.
சானகி—சீதை, 2. ஓரரக்கன், 3. மூங்கில் மரம், 4. பொன்னாங்காணிக் கீரை, 5. கொடிக்கொத்தான் கொடி.
சானம்—பெருங்காயம், 2. சாதிலிங்கம்.
சானவி— } கங்கை நதி.
சான்னவி— }
சானி—வேசி.
சானித்தியம்— } சமீபம்.
சான்னித்தியம்— }
சானினி—சிறுகீரை, 2. சேம்பு, (ஒரு செடி).

சானு—மலைச்சாரல், 2. முழந்தாள்.
சானுக்கிரகம்—தேவமொழி.
சான்—சானகம்.
சான்மலி—இலவமரம், 2. ஓர் தீவு.
சான்றவர்— } அறிஞர்.
சான்றோர்— }
சான்றாண்மை—ஞானம், 2. ஊக்கம்.
சான்றார்—சாணார், 2. சான்றோர்.
சான்று—சாட்சி, 2. உதாரணம்.
சான்றோன்—சூரியன், 2. கற்றோன்.

## சி

சி—சகர வல்லொற்றின்மேல் இகரவுயி ரேறப்பிறந்த ஓருயிர்மெய்க்குற்றெழுத்து.
சிகஸ்தி—சேதமானது.
சிகண்டம் — மயிற்றோகை, 2. மயிற் கொண்டை.
சிகண்டி—மயில், 2. பேடு, 3. ஓர்பண், 4. ஆமணக்கஞ்செடி, 5. ஓரிருடி, 6. துருபதன்மகன்.
சிகண்டிசன்—வியாழன்.
சிகநாதம்—(வை. அ) அப்பிரகம்.
சிகரப்பாடி—கோஷ்டம், (ஒரு பூண்டு).
சிகரம்—மலையுச்சி, 2. தலை, 3. கோபுர சிகரம், 4. உச்சி, 5. மலை, 6. உயர்ச்சி, 7. வீடு, 8. திரை, 9. வட்டில், 10. காக்கை, 11. சுக்கு.
சிகரி—கோபுரம், 2. மலை, 3. கருநாரை, 4. எலி, 5. புல்லுருவி, (ஓர் பூடு).
சிகரிநிம்பம்—மலைவேம்பு, (ஓர் மரம்.)
சிகரியந்தம்—புல்லுருவி, (ஓர் பூடு.)
சிகல—(வி) குறைய, 2. கெட.
சிகழிகை — மயிர்முடி, 2. வாசிகை, 3. சித்திரத்தொங்கல், 4. மாலை.
சிகா—முத்திரை.
சிகா—சிகை.
சிகாமணி—முடியிலே தரிக்குமணி, 2. சிரேஷ்டன்.
சிகாரி—வேட்டை.
சிகாவலம்—ஓர் பாசி.
சிகாவளம்—மயில்.
சிகி—மயில், 2. நெருப்பு, 3. கேது.
சிகிச்சை—நிவர்த்தி, 2. பரிகாரம்.
சிகிடிமா — (வை. அ) கொட்டை முந்திரிகை மரம்.
சிகில்— } ஆயுதங்களைத் துலக்குகை.
சிகில்லி— }
சிகுரம்—மயிர்ப்பொது.
சிகுவை—நாக்கு, 2. கண்ணினிற்கு நரம்பு, அது: தசநாடியி னொன்று.
சிகை—குடுமி, 2. தழற்சிகை, 3. மயிற்சூடு, 4. உண்டிச்சிகை.
சிகைதாடு— } தலைமயிர் கட்டுங் கயிறு, 2. பின்னைத் தலையணியிலொன்று.
சிகைதாடுகுச்சு— }
சிக்க — (வி) சிக்குப்பட, 2. மாட்டிக் கொள்ளப்பட, 3. அகப்பட, 4. மெலிய.
சிக்கடி—அவரைக்கொடி, 2. சிக்கான வேலை.
சிக்கம்—குடுமி, 2. உறி, 3. வண்டு, 4. மெலிவு, 5. சிறைச்சாலை, 6. சீப்பு, 7. வலைச்சிக்கம்.
சிக்கர்—கள்.
சிக்கனம்—இவறல்.
சிக்கி—நாணம்.
சிக்கு—நூல் முதலியவற்றின் சிக்கு, 2. சிக்கானகாரியம், 3. மாட்டிக்கொள்ளுகை, 4. கண்ணி, 5. தடை, 6. எண்ணெய்ச்சிக்கு, 7. சிக்குநாற்றம், 8. மாசு.
சிக்குரு—நல்லமுருங்கைமரம்.
சிக்குவை—நாக்கு.
சிக்கென—உறுதியாக, 2. உரமாக.
சிக்கெனவு—உறுதி, 2. கையிறுக்கம்.
சிங்க — (வி) குறைய, 2. இளைக்க, 3. கெட.
சிங்கநாதம்—சிங்கத்தொனி, 2. வெற்றியாளர்செய்யுந் தொனி, 3. ஓர் வாச்சியம்.
சிங்கநோக்கு—இலக்கணச் சூத்திரநிலை.
சிங்கம்—சிங்கவிராசி, 2. உயர்ந்தோன், 3. ஓர் மிருகம், 4. விளையாட்டிலோரளவு, 5. சரகாண்டபாஷாணம்.
சிங்கல்—(தொ. பெ) குறைதல், 2. கெடல்.

சிங்கவல்லி—தூதுளை, (ஒரு கொடி.)
சிங்கவேறு—ஆண்சிங்கம், 2. வீரன்.
சிங்களம் — ஓர் தேசம், 2. சிங்களபாஷை, 3. சிங்களக்கூத்து.
சிங்கன்—குறவன்.
சிங்கன்வாழை—ஒருவித வாழை.
சிங்காசனம்—சிங்காதனம்.
சிங்காடி— } சுண்டுவில்.
சிங்காணி— }
சிங்காரம்—சிறப்பு, 2. நவரசத்திலொன்று, 3. அலங்காரவருணனை.
சிங்காரிக்க — (வி) அலங்கரிக்க, 2. அலங்கரித்துரைக்க.
சிங்கி—நஞ்சு, 2. ஓர்வகைலோகநஞ்சு, 3. ஓர் மீன், 4. கடுக்காய், 5. மிருதாரசிங்கி, 6. குறத்தி.
சிங்கிகம்—(வை. அ) கறிமுள்ளிச்செடி.
சிங்கிட்டம்— } ஓர் மரம், 2. பாலைக்கொடி.
சிங்கிரம்— }
சிங்கிநாதம்—நூணுதிக்கம்.
சிங்கியடித்தல்—ஒரு விளையாட்டு.
சிங்கிலி—குன்றிக்கொடி, 2. இண்டஞ்செடி.
சிங்கிவேரம்— } சுக்கு.
சிங்குவம்— }
சிங்கினி—வில், 2. வின்னாண்.
சிங்குவை— } நா.
சிங்ஙுவை— }
சிசம்—(வை. அ) தமரத்தைமரம்.
சிசிரம்—(வை. அ) சந்தனமரம்.
சிசினம்—ஆண்குறி.
சிசு—குழந்தை, 2. கருப்பசிசு, 3. விலங்கின்குட்டி.
சிசுகத்தி— } குழந்தையைக் கொல்லல்.
சிசுவதை— }
சிசுவத்தி— }
சிசுபாலன்—இடையெழுவள்ளலிலொருவன்.
சிசுமாரம்—முதலை.
சிசுரம்—(வை. அ) கிலுகிலுப்பைச்செடி.
சிசுருட்சை— } கருமமுடிக்குமபேட்சை.
சிசுருக்ஷை— }
சிச்சிலி—சிரற்புள்.
சிச்சிலுப்பான்— } ஓர் வசூரி.
சிச்சிலுப்பை— }
சிச்சீ—இகழ்ச்சிக் குறிப்பு.
சிஞ்சம்—புளிமாமரம், 2. புளியமரம்.
சிஞ்சாரி—புளியமரம்.
சிஞ்சிதம்—ஆபரணவொலி.
சிஞ்சினி—வின்னாண்.
சிஞ்சுகம்—கேகயப்புள்.
சிஞ்சுமாரம்—முதலை.
சிடம்—சாதிக்காய்.
சிட்சகன்—மாணுக்கன், 2. உபாத்தியாயன்.
சிட்சாகரன்—உபாத்தியாயன், 2. வியாசன்.
சிட்சிக்க—(வி) தண்டிக்க, 2. படிப்பிக்க.
சிட்சிப்பு—தண்டனை, 2. படிப்பிக்கை.
சிட்சை—தண்டனை, 2. படிப்பிக்கை, 3. வேதாங்கத்திலொன்று.
சிட்டபரிபாலனம்—சற்சனரைக் காத்தல்.
சிட்டம்—கிட்டம், 2. சன்மார்க்கம்.
சிட்டர்— } பெரியோர், 2. நல்லோர்.
சிஷ்டர்— }
சிட்டா—குறிப்பேடு.
சிட்டி—ஓரளவுக் கருவி, 2. மண்சிட்டி, 3. சூதாடுகவறுருட்டுஞ்செப்பு.
சிட்டி— } உண்டாக்கப்பட்டன.
சிஷ்டி— }
சிட்டிக்க—(வி) உண்டாக்க.
சிட்டிப்பு—படைப்பு.
சிட்லிங்கமரம்— } ஓர் மரம்.
சிட்டிலிங்கி— }
சிட்டு—அற்பம், 2. ஓர் குருவி, 3. குடுமி.
சிட்டை—ஆடைக்குறி.
சிணுட்ட—(வி) பிடிக்க.
சிணுறு—அடர்ந்த மரக்கிளை.
சிணி—கெட்ட நாற்றம்.
சிணுக்க—(வி) சீண்ட, 2. சிக்குப்படுத்த, 3. பிள்ளை திருட.
சிணுக்கம்—அழுகை.
சிணுக்கு—சிக்கு.

சிணுக்குச்சிணுக்கென — தாமதக் குறிப்பு.
சிணுங்க—(வி) மூக்காலேயழ, 2. மழைதூற.
சிணுங்கி-தொட்டால்வாடி,(ஒருசெடி.)
சிண்—கூட்டாளி, 2. கையாள், 3. சூதாட்டுத்தாயம்.
சிண்டி—மயிர்.
சிண்டு—குடுமி, 2. ஓரளவு.
சிதக—(வி) எழுதினதைக் கிறுக்க.
சிதகம்—தூக்கணாங்குருவி.
சிதகன்—சுக்கிரன்.
சிதடன்—அறிவில்லான், 2. குருடன்.
சிதடி—சிள்வண்டு, 2. அறிவிலி, 3. குருடி.
சிதடு — பேதைமை, 2. குருட்டுத்தன்மை.
சிதப்பூரம் — பொன்னுங்காணிக்கீரை.
சிதம்—செயிக்கப்பட்டது, 2. வெண்மை, 3. விண்மீன், 4. புளியாரை, (ஓர் கீரை), 5. விஷ்ணுகரந்தை, (ஓர் பூடு), 6. ஞானம்.
சிதம்ப—(வி) பதனழிய, 2. சிலிர்க்க, 3. கைகால் சிலிர்க்க, 4. நீர்ச்சாவியாக.
சிதம்பரம்—ஓர் சிவஸ்தலம்.
சிதம்பல்—(தொ. பெ) பதனழிதல்.
சிதம்பு—ஓர் காலணி, 2. பதனழிவு.
சிதர—(வி) சிந்த.
சிதரம்—உறி.
சிதர்—மழைத்தூறல், 2. மழைத்துளி, 3. பூந்தாது, 4. பாரகம், 5. கந்தைத்துணி, 6. உறி, 7. வண்டு.
சிதர்க்க—(வி) சிந்தச்செய்ய.
சிதலம்—பதனழிவு.
சிதலை—கறையான், 2. சீலைத்துணி, 3. நோய்.
சிதல்—கறையான்.
சிதவல் — தேரிடக்கியம், 2. மரவுரி, 3. சீலைத்துணி, 4. புரையோடுபுண்.
சிதள்—கறையான், 2. மீன்செதிள், 3. புண்ணசறு, 4. செதுக்குதுண்டு.
சிதற—(வி) இறைக்க, 2. பொருளழிக்க, 3. சிந்த, 4. கலைய, 5. புத்திசிதற, 6. திரிந்தலைய, 7. பயன்படாதுபோக.
சிதறடி—(வி) சேதப்படுத்து, 2. தோற்கடி.
சிதறி—மழை.
சிதனம்—(வை. அ) கோடகசாலை, (ஒரு பூண்டு.)
சிதன்—சுக்கிரன், 2. அச்சமுள்ளோன்.
சிதாகாசம்—ஞானகாசம்.
சிதாக்கினி—ஈமாக்கினி.
சிதாத்துமா—கடவுள்.
சிதாபாசம்— } ஆத்துமா.
சிதாபாசன்— }
சிதாம்புசம்— } வெண்டாமரை.
சிதாம்போசம்— }
சிதாரம்—தேரிடக்கியம்.
சிதார்—மரவுரி, 2. சீலைத்துணி.
சிதானந்தம்—ஞானனந்தம்.
சிதிரம்—கோடாலி, 2. தீ, 3. வாள்.
சிதிலம்—பதனழிவு.
சிதுமலர்—தண்ணீர்விட்டான்.
சிதுரம்—(வை. அ) நேர்வாளக் கொட்டை.
சிதேகி—கடுமரம்.
சிதை—கீழ்மை.
சிதைய—(வி) கெட, 2. வெட்டுண்ண, 3. சாக, 4. மருவிச்சிதைய, 5. வழக்கமாற, 6. இரிய, 7. சீர்கெட, 8. சந்தஞ் சிதைய, 9. எழுத்துமுதலிய குறைய.
சிதையர்—கீழ்மக்கள்.
சிதைவு — கெடுதி, 2. பதனழிவு, 3. குன்றுதல், 4. இரிவு, 5. பெயர் முதலியகெடுதல், 6. தளைமுதலிய வழுவுதல், 7. சீர்கேடு.
சித்தகம்—தலைச்சீரா.
சித்தக்கல்—குறிஞ்சிலைக்கல்.
சித்தசமுன்னதி — சத்த பாதகத்தொன்று.
சித்தசலனம்—மனக் குழப்பம்.
சித்தசன்—மன்மதன்.
சித்தஞ்செய்தல் — (தொ. பெ) தயார் செய்தல்.
சித்தப்பிரமை—மன மயக்கம்.
சித்தமன் — (வை. அ) ஆமணக்குஞ் செடி.

சித்தம் — (வை. அ) முருங்கைமரம்.
சித்தம்—உட்கரண நான்கினொன்று, 2. உள்ளக்கருத்து, 3. காருண்ணிய மனம், 4. சித்தாந்தம், 5. உண்மை, 6. யோக மிருபத்தேழிலொன்று, 7. ஆகம மிருபத்தெட்டிலொன்று.
சித்தராரூடம்—விஷவாகடத்தொன்று.
சித்தர்—தேவகணத்தொரு திறத்தோர், 2. அஷ்டசித்தியடைந்தோர், 3. ஞானசித்தியடைந்தோர்.
சித்தலயம்—மன ஒடுக்கம்.
சித்தல்—சீலை.
சித்தன்—இலவமரம்.
சித்தன்—சிவன், 2. வைரவன், 3. அருகன், 4. மாயவித்தை செய்வோன், 5. தந்திரி, 6. உண்மையுள்ளவன்.
சித்தாந்தசிரோமணி — வடமொழியி லுள்ள ஒருசகோளசாத்திரம்.
சித்தாந்தம்—நிச்சயமானது, 2. மதம், 3. கணிதசித்தாந்தம், 4. சிவாகமங்கள், 5. வைஷ்ணவாகமங்கள்.
சித்தாந்தி—சித்தாந்தசமயி, 2. கணிதன்.
சித்தாமோகம்—
சித்தாமோசம்— } பேரோசனை.
சித்தார்த்தம்—வெண்கடுகு, 2. தத்துவ ஞானம்.
சித்தார்த்தர்—கௌதமபுத்தர்.
சித்தார்த்தி—ஓர் வருஷம்.
சித்தி — கைகூடுதல், 2. தபோபலம், 3. மோட்சம், 4. ஓர் யோகம், 5. திடம், 6. எட்டிமரம், 7. சவக்காரம்.
சித்திக்கல்—சித்தக்கல்.
சித்தித்தல்—(தொ. பெ) கைகூடுதல்.
சித்திமூலம்—நிலப்பனங்கிழங்கு.
சித்தியார்—ஓர் சைவசித்தாந்தநூல்.
சித்திரகடம்—காடு.
சித்திரகண்டன்—
சித்திரகிரீவன்— } புறா.
சித்திரகம்—கொடிவேலி, (ஒரு செடி).
சித்திரகவி—ஒரு கவி.
சித்திரகன்—இயவனன்.
சித்திரகாயம்—புலி.
சித்திரகுத்தனுர்—நமன் கணக்கன்.
சித்திரகூடம்—ஒரு மலை.
சித்திரகெண்டி—ஓரிருஷி.
சித்திரகெண்டிசன்—வியாழன்.
சித்திரக்காலி—ஓர் நெல்.
சித்திரக்குள்ளன்—மிகக் குறியன்.
சித்திரசேனன் — நரககணக்கரிலொருவன்.
சித்திரதாரவணை — நவதாரணையிலொன்று.
சித்திரதாளம்—ஓர் தாளம்.
சித்திரபானு—சூரியன், 2. தீ, 3. ஓர் வருடம்.
சித்திரபுத்திரனுர்—சித்திரகுத்தனுர்.
சித்திரப்பாலடை—
சித்திரப்பாலாடை— } ஓர்பூடு.
சித்திரப்பாலாவி — அம்மான்பச்சரிசி, (ஒரு பூண்டு).
சித்திரமூலம் — கொடிவேலிச்செடி; அது: பஞ்சமூலத் தொன்று.
சித்திரம்—சித்தரித்தவடிவம், 2. சிறப்பு, 3. பேரழகு, 4. அலங்காரம், 5. நாகரிகமானபேச்சு, 6. மெய்போற் பொய்கூறல், 7. ஓர் கவி, 8. அதிசயம், 9. ஆமணக்கஞ்செடி, 10. நூதனம், 11. ஓர் சிற்பநூல்.
சித்திரரேகை — ஓரிரேகை, 2. குபேரன் மனைவி.
சித்திரர்—சித்திரகாரர், 2. தச்சர், 3. சிற்பர்.
சித்திரவதை-கண்டதுண்டமாய்வெட்டிக் கொல்லல்.
சித்திரவேளாகொல்லி — கொல்லித் திறத்தினொன்று.
சித்திராக்கினை—சித்திரவதை.
சித்திராங்கதன்—விஞ்சையர்வேந்தன், 2. குருகுலவரசரிலொருவன், 3. நரகிலோர்கணக்கன்.
சித்திராங்கி — நரேந்திரன்பாரி, 2. தந்திரகாரி.
சித்திராபூரவணை—
சித்திராபௌரவணை— } சித்திரையிற் பௌர்ணமி, அன்று சித்திரகுத்தர் பிறந்த நாள்.
சித்திரான்னம்—பலவகைச் சாதம்.

சித்திரிக்க—(வி) சித்திரமெழுத, 2. சித்திரமாய்ப்பேச, 3. வஞ்சகமாய்ப்பேச.
சித்திரிணி—சித்தினி.
சித்திரை—சித்திரைநாள், 2. ஓர் மாதம், 3. சித்திரப்பாலாவி, (ஒரு பூண்டு.)
சித்திரோடாவி—சித்திரகன்.
சித்திலிகை—எழுத்துச் சீலை.
சித்தில்—அறிவு.
சித்தினி—நால்வகைப் பெண்ணிலொரு த்தி.
சித்து—அறிவுப்பொருள், 2. மாயவித்தை, 3. யாகம், 4. அரூபம்.
சித்துடு—கிலுகிலுப்பைச்செடி.
சித்துருபம்—(வை. அ) நேர்வாளக்கொட்டை, 2. அறிவுரு.
சித்தை—எண்ணெய்த் துருத்தி.
சிநேகம்—அன்பு.
சிநேகிதம்—நட்பு.
சிந்தகம்—புளியமரம், 2. தூக்கணங்குருவி.
சிந்தம்—புளியமரம்.
சிந்தவம்—இந்துப்பு.
சிந்தனுபோகம்—மானதப் புணர்ச்சி.
சிந்தனை—நினைவு, 2. கருத்து, 3. கவலை, 4. தியானம், 5. தேவசிந்தனை, 6. ஆராய்வு, 7. விருப்பம்.
சிந்தன் — குள்ளன், 2. தூக்கணங்குருவி.
சிந்தாகுலம்—மனக் கவலை.
சிந்தாக்கட்டிகை—, சிந்தாக்கு— } கழுத்தாபரணத்தொன்று.
சிந்தாக்கு—ஓர் விளையாட்டு.
சிந்தாத்திரி—, சிந்தாத்திரை— } நல்ல பயணம், 2. சுகவாழ்வு.
சிந்தாமணி — தேவமணியிலொன்று, 2. ஓர் நூல், 3. ஓர் மாத்திரை, 4. ஓரூர்.
சிந்திக்க — (வி) நினைக்க, 2. கருத, 3. தியானிக்க, 4. ஆராய, 5. எண்ண, 6. கவலைப்பட.
சிந்திப்பு—நினைப்பு.
சிந்தியம்—சிந்திப்பது, 2. சிவாகமத்திலொன்று.
சிந்தியல்வெண்பா—மூன்றடியாய் நேரிசை வெண்பாப்போலவும் இன்னிசை வெண்பாப்போலவும் வருவது.
சிந்து—கடல், 2. நீர், 3. ஆறு, 4. சிந்துதேசம், 5. பதினெண்பாடையிலொன்று, 6. சிந்துநதி, 7. யானை, 8. முச்சீரடி, 9. சிந்துகவி, 10. குள்ளன், 11. வைரீயம், 12. இருவாட்சி, (ஒரு மரம்).
சிந்துதல்—(தொ. பெ) ஒழுகல், 2. சிதறல், 3. கொல்லுதல்.
சிந்துரம்—சிவப்பு, 2. செவ்வியம், 3. புளியமரம், 4. யானை.
சிந்துரிக்க—(வி) சிந்தூரமாக்க.
சிந்துவாரம் — வெண்ணொச்சி, (ஒரு செடி), 2. கடல், 3. வில்.
சிந்தூரம்—சிவப்பு, 2. செந்திலகம், 3. ஓர் மருந்து, 4. செங்குடை, 5. புளியமரம், 6. வெட்சிச்செடி, 7. சேங்கொட்டை, 8. யானை.
சிந்தை — எண்ணம், 2. கருத்து, 3. மனம், 4. குறிப்பு, 5. கவலை, 6. துன்பம்.
சிந்தைகூரியன் — புதன், 2. கூர்மையான புத்தியுடையவன்.
சிபாரிசு—யோக்கியதாபத்திரம்.
சிபி—சிபிச்சக்கரவர்த்தி.
சிப்பந்தி—வேலையாட்களையமர்த்துதல்.
சிப்பம் — சீலைமூட்டை, 2. புகையிலைச் சுமை, 3. சின்னது.
சிப்பி—இப்பி, 2. கிளிஞ்சில்.
சிப்பிமுத்து—சிப்பியில் விளையுமுத்து.
சிப்பியர்—பாணரிலோர் வகுப்பு, 2. கம்மியர்.
சிப்பியன்—பாணன்.
சிமட்டா—, சிமிட்டா—, சிம்ட்டா— } மயிர்பிடுங்குங்கருவி.
சிமட்டி—பேய்க்கொம்மட்டிக்கொடி
சிமந்தூரி—சிறுபுள்ளடி, (ஒரு பூடு).
சிமயம்—மலையுச்சி, 2. மலை.
சிமாளம்—, சிம்மாளம்— } மகிழ்ச்சி.

சிமாளிக்க—(வி) சந்தோஷிக்க, 2. சரிக்கட்ட.
சிமி—குடுமி.
சிமிக்கி— } பெண்காதணியிலொன்று.
ஜிமிக்கி— }
சிமிட்ட—(வி) கண்சிமிட்ட, 2. கண்ணிமைக்க, 3. வஞ்சிக்க.
சிமிட்டு—கண்சைகை.
சிமிண்டு—தடி.
சிமிண்டுதல்—(தொ. பெ) கிள்ளுதல்.
சிமிலம்—மலை.
சிமிலி—குடுமி, 2. உறி, 3. சிள்வண்டு, 4. பூனைச்செடி.
சிமிழ்—செப்பு.
சிமிழ்க்க—(வி) கட்ட, 2. பிடிக்க.
சிமிளித்தல்—(தொ. பெ) சிமிட்டுதல்.
சிமிள்—சிமிழ்.
சிமுக்கிடுதல் — அசைதல், 2. சிற்றொலிக்குறிப்பு.
சிமுட்டி—கீழ்காய்நெல்லி, (ஒரு பூடு.)
சிமை—குடுமி.
சிம்ப—(வி) ஒலிக்க, 2. துள்ள.
சிம்பதை— } (வை. அ) சிறுபுள்ளடி, (ஒரு பூடு).
சிம்பத்தை— }
சிம்பல்—(தொ. பெ) ஒலித்தல்.
சிம்பிளிக்க — (வி) கண்ணிற்பொறிபறக்க.
சிம்பு — சிராய், 2. இரும்புத்துகள், 3. நார், 4. மூங்கிற்சிம்பு, 5. இளம்வளார்.
சிம்புரி—சும்மாடு.
சிம்புளி—கம்பளி, 2. செவ்வாடை.
சிம்புள்—எண்காற்புள்.
சிம்பை—அவரைக்கொடி.
சிம்மதம்—பாம்பு.
சிம்மம்—சிங்கம்.
சிம்மாசனம்—சிங்காசனம்.
சிம்மு—எல்லை.
சியச்சினி—உத்தாமணி.
சியநாயகம் — (வை. அ) துத்தபாஷாணம்.
சியிறுதம்—கடுக்காய்.

சிரகம்—தலைச்சீரா, 2. மழைத்துளி, 3. கரகம்.
சிரக்க—(வி) அழிக்க.
சிரக்கம்பம்—தலையசைப்பு.
சிரக்கொழு—(வை. அ) குழலாதொண்டைக்கொடி, 2. வசம்பு.
சிரங்காடு—அடர்ந்தகாடு.
சிரங்காய்—சிரங்கை.
சிரங்கு—ஓர் புண், 2. சொறி.
சிரங்கை—கைகொண்ட அளவு.
சிரசன்—(வை. அ) சீர்பந்தபாஷாணம்.
சிரசு—தலை, 2. தலைமை.
சிரச்சேதம்—தலையை வாங்குதல்.
சிரஞ்சீவி—தீர்க்காயுளுடையோன்.
சிரட்டை—கொட்டாங்கச்சி.
சிரஸ்ததார்— }
சிரஸ்தா— } பிரதானி.
சிரஸ்தாதார்— }
சிரத்த—(வி) ஒலிக்க, 2. பேசியிரைய.
சிரத்தகாளகம்— } மருக்காரை, (ஓர் செடி).
சிரத்தகாழகம்— }
சிரத்தை—அன்பு, 2. பத்தி.
சிரநதி—கங்கை.
சிரபங்கம்—சிரச்சேதம்.
சிரமம்—சிலம்பம், 2. வருத்தம்.
சிரமன்—அடிமை, 2. ஈனன்.
சிரமை—வருத்தம்.
சிரம்—தலை, 2. உயர்ச்சி, 3. மேன்மை, 4. நெடுங்காலம், 5. கூலங்கநீறு.
சிரம்பம் — (வை. அ) சாலாங்கபாஷாணம்.
சிரல்—சிச்சிலிக்குருவி, 2. முடிவிடம்.
சிரவணம் — காது, 2. கேள்வி, 3. திருவோணம், 4. உபநிடத முப்பத்திரண்டிலொன்று.
சிரவம்—காது, 2. கவுதாரிப்புள்.
சிரறல்—(தொ. பெ) சிதறுதல்.
சிரறுதல்—(தொ. பெ) சிதறுதல்.
சிரற்றல்—(தொ. பெ) ஒலித்தல்.
சிராங்கம்—தலை.
சிராத்தம்— } திவசம்.
சிரார்த்தம்— }
சிராந்தி—இளைப்பு.

சிராயி— } நெடுங்காற்சட்டை.
ஷராய்— }
சிராய் — மரச்சிராய், 2. பனஞ்சிராய், 3. பருவின்முளை.
சிராய்ப்பீனசம்—ஒரு நோய்.
சிராவணம் — கம்மியர் கருவியிலொன்று.
சிராவணம்—ஆவணிமாதம், 2. ஓர் கல்.
சிராவணி — யாகமிருபத்தொன்றினொன்று.
சிரிக்க — (வி) நகைக்க, 2. பரிகாசம் பண்ண.
சிரிப்பாணி—கொள்ளாச் சிரிப்பு, 2. பகிடி, 3. பழிப்பு.
சிரிப்பு—நகைப்பு, 2. பழிப்பு, 3. பகிடி.
சிரீ—இலக்குமி, 2. மேன்மைக்குறிப்பு.
சிரீடம் — (வை. அ) குன்றிக்கொடி, 2. வாகைமரம்.
சிரீமுகம்—ஓர் வருடம்.
சிருகாலன்—நரி.
சிருக்கு—இலைக்கரண்டி.
சிருங்கம்—விலங்கின் கொம்பு.
சிருங்கலம்—சங்கிலி, 2. யானைச்சங்கிலி.
சிருங்கலை—கால்விலங்கு.
சிருங்காடகம் — நாற்றெருவுங் கூடுமிடம்.
சிருங்காரம்—அன்பு, 2. நவரசத்திலொன்று.
சிருங்கி — ஒரு மருந்து, சுக்குமாம், 2. பொன்.
சிருட்டம் — சிற்பநூல் முப்பத்திரண்டினொன்று.
சிருட்டி—படைப்பு.
சிருட்டிகர்த்தா—பிரமன்.
சிருட்டிக்க — (வி) படைக்க, 2. உருவாக்க.
சிருட்டிப்பு — படைப்பு, 2. சிருட்டிப்பொருள்.
சிருட்டியாளன் — (வை. அ) சவக்காரம்.
சிரேஷ்டபுத்திரன்—மூத்தமகன்.
சிரேட்டம்— } முக்கியம், 2. மூத்த
சிரேஷ்டம்— } தன்மை, 3. சிறந்தது.
சிரேஷ்டர்—சிறந்தோர், 2. மூத்தோர், 3. மேற்றிராணியார்.
சிரேணி — வரிசை, 2. இடையர்வீதி, 3. ஒழுங்கு.
சிரேணியம்—இடையர்வீதி.
சிரேயசு—விர்த்தி.
சிரேவணம்—(வை. அ) காட்டாமணக்குச்செடி.
சிரை—நரம்பு, 2. குரங்கு.
சிரைக்க—(வி) மயிர்கழிக்க.
சிரைப்பு—மயிர்கழிப்பு.
சிரோசம்— } மயிர்.
சிரோருகம்— }
சிரோட்டம் — கடுக்காய், 2. நெல்லிமரம், 3. தான்றிமரம்.
சிரோத்திரம்—காது.
சிரோந்தம்—மயிர்ச்செறிவு.
சிரோபத்தியம்—கடுக்காய்.
சிரோமணி — தலைமணி, 2. மேன்மையானது.
சிரோரத்தினம்—தலைமணி, 2. நாகரத்தினம், 3. மேன்மையானவன்.
சிரோவேஷ்டனம்—தலைச்சாத்து.
சிரௌதம் — வேதத்தோடு சம்பந்தப்பட்டது.
சில—கொஞ்சம்.
சிலகம்—சட்டுவம்.
சிலக்குணம்—திமிங்கிலம்.
சிலங்கம்—விளாம்பட்டை.
சிலதன்—தோழன், 2. ஊழியன்.
சிலதியர்—பெண்டோழிகள்.
சிலத்திற்கடுகு—திமிங்கிலம்.
சிலத்தின்பிரிதிவி—(வை. அ) கர்ப்பூரசிலாசத்து.
சிலந்தி—சிலந்திப்பூச்சி, 2. கொப்புளம், 3. கிரந்திப்புண், 4. ஓர் மரம்.
சிலந்திநாயகம்—கிரந்திநாயகப்பூடு.
சிலந்தியரிசி—பூங்கோரைப் புல்.
சிலப்பதிகாரம் — பஞ்சவிலக்கியத்தொன்று.
சிலமம்—ஆயுதபரிட்சை, 2. பயமுறுத்துகை.
சிலமன்—அசுமாற்றம்.
சிலமான்கல்—ஓர் கல்.

சிலமி—வீம்பன்.
சிலமிக்க — (வி) சண்டைபோட, 2. பயமுறுத்த, 3. வீரங்கூற.
சிலம்—(வை. அ) இந்துப்பு.
சிலம்ப—(வி) ஒலிக்க.
சிலம்பக்கூடம்—சிலம்பம் பழகுமிடம்.
சிலம்பம் — படைக்கலம் பயில்கை, 2. தந்திரோபாயம், 3. பயப்படுத்துகை.
சிலம்பன் — குமரன், 2. குறிஞ்சிநிலத் தலைவன்.
சிலம்பி—சிலந்திப்பூச்சி, 2. ஓர் பரத்தை.
சிலம்பு—ஒலி, 2. காற்சிலம்பு, 3. மலை, 4. பூசாரிகள் கைச்சிலம்பு.
சிலம்புரி—ஓர்வகைச் சீலை.
சிலர்—சிலபெயர்.
சிலவங்கம்—(வை. அ) மீனெலும்பு.
சிலவர்—வேடர்.
சிலா—கல்.
சிலாக்கியம் — முக்கியம், 2. புகழ்ச்சி, 3. உரிமை.
சிலாசத்து — } ஓர் மருந்து, 2. மண்
சிலாசித்து — } ணைலம்.
சிலாசாஸநம் — } கல்வெட்டு.
சிலாசாதனம் — }
சிலாஞ்சனம்—நீலாஞ்சனம்.
சிலாதரன்—நந்திதேவர் பிதா.
சிலாதலம் — பாறை, 2. கல்பரப்பிய விடம்.
சிலாநாகம்—சூடாலைக்கல்.
சிலாந்தி—சீந்திற்கொடி.
சிலாபம்—முத்துக்குளிப்பு.
சிலாபேசி—செப்பு நெருஞ்சிற் பூண்டு.
சிலாப்ப — (வி) கழப்ப, 2. வீணைகப் போக்க.
சிலாமணி — எங்குஞ் செல்லுமணி.
சிலாமணி—கர்ப்பூர சிலாசத்து.
சிலாமதம்—கன்மதம்.
சிலாமனு—மனோசிலை.
சிலாமேனி—கண்டகிச்சிலை.
சிலாம்பு — மீன்செதிள், 2. மரப்பொருக்கு.
சிலாரு— } குழப்பம், 2. பதிவீடு.
சிலார்— }
சிலாவட்டம்—சாணைக்கல்.
சிலாவருஷம்—கன்மழை.
சிலாவுதல்—(தொ. பெ) சுலாவுதல்.
சிலியாவண—முடக்கொற்றான் பூண்டு.
சிலிர்க்க — (வி) மயிர்பொடிக்க, 2. உடம்புமுதலிய சிலிர்க்க, 3. தளிர்க்க.
சிலீமுகம் — அம்பு, 2. வண்டு, 3. முலைக்கண், 4. யுத்தம்.
சிலீரிடுதல்— } (தொ. பெ) குளிருதல்.
சிலீரெனல்— }
சிலுகு — சண்டை, 2. தடை, 3. துன்பம்.
சிலுகுசிலுகெண—விரைவுக்குறிப்பு.
சிலுக்க—(வி) கொஞ்சமாய்ச் சொரிக்க.
சிலுக்க—(வி) சொறுகரைய, 2. கனிய, 3. காய்த்துக் குலுங்க.
சிலுக்கு — இருப்புவளையம், 2. வாள் முதலியவற்றின் பல், 3. சிலும்பு, 4. வெட்டிய சிறு துண்டு, 5. சிலுக்கு வெட்டு, 6. சிக்கு.
சிலுசிலுத்தல்— } ஒலிக்குறிப்பு, 2. ப
சிலுசிலெனல்- } டபடென்று பேசுதல், 3. சுறுசுறெனல், 4. தூறல், 5. சிலுசிலெனக் குளிர்வருதல்.
சிலுப்ப—(வி) மயிர்நெறிக்கச்செய்ய, 2. தலையசைக்க, 3. கலக்க, 4. தயிர்கடைய.
சிலுப்பு—நடுக்கம்.
சிலும்ப — (வி) கிளம்ப, 2. கலங்க, 3. ஒலிக்க.
சிலும்பல்—மயிர்சிலும்புதல், 2. சீலைமுதலியவற்றின் சிலும்பல், 3. தலைமயிர்ச் சிலும்பல், 4. பீற்றல்.
சிலும்பு—மரச்செதும்பு, 2. களிம்பு.
சிலுவட்டை—சிறியது.
சிலுவல் — கந்தை, 2. அவலட்சணம், 3. சுசியிலி.
சிலுவை—கழுமரம்.
சிலேடிக்க—(வி) ஈரடியாய்ப்பேச.
சிலேடை— } உபயார்த்த சொற்றொடர்.
சிலேஷை— }
சிலேட்டர்—செட்டிகள்.
சிலேட்டுமம்— } முப்பிணியினொன்று.
சிலேஷ்மம்— }
சிலேபி—ஓர்வகைப் பணிகாரம்.

சிலேபியர்—செட்டிகள்.
சிலேற்பனம்—கோழை.
சிவை — ஒலி, 2. வில், 3. தனுராசி, 4. மூலநாள், 5. ஓர் மரம்.
சிலை—கல், 2. மலை, 3. மூலவிக்கிரகம், 4. மனோசிலை, 5. சூதபாஷாணம்.
சிலைக்க—(வி) ஒலிக்க.
சிலைநிறக்கல்—மாமிசச்சிலை.
சிலையாவி— } கல்நார்.
சிலைவிந்து— }
சிலோச்சயம்—மலை.
சில் — ஆரவாரம், 2. வட்டமானது, 3. கண்ணாடிச்சில், 4. சிலைச்சில்.
சில்—சில.
சில்லத்து—சிறுசட்டை.
சில்லம்—தேற்றாமரம், 2. அவதி, 3. சிறுதுண்டு.
சில்லரி—சிலம்பினுட்பருக்கை.
சில்லர்—வேடர்.
சில்லறை—சிதறியவை, 2. சில்லறைச் சரக்கு, 3. மீதி, 4. சில்வானம், 5. திருட்டுருபத்திரவம், 6. சாவு, 7. ஓர்வகைக்காதணிகள், 8. அற்பமானவை, 9. தீர்க்கப்படாதவை.
சில்லா — ஓரதிகாரிக்குள்ளடங்கிய வெல்லை.
சில்லாடை—பன்னாடை.
சில்லான்—ஓந்தி, 2. ஓர் விளையாட்டு.
சில்லி — இல்லி, 2. சிள்வண்டு, 3. தேருருளை, 4. வட்டம், 5. சிறுகீரை.
சில்லிகை—சிள்வண்டு, 2. சீலை, 3. நல்லாடை.
சில்லிட—(வி) குளிர்ந்துபோக, 2. பயப்பட, 3. முகஞ்சிவக்க.
சில்லியடை—சல்லடை.
சில்லு — ஓட்டுத்துண்டு, 2. ஓர் மரம், 3. சில்.
சில்லுண்டி—சிறுவட்டை.
சில்லூறு—ஒரு பூச்சி.
சில்லெனல்—குளிர்ந்துகிடக்குதல், 2. முகக்குளிர்ச்சி, 3. ஒலியின்மைக் குறிப்பு.
சில்லை—சிள்வண்டு, 2. தூர்த்தை.
சில்வாய்—கடைவாய்.
சில்வானம்—சொச்சம்.
சிவகங்கை — சிதம்பரத்தில் ஓர் தீர்த்தம், 2. மதுரைக்கருகில் ஓரூர்.
சிவகதி—மோட்சம்.
சிவகம்-(வை. அ) சாதிக்காய், 2. நாய்ச்சீரகம்.
சிவகரந்தை—ஒரு பூண்டு.
சிவகாமி—பார்வதி.
சிவசங்கற்பம்—உபநிடதத் தொன்று.
சிவசத்தி-சிற்சத்தி முதலிய பஞ்சசத்தி.
சிவசமயம்—சைவமதம்.
சிவசன்மா—வடமதுரையிலிருந்த வேதியந்தணன்.
சிவச்சி—(வை. அ) சாதிக்காய்.
சிவஞானசித்தியார் — ஒருசைவசித்தாந்த சாஸ்திரம்.
சிவஞானபோதம்—ஓராகம நூல்.
சிவண — (வி) கலக்க, 2. பொருந்த, 3. கிட்ட, 4. பொருத.
சிவதம்—இருக்குவேதம்.
சிவதை—ஓர் கொடி.
சிவத்ததாசி—செம்பருத்தி, (ஒருசெடி).
சிவத்தம் — (வை. அ) செம்முருங்கை, (ஓர் மரம்).
சிவத்தல்—(தொ. பெ) சிவக்குதல், 2. கோபித்தல்.
சிவந்தவேசை—செம்பரத்தைச்செடி.
சிவந்தி—கொடிப்பாலை, (ஒருசெடி), 2. செவ்வந்தி, (ஒரு பூச்செடி).
சிவந்திரம்— } பிரதிபலன்.
சுவந்திரம்— }
சிவபீசம்—பாதரசம்.
சிவபுரம்— } காசி.
சிவபுரி— }
சிவபோகம்—சிவானந்தம்.
சிவப்பு—செந்நிறம், 2. சினக்குறிப்பு.
சிவப்புக்கந்தி—கோழித்தலைக் கந்தகம்.
சிவப்புக்கல்—ஈரற்கல்.
சிவமது—சிறுபுள்ளடி, (ஒரு பூடு).
சிவமயம்—மங்களகரம்.
சிவமரம்—ஓர் மரம்.
சிவம் — முத்தி, 2. நன்மை, 3. உயர்வு, 4. சுயஞ்சிவம், 5. நித்தியயோகத் தொன்று.

சிவலிங்கம்—சிவபூசைத் திருவுரு.
சிவலை—செந்நிறமுடையோன், 2. சிவப்பு நிறமுள்ளது.
சிவலோகச்சேவகன்—காந்தம்.
சிவல் — கவுதாரி, 2. பகன்றைச்செடி.
சிவனார்கிழங்கு—கார்த்திகைக்கிழங்கு.
சிவனார்பாகல்—ஐவேலிக்கொடி.
சிவனார்வேம்பு— } ஓர் செடி.
சிவன்வேம்பு— }
சிவனிப்பால்—கழுதைப்பால்.
சிவன்—சங்கரன்.
சிவா — கடுக்காய், 2. கீழ்காய்நெல்லி, (ஓர் பூடு), 3. வன்னிமரம்.
சிவாட்சம்—உருத்திராக்கம்.
சிவார்ச்சனம் } சிவபூசை.
சிவார்ச்சனை }
சிவிகரம்—(வை. அ) சாதிக்காய்.
சிவிகை—தண்டிகை, 2. எருதுபூட்டிய ஓர் பண்டி.
சிவிங்கி—ஓர் மிருகம்.
சிவிறி — நீர்வீசுந் துருத்தி, 2. பெருந் துருத்தி, 3. விசிறி.
சிவுகம்—தாடை.
சிவேதை — சீந்திற்கொடி, 2. தெற்கு, 3. பகன்றைச்செடி, 4. சிவதைக் கொடி.
சிவேரெனல்—சிவப்புநிறக்குறிப்பு.
சிலை — ஆணரி, 2. உலைத்துருத்தி, 3. உலைமூக்கு, 4. வேர்.
சிவை—பார்வதி, 2. தூர்க்கை.
சில்வல்—(வை. அ) கடற்பாசி.
சில்வெனல்—விரைவுக்குறிப்பு.
சிளுபுளெனல்—ஒலிக்குறிப்பு.
சிள்வண்டு—சில் வண்டு.
சிள்ளுப்புள்ளெனல்-கோபக்குறிப்பு.
சிறகர்—சிறகு.
சிறகி—ஓர் நீர்வாழ்பறவை.
சிறகு — இறகு, 2. மீன்சிறகு, 3. தெருவின்பக்கம், 4. நீர்க்காற்சிறகு, 5. படைமடலிற்பாதி, 6. கதவுச்சிறகு.
சிறகுகோதுதல்—(தொ. பெ) சிறகை அலகால் வகிர்தல்.
சிறக்க—(வி) சிங்காரமாயிருக்க, 2. அழகாயிருக்க, 3. மகிமைப்பட, 4. மேற்பட, 5. விசேஷிக்க, 6. அருமையாயிருக்க, 7. மிகுதியாக.
சிறக்கணிக்க—(வி) குறைய, 2. கடைக்கண்ணாற்பார்க்க, 3. சுருக்க, 4. உபேட்சைசெய்ய.
சிறக்கணிப்பு — குறைகை, 2. சுருங்குகை, 3. கடைக்கண்பார்வை.
சிறங்கணிக்க—(வி) அவமதிக்க.
சிறங்கிக்க—(வி) சிறங்கையாலளக்க.
சிறங்கை—கைநிறைந்தவளவு.
சிறந்தகற்பகம்—நாகபாஷாணம்.
சிறப்பாங்கல்—குருந்தக்கல்.
சிறப்பித்தல்—(தொ. பெ) அலங்கரித்தல், 2. கனப்படுத்தல்.
சிறப்பு — அலங்காரம், 2. மகிமை, 3. மேன்மை, 4. விசேஷம், 5. சிறப்புப்பெயர், 6. அருமை, 7. மேம்பாடு, 8. உற்சவம், 9. உபசாரம், 10. மிகுதி, 11. சுபம், 12. புலமைச் சிறப்பு.
சிறப்புச்சூத்திரம்—ஒன்றற் குரித்தாய்ச் சொல்லுஞ் சூத்திரம்.
சிறப்புப்பாயிரம்—நூற்பெயருங் காரணமும் ஆக்கியோன் பெயரும் அளவும் பயனுமுரைப்பது.
சிறப்புப்பெயர் — ஒன்றற்கே சிறப்பாய் நிற்கும் பெயர்.
சிறப்பை—மரமணி.
சிறும்ப—(வி) பிறுண்ட, 2. உராய்ஞ்ச.
சிறும்பி—காவற்பரண்.
சிறும்பு—செதும்பு.
சிறுயத்துக்குச்சி—ஓர் பூடு.
சிறார்—சிறுவர்.
சிறிசு—சிறியது.
சிறிட்டம்—வெள்ளிலோத்திரம்.
சிறிது—அற்பம், 2. சிலபல.
சிறியத்தினி—உத்தாமணி.
சிறியர்— }
சிறியவர்— } கீழ்மக்கள், 2. சிறுவர்
சிறியார்— }
சிறியோர்— }
சிறியாணங்கை—ஒரு செடி.
சிறிவில்—(வை. அ) அகிலமரம்.

சிறீ—தெய்வத்தன்மை.
சிறுக—(வி) சுருங்க, 2. சிறியதாக, 3. தரித்திரமடைய, 4. சீர்குன்ற.
சிறுகாஞ்சொறி— } ஓர் செடி.
சிறுகாஞ்சோன்றி—
சிறுகாய்ஞ்சொறி—
சிறுகாரிடம்—(வை. அ) சாதிக்காய்.
சிறுகாலை—விடியற்காலம், 2. சிறுவயது.
சிறுகால்—தென்றல், 2. காவட்டம்புல்.
சிறுகாற்று—இளங்காற்று.
சிறுகீரை—ஓர் கீரை.
சிறுகு—துன்பம்.
சிறுகுடி—குறிஞ்சிநிலத்தூர், 2. சிற்றூர், 3. சிறுகுடும்பம்.
சிறுகுரும்பை—ஓர் நெல்.
சிறுக்கன்—பயல்.
சிறுக்கி—வேலைக்காரப்பெண், 2. வாலிபஸ்திரீ.
சிறுசொல்—பழிச்சொல்
சிறுதேர்—விளையாட்டுத்தேர்.
சிறுத்தை—சிறுபுலி.
சிறுத்தொண்டர் — அறுபத்துமூன்று நாயன்மாரிலொருவர்.
சிறுநாகம்—ஓர் மரம்.
சிறுநாவல்—ஓர் செடி.
சிறுநீர்—மூத்திரம்.
சிறுபஞ்சமூலம்—ஓர் நூல்.
சிறுபயறு—பச்சைப்பயறு.
சிறுபாணாற்றுப்படை — ஒரு தமிழ் நூல்.
சிறுபாலடை—ஓர் பூடு.
சிறுபான்மை—சிறுவழக்கு.
சிறுபுலியூர்—காவிரியின் தென்கரையில் உள்ள விஷ்ணு ஸ்தலம்.
சிறுபுள்ளடி—ஒரு பூடு.
சிறுபுறம்—பிடரி.
சிறுபூவா—ஓர் பூடு.
சிறுப்பம்— } இளமை.
சிறுவம்—
சிறுப்பனை—இழிவு.
சிறுமட்டம்—சிறுகுதிரை, 2. சிற்றளவு, 3. சிறுவாழைமரம், 4. குட்டியானை, 5. குள்ளம்.
சிறுமணி—சதங்கை, 2. ஓர் நெல்.
சிறுமல்—தண்ணீர்விட்டான்.
சிறுமாரோடம்—செங்கருங்காலி மரம்.
சிறுமி— } மகள், 2. பெண்.
சிறுவி—
சிறுமியம்—சேறு.
சிறுமூலகம்— } ஓர் கிழங்கு, 2. திப்பிலி.
சிறுமூலம்—
சிறுமை — அற்பம், 2. தரித்திரம், 3. துன்பம், 4. நோய், 5. இளமை, 6. குறைவு, 7. இழிவு, 8. எளிமை, 9. நொய்மை, 10. இழிபிறப்பு.
சிறுமைப்படுதல்—(தொ. பெ) தரித்திரப்படுதல், 2. இடைஞ்சற்படுதல்.
சிறுமையர்—கீழ்மக்கள்.
சிறுவரை — அற்பம், 2. காலநுட்பம், 3. சிறுபொழுது.
சிறுவல்—குழந்தை.
சிறுவழுதுணை—ஒரு செடி.
சிறுவன்—புதல்வன், 2. இளையோன்.
சிறுவாடு—சொற்பசேட்டம்.
சிறுவிதி—தக்கன்.
சிறுவிலை—குறுவிலை.
சிறை—அடிமையானவள், 2. அடிமைத்தனம், 3. காவல், 4. தடை, 5. விபசாரி, 6. சிறைச்சாலை, 7. இடம், 8. மதில், 9. இறகு, 10. பக்கம், 11. நீர்க்கரை.
சிறைக்களம்— } சிறைச்சாலை.
சிறைக்கூடம்—
சிறைசெய்தல்—(தொ. பெ) அடிமைப்படுத்தல்.
சிறைப்பாடு—அடிமைத்தனம், 2. கட்டுப்பாடு.
சிறையெடுத்தல் — (தொ. பெ) பெண் கொள்ளல்.
சிற்குணன்—கடவுள்.
சிற்குலையம்—உபநிடதத் தொன்று.
சிற்சத்தி—பஞ்சசத்தியிலொன்று.
சிற்சபை—ஞானசபை.
சிற்சிலிர்ப்பான்—ஓர் வைசூரிநோய்.
சிற்சுகம்—ஞானானந்தம்.
சிற்சொரூபர்—கடவுள்.
சிற்பம் — சிற்பவிலக்கணம், 2. சிற்பத்தொழில், 3. சிற்பசாத்திரம்.

சிற்பரக்கூர்மை—கந்தகவுப்பு.
சிற்பரம்—கடவுள், 2 பிரமம்.
சிற்பரவுப்பு—சிந்துலவணம்.
சிற்பரை — சவுக்காரம், 2 சிமிழை, 3 பராசத்தி.
சிற்பர்—கம்மியர்.
சிற்பொருள்—சித்துப்பொருள்.
சிற்றகத்தி—ஒரு மரம்.
சிற்றம்பலம்—சிதம்பரம்.
சிற்றரத்தை—ஒரு செடி.
சிற்றவை—சிறியதாய்.
சிற்றன்னை— } சிறியதாய்.
சிற்ருத்தாள்— }
சிற்ருள்—ஏவலாள்.
சிற்றி—சிறியதாய்.
சிற்றிரு—கிலுகிலுப்பைச்செடி.
சிற்றில் — குடிசை, 2. ஆண்பாற் பிள்ளைக் கவியிலோருறுப்பு.
சிற்றுண்—சிற்றுண்டி.
சிற்றுயிர்—அற்பசெந்து.
சிற்றூர்—குறிஞ்சிநிலத்தூர்.
சிற்றூறல்— } சிறிய ஊற்று
சிற்றூற்று— }
சிற்றெறும்பு—ஓரெறும்பு.
சினகரம்—கோவில்.
சினத்தல்—(தொ. பெ) கோபித்தல்.
சினப்பு—கோபம்.
சினம்—கோபம்.
சினவ—(வி) கோபிக்க, 2. பொர.
சினவரன்— } புத்தன், 2. அருகன்.
சினன்— }
சினு—(வை. அ) வட்டத்திருப்பிச்செடி, 2. பங்கம்பாலைச்செடி.
சினுடி— } மூக்கிரட்டைச்செடி.
சினுடிகா— }
சினுது—மெலிவு, 2. மெலிந்தது.
சினுவில்—(வை. அ) தும்பைப்பூடு.
சினீவாலி — சந்திரனொருகலை தெரியுமிரா.
சினேகம்—அன்பு, 2. பட்சம், 3. எண்ணெய்.
சினேகிக்க—(வி) சினேகஞ்செய்ய, 2. பட்சமாய் நடத்த.
சினேகிதம்—நட்பு.
சினேசம்—(வை அ) சாதிக்காய்.
சினேந்திரன்—புத்தன், 2. அருகன்.
சினை—கருப்பம், 2. மீன்சினை, 3. முட்டை, 4. பூவரும்பு, 5. மரக்கொம்பு, 6. உறுப்பு, 7. மூங்கில், 8. பொருளாதியாறனுளொன்று.
சினைக்க—(வி) சிரங்குசினைக்க, 2. சினைகொண்டிருக்க, 3. பருக்க, 4. பூவரும்ப, 5. கருக்கொண்டிருக்க.
சினைப்பு—வியர்க்குரு, 2. அரும்புகை, 3. கருக்கொள்ளுகை.
சின்—அசைச்சொல்.
சின்மயம்—ஞானமயம்.
சின்மாத்திரம் — ஆன்மாவின் சுபாசன்மை.
சின்முத்திரை—ஞானமுத்திரை.
சின்மூர்த்தி—கடவுள்.
சின்மை—சிறுமை.
சின்ன—சிறிய, 2. இழிந்த.
சின்னஞ்சிறியது—மிகச் சிறியது.
சின்னத்தனம்—அவமதிப்பு.
சின்னப்படுதல்—(தொ பெ) பங்கப்படுதல்.
சின்னப்பூ—ஒரு பிரபந்தம், அது. நேரிசை வெண்பாவாற் றசாங்கமுரைத்து நூறு, தொண்ணூறு, எழுபது, ஐம்பது, முப்பது என்னு மெண்படப்பாடுவது.
சின்னமுத்து—ஓர் குருநோய்.
சின்னம்—சிறுமை, 2. காளம், 3. அடையாளம், 4. ஈனம், 5. இலக்கணம், 6. முறம், 7. தட்டு, 8. பாகம், 9. சிறியது.
சின்னம்—துண்டு, 2. விசித்திரம்.
சின்னல்—வேடிக்கை.
சின்னபின்னம் — பொடிப் பொடியானது.
சின்னுருகம்—சீந்திற்கொடி.
சின்னி—ஓர்செடி, 2 இலவங்கம.
சின்னீர் — துளிநீர், 2. சிறுநீர், 3. நில்லாமை.
சின்னை—ஓர் மீன்.

## ழீ

சீ—இகழ்ச்சிக்குறிப்பு, 2. புண்ணின்சீழ், 3. சீயென்னேவல்.
சீ—இலக்குமி, 2. பிரகாசம், 3. சம்பத்து, 4. சரசுவதி, 5. பார்வதி, 6. விஷம்.
சீகண்டன்—சிவன்.
சீகம்—தமரத்தைமரம்.
சீகம்புல்—ஓர் புல்.
சீகரம்—மழைத்துளி, 2. சிறுமழை, 3. நீர்த்துளி, 4. மழை, 5. புனற்றிரை, 6. கடற்றிரை, 7. கரகம், 8. கவரி, 9. திருநகம், 10. வாழ்வு, 11. சுக்கு.
சீகரி— } சிவலை.
சீகர்— }
சீகா—பஞ்சலோகம்.
சீகாரம்—ஓர் பண்.
சீகாழி—ஓர் சிவஸ்தலம்.
சீகாளத்தி—ஒரு சிவஸ்தலம்.
சீகு—ஓர் புல்.
சீக்க—(வி) காலினுற் சீக்க, 2. பெருக்க, 3. செப்பஞ்செய்ய.
சீக்கல்—சீழ்க்கை.
சீக்காச்சா—நாய்ப்புடோல், (ஒரு கொடி).
சீக்காய் — ஈசற்கொட்டுகை, 2. பழாத பனங்காய்.
சீக்கிரம்—விரைவு, 2. கைச்சுறுக்கு, 3. மருந்துவீறு, 4. கோபம், 5. உறைப்பு.
சீக்கிரான்— } உதிலமரம்.
சீக்கிரி— }
சீக்கிரியான்— }
சீக்கு—செத்தை, 2. நோய்.
சீக்குரு—முருங்கைமரம்.
சீசகம்— } ஈயம்.
சீசம்— }
சீசம்—கொதிப்பு.
சீசா—குப்பி.
சீசீ— } இகழ்ச்சிக்குறிப்பு.
சீச்சீ— }
சீஷப்பிள்ளை—சீஷன்.
சீஷம் — இழிவு, 2. அசுத்தம், 3. சிக்கனம்.

சீஷன்— } மாணாக்கன், 2. ஞானசீடன்.
சீடன்— }
சீடு—நூற்சீடு.
சீடை—ஓர் பணிகாரம், 2. நருங்கல்.
சீட்டி — எழுத்துச்சீலை, 2. சீழ்க்கைக் குழல்.
சீட்டு — பத்திரம், 2 உண்டிச்சீட்டு, 3. திருவுளச்சீட்டு.
சீட்டை— } முதைக் கொல்லையில் விளைகதிர், 2. விடுகதிர்.
சீட்டைக்கதிர்— }
சீணசந்திரன்—தேய்பிறை.
சீணம்— } ஈனம், 2. கேடு.
க்ஷீணம்— }
சீண்ட—(வி) தீண்டியுணர்த்த, 2. கைச்சேட்டைசெய்ய.
சீண்டிரம்— } கசுமாலம்.
சீண்ட்ரம்— }
சீதகம்—ஈயம்.
சீதகன்—சுக்கிரன்
சீதபேதி—ஒரு நோய்.
சீதமண்டலி—ஓர் விஷசெந்து.
சீதம்—சீதக்கட்டு, 2. குளிர்ச்சி, 3. நீர், 4. மேகம், 5. வெண்மை, 6. சந்தனமரம், 7. கொடுந்தமிழ் நாட்டினென்று, 8. அகிலமரம், 9. நறுவிலிமரம்.
சீதரன்—மகாவிஷ்ணு.
சீதவாரம்—(வை. அ) உத்தாமணி.
சீதளம்—தண்மை, 2. குளிர், 3. ஈரம், 4. பச்சைக்கர்ப்பூரம், 5. கோடகசாலைப்பூண்டு.
சீதளை—கொடிமாதளைமரம், 2. ஒரு நாரத்தை.
சீதனம்—மகளுக்குக் கொடுக்கும் பொருள்.
சீதன்—சந்திரன்.
சீதாங்கபாஷாணம்—ஓர் பாஷாணம்.
சீதாங்கம்—ஓர் சன்னி.
சீதாங்கனை—ஸ்ரீராமர் மனைவி.
சீதாதேவி—ஸ்ரீராமபிரான் மனைவி.
சீதாபதி—இராமபிரான்.
சீதாரி—ஓர் வாசனைமரம், 2. நகரி.
சீதாளம்—தாளிப்பனை மரம்.

சீது—கள்.
சீதேவி—இலக்குமி.
சீதேவியார்செங்கழுநீர்—ஒரு பூடு.
சீதை—உழுபடைச்சால், 2. பொன்னாங்காணிக்கீரை, 3. இராமன்றேவி.
சீதோதகம்—குளிர் நீர்.
சீத்காரம்— } அனுகரணவொலி.
சீற்காரம்— }
சீத்தலைச்சாத்தன்—ஓர் புலவன்.
சீத்தா—ஓர் மரம்.
சீத்தி—இளப்பம்.
சீத்துப்பூத்தெனல்—சினக்குறிப்பு, 2. பாம்பு சீறல்.
சீத்துவம்—திறம், 2. வளம், 3. சுத்தம்.
சீத்தை—கீழ்மக்கள், 2. பதனழிவு, 3. பணஞ்சீத்தை, 4. சீட்டிச்சீலை.
சீந்த—(வி) விரும்ப, 2. மூக்குச்சிந்த, 3. சீற.
சீந்தல்—மழைத்தூற்றல்.
சீந்தில்—ஓர் படர்கொடி.
சீபதி—கடவுள், 2. அருகன், 3. மகா விஷ்ணு.
சீபாதம்—திருவடி, 2. குருவடி.
சீப்பங்கோரை—ஓர் கோரைப்புல்.
சீப்பு—மயிர்வாருஞ் சீப்பு, 2. வாழைக் குலைச் சீப்பு, 3. தாட்பாள், 4. விலா வெலும்பு, 5. தோட்சீப்பு.
சீமந்தம்—முதகுசூலிகை.
சீமந்தனி—ஓர் கற்புடைய பெண்.
சீமாட்டி— } தலைவி.
சீமாள்— }
சீமாமூலத்—தேச ஆளுகை.
சீமான்—செல்வன், 2. அருகன்.
சீமுக— } ஓர் வருடம்.
ஸ்ரீமுகவருஷம்— }
சீமுகம்—திருமுகம்.
சீமூதம்—நீருண்டமேகம், 2. மலை, 3. பிடியானை.
சீமூதன்—உழவன், 2. சிவன், 3. துன் புறுவோன், 4. நரகாசுரன் சாரதி, 5. இந்திரன்.
சீமூதை—கொடிமுந்திரிகை.
சீமை—எல்லை, 2. கரை, 3. தேசம், 4. வயல்.
சீம்பால்—ஈன்றணிமைப்பால்.
சீயகங்கன்—ஓரரசன்.
சீயக்காய்—அரைப்புக்காய்.
சீயம்—சிங்கம், 2. சிங்கவிராசி, 3. தென் றிசைப்பாலன்குறி, 4. எருக்கம்பால்.
சீயாள்—பாட்டி.
சீயான்—மூன்றாம்பாட்டன், 2. ஓர் வகைப் பூரான்.
சீரகச்சம்பா—ஒரு நெல்.
சீரகம்—ஓர் சரக்கு.
சீரங்கபட்டணம்—மைசூரின்றலைப்பட் டினம்.
சீரங்கம்—ஒரு விஷ்ணுஸ்தலம்.
சீரணம்—உண்டது சமித்தல், 2. கேடு, 3. பதனழிவு.
சீரணி—ஓர் பணிகாரம்.
சீரணி—காடு, 2. கூத்தின்விகற்பம், 3. சிறந்தவழகு.
சீரணிக்க—(வி) உண்டது சமிக்க, 2. கெட.
சீரவணை—பயிற்சி.
சீரமோடா—விழுதிச்செடி, 2. நார்ச்சீலை, 3. காட்டெருமைப்பால்.
சீரம்—மரவுரி, 2. பால், 3. இலாமிச் சம்புல்.
சீரா—தலைச்சீரா, 2. கவசம், 3. பலாசு, (ஓர் மரம்).
சீராட்ட—(வி) பாராட்ட, 2. பேணிவ ளர்க்க, 3. சிறப்புச்செய்ய, 4. புகழ்ந் துபேச.
சீராட்டு—உபசரித்துவளர்க்கை, 2. பா ராட்டுகை.
சீராளன்—சிறுத்தொண்டர் புத்திரன்.
சீரி— } புளியமரம்.
சீரிவிருட்சம்— }
சீரிக்க—(வி) பழக.
சீரிடம்—தலை, 2. வாகைமரம்.
சீரிய—சிறப்பான.
சீரியர்—அறிஞர், 2. உயர்ந்தோர், 3. நல் லோர், 4. புலவர்.
சீருணம்— } செம்பு.
சீருணி— }
சீருத்திரம்—உபநிடத மூப்பத்திரண்டி னொன்று.

சீருள்—ரயம், 2. செம்பு, 3. பஞ்சலோகம்.
சீரை—மரவுரி, 2. சீலை, 3. சீலைத்துணி.
சீர்—அழகு, 2.வாழ்வு, 3.நன்மை, 4.நன்னடை, 5. சிறப்பு, 6. நிலைமை, 7. தன்மை. 8. கிரமம், 9. புகழ், 10. சித்திரம், 11. பாரம், 12. தராசு, 13. துலாராசி, 14. செய்யுளுறுப்பிலொன்று, 15. தாளவொத்து, 16. காற்றண்டை, 17. தண்டாயுதம், 18. காவுதடி, 19. பொன், 20. ஒலி, 21. சிலம்பம்.
சீர்குலைதல்—(தொ. பெ) ஒழுங்குகெடல், 2. பதனழிதல், 3. கற்பழிதல்.
சீர்கேடி—மூதேவி.
சீர்கேடு—கேடான நிலைமை.
சீர்தூக்குதல்—(தொ. பெ) ஆராய்தல், 2. ஒத்துப்பார்த்தல்.
சீர்த்தி—கீர்த்தி.
சீர்த்துழாய்—(வை. அ) துளசிச்செடி.
சீர்பண்ணுதல்—(தொ பெ) ஒழுங்குபடுத்தல்.
சீர்பதி—கடவுள்.
சீர்பாதம்—திருப்பாதம்.
சீர்மரம்—நெய்வார் கருவியிலொன்று.
சீர்மை—சிறப்பு, 2. நன்னடை, 3. கீர்த்தி.
சீர்வண்டு—நெய்வார் கருவியிலொன்று.
சீலம்—குணம், 2. நல்லொழுக்கம், 3. தருமம், 4. சீந்திற்கொடி, 5. சரித்திரம், 6. நல்லறிவு.
சீலவான்— } நற்குணசாலி.
சீலன்— } நற்குணசாலி.
சீலா — சிலாமீன், 2. இறைகூடை, 3. ஓர் பறவை.
சீலித்தல்—(தொ. பெ) பழகல்.
சீலை—ஆடை.
சீலைப்பாய்—கந்தைத்துணி.
சீவகம்—(வை. அ) இலந்தைப்பிசின்.
சீவகர்—புத்தகவத்தோர்.
சீவகளை—உயிர்ப்பு.
சீவகன்—ஓரரசன்.
சீவகாருண்ணியன் — கிருபையுள்ளோன்.
சீவசெந்து—உயிருள்ளவைகள்.
சீவதாது—சீவவாயு சஞ்சரிக்கும் நாடி.
சீவதிசை—பிராணதிசை.
சீவத்துவம்—சீவவியல்பு.
சீவநாள்—ஆயுள்:
சீவந்தம்—ஔஷதம், 2. பிராணன்.
சீவந்தி — சீந்திற்கொடி, 2. பாலைமரம், 3. கடுமரம்.
சீவம்—சீவன், 2. பரமாத்துமா, 3. அர்த்தச்சா.
சீவரட்சை—சீவனைக்காத்தல்.
சீவரம்—கடுக்காய்ச் சாயச்சீலை.
சீவரர்—புத்தர்.
சீவரேக்கு—சிற்பத்தீர்மானவேலை.
சீவல்—செதுக்கினவை, 2. மெலிவு, 3. மெலிந்தவன், 4. நெகிழ்ச்சியானது, 5. பாக்குச்சீவல்
சீவனம் — உயிர்வாழ்தல், 2. நுகர்பொருள், 3. உத்தியோகம், 4. நீர்.
சீவனுகினி — (வை. அ) வெற்றிலை, 2. நீர்.
சீவனுர்த்தம்—உயிர்வாழ்தற்குரியது.
சீவனி—சீவநாடி, 2. சஞ்சீவி, 3. பாலைமரம், 4. செவ்வள்ளிக்கொடி, 5. மந்தாரச்சிலை, 6. சகனம்.
சீவனீயம்—நீர்.
சீவனோபாயம் — சீவனத்துக்கடுத்தவுபாயம்.
சீவன்—உயிர், 2. சீவாத்துமா, 3. சீவசெந்து, 4. வியாழம், 5. காந்தம், 6. முயற்சி.
சீவன்முத்தன்—துறந்து ஞானமடைந்தோன்.
சீவாளம்—வீணையின் சீர்.
சீவான்மா—உயிர்.
சீவி—சீவனோடிருக்கும் வஸ்து.
சீவிகா—(வை. அ) சாதிக்காய்.
சீவிக்க—(வி) உயிர்வாழ, 2. உடனுடன் கூடிவாழ, 3. முயல, 4. விழித்திருக்க, 5. சஞ்சரிக்க, 6. அனுபவிக்க.
சீவிதம்—உயிர்வாழ்கை.
சீவியம்—உயிரோடிருக்கை, 2. சீவனம், 3. வாழ்நாள், 4. ஆத்துமானுபவம்.
சீவினி—சஞ்சீவி, 2. யாழினோரோசை.

சீவீசுரம்—
சீவீச்சுரம்— } சிவாத்துமா.
சீவேசுரம்—
சீவுதல் — (தொ. பெ) செதுக்குதல், 2. மயிர்கோதுதல், 3. மெல்லியதாயரிதல்.
சீவுளி — சீவுகிற வுளி, 2. மெருகிடுகிற வுளி, 3. இழைப்புளி.
சீவோற்பத்தி—உயிர்த்தோற்றம்.
சீழ்—சிதல், 2. சீழ்க்கைவிடுதல்.
சீழ்க்கை—வாயாலூதுமோர்வகைச் சத்தம்.
சீற — (வி) பாம்பு முதலியன சீற, 2. குதிரைமூச்செறிய, 3. மூர்க்கங்கொள்ள, 4. சீறிபெரிய, 5. அதட்ட.
சீறடி—சின்ன அடி.
சீறல்—பெருங்கோபம், 2. இரைதல்.
சீறா—சோனகர் நூல்.
சீறு—சீற்றம்.
சீறுமாறு — சரியாய் நடக்தாமை, 2. தாறுமாறு.
சீறூர்—மருதநிலத்தூர்.
சீற்றம்—கோபம்.
சீனக்காரம்—படிகாரம்.
சீனட்டங்குருவி—ஓர் குருவி.
சீனட்டி—ஓர் நெல்
சீனம்—ஓர் தேசம், 2. ஒரு பாஷை, 3. சீனத்துச் சரக்கு.
சீனன்—சீனதேசத்தான்.
சீனு—ஓர் தேசம்.
சீனி—சீனிச்சர்க்கரை.
சீனி-மரநங்கூரம், 2. குதிரைக்கல்லணை.
சீனிக்கிழங்கு—சருக்கரை வள்ளிக்கிழங்கு.

## சு

சு — நன்மை, சுகம் முதலியவற்றைக் காட்டுமோருபசருக்கம், 2. நாய் முதலியவற்றைத் துரத்துமொலி.
சுஃறெனல்—ஒலிக்குறிப்பு.
சுகசிம்பி—(வை. அ) பூனைக்காலிச்செடி.
சுகட்டான்—(வை. அ) முடக்கற்றான் கொடி, 2. நாணற்புல்.
சுகதாஸதை—வியாசன்.
சுகதாரு—(வை. அ) கடம்புமரம்.
சுகத்திரம்—(வை. அ) வாகைமரம்.
சுகந்தம்—வாழைமரம், 2. அரத்தை, (ஒரு செடி).
சுகந்தம்—நறுமணம்.
சுகந்தி—
சுகந்திக்கல்— } செவ்வந்திக்கல்.
சுகந்திரம்—சுதந்திரம்.
சுகம்—சௌக்கியம், 2. ஆரோக்கியம், 3. வாழ்வு, 4. இன்பம், 5. தருமம், 6. நன்மை, 7. வருத்தமின்மை, 8. பத்திரம், 9. கிளி, 10. முலைக்கண்.
சுகம்டல்—புளிநறளைச்செடி.
சுகருமம்—இருபத்தேழு யோகத்திலொன்று, 2. நற்கருமம்.
சுகன்—வியாசன்மகன், 2. சுவர்க்கமுற்றோன்.
சுகாதீதம்—மேற்பட்ட சுகம்.
சுகாந்தம்—வெண்காயம்.
சுகாந்திக்கல்—சுகந்திக்கல்.
சுகாய்—சொக்காய்.
சுகி—நோயிலான், 2. செல்வன், 3. சுக போகம், 4. செழிப்பு.
சுகிக்க—(வி) சுகமாயிருக்க, 2. சம்பிரமமாயிருக்க, 3. அனுபவிக்க.
சுகிதம்—பால்.
சுகிர—(வி) மயிர் முதலிய வகிர, 2. டஞ்செகிக.
சுகிர்—உட்டுளை, 2 உட்டுளைப்பொருள்.
சுகிர்தம்—நல்லறம், 2. நன்மை, 3. தவசெய்கை, 4. புண்ணியபலன், 5. இன்பம், 6. நெய்.
சுகிர்த்து—சினேகம்.
சுகிர்லலாபம்—நட்புப்பேறு.
சுகுமாரம்—மிருது.
சுகுர்தம்—சுகிர்தம்.
சுகோததி—இன்பக்கடல்.
சுக்கங்கீரை—ஓர் கீரை.
சுக்கடித்தம்—அழுத்தமானபுடவை.
சுக்கம்—களவு, 2. ஓர் கொடி.
சுக்கல்—சிறு துண்டு.
சுக்காய்—சொக்காய்.
சுக்கான் — கப்பல் திருப்புங்கருவி, 2. சுக்கான்கல்.

சுக்கியானம்—
சுக்ஞானம்— } பரமஞானம்
சுஞ்ஞானம்—
சுக்கிரம்—ஆனிமாதம்.
சுக்கிரன்—வெள்ளி, 2. அசுரர் குரு, 3. கபடமுள்ளோன், 4. கண்ணோயி லொன்று, 5. ஒரு கண்ணுனன்.
சுக்கிராக்கினை—கொடிய இமிசை.
சுக்கிரீவன்—கிட்கிந்தையரசன்.
சுக்கில—ஓர் வருடம்.
சுக்கிலபட்சம்—பூருவபக்கம்.
சுக்கிலப்பிரமியம்—ஓர் நோய்.
சுக்கு—சுண்டி, 2. சிறு துண்டு.
சுக்குச்செட்டுக்காரன்—உலுத்தன்.
சுக்குதல்—(தொ. பெ) செய்தல்.
சுக்குநாறிப்புல்—(வை. அ) ஓர் புல்.
சுக்குமம்—சிற்றேலம்.
சுக்குமாத்தடி—ஓர் தடி.
சுக்கை—மாலை, 2. விண்மீன், 3. கப்பற் கேழ்வு.
சுங்கம்—ஆயம், 2. திருட்டு.
சுங்கன்—சுக்கிரன், 2. ஓர்மீன்.
சுங்கான்—புகைகுடிக்குங் கருவி.
சுங்கு — சீலையின்கொய்சகம், 2. முன் றானைமூலை.
சுங்குத்தான்குழல் — உண்டையெறி குழல்.
சுசனம்—காற்று.
சுசனன்—நல்லவன்.
சுசாதி—சுயசாதி.
சுசி — சுத்தம், 2. மாசின்மை, 3. கழுவு கை, 4. சுசிகரம், 5. நெருப்பு, 6. வெண்மை, 7. ஆடிமாதம், 8. கோடைகாலம், 9. வெண்குடை, 10. சுசீலமனம்.
சுசிகம்—புளியாரைக்கீரை.
சுசிகரம்—சுத்தம், 2. சுசிலமனம்.
சுசிதம்—பால்.
சுசிருஷை—
சுசிருஷை— } பணிவிடை.
சுசீலம்—நல்லொழுக்கம்.
சுசுந்தரி—மூஞ்சூறு, 2. நாவி.
சுசுலம்—சிறுபண்டம்.
சுசுக்குமம்—நான்குவாக்கிலொன்று.

சுச்சம்—சுச்சு.
சுச்சு—சுண்டிச்செடி, 2. சுக்கு.
சுஞ்ஞானம்—பரமஞானம்.
சுடரோன்—சூரியன்.
சுடர்க்கடை—மின்மினி.
சுடர்க்கொடி—ஆரதிகருப்பூரம்.
சுடர்தல்—(தொ. பெ) ஒளிசெய்தல்.
சுடர்நிலை—விளக்குத்தண்டு.
சுடர்விழியோன்—வீரபத்திரன்.
சுடலை—மயானம.
சுடலைக்குருவி—ஒரு குருவி.
சுடலைமாடன்—ஓர் பேய்.
சுடலையாடி—சிவன், 2. சவக்காரம்.
சுடாரி—கவசம்.
சுடிகை—(வை. அ) கள்.
சுடிகை — உச்சி, 2. நெற்றிச்சுட்டி, 3. மயிர்முடி, 4 முடி, 5. சூட்டு, 6. சடாமுடி.
சுடுகண்—கொள்ளிக்கண்.
சுடுகலம்—குயககலம.
சுடுகாடு—பிணம் சுடு மிடம்.
சுடுசுடெனல்—விரைவுக்குறிப்பு, 2 சினக்குறிப்பு.
சுடுதல்—(தொ பெ) தகித்தல், 2. வேகவைத்தல்.
சுடுதுரத்தம் — (வை. அ) சித்திரட்பாலாவிப்பூண்டு.
சுடுவல்—
சுடுவனம்— } இரத்தம்.
சுடுவன்—
சுடுவு—சும்மாடு.
சுட்க—(வி) வறள.
சுட்கம்—
சுஷ்கம்— } வறட்சி.
சுட்ட — (வி) குறிக்க, 2. எண்ண, 3. கருத, 4. காட்ட, 5. மதிக்க.
சுட்டல்—(தொ. பெ) குறித்தல், 2. மதித்தல்.
சுட்டி — நுதலணி, 2. உச்சிவெள்ளை, 3. துஷ்டன்.
சுட்டிகை—நுதலணி.
சுட்டு—குறிப்பு, 2. எண்ணம்.
சுட்டுக்கோல்—உலையாணிக்கோல், 2. தீயோன்.

சுணக்கம்—பிணக்கம்.
சுணக்கன் – நாய், 2. நாயாட்டந்திரிகிறவன், 3. நீசன்.
சுணங்க—(வி) மெலிய, 2. தாமதிக்க, 3 தடைபட, 4. சுற்றுக்காலிட.
சுணங்கன்—நாய்.
சுணங்கு – தேமல், 2. பசலை, 3. மெலிவு.
சுணை – இலை காய் முதலியவற்றின் சொறி, 2. சுரணை, 3. கூர்மை, 4. தினவு.
சுணைக்க – (வி) தினவெடுக்க, 2. அங்கப்படுத்த.
சுணைக்கோரை—ஓர் புல்.
சுண்ட—(வி) கறிமுதலிய சுண்ட, 2. இரத்தஞ்சுண்ட, 3. வயிறுசுண்ட, 4. நரம்பு முதலிய இழுக்க.
சுண்டங்காய்—சுண்டைக்காய்.
சுண்டம்—கள், 2. யானைத்துதிக்கை.
சுண்டல்—சுண்டினகறி, 2. சுண்டினது.
சுண்டன் – மூஞ்சூறு, 2. சதையநாள், 3. அறிவிலி.
சுண்டாங்கி – துவையல், 2. அற்பம், 3. குறைவு.
சுண்டாங்கியார்—சிக்கனக்காரி.
சுண்டாலம்— } யானை.
சுண்டாலி— }
சுண்டான்—கள்ளளவு.
சுண்டி—நீர்ச்சுண்டிச்செடி, 2. சுக்கு, 3. கள்.
சுண்டிகை—உண்ணாக்கு.
சுண்டில்—சுண்டிற்செடி.
சுண்டு – அடிப்பற்றியது, 2. பொடுகு, 3. அற்பம், 4. ஓர் சிறு அளவுபடி.
சுண்டுவிரல்—சின்னவிரல்.
சுண்டெலி—ஓரெலி.
சுண்டை—சுண்டைச்செடி, 2. கள்.
சுண்ணக்கல்—சுக்கான்கல்.
சுண்ணப்பொடி—வாசனைப்பொடி.
சுண்ணமொழிமாற்று – மொழிமாற்றுப் பொருள்கோள்.
சுண்ணம் – பொடி, 2. கந்தப்பொடி, 3. புழுதி, 4. கேசரம், 5. சுண்ணாம்பு, 6. சதையம்.
சுண்ணாம்பு—சுட்ட சுண்ணம், 2. குழைசாந்து.
சுண்ணாம்புத்துடுப்பு—சுண்ணாம்பு தோண்டி.
சுதசனம்—சுதனம்.
சுதந்தரம்— } சுவாதந்திரியம், 2. பெறும்பேறு, 3. உரிமை, 4. தற்சுதந்தரம்.
சுதந்திரம்— }
ஸ்வதந்திரம்— }
சுதந்தரிக்க—(வி) ஆட்சிபெற, 2. தன்னிட்டப்படிசெய்ய
சுதந்தி – வடமேற்றிசைப் பெண்யானை, 2. பெண்யானை.
சுதந்திரியம்—இட்டம்.
சுதம்—கேடு, 2. முறைமை, 3. நெருஞ்சில், (ஒரு முட்பூண்டு.)
சுதரிசனம் – கண்ணாடி, 2. சககராயுதம், 3. அமராவதி, 4. அழகு.
சுதருமம்— } நற்கிரியை.
சுதர்மம்— }
சுதர்ச்சி— } (வை. அ) சதுரக்கள்ளிமரம்.
சுதாச்சி— }
சுதர்மான்—ஓர் சாதி.
சுதலம்—கீழுலகத்தொன்று.
சுதனம்—ஆயுசப்பொது.
சுதன்—மகன், 2. இராசகுமாரன்.
சுதன்மம்—இந்திரன் மண்டபம், 2. தேவசபை, 3. சுதருமம்.
சுதன்மை—இந்திரன் சபாமண்டபம்.
சுதா— }
சுதாவாக— } தானாய்.
சுதாவிலே— }
சுதாகரன்—சந்திரன்.
சுதாரிக்க—(வி) மேற்கொள்ள, 2. வாதிக்க, 3. தைரியங்கொள்ள.
சுதி—சுருதி, 2. யாழினரம்பு.
சுதும்பு—ஓர் மீன்.
சுதேசம்—சொந்த தேசம்.
சுதை – சுவை, 2. அமிழ்து, 3. பால், 4. சுண்ணாம்பு, 5. வெண்மை, 6. புதல்வி, 7. உதைகாற்பசு, 8. மருந்து, 9. சுண்ணச்சாந்து, 10. பொருள்.
சுத்தசூனியம்—முழுப்பாழ், 2. கிரீச்சுரம்.

சுத்தசைதன்னியம் — சுத்த சுரூபஞானம்.
சுத்ததினம் — புண்ணியதினம், 2. வருஷப்பிறப்பு.
சுத்தமனம்—கபடமின்மை.
சுத்தம் — சுசி, 2. சுயம், 3. பிழையின்மை, 4. மாசின்மை, 5. கலப்பின்மை, 6. கறையின்மை, 7. சுத்தாவத்தை, 8. சொஸ்தம்.
சுத்தன் — பரிசுத்தன், 2. நின்மலன், 3. அரன், 4. ஐயன், 5. அருகன், 6. அரி.
சுத்தா—ஒருமிக்க.
சுஸ்தி—மந்தகுணம்.
சுத்தி—கம்மியர் கருவியிலொன்று.
சுத்தி — பவித்திரம், 2. மருந்து முதலியன செய்யுஞ் சுத்தி, 3 பரிசுத்தம், 4. சங்கு, 5. நெய்க்குத்தி, 6. இரப்போர்கலம்.
சுத்திகரம்—சுத்திசெய்கை
சுத்திகரிக்க—(வி) சுத்தியாக்க.
சுத்திகை—அகல், 2. கிளிஞ்சில்.
சுத்தியல்—சிறு சம்மட்டி.
சுத்துரம்— } (வை. அ) கண்டங்காலி.
சுத்துரு— }
சுநகன்—நாய், 2. நிருதிதிக்கு.
சுநந்தை — துஷ்யந்தன் புத்திரனாகிய பரதன் பாரி.
சுநாசீரன்—இந்திரன்.
சுநி—பெண்ணாய்.
சுநீதி—உத்தானபாதன் பாரி.
சுநீ—சனி.
சுந்தரபாண்டியன்—ஒரு பாண்டியன், 2. சௌந்தரபாண்டியன்.
சுந்தரம்—அழகு.
சுந்தரன்—சுந்தரமூர்த்தி, 2. அழகன்.
சுந்தரி—அழகி, 2. இந்திராணி, 3. துர்க்கை, 4. பெண், 5. மூஞ்சூறு.
சுந்தன்—ஓரரக்கன்.
சுபகரம்—சுபத்தைச் செய்வது.
சுபகிருது—ஓர் வருடம்.
சுபக்கம்— } சொந்தப்பட்சம், 2. சித்தியாரி லோரத்தியாயம்.
சுபட்சம்— }
சுபத்திரை—அருச்சுனன் மனைவி.
சுபமஸ்து—மங்கலச்சொல்.
சுபம்—மங்களம், 2. பாக்கியம், 3. நன்மை, 4. வாழ்த்து, 5. இருபத்தேழு யோகத்தொன்று.
சுபன்னன்—கருடன்.
சுபா—சுபை.
சுபாலம்—உபநிடதத்தொன்று.
சுபாலிகை—அடுப்பு.
சுபாவம்—இயல்பு, 2. இயற்கை யுணர்வு, 3. உண்மை, 4. சுபாவீகம், 5. வஞ்சகமின்மை, 6. மயக்கமின்மை, 7. நற்குணம், 8. உபநிடதத்தொன்று.
சுபாவீகம்—சுபாவகுணம்.
சுபானு—ஓர் வருடம்.
சுபிட்சம்— } செழிப்பு.
சுபிக்ஷம்— }
சுபுகம்—மோவாய்க்கட்டை.
சுபேதார்—ராணுவத்தில் ஓர் அதிகாரி.
சுபை—ஆறுமெல்லை.
சுப்பல்— } சள்ளி.
சுப்பி— }
சுப்பியம் — மாவிலிங்கம்பட்டை, 2. விளாம்பட்டை.
சுப்பிரசுதை—காட்டெருமைப்பால்
சுப்பிரதந்தி — வடமேற்றிசைப் பெண்யானை.
சுப்பிரதீபம்—மிகுவொளி, 2. வடகீழ்த்திசையானை.
சுப்பிரதீபன்—கீர்த்திபெற்றோன்.
சுப்பிரபேதகம்—சிவாகமத்தொன்று.
சுப்பிரமணியன்—குமரக்கடவுள்.
சுப்பிரமதுவா—(வை. அ) கூகைநீறு.
சுப்பிரம் — வெண்மை, 2. மிகுமொளி, 3. ஓர் யோகம்.
சுப்பிரயோகம்—மன்மதன் கணையிலொன்று.
சுப்பெனல்—(தொ. பெ) நீர்வற்றல்.
சுமங்கலம்—நன்மங்கலம்.
சுமங்கலி — } உமை, 2. மங்கலியப் பெண்.
சுமங்கலை — }
சுமங்கை—வறட்சுண்டிச்செடி, 2. ஆடுதின்னாப்பாலைச்செடி.
சுமடன்—கீழ்மகன், 2. அறிவீனன்.

சுமடு—அறிவின்மை, 2. சும்மாடு, 3. சுமை.
சுமதலை—பொறுப்பு.
சுமதி—பாரம், 2. மிகுதி.
சுமதி — நற்புத்தி, 2. அறிஞன், 3. நற்புத்தியுள்ளோன்.
சுமத்த—(வி) பாரஞ்சுமத்த, 2. கடன் முதலியன சுமத்த, 3. குற்றமேற்ற, 4. ஆக்கினைசுமத்த.
சுமத்திரை—பாண்டுவின் மறுமனைவி.
சுமப்பிக்க—(வி) பாரமெடுப்பிக்க, 2. தீவினைசுமத்த.
சுமம்—பூ.
சுமரணம்— } சுவரணை.
சுமரவணை— }
சுமருதல்—(தொ. பெ) சுமக்குதல்
சுமலி—கள்.
சுமனசம்—பூ.
சுமாரகம்—ஞாடகம்.
சுமார்—ஏறக்குறைய.
சுமாலி—கள், 2. ஓரிராக்கதன்.
சுமித்திரை—தசரதன் மனைவி.
சுமிர்தி— } தருமசாத்திரம்.
ஸ்மிருதி— }
சுமுகம்—நன்முகம்.
சுமுகன்—முகவசீகரன்
சுமுத்திரை — நேர்மை, 2. சரியளவு, 3. சரி.
சுமை—பாரம், 2. கடமை, 3. குடும்பபாரம்.
சுமையடை — சும்மாடு.
சுமையிறக்கி—சுமைதாங்கி.
சும்ப—(வி) வாடிச்சுருங்க.
சும்பகம்—ஊசிக்காந்தம்.
சும்பனம் — இதழ் முதலியன சுவைக்கை, 2. முத்தஞ்செய்கை.
சும்பன்—காமாதுரன்.
சும்புள்—(வை. அ) கடம்புமரம்.
சும்மா — தொழிற்படாமையாய், 2. வாளா, 3. இலவசமாய், 4. பொருணோக்கின்றி, 5. மௌனமாய், 6. உபசாரமின்றி, 7. முகாந்தரமின்றி, 8. இயல்பாய், 9. ஒழிவின்றி.
சும்மாடு—சுமையடை.
சும்மை—சுமை, 2. நெற்போர், 3. ஒலி, 4. ஊர், 5. நகரம், 6. நாடு, 7. ஆவிரைச்செடி.
சுயஞ்சோதி—இயற்கையொளி, 2. கடவுள்.
சுயம் — தானாகுகை, 2. ஏகத்துவம், 3. சுபாவம், 4. சுயபுத்தி, 5. நிதம்
சுயம்பாகி — சமையற்காரன், 2. சவுக்காரம்.
சுயம்பு — தானாகவிருந்தல், 2. சுயாதீனம், 3. இபறகை, 4. சுயசாயல், 5. கடவுள், 6. பிரமன், 7. சுபாவம்.
சுயம்வரம்—சுவயம்வரம்.
சுயிரகம்—(வை. அ) குசைப்புல்.
சுயேச்சை—தன்னிச்சை.
சுயோகி— } (வை. அ) கள்.
சுலோகி— }
சுயோதனன்—துரியோதனன்.
சுரகுரு—வியாழன்.
சுரக்க—(வி) உண்டாக, 2. ஊற, 3. பரவ, 4. தோன்ற, 5. பயக்க.
சுரங்கம்—நிலவறை, 2. கீழறுக்குமறை, 3. கள்ளன் செய்யுஞ் சுரங்கம், 4. ஒளிப்பிடம்.
சுரசம் — மதுரச்சாறு, 2. முதிர்ந்தசாறு, 3. சிறு கிழங்கு, 4. பாதரசம், 5. துளசிச்செடி.
சுரசனி—இரா.
சுரடி—ஓரிராகம்.
சுரவணை—சுவரணை.
சுரண்ட — (வி) நகமுதலியவற்றினாற் சுரண்ட, 2. கவர, 3. சீண்ட, 4. தூண்ட, 5. சண்டையுண்டாக்க, 6. விபசாரஞ்செய்ய.
சுரதம்—புணர்ச்சி, 2. இரதம், 3. மருந்திழிசாரம்.
சுரதாக்கு — (வை. அ) அரத்தை, (ஒரு செடி.)
சுரதாரு—கற்பகம்.
சுரநதி—கங்கை, 2. ஆகாயகங்கை.
சுரபி—வாசனை, 2. பசு, 3. பிரமிப்பூடு.
சுரபு—இலவம்பிசின்.
சுரபுன்னகம்— } ஒரு மரம்.
சுரபுன்னை— }

சுரப்பு—சுரத்தல்.
சுரமதி—சிலந்தி.
சுரமலி—
சுரமலிகம்— } செந்திக்கரப்பன்.
சுரம்—காடு, 2. பாலைநிலம், 3. அருநெறி, 4. வழி, 5. கள், 6. உப்பு, 7. நகத்தடி, 8. உட்டுளை.
சுரம்—காய்ச்சல், 2. ஏழிசை, 3 இராகபேதம், 4. இராகத்தகுதி.
சுரர்—வானோர்.
சுரழ்—(வை. அ) இலவம்பிசின்.
சுரளிகை—(வை. அ) பாலைமரம்.
சுரன்—அறிஞன், 2. சூரியன்.
சுரா—கள்.
சுராட்டு—இந்திரன்.
சுராட்புருடன் — வாஸ்து புருஷன், 2. மகாவிஷ்ணு, 3. சிவன்.
சுராலயம்—மேரு.
சுராளம்—அதிவேகம்.
சுரி — ஆணரி, 2. சங்குச்சுரி, 3. சேறு, 4. எட்டுத்துளை.
சுரிகுழல் — பெண்மயிர், 2 பெண், 3. கவசம்.
சுரிகை—உடைவாள், 2, கவசம்.
சுரிதகம்—ஓர்வித ராகச்சுருப்பு.
சுரிதல் — (தொ. பெ) சுழித்தல், 2 சுருங்கல்.
சுரிப்புறம்—சங்கு, 2. நத்தை, 3. துவாரமுள்ளபுறம்.
சுரிமுகம்—சங்கு, 2. நத்தை.
சுரியல்—இளைஞர்மயிர், 2. பெண்மயிர், 3. நீர்ச்சுழி.
சுரியூசி—தமருசி.
சுரீரெனல்—விரைவுக்குறிப்பு.
சுருக்க — (வி) அடக்க, 2. சீலை முதலிய சுருக்க, 3. சங்கிரகிக்க, 4. குறைக்க, 5. உறுப்படக்க, 6. உட்சுருக்க, 7. கட்ட, 8. புத்தியைக்குறைக்க.
சுருக்கம்—அடக்கம், 2. சங்கிரகம், 3. குறைவு, 4. சிறுமை, 5. தரித்திரம், 6. வஸ்திரச்சுருக்கு, 7. கட்டு.
சுருக்கு — சுருங்கினது, 2. கண்ணி, 3. கயிற்றுச்சுருக்கு, 4. மடிப்பு.
சுருக்கு—நெய்த்துடுப்பு.
சுருங்க—(வி) குறைய, 2. சிறுக, 3. குவிய, 4. சங்கிரகமாக, 5. அடங்க, 6. செலவு சுருங்க, 7. மனந்தளர, 8. ஒழுக்கந்தப்ப, 9. அலைசுருங்க, 10. அவாசுருங்க, 11. அறிவு சுருங்க.
சுருங்கல் — நுழைவாயில், 2. மாலை, 3. நிரைவு.
சுருங்கு—சலதாரை.
சுருங்கை—கோட்டையிற் கள்ளவாயில், 2. நுழைவாயில், 3. மதகு.
சுருசுரெனல்—விரைவொலிக்குறிப்பு.
சுருட்ட—(வி) சுருளச்செய்ய, 2. அலைசுருட்ட, 3. முழுதுங்கவர.
சுருட்டி—ஆலவட்டம், 2. ஓரிராகம், 3. சீலைச்சுருட்டி.
சுருட்டு—புகையிலைச் சுருட்டு, 2. சுருள், 3 சீலைச்சுருட்டு, 4. உபாயம்.
சுருட்டை—ஓர் பாம்பு, 2. மயிர்ச்சுருள்.
சுருணி—பானைத்தோட்டி.
சுருணை — நூற்சுருள், 2. வைக்கோற்சுருள், 3. மயிர்ச்சுருள், 4. ஓர் வளைவு.
சுருதகீர்த்தி—அர்ச்சுனனுக்குத் திரௌபதியிடத்துப் பிறந்த புத்திரன்.
சுருதி — ஒலி, 2. நூல், 3. காது, 4. சுதி, 5. சுரம், 6. மந்திரம், 7. இசை, 8. மங்கலச்சொல்.
சுரும்பர்—
சுரும்பு— } வண்டு, 2. ஆண்வண்டு.
சுரும்பாயன்—மன்மதன்
சுருவம்—
சுருவை— } நெய்த்துடுப்பு.
சுருளல்—மயிர்ச்சுருள்.
சுருளுதல்—(தொ. பெ) சுருளாதல், 2. வளைதல்.
சுருவளா—கொடிகளின் கூந்தல்.
சுருள்—சுருட்டு, 2. மயிர்ச்சுருள் முதலியன, 3. வெற்றிலைச்சுருள், 4. தாமரையுட்சுருள், 5. பெண்மயிர், 6. ஐம்பாலினொன்று.
சுரூபம்—நல்லுருவம், 2. உருவம்.
சுரூபவதி—அழகி.
சுரேசன்—
சுரேந்திரன்— } இந்திரன்.

சுரை—ஓர்கொடி, 2. உட்டுளை, 3. விலங்கின்மூலை, 4. பசு, 5. அம்புத்தலை, 6. பூண்.
சுரை—கள்.
சுரோணராசாவர்த்தம் — சிவப்பிரத்தினம்.
சுரோணிதம்—உதிரம், 2. மகளிர்சூதகம்.
சுரோத்திரம்—காது, 2. கேள்வி.
சுரோத்திரியம் — கற்றோர்க்கிடப்பட்ட காணி முதலியன.
சுலபம்—எளிது, 2. அற்பம்.
சுலவல்— / சுலவுதல்— } (தொ. பெ) சுழலல்.
சுலு—இலேசு.
சுலோகம்—ஆரியச்செய்யுள், 2. புகழ், 3. வார்த்தை, 4. பழமொழி.
சுலோகி—கள்.
சுலோசனம் — நல்லகண், 2. மூக்குக் கண்ணாடி.
சுலோபம்—எறும்பு, 2. எளிது, 3. அற்பம், 4. மூதுரை.
சுல்லி—அடுப்பு.
சுல்லு—வெள்ளி.
சுவ— / ஸ்வ— } சொந்தமான.
சுவச்சம்—சொக்கம், 2. சுகம்.
சுவடி—எழுதிய புத்தகம்.
சுவடு—அடிச்சுவடு, 2. தழும்பு, 3. அங்கவடி, 4. கட்டு, 5. கபடம், 6. வண்டித்தடம், 7. இருப்புக்கவசம.
சுவணகாரர்—தட்டார்.
சுவணம்—பொன், 2. கருடன், 3. கழுகு.
சுவதந்திரம்—தன்னிட்டப்படி செய்யுஞ் செயல்.
சுவதந்திரியம்—சுவதந்திரம்.
சுவஸ்தம்—ஆரோக்கியம்.
சுவஸ்தலிகிதம் — சொந்தக் கையெழுத்து.
சுவஸ்தி— / சுவத்தி— } மங்கலமொழி.
சுவஸ்திகம்— / சுவத்திகம்— } மங்கலவடையாளம், 2. நவாசனத்திலொன்று.
சுவப்பிரம்—வலை, 2. நரகம்.
சுவம்—ஐசுவரியம்.
சுவயம்— / ஸ்வயம்— } தான், 2. உரிமை.
சுவயம்வரம்—தானாகவரித்து மணமாலையிடல்.
சுவரகழ்கருவி—கன்னக்கோல்.
சுவரவண்ண—உணர்ச்சி.
சுவரொட்டி—சுவர்முள்ளங்கிப்பூடு, 2. ஆட்டின் மண்ணீரல், 3. அணைசுவர்.
சுவர்—மதில், 2. வீட்டுச்சுவர்.
சுவர் — தேவலோகம், 2. ஆகாயம், 3. அலங்காரம், 4. காயத்திரியி லோருறுப்பு.
சுவர்க்கம்—தேவலோகம், 2. ஸ்தன்னியம்.
சுவர்க்கருவிலி—ஓர் பாம்பு.
சுவர்க்கோழி—ஓர் வண்டு.
சுவர்ச்சாதி—(வை. அ) சத்திசாரம்.
சுவர்ணம்— / சுவர்னம்— / சுவர்ன்னம்— } பொன்.
சுவர்ன்னயூதி— / சுவன்னயூதி— } (வை. அ) செப்பு மல்லிகைச்செடி.
சுவலை—அரசமரம்.
சுவலோகம்—மேலுலகத்தொன்று.
சுவல் — மேடு, 2. முதுகு, 3. தோண்மேல், 4. பிடரி, 5. குதிரைக்கழுத்தின் மயிர்.
சுவவு — பறவைமூக்கு, 2. மூஞ்சுறு, 3. சுவர்க்கம்.
சுவற — (வி) வற்ற, 2. உறிஞ்ச, 3. நெருப்பிற் சுவற.
சுவற்பம்—அற்பம்.
சுவற்ற—(வி) சுவறச்செய்ய, 2. அழிக்க.
சுவா—நாய்.
சுவாகதம் — க்ஷேமம் விசாரித்தல், 2. கிளி.
சுவாகா—மந்திரத்தி னோருறுப்பு, 2. அக்கினிதேவன் மனைவி.
சுவாசகம் — (வை. அ) பேராமுட்டிக் கொடி, 2. விஷமுட்டிச்செடி.
சுவாசகம்— / சுவாசம்— } (வை. அ) சவட்டுமண்.
சுவாசம்—உயிர்ப்பு, 2. நல்லிருப்பிடம்.
சுவாதகந்தி—இத்திமரம்.

சுவாதந்திரியம்—சுதந்திரம்.
சுவாதம்—சுவாசம்.
சுவாதி—சோதிநாள்.
சுவாதிட்டானம்— } ஆருதாரங்களி
சுவாதிஷ்டானம்— } லொன்று.
சுவாதீனம்—சுயாதீனம்.
சுவாது—தித்திப்பு.
சுவாதுகண்டம்—நெரிஞ்சில், (ஒரு முட்பூண்டு.)
சுவாதுகந்தி—(வை. அ) துளசிச்செடி.
சுவாத்தியம்— } பாக்கியம், 2. சுகம்,
சுவாஸ்தியம்— } 3. இன்பம்.
சுவாத்தியாயம் — வேதமோதுகை, 2. அத்தியயனம்.
சுவாந்தம்—மனம்.
சுவாபம்—இயல்பு.
சுவாபாவிகம்—உரிமை, 2. சாணுயிருக்கை.
சுவாமி — எசமானன், 2. கடவுள், 3. குரு, 4. அருகன், 5. முருகன், 6. சிவன், 7. பொன்.
சுவாமிநாதன்—கந்தன்.
சுவாயம்பு— } ஓர் மனு.
சுவாயம்புவமனு— }
சுவாயம்புவம்—சிவாகமத்தொன்று.
சுவாய்—கப்பலிறேர்கயிறு.
சுவாரசம்— } சாரசியம், 2. வெள்ளி
சுவாரசுயம்— } லோத்திரம்.
சுவாரி—கப்பலின் பின்னணியம்.
சுவார்ச்சிதம்— } தன் சம்பாத்தியம்.
சுயார்ச்சிதம்— }
சுவார்த்தம்—இயல்பாயுள்ளது, 2. சுயநயம்.
சுவாலிக்க—(வி) மிக எரிய.
சுவாலை—சொலிப்பு.
சுவானம்—நாய்.
சுவானுபூதி—தெய்வ அறிவு.
சுவான்—உடையவன்.
சுவி—(வை. அ) இத்திமரம், 2. துளசிச்செடி.
சுவிகரம்— } அங்கீகரிப்பு, 2. அனு
சுவிகாரம்— } பவம், 3. தனதாக்குதல்.
சுவிகரிக்க—(வி) உடன்பட, 2. அநுபவிக்க, 3. தனதாக்க.
சுவிகை—கள், 2. கச்சோலம்.
சுவிசாலம்—அதிகவிசாலம்.
சுவிசேஷம்— } நற்செய்தி.
சுவிசேடம்— }
சுவீகாரம்—சுவிகாரம்.
சுவுகம்—மோவாய்க்கட்டை.
சுவேச்சை— } தன்னிச்சை.
சுயேச்சை— }
சுவேதகம்—சவரிலோத்திரம்.
சுவேதகாண்டம்—வஞ்சிக்கொடி.
சுவேதகுசுமம் — (வை. அ) வெள்ளெருக்கு, (ஓர் செடி.)
சுவேதசம்—வேர்வையிற்பிறப்பன.
சுவேதசாரம்—நாணற்புல்.
சுவேதமூலம்—(வை. அ) சாரணை, (ஓர் பூடு.)
சுவேதம் — நாணற்புல், 2. மாவிலிங்கமரம், 3. வஞ்சிமரம்.
சுவேதம் — வெண்மை, 2. வெள்ளி, 3. வேர்வை.
சுவேதவனம்—திருவெண்காடு.
சுவேதவாகனன்—அருச்சுனன்.
சுவேதனை—தன் வேதனை.
சுவேதாசுவதரம்— } உபநிடதத்தொ
சுவேதாச்சுவதரம்— } ன்று.
சுவை — உருசி, 2. இனிமை, 3. இன்பம், 4. ஐம்புலத்தொன்று, 5. சித்திரைநாள்.
சுவைக்க—(வி) உருசிபார்க்க, 2. முலையுண்ண.
சுழங்க—(வி) உழல.
சுழல—(வி) சுலவ, 2. உருள, 3. பிறவியிற் சுழல, 4. மனஞ்சுழல, 5. சுற்ற, 6. உழல.
சுழலமாட—(வி) பெறுதற்கு முயல, 2. கவர.
சுழலயாட—(வி) களைத்துப்போக.
சுழல்—சுழிநீர் முதலியன, 2. காற்றுருடி, 3. வளைதடி, 4. வஞ்சனை.
சுழற்ற — (வி) சுழலச்செய்ய, 2. சுற்றியாட்ட, 3. தலையைச் சுழற்ற.
சுழாரை—பொன்னூவிரை, (ஒரு செடி.)
சுழி — நீர்ச்சுழிமுதலியன, 2. அட்சரச்சுழி, 3. மயிர்ச்சுழி, 4. தொப்புட்

சுழி, 5. அங்கச்சுழி, 6. கல்லெறி சுழி.
சுழிகுளம் — சித்திரக்கவியினொன்று, அஃது நான்கடியுஞ்சுற்றி வாசிக்கி னுஞ் சவரத்தொடுக்குங்கவி.
சுழிகை — கள், 2. ஓர் சிவஸ்தலம், 3. சுழியல்.
சுழிக்காற்று—சூறைக்காற்று.
சுழிக்குதல்—(தொ. பெ) சுருட்டுதல், 2. வட்டமிடுதல்.
சுழித்தல்—எழுச்சி, 2. சுழிக்குதல்.
சுழிமுனை— } ஆறுதாரத்தினூடுருவி
சுழுமுனை— } நிற்பது, 2. நடுநாடி.
சுழியல்—சுருள்.
சுழியன்—சுழல்காற்று, 2. வஞ்சகன்.
சுழியாணி—கதவுநிற்குங் குழிக்குற்றி.
சுழிவு—ஒளிவு.
சுழுத்தி—அயர்ந்த நித்திரை.
சுழுந்து—சுளுந்து.
சுழுனை—சுழிமுனை.
சுளகு—முறம், 2. விசாகநாள.
சுளி—(வை. அ) புளியாரைக்கீரை.
சுளிகை—(வை. அ) முருங்கைமரம்.
சுளிக்கு—ஊன்றுகோல்.
சுளிப்பு— } சினம், 2. சினக்குறிப்பு.
சுளிவு— }
சுளிய—(வி) சினக்க.
சுளுகு—பூகபுத்தி, 2. சூதசிரவார்த்தை, 3. இலகு.
சுளுக்க — (வி) கை கால் முதலியன சுளுக்க.
சுளுக்கு—உளுக்கு.
சுளுந்து—கோரான்செடி, 2. சுள், 3. சுற்றுஞ்சுளுந்து.
சுளுவு—சுலபம், 2. இலேசு, 3. தணிவு.
சுளை—பலா முதலியவற்றின் சுளை.
சுள்— } உறைப்பு, 2. கருவாடு, 3.
சுள்ளு— } அற்பம்.
சுள்ளக்கம்—கோபம், 2. மேட்டிமை, 3. வேர்க்குரு.
சுள்ளக்கன்—கோபி, 2. போக்கிரி.
சுள்ளக்காய்—மிளகாய்.
சுள்ளம்—கோபம்.
சுள்ளல்—மென்மை.
சுள்ளாணி—மெல்லிய ஆணி.
சுள்ளாபிக்க — (வி) சுள்ளாப்புக்காட்ட, 2. தீவிரிக்க, 3. காய.
சுள்ளாப்பிக்க—(வி) அடிக்க, 2. கதிரடிக்க.
சுள்ளாப்பு — மழையினுறுதிகாட்டுங் குறிப்பு, 2. உறைப்பு, 3. அடி, 4. பழிசொல், 5. தீவிரம்.
சுள்ளி—சிறு விறகு, 2. சிறு கோல், 3. அணிச்சமரம், 4. ஆச்சாமரம், 5. ஞாழல்மரம், 6. மாமரம், 7. மயிர்க்கொன்றைமரம்.
சுள்ளிட — (வி) உறைக்க, 2. மனம்வருந்த.
சுள்ளுப்பூச்சி—ஓர் வண்டு.
சுள்ளெறும்பு—கொள்ளியெறும்பு.
சுள்ளை — மட்கலஞ்சுடுஞ்சூளை, 2. காளவாய்.
சுறட்டன்—தொந்தரைகாரன்.
சுறட்டு — மூர்க்கம், 2. தொந்தரை, 3. சிக்கு, 4. தலையிடுகை.
சுறணம்—கருணை, (ஒரு செடி, இது கிழங்குள்ளது.)
சுறண்ட—(வி) நகமுதலியவற்றாற் சுறண்ட.
சுறவம்— } சுறு.
சுறவு— }
சுறவை—சுள்ளக்கம்.
சுறு — மகரமீன், 2. மகரராசி, 3. தேக அழுக்கு.
சுறுளம்—வேகம், 2. கோபம்.
சுறீரெனல்—கடித்தல், 2. சுறுசுறெனல், 3. அச்சக்குறிப்பு.
சுறுக்கு—விரைவு, 2. வேகம், 3. ஆத்திரம், 4. கூர்மை, 5. காரம்.
சுறுக்கெனல்—கடுப்பின்குறிப்பு.
சுறுசுறுத்தல்—(தொ. பெ) ஆத்திரப்படல்.
சுறுசுறுப்பு—தீவிரிப்பு, 2. சாக்கிரதை.
சுறுசுறெனல்—ஒலிக்குறிப்பு, 2. வேகங்கொள்ளல், 3. முள்ளேறல்.
சுறுதி—சுறுசுறுப்பு.
சுறை—(வை. அ) கொத்தான்கொடி.
சுற்பம்—செம்பு, 2. சொற்பம்.

சுற்ற–(வி) வட்டமாயோட, 2. சுற்றிப் போக, 3. அலைய, 4 தலைசுற்ற, 5. நூன் முதலிய சுற்ற.
சுற்றத்தார்–இனத்தார், 2. துணைவர்.
சுற்றம்–உறவு, 2. உற்றார்.
சுற்று – சுற்றளவு, 2. வட்டம், 3. சுற்றோட்டம், 4. சுற்றுவழி, 5. நூன்முதலியவற்றின் சுற்று, 6. மரச்சுற்று, 7. உருளையின்சுற்று, 8. சுற்றுமதில், 9. மதிற்சுற்று, 10. புகையிலைச் சுற்று, 11. விரற்சுற்று, 12. நகச்சுற்று.
சுற்றுவாரி–கல்லூரி, 2. சுவர்ப்புறத்து நீண்ட வுத்திரம்.
சுனகன்–நாய்.
சுனக்குடம் – (வை. அ) சதுரக்கள்ளி மரம்.
சுனம்–வெள்ளுள்ளி.
சுனுசீரன்– } இந்திரன்.
சுனுசு– }
சுனுயாசமாய்–இலகுவாய்.
சுனுவணி–விண்ணப்பம் வாசிக்கை.
சுனி–பெண்ணாய்.
சுனுக்கு–சுனக்குடம்.
சுனை – மலைச்சுனை, 2. பசும்புற்றரை, 3. நினவு.
சுனை–(வி) குழை, 2. வாடு.
சுன்–சனி, 2. பூச்சியம், 3. வெண்மை.
சுன்னச்சி–(வை. அ) சத்திசாரம்.
சுன்னத்து–விருத்தசேதனம்.
சுன்னம்–பூச்சியம்.
சுன்னிதம்–நுண்மை.
சுன்னுக்கட்டி–பாற்கட்டி.
சுன்வனை–பூச்சியம்.

## சூ

சூ–ஓர்உயிர்மெய், 2. நாயைஏவுமொலி.
சூகம்–நெல்வால், 2. ஊர்வன.
சூகரம்–பன்றி, 2. மான்.
சூகை – சூகையெறும்பு, 2. வீட்டின் பின்புறம், 3. யானை, 4. தலைசுற்றல்.
சூக்கம்–சூட்சம்.
சூக்காய்–ஓர் நண்டு.
சூக்குமசரீரம்–நுண்ணிய வடிவான உட்சரீரம்.
சூக்குமம்– } சிவாகமத்தொன்று, 2. அற்பம், 3. அணு.
சூக்ஷ்மம்– }
சூக்குமில்–சிலந்திப் பூச்சிக்கூடு.
சூக்குமை–வாக்கு நாலிலொன்று.
சூக்குளி–(வை. அ) வெற்றிலை.
சூசகவாயு–சூசிகாவாயு.
சூசகன்–ஒற்றன், 2. உவாத்தி.
சூசம்–துருவாட்டேறு.
சூசனம்– } போதனை, 2. கூர்மை, 3. குறிப்பு.
சூசனை– }
சூசி– } ஊசி, 2. குறிப்பு.
சூசிகை– }
சூசிகாபாணம்–ஓர் பாணம்.
சூசிகாவாயு–சூதகவாயு.
சூசிக்கல்–ஊசிக்காந்தம்.
சூசியம்–சூட்டிறைச்சி.
சூசுகம்–முலைக்கண்.
சூச்சான்–ஓர் விளையாட்டு.
சூட–(வி) அணிய, 2. கிரீடஞ்சூட, 3. நாமஞ்சூட, 4. மாடு முதலியவற்றைச்சுட.
சூடகம்–கைவளை.
சூடம்–உச்சிச்சடை.
சூடன்–ஆரதிகருப்பூரம்.
சூடாமணி–ஒரு தேவமணி, 2. முடிமணி, 3. ஓர் நூல்.
சூடாமணி நிகண்டு–மண்டலபுருடன் செய்த ஒரு நிகண்டு.
சூடாவலக்கல்–ஓர் கல்.
சூடி–புடைவை.
சூடிகை–முடி.
சூடிக்கொடுத்தாள்– ஆண்டாளம்மையார்.
சூடிச்சி–(வை. அ) எவட்சாரம்,
சூடிணர்–கோங்குமரம்.
சூடு–வெப்பம், 2. சுடுசூடு, 3. அனல், 4. நென்முதலியவற்றின்போர், 5. அரிக்கட்டு.
சூடை – ஒருமீன், 2. குடுமி, 3. கைக்கடகம்.
சூட்சம் – யூகம், 2. நூதனம், 3. உபாயம், 4. நுட்பம், 5. சுருக்கம், 6. தந்திரம், 7. சூத்திரம்.

சூட்சாதி சூட்சம்— } அதிசூக்குமம்.
சூட்சானு சூட்சம்— }
சூட்சி—உபாயம்.
சூட்சுமம்—நுட்பம், 2. சூட்சுமசரீரம், 3. தந்திரம்.
சூட்ட—(வி) அணிய, 2. மாலையணிய, 3. நாமஞ்சூட்ட, 4. குற்றஞ்சாட்ட, 5. மணமாலைசூட்ட, 6. பாமாலைசூட்ட, 7. நியமிக்க, 8. சுமத்த.
சூட்டிக்கை—கூர்மைப்புத்தி.
சூட்டு—கூர்மை.
சூட்டு—நுதலணி, 2. நுதலணிமாலை, 3. மாலை, 4. மயில் முதலியவற்றின் சூட்டு, 5. பாம்பின் சூட்டு.
சூதகசத்துரு—(வை. அ) காந்தம்.
சூதகம்—பிறப்பு, 2. மகளிர் தொடக்கு, 3. மரணசூதகம், 4. தீட்டு, 5. பழமை.
சூதசங்கிதை—வியாசர் சூதர்பொருட்டுச் செய்த சங்கிதை.
சூதநதி—பொருந்தாநதி.
சூதநோக்கல்—நீலாஞ்சனக்கல்.
சூதபாஷாணம்—இரசத்திலுண்டாக்கும் பாஷாணம்.
சூதமகாமுனி— } ஒரு ரிஷி.
சூதமாமுனி— }
சூதம்—புளிமாமரம், 2. மாமரம், 3. மன்மதன் கணையிலொன்று, 4. பாதரசம், 5. இரதம், 6. பவளமல்லிகைமரம், 7. வண்டு, 8. சூதாடு கருவி, 9. சூது.
சூதர்—புகழ்வோர், 2 தேர்ப்பாகர், 3. பாணர், 4. வியாசர் மாணாக்கர், 5. சூதாடுபவர்.
சூதவஞ்சனம்—நீலாஞ்சனக்கல்.
சூதவம்—வண்டு.
சூதானம்—எச்சரிப்பு.
சூதிகை—பிரசவித்தவள்.
சூது—தாமரை, 2. ஓரிதழ்த்தாமரை.
சூது—சூதாடுகருவி, 2. சூதாட்டு, 3. பலவகைச்சூது, 4. வஞ்சகம்.
சூத்தி— } பாதரட்சை.
ஜூத்தி— }
சூத்திரதாரன்—கூத்தாட்டுபவன்.
சூத்திரதாரி — கடவுள், 2 பதுமையாட்டி.
சூத்திரப்பதுமை— } கயிற்றினாலாட்டும்பாவை.
சூத்திரப்பாவை— }
சூத்திரப்பிரதிமை— }
சூத்திரம்—இயந்திரம், 2. சூட்சவேலை, 3. உபாயம், 4. அரும்பொருளடக்கம், 5. இரகசியம், 6. இலக்கணச்சூத்திரம், 7. குறிப்பு, 8. கொள்கைச்சூத்திரம், 9. பஞ்சிநூல்.
சூத்திரன் — புஷ்பராகம், 2. வைடூரியம்.
சூத்திரன்—நான்காம் வருணத்தோன்.
சூத்திரிக்க—(வி) நூற்குவிதிகட்ட.
சூத்மதை—கெடுதல்.
சூந்துமம் — (வை. அ) சிலந்திநாயகப்பூடு.
சூபம்—ஓர் பயறு.
சூப்ப—(வி) சும்பனம்பண்ண.
சூப்பி—ஓர் சிற்றுண்டி.
சூப்பு—கறிரசம்.
சூம்ப-(வி) வாடிப்போக, 2. முகஞ்சூம்ப, 3. பருச்சூம்ப.
சூர—(வி) பஞ்சுசூர, 2. மயிர் வகிர, 3. பயிர் வகிர, 4. பிறர் பொருளைக்கவர.
சூரசூதன்—புதன்.
சூரசூதன்—அருணன்.
சூரசேனம்—ஓர் தேசம்.
சூரசேனன் — கிருஷ்ண பகவானின் பாட்டன்.
சூரடிக்க—(வி) மயிர்க்கருகலடிக்க.
சூரணம்—தூள், 2. கருணைக்கிழங்கு.
சூரணிகை—கருத்துப்பொருள்.
சூரணிக்க—(வி) தூளாக்க.
சூரத்து—சூரம், 2. ஓர் தேசம்.
சூரத்துவம்—வீரம்.
சூரபன்மன்— } சுப்பிரமணியருக்கு ஒருபாதி மயிலும் மறுபாதி கோழிக்கொடியுமான ஓரசுரன்.
சூரபதுமன்— }
சூரபற்பன்— }
சூரம்—வீரம், 2. கடலை, 3. அச்சம்.
சூரல்—பிரம்பு.
சூரன்—சூரியன், 2. வீரன், 3. கிருஷ்ணபகவானின் பாட்டன், 4. தீ, 5.

நாய், 6. சூரபன்மன், 7. கோழி, 8. கௌரிபாஷாணம்.

சூரி—ஓர் கத்தி.

சூரி—புலவன், 2. காளி, 3. காடுகாள், 4. வீரி.

சூரியகரந்தை—ஒரு பூடு.

சூரியகலை—பிங்கலை.

சூரியகாந்தம் – சூரியசன்னிதானத்துத் தீக்காலுங்கல், 2. பொழுது வணங்கி யென்னுமொருசெடி.

சூரியகாந்தி—எட்பூ, 2. சூரியப்பிரபை, 3. ஒரு செடி.

சூரியகிரகணம்— } சூரியனைப் பாம்பு பற்றுகை.
சூரியகிராணம்— }

சூரியபுத்திரன்— } கன்னன், 2. சுக்கிரீவன், 3. சனி.
சூரியதனயன்— }
சூரியகுமாரன்— }

சூரியப்பிரபை— } சூரியகாந்தி, 2. விருத்தகேடகம்.
சூரியப்பிரவை— }

சூரியன் – சூரியபகவான், 2. ஞாயிறு, 3. சோழன், 4. செவ்வெருக்கஞ்செடி, 5. செம்புமலை.

சூரியாஸ்தமனம்—மாலைப்பொழுது.

சூரியோதயம்—சூரியன் உதித்தல்.

சூருமம்—குசைப்புல், 2. மாந்தப்புல்.

சூரை—ஓர்மீன், 2. ஓர்செடி, 3. நெற்றிப்புல், 4. தூதுளைக்கொடி.

சூர்—துன்பம், 2. நோய், 3. அச்சம், 4. வனதேவதை, 5. தெய்வப்பெண், 6. தெய்வம், 7. சூரனென்னுமரசன், 8. மிளகு, 9. வால்மிளகு.

சூர்த்தல்—(தொ. பெ) சுழலல்.

சூர்ப்பநகை— } இராவணன் தங்கை.
சூர்ப்பநகி— }

சூர்ப்பம்—சுளகு.

சூர்ப்பு—சுழற்சி.

சூல—(வி) தோண்ட, 2. அறுக்க.

சூலக்குறடு—ஓராயுதம்.

சூலதரன்— } சிவன், 2. வயிரவன்.
சூலபாணி— }

சூலம்—ஓராயுதம், 2. கழு, 3. கொடித் [illegible] சூலம், 4. இருபத்தேழ் யோ[illegible]ான்று, 5. இரேவதி நாள்
[illegible]ா. பெ) சூலுடைதல்.

சூலி—சிவன், 2. கர்ப்பவதி, 3. துர்க்கை, 4. காளி.

சூலினி—வெற்றிலை, 2. சவுக்காரம்.

சூலை—ஓர் நோய்.

சூல்—கருப்பம், 2. பயிர்க்கரு, 3. முகிற்கரு.

சூல்— } குதிரை முதலியவற்றின் மெய்யுறை.
சூல— }

சூவாரை—ஓர் மீன்.

சூவானம்—அட்டில்.

சூழ—(வி) வளைக்க, 2. வட்டமிட, 3. கூட, 4. ஆராய, 5. மேல்விழ, 6. கருத, 7 சுற்ற.

சூழல்—கருத்து, 2. குறிப்பு, 3. இடம், 4. கூட்டம்.

சூழி—உச்சி, 2. உச்சிக்கொண்டை, 3. யானை முகபடாம், 4. சுனை, 5. குளம், 6. கடல்.

சூழிகை—கள்.

சூழியல்— } வீட்டிறப்புத் தாங்கு கம்பு.
சூழியற்கம்பு— }

சூழ்ச்சி—ஆராய்வு, 2. ஆலோசனை, 3. நுண்ணறிவு, 4. உபாயம்.

சூழ்வு—ஆராய்கை, 2. உபாயம், 3. சுற்றுகை.

சூழ்வோர்—மந்திரிகள், 2. உறவினர், 3. சூழ்ந்து நிற்பவர்.

சூளாமணி—சூடாமணி, 2. சைன காப்பிய நூலிலொன்று.

சூளி—ஆண்மயிர்.

சூளிகம்—அப்பவர்க்கம்.

சூளிகை—யானைச் செவியடி, 2. அரமியம்.

சூளை—குயவன் சூளை.

சூளை—வேசி.

சூள்—சத்தியம், 2. ஆணை, 3. சபதம்.

சூறல்—(தொ. பெ) குடைதல்.

சூறன்—மூஞ்சூறு.

சூறவளி—சுழல்காற்று.

சூறவாரி—சூறைக்காற்று.

சூறை—சுழல்காற்று, 2. ஆறலைத்தல், 3. கொள்ளை.

சூனம்—பூமலர், 2. மான்.

சூனம்—வீக்கம்.

சூனியகாரன்—மாரணவித்தைக்காரன்.
சூனியத்துவம்—வெறுமை.
சூனியம்—மாரணவித்தை, 2. அசுசி, 3. இன்மை, 4. பாழ்.
சூனியவாதம்—நாஸ்திகமதம்.
சூனியவாதி—ஓர் சமயத்தான்.
சூனியன்—மூடவன்.
சூனு—மகன்.
சூனை—சொத்தை, 2. குற்றம்.
சூனை—மகள்.
சூன்றல்—(தொ. பெ) தோண்டல்.
சூன்றிடல்—(தொ. பெ) குடைதல்.

## செ

செ—ஓருயிர்மெய், 2. செம்மைக்குறிப்பு.
செகசோதி—மிக்கவொளி.
செகதகுரு—கம்மாளன்.
செகநாதன்—கடவுள்.
செகம்— } உலகம்.
செகன்— }
செகரிகம்—(வை. அ) நாயுருவிச்செடி.
செகனவாதம்—ஓர் வாதநோய்.
செகில்—தோண்மேல்.
செகிள்—மீன்செதிள், 2. கேழ்வரகின் கப்பி.
செகுக்க—(வி) அழிக்க.
செக்கர்—சிவப்பு, 2. செவ்வானம.
செக்கர் வானிறத்தோன்—சிவன், 2. வீரபத்திரன்.
செக்கல்—மாலைநேரம், 2 செவ்வானம்.
செக்கவுரி—(வை. அ) கற்சூரை.
செக்கு—எண்ணெய் செய்கருவி, 2. சதயநாள்.
செக்குக்கீரை—ஓர் கீரை.
செங்கடம்பு—ஓர் கடம்பமரம.
செங்கட்டி—காவிக்கல், 2. சாதிலிங்கம்.
செங்கணன்— } திருமால்.
செங்கண்ணன்— }
செங்கண்ணணி— } ஓர் மீன்.
செங்கண்ணணிப்பாரை— }
செங்கண்மாரி—கண்ணோய்.
செங்கதிர்— } சூரியன்.
செங்கதிரோன்— }
செங்கதிர்நாள்—உத்திரநாள்.
செங்கத்தரி—(வை. அ) ஒரு செடி.
செங்கமலம்—செந்தாமரை.
செங்கமலை—இலக்குமி.
செங்கரடு—செம்மண்குன்று.
செங்கரப்பன்— } ஒரு நோய்.
செங்கரப்பான்— }
செங்கரந்தை—ஒரு வகைப்பூடு.
செங்கரர்—ஓர் மீன்.
செங்கருங்காலி—ஓர் மரம்.
செங்கரும்பு—ஓர் கரும்பு.
செங்கலங்கல்—செந்நிறமான கலங்கல்.
செங்கல்—இட்டிகை, 2. காவிக்கல்,
செங்கல்வரை—திருத்தணிகைமலை.
செங்களநாரை—செங்கானாரை.
செங்கழுநீர்—செங்குவளை.
செங்களம்—போர்க்களம்.
செங்கவளை—(வை. அ) குதிரைப்பற்பாஷாணம்.
செங்காடு— } ஒரு சிவஸ்தலம்.
செங்காட்டங்குடி— }
செங்காந்தள்—ஒருகாந்தள்.
செங்காய்—பழுக்கும் பருவக்காய்.
செங்காரணி— } கருஞ்சிவலை.
செங்காரி— }
செங்கார்—ஓர் கார்நெல்.
செங்கானாரை—ஓர் நாரை.
செங்கிடை—ஓர் மரம்.
செங்கிரந்தி—ஒரு கிரந்தி.
செங்கிளுவை – ஓர் பறவை, 2. ஓர் மரம்.
செங்கீரை—ஒரு கீரை, 2. பிள்ளைக்கவியினோருறுப்பு, அது பிள்ளையிருகையுமுழந்தாள்களுமூன்றித்தலை நிமிர்த்தியாடல். (செங்கீரைப் பருவம்.)
செங்குங்கிலியம்—ஒரு சரக்கு.
செங்குட்டுவன் – கண்ணகியின் உருவை நாட்டித் திருவிழா நடத்திய ஓரரசன்.
செங்குத்து—நேரே நிமிர்ந்தது.
செங்குந்தம்—கண்ணோயுள் ஒன்று.
செங்குந்தர்—கைக்கோளர்.
செங்குமிழ்—ஒரு மரம்.
செங்குமுதம்—செவ்...

செங்குவளை—ஒரு நீர்ப்பூ; இது: செங்கழுநீர்.
செங்குளவி—ஒரு குளவி.
செங்குன்றி—ஒரு குன்றிக்கொடி.
செங்குன்று — கொடுங்கோளூருக் கருகாமையிலுள்ள ஒரு மலை.
செங்கை—சிவந்தகை, 2. ஆதிரைநாள்.
செங்கையான்—ஒரு பூடு.
செங்கொடிவேலி— } ஒருகொடி.
செங்கொடுவேலி— }
செங்கொல்—செம்பொன்.
செங்கொல்லன்—தட்டான்.
செங்கோடு—செருந்திமரம், 2. ஒருமலை.
செங்கோடுபாய்தல்—(தொ. பெ) மலையுச்சியிலிருந்து பாய்தல்.
செங்கோட்டம்—ஒரு மருந்துப்பூடு.
செங்கோட்டியாழ்—ஓர் யாழ்.
செங்கோலம்—செம்புமணல்.
செங்கோலன்—இராசன்.
செங்கோல்—நீதிமுறை.
செங்கோற்கடவுள்—இயமன்.
செச்சை—வெள்ளாட்டுக்கடா, 2. வெட்சிச்செடி, 3. சந்தனக்குழம்பு, 4. நீறு, 5. செங்காடு, 6. சேரடு, 7. உதயசந்திரன், 8. செந்துளசிச்செடி, 9. சட்டை.
செஞ்ச—சிறைய.
செஞ்சடையோன்—காஸ்மீரஸ்படிகம், 2. சிவன்.
செஞ்சந்தனம்—ஒரு சந்தனமரம்.
செஞ்சாந்து—குங்குமமுதலான சிவந்த பரிமளத்தாற் கூட்டுகிற கூட்டு.
செஞ்சாலி—செந்நெல்.
செஞ்சிலை—கற்காவி, 2 செங்கல்.
செஞ்சீரகம்—ஒரு சீரகம்.
செஞ்சுடர்—சூரியன், 2. தீ.
செஞ்சுருட்டி—ஓர் இராகம்.
செஞ்செவியர்—செல்வர்; இது, குறிப்புமொழி.
செஞ்செவே—நேராக.
செஞ்செழிப்பு—முகமலர்ச்சி, 2. பயிர்ச்செழிப்பு.
செஞ்சேறு—இரததசேறு.
செஞ்சொல்—நேர்மொழி, 2. வெளிப்படையான சொல்.
செஞ்சோறு—உரிமைச்சோறு.
செடல்— } உடல் குத்தியாடுங் கருவி
செடில்— }
செடி—பூண்டு, 2. புதர், 3. பதனழிவு, 4. பாவம், 5. ஒளி, 6. அற்பம்.
செடிச்சி—கெட்டவள்.
செட்டி—வைசியன், 2. வாணிகன். 3. முருகன்.
செட்டிமை—செட்டித்தன்மை.
செட்டு—செட்டிமை, 2. சிக்கனம்.
செட்டை—இறகு, 2. கைப்பட்டை.
செண்டா—கொடி.
செண்டு—பந்து, 2. ஓராயுதம், 3. குதிரைவையாளி வீதி, 4. பந்தெறி வீதி, 5. பூஞ்செண்டு.
செண்டுவெளி—வையாளிவீதி
செண்ணம்—வடிவு.
செண்பகம்—சண்பகமரம்.
செண்பகவருக்கை—ஒரு பலாமரம்
செதில்—தோல்.
செதிள்—மீன்செதிள், 2. தோல்.
செதுக்க—(வி) புல்முதலிய செதுக்க, 2. மரஞ்செதுக்க.
செதுக்கு—சேறு, 2. பூதம், 3. மந்தி.
செதுக்குவேலை — இரத்தினமுதலியுவமுசதும் வேலை.
செதுக்கை—தழும்பு.
செதும்பு—சேறு.
செத்தல்—(தொ. பெ) சாதல்.
செத்தல்—(பெ) உலர்ந்த தேங்காய், 2. பனை முதலியவற்றி னுலர்ந்த காய், 3. மெலிந்தது.
செத்து—சந்தேகம், 2. உவமையுருபு.
செத்தை — உலர்ந்த சருகு முதலியன.
செந்தட்டி—செந்தொட்டி.
செந்தட்டு—பொறுப்பில்லாமை.
செந்தணல்—செந்தீ.
செந்தண்டு.— செந்தண்டுக்கீரை, சிவந்ததாள், 3. பவளம்.
செந்தமிழ்—இயற்றமிழ்.
செந்தலைவிரியன்—ஓர் பாம்பு

செந்தழல் - கேட்டைநாள், 2. செந்தணல்.
செந்தளிர்—இளந்தளிர்.
செந்தளிர்ப்பு - செஞ்செழிப்பு, 2. மகிழ்ச்சி.
செந்தாது—பொன்.
செந்தாமரை—சிவந்ததாமரை.
செந்தாழை—ஒரு தாழஞ்செடி, 2. ஓர் கண்ணோய்.
செந்தாழைநோய் — உதடுவெடித்து வாய் நாறுமோர் நோய்.
செந்தாளி—ஒரு தாளிச்செடி.
செந்தாள்—சிவந்ததாள்.
செந்தி—திருச்செந்தூர்.
செந்திரிக்கம்— } ஓலைச்சுருள்.
செந்திருக்கம்— }
செந்திரு—இலக்குமி.
செந்தில்—திருச்செந்தூர்.
செந்திறம்—சிவப்பு, 2. குறிஞ்சியாழ்த் திறம்.
செந்தினை—கம்பு, 2. சிவந்த தினை.
செந்தீ—அக்கினி.
செந்தீவண்ணன் — சிவன், 2. செவ்வாய்.
செந்தீவளர்ப்போர்—அந்தணர்.
செந்து—சீவசெந்து, 2. சீவன், 3. நரகம், 4. அணு, 5. கிழநரி.
செந்துத்தி—ஒரு துத்திச்செடி.
செந்துத்தீ—சடாமாஞ்சி, (ஒருமருந்து,) 2. பெருங்காயம்.
செந்தும்பை—ஒரு தும்பைப்பூடு.
செந்துரசம்—ஓர் பிசின்.
செந்துருக்கம்— } ஒரு செடி
செந்துருக்கு— }
செந்துருதி—ஓரியாழ்த்திறம், 2. நரகம்.
செந்துளசி—ஒரு துளசிச்செடி.
செந்துளிர்—செந்தளிர்.
செந்துறை—ஆடற்கேற்கும் பாட்டு.
செந்தூக்கு—நேராகத்தூக்குகை, 2. ஓர் வகைப் பாட்டு.
செந்தூரத்தாசி—(வை. அ) கந்தகம்.
செந்தூரம் — பொன் முதலியவற்றாலாகிய சுண்ணம்.
செந்தூள்—மிருதுவான தூள்.

செந்தொடை—மோனை முதலிய ஒவ்வாத தொடை, 2. சிவந்தமாலை.
செந்தொடையன்—வயிரவன்.
செந்தொட்டி—சிறுகாஞ்சொறிக்கொடி, 2. ஓர் பாஷாணம்.
செந்தோன்றி—செங்கழுநீர்.
செந்நகரை—ஒரு மரம்.
செந்நாகம்—கேது.
செந்நாடிக்கா — (வை. அ) மூக்கிரட்டைச்செடி.
செந்நாயுருவி—ஒரு நாயுருவிச்செடி.
செந்நாய்—ஓர் நாய்.
செந்நிறக்கல்—(வை. அ) மாமிசச்சிலை.
செந்நீர்—இரத்தம்.
செந்நெல்—நல்ல நெல்.
செந்நெறி—சரிவழி, 2. சன்மார்க்கம்.
செபமாலை—செபஉருஎண்ணும் மாலை.
செபம் — செபிக்குஞ்செபம், 2. இதழசையாமற் செபிக்குஞ்செபம், 3. வேண்டிக்கொள்ளல்.
செபிக்க—(வி) செபஞ்செய்ய.
செப்படி— } செப்பு வித்தை,
செப்படிவித்தை— } 2. உபாயம், 3. சிக்கனம்.
செப்பட்டை—பறவைச்சிறகு, 2. தோட்பட்டை.
செப்பம்— } செவ்வை, 2. மன ஒற்றுமை, 3. நடுவுநிலைமை,
செப்பன்— } 4. வழி, 5. வீதி, 6. மார்பு, 7. கோட்டமின்மை, 8. செப்பனிடல்.
செப்பல்—வெண்பாவுக்குரிய வோரோசை, 2. சொல்லுதல்.
செப்பிடில் — (வை. அ) சடாமாஞ்சி, (ஒரு மருந்து).
செப்பிடுவித்தை—ஒரு தந்திரவித்தை.
செப்பு—கிண்ணம், 2. மொழி, 3. விடை.
செப்புநெரிஞ்சி—சிவப்பு நெரிஞ்சி.
செப்புப்பட்டயம்—செப்புத்தகட்டி லெழுதிய உறுதி.
செம்—சிவப்பு, 2. செம்மை.
செம்பகை—யாழின்பகை நரம்பு நான்கனுளொன்று: அஃது: இன்பமின்றி யிசைத்தலாகிய தாழ்ந்தவிசை.

செம்பசலை— } சிவப்புப்பசலைக்கீரை.
செம்பசளை— }
செம்பஞ்சு—சிவந்த பஞ்சு.
செம்படத்தி—செம்படவப்பெண்.
செம்படவர் — மீன்பிடிகாரரி லொரு வகையினர்.
செம்படாம்—சிவப்புச்சீலை.
செம்படிகம்—காஸ்மீரப்படிகம்.
செம்படை— } சிவந்த மயிர்.
செம்பட்டை— }
செம்பரத்தை—மந்தார மரம்.
செம்பருத்தி—ஒரு செடி.
செம்பாகம்—சரிபாகம், 2. செவ்வையானது, 3. நடுநிலை.
செம்பாடு—சிவந்தநிலம்.
செம்பாம்பு—கேது.
செம்பால்—இரத்தம்.
செம்பாவளா—ஓர் நெல்.
செம்பி—(வை. அ) கருவண்டு.
செம்பிச்சி—ஓர் பாஷாணம்.
செம்பியன் — சோழன், 2. முதலெழு வள்ளலி லொருவன்.
செம்பிறால்—ஓர் மீன்.
செம்பில்வேதை—(வை. அ) சோரபாஷாணம்.
செம்பின்பச்சை—நாகப்பச்சை.
செம்பு—நீருருந்துஞ் செம்பு, 2. தாம்பிரம்.
செம்புகம்—செம்போத்து, (ஓர் புள்.)
செம்புக்குள்வேதை — (வை. அ) கற்பரிபாஷாணம்.
செம்புலம்—போர்க்களம், 2. சுடுகாடு, 3. பாலை நிலம், 4. செம்பு மலை.
செம்புளிச்சங்கட்டை—சிதாரி மரம்.
செம்புறு—ஓர் மீன்.
செம்பை—ஓர் செடி.
செம்பொருள் — செம்மொழி, 2. கடவுள், 3. உண்மைப்பொருள்.
செம்போத்து—செம்புகம்.
செம்ம—(வி) நிலைமண்கட்ட, 2. இருல் வாய்மூடல்போற்சேமிக்க.
செம்மட்டி—மர மஞ்சள்.
செம்மணத்தி—செம்புளிச்சைமரம்.
செம்மண்—காவிமண், 2. சிவந்தமண்.
செம்மரம் — அழிஞ்சில்மரம், 2. ஒரு மரம்.
செம்மலை—ஆவிரை, (ஓர் செடி.)
செம்மலைப்பாலை—ஓரிலை.
செம்மல்—பெருமை, 2. உயர்ந்தோன், 3. அரசன், 4. எப்பொருட்கு மிறைவன், 5. புதல்வன், 6. பழம்பூ.
செம்மறி— } ஒரு வகை ஆடு.
செம்மறியாடு— }
செம்மாக்க—(வி) இறுமாந்திருக்க, 2. யோகத்திலிறுமாந்திருக்க, 3. நிமிர்ந்திருக்க.
செம்மாத்தி—சக்கிலிச்சி.
செம்மாப்பு—இறுமாப்பு.
செம்மாளி—ஓர்வகைப் பாதரட்சை.
செம்மானம்—செவ்வானம்.
செம்மான்—சக்கிலி.
செம்மீன்—ஓர் மீன்.
செம்மேவல்—(தொ. பெ) இணங்கல்.
செம்மை — செவ்வை, 2. செப்பம், 3. ஒழுக்கம், 4. சுத்தம், 5. அழகு, 6 மேன்மை, 7. பெருமை, 8. சிவப்பு, 9. மாறின்மை.
செம்மொழி—நயவசனம்.
செயசெயவெனல்—(தொ. பெ) போற்றுதல்.
செயத்தம்பம்—வெற்றித்தம்பம்.
செயநீர்—நவச்சார முதலியவற்றிலிருந்து எடுக்கும் ஒருவகை திராவகம்.
செயநீர்க்கருத்தன் — (வை. அ) நவட்சாரம்.
செயந்தி—திருச்செந்தூர்.
செயபரம்—(வை. அ) மரமஞ்சள்.
செயபீதம் — (வை. அ) கௌரிபாஷாணம்.
செயப்படுபொருள் — காரியப்படு பொருள்.
செயமணி—வெற்றி பெற்றடிக்கு மணி.
செயம்—வெற்றி, 2. சித்தி.
செயலறவு—கையறவு.
செயலறுநிலை—கையறுநிலை.
செயலை—அசோக மரம்.
செயல்—ஒழுக்கம், 2. காவல், 3. சேறு, 4. தொழில்.

செயற்கை—இயற்கைக்கு மாறுனது.
செயிக்க—(வி) வெல்ல.
செயிர்—கோபம், 2. குற்றம், 3. துன்பம்.
செயிர்க்க—(வி) சினக்க.
செய்—வயல், 2. வயலிலோரளவை.
செய்கடன் — நித்தியகருமம், 2. பிதிர்கடன், 3. முறைமை.
செய்கரை—கட்டுக்கரை.
செய்கை—தொழில், 2. வேளாண்மை, 3. இயல்பு, 4. கிரியை, 5. நன்னடக்கை, 6. மாந்திரீகச் செய்கை, 7. மனச்செய்கை, 8. செய்கை நிலம்.
செய்கைச்சரக்கு—வைப்புச்சரக்கு.
செய்தி—செய்கை, 2. காரியம், 3. சமாசாரம், 4. ஒழுக்கம், 5. இயல்பு, 6 கட்டளைச்செய்தி.
செய்ய — சிவந்த, 2. அழகுள்ள, 3. செப்பமான.
செய்ய—(வி) உண்டாக்க, 2. தொழில் செய்ய, 3. இயற்ற.
செய்யல்—சேறு.
செய்யவன்—சூரியன், 2. செவ்வாய்.
செய்யன்—சிவப்பன், 2. செவ்வியன், 3. சிவன்.
செய்யான்—செம்பூரான்.
செய்யுள் — செய்புணடை, 2. கவி, 3. விளை நிலம்.
செய்யோன்—அருகன்.
செரிக்க—(வி) சீரணிக்க, 2. கோபத்தையடக்க.
செரிப்பிக்க—(வி) செரிக்கச்செய்ய, 2. தொந்தரை தீர்க்க.
செரு—போர்.
செருக — (வி) கண் சொருக, 2. வயிற்றைச் சொருக.
செருக்கு—அகங்காரம், 2. கர்வம், 3. களிப்பு, 4. ஆண்மை, 5. ஆணவம், 6. மயக்கம், 7. மனோராச்சியம்.
செருத்தணி—திருத்தணிகை.
செருத்தல்—பசு எருமைகளின் மடி.
செருத்தி—விருதுக்கொடி.
செருநர்—படைவீரர்.

செருந்தி—வாட்கோரைப்புல், 2. ஓர் பூமரம், 3. மணித்தக்காளிச்செடி.
செருப்படி— } ஒரு பூடு.
செருப்படை— }
செருப்பு—பாதரட்சை.
செரும—(வி) இரும, 2. நெருங்க.
செருமல்—(தொ. பெ) அடக்குதல்
செலகம்—(வை. அ) மல்லிகைச்செடி.
செலந்தி—புண்.
செலம்—இலாமிச்சை, (ஒரு புல்.)
செலவு—பணமுதலியவற்றின் செலவு, 2. செலவழிகை, 3. சாமக்கிரியை, 4. விடை, 5. வழி, 6. நடக்கை, 7. காலக்கழிவு, 8. நீர் பரவுகை, 9. நீங்குகை, 10. செல்லுகை.
செலவு—எலிவளை முதலியன.
செலாவணி—செல்லுமணி.
செலியம்—(வை. அ) இலாமிச்சை,(ஒரு புல்.)
செலு—நறுவிலிமரம்.
செலுத்த — (வி) நடத்த, 2. விட, 3. ஒட்ட, 4. அதிகார முதலிய செலுத்த, 5. கொடுக்க, 6. நிறைவேற்ற, 7. பணத்தைச் செலுத்த, 8 வாயினுட் செலுத்த, 9. அனுப்ப.
செலுந்தி— } மெலிந்தது
செலுந்தில்— }
செலுப்பு—சிறு துண்டு.
செல்— } கறையான், 2. இடி, 3. மேகம், 4. கையெழுத்து.
செல்லு— }
செல்ல—(வி) போக, 2. கழிய, 3. நேரஞ்செல்ல, 4. சேர, 5. ஒழிய, 6. வழங்க, 7. அதிகாரஞ்செல்ல, 8. தகுவதாயிருக்க, 9. அன்பு முதலியன செல்ல, 10. சாவ.
செல்லம் — ஐசுவரியம், 2. விநோதம், 3. மழலைப்பேச்சு.
செல்லல்—துன்பம், 2. வெறுப்பு.
செல்லன்—செல்வன்.
செல்லியம்—(வை. அ) கோழி.
செல்லு—செல்.
செல்வம்—சீர், 2. ஐசுவரியம், 3. சம்பிரமம், 4. சுவர்க்கம், 5. கல்வி, 6. இன்பம்.

செல்வன்—ஐசுவரியமுடையோன், 2. மகன், 3. அருகன், 4. கடவுள், 5. அரசன்.
செல்வாக்கு — தடையின்றிச் செல்லுஞ் சொல்.
செல்வி — பெண்ணிற் சிறந்தவள், 2. இலக்குமி, 3. புதல்வி, 4. தலைவி.
செல்விக்கை—ஐசுவரியம்.
செவக்க—(வி) சிவக்க.
செவலை—சிவப்பு நிறமுள்ளது.
செவி—காது, 2. கேள்வி.
செவிகொடுத்தல்—(தொ. பெ) உற்றுக் கேட்டல்.
செவிடு—செவிப்புலன் குறைவு.
செவிட்ட—(வி) அழிக்க.
செவிட்டு—செவியடி.
செவிப்புலன்—கேள்வி.
செவிப்புற்று—ஒரு நோய்.
செவிப்பூரான்—காதுப் பூச்சி.
செவியம்—செவ்வியம்.
செவியிலி—செவிடு.
செவிரம்—பாசி.
செவிலி—வளர்த்த தாய், 2. அக்காள்.
செவுடு—செவிடு.
செவுள்—செகிள்.
செவை—செம்மை.
செவ்வகத்தி—ஓரகத்திமரம்.
செவ்வட்டை—ஓரட்டை.
செவ்வணி—சிவப்புடை.
செவ்வந்தி—ஓர் பூச்செடி.
செவ்வம்மான்பச்சரிசி-சிவப்பம்மான் பச்சரிசிப்பூண்டு.
செவ்வரத்தை—செம்பரத்தைச்செடி.
செவ்வலரி—ஓர் அலரிமரம்.
செவ்வல்நார்—செவ்வாம்பல்.
செவ்வல்லி—செவ்வள்ளிக்கொடி.
செவ்வவரை-சிவப்பவரைக்கொடி.
செவ்வழி—நெய்தனிலத்திராகம்.
செவ்வழிப்பாலை—ஓர் இராகம்.
செவ்வள்ளி—ஒரு கொடி.
செவ்வன்— } செம்மையாய்.
செவ்வே— }
செவ்வாப்பு— } சிலந்தி.
செவ்வாப்புக்கட்டி— }
செவ்வாம்பல்—அரக்காம்பல்.
செவ்வாய்—ஓர் கிரகம், 2. செவ்வாய்க் கிழமை, 3. சிவந்தவாய்.
செவ்வாரம்—சரிவாரம்.
செவ்வாழை—ஒரு வாழைமரம்.
செவ்வானம்—செக்கர்மேகம்.
செவ்வி—அழகு, 2. சமயம், 3. சித்திரைநாள், 4. தன்மை.
செவ்விண்டு—ஒரு பூச்செடி.
செவ்வியம்—மிளகுக்கொடி. இது பஞ்சமூலத்தொன்று.
செவ்வியான்—கிரகஸ்தன்.
செவ்விளகி— } கழுதைவண்டு.
செவ்விறகி— }
செவ்விளநீர்—சிவந்த தோலுள்ள விளநீர்.
செவ்விளை—ஒருவகைத் தென்னைமரம்.
செவ்வு—முத்துக்களின் நிறையளவு, 2. செம்மை.
செவ்வெண்ணெய்—வாலபுத்திரர்க்கிடு மெண்ணெய்.
செவ்வேள்—முருகன்.
செவ்வை—செம்மை, 2. செப்பம், 3. சுத்தம்.
செழிக்க—(வி) செழுமையாக, 2. தழைக்க, 3. மாண்புற, 4. முகமலர.
செழிச்சி—செழிப்பு.
செழித்தகல்—சுக்கான்கல்.
செழிப்பம்—செழிப்பு.
செழிப்பு—செழுமை, 2. பொலிவு.
செழியன்—பாண்டியன்.
செழுமறை—நெருப்பு.
செழுமை—செழிப்பு, 2. வளமை, 3. தழைவு, 4. நிறைவு, 5. மாட்சிமை, 6. அழகு.
செழும்பல்—செழிப்பு.
செளிம்பன்—குணக்கேடன்.
செளிம்பு—களிம்பு, 2. சண்டிக்குணம்.
செள்ளு—தெள்ளுப்பூச்சி.
செற—(வி) கொல்ல, 2. வெறுக்க, 3. பொறியையடக்க.
செறல்—கோபம், 2. கொலை.
செறிதல்—(தொ. பெ) நெருங்கல், 2. இணைதல், 3. மிகுதல், 4. இறுகல்

5. சேர்தல், 6. குளித்தல், 7. பொருந்தல், 8. கலத்தல், 9. இயைதல்.
செறித்தல்—(தொ. பெ) காத்தல், 2. நெருக்கல், 3. மூழ்கச்செய்தல், 4. அழித்தல், 5. கொல்லல்.
செறிவு—நெருக்கம், 2. மிகுதி, 3. கலப்பு, 4. பொருந்துகை, 5. குணவலங்காரம் பத்திலொன்று; அஃது நெகிழிசையின்றிவரச் செய்யுட்டொடுப்பது.
செறு—வயல், 2. சிறுவயல்.
செறுநர்—பகைவர்.
செறும்பு—சலஞ்சாதிக்கை, 2. வெறுப்பு, 3. சிரும்பு.
செறுவு—வயல்.
செற்றம்—கோபம், 2. சலஞ்சாதிப்பு, 3. சினம்.
செற்றலர்—பகைவர்.
செற்றல்—வெறுப்பு, 2. கொல்லல், 3. நெருக்கல்.
செற்றார்—பகைவர்.
செற்று—நெருக்கம்.
செற்றுதல்—(தொ. பெ) நெருக்குதல்.
செனம்—சனம்.
செனனம்—பிறப்பு.
செனிக்க—(வி) பிறக்க.
சென்மசாபல்லியம்—செனனமெடுத்த பலன்.
சென்மம்—சன்மம்.
சென்றுதேய்ந்திறுதல் — நூற்குற்றம் பத்திலொன்று; அஃது வரவரச் சொன்னயம் பொருணயங்குறைதல்.
சென்னக்கூனி—கூனிப்பொடி, இஃது ஒருவகைச் சலசெந்து.
சென்னபட்டணம்— } சென்னபட்டிணம்.
சென்னபுரி— }
சென்னல் — ஒரு வகைமீன்; அது: தேன் கெண்டை.
சென்னி—தலை, 2. முடி, 3. அச்சுவினிநாள், 4. சோழன், 5. பாணன்.
சென்வன—சென்னபுரி.

## சே

சே—சிவப்பு, 2. எருது, 3. சில விலங்கினாண், 4. இடபவிராசி, 5. ஒலிக்குறிப்பு, 6. அழிஞ்சில்மரம், 7. சேங்கொட்டை மரம், 8. உயர்ந்த.
சேகண்டி—சேமக்கலம், 2. காவலாளருறைவிடம்.
சேகரம்—சேகரிப்பு, 2. கூட்டம், 3. மாமரம்.
சேகரம்—தலை, 2. தலையிலே முடிக்கப்படுவன, 3. முடி.
சேகரி—(வை. அ) நாயுருவிச்செடி.
சேகரிக்க—(வி) சேர்க்க, 2. சம்பாதிக்க.
சேகிலி—வாழைமரம்.
சேகு—மரவயிரம், 2. தழும்பு, 3. திடம்.
சேக்கரித்தல்—(தொ. பெ) கொக்கரித்தல்.
சேக்கு—(வை. அ) முலைப்பால்.
சேக்கை—மனிதர் படுக்கை, 2. விலங்கு முதலியவற்றின் படுக்கை, 3. உடற்றழும்பு, 4. நண்டு, 5. கற்கடக விராசி, 6. செம்பசளைக்கீரை.
சேங்கொட்டை — சேரான்கொட்டை மரம்.
சேசூரணம்—(வை. அ) கௌரி பாஷாணம்.
சேடகம்—கேடகம்.
சேடம்—சிலேற்பனம்.
சேடம்— } மிச்சம், 2. மீந்தது, 3. எச்சில்.
சேஷம்— }
சேடன்— } ஆதிசேடன், 2. அடிமை, 3. தம்பி, 4. செய்வோன், 5. கட்டிளமையோன், 6. தோழன்.
சேஷன்— }
சேடாத்திரி—திருவேங்கடமலை.
சேடி—ஏவல் செய்வோள், 2. தோழி.
சேடி—விஞ்சையருலகம், 2. இடையர் வீதி.
சேடிக்க— } (வி) குறைக்க.
சேஷிக்க— }
சேடு—இளமை, 2. அழகு, 3. திரட்சி, 4. பெருமை, 5. நன்மை.
சேடை— } மாக்காப்பு.
சேஷை— }
சேட்சி—தூரம்.
சேட்டம்— } ஆனிமாதம், 2. முதன்மை, 3. செழிப்பு, 4. அழகு, 5. திறம்.
சேஷ்டம்— }

சேட்டன்— } தமையன், 2. மூத்தோன்.
சேஷ்டன்— }
சேட்டாதேவி—மூதேவி.
சேட்டிக்க— } (வி) இயங்க.
சேஷ்டிக்க— }
சேட்டுமம்—சிலேட்டுமம்.
சேட்டை— } இயக்கம், 2. அசைகை,
சேஷ்டை— } 3. செய்கை.
சேட்படைநிலை—காதலன் றலைவியோடு சேராது தோழி தடுத்தல்.
சேணம்—கல்லணை, 2. மெத்தை.
சேணி—ஏணி, 2. வித்தியாதரருலகு.
சேணியர்—நெய்வாரிலோர் சாதி.
சேண்—அகலம், 2. தூரம், 3. உயர்ச்சி, 4. நீளம், 5. ஆகாயம்.
சேண்டிரவர்—நெய்வார்.
சேதகம்—சிவப்பு, 2. சேறு.
சேதம்—கேடு, 2. அழிவு, 3. பிரிவு, 4. துண்டு, 5. கீழ்வாயிலக்கம்.
சேதனம்—வெட்டுதல், 2. அறிவு, 3 உணர்ச்சி.
சேதனன்—அறிவுடையோன்.
சேதா—சிவப்புப்பசு.
சேதாம்பல்—செவ்வாம்பல்.
சேதாரம்—உரைத்தலாதியால் வருநஷ்டம், 2 உருக்கலாதியால் வருநஷ்டம், 3. அளவாதியால் வருஞ்சேதம், 4. மாடாதிகளால் வருநஷ்டம், 5. கேடு, 6. தேமாமரம், 7. வெட்சிமரம்.
சேதி—செய்தி.
சேதி—ஒரு நாடு.
சேதிக்க—(வி) அறுக்க, 2. அங்கஞ்சேதிக்க.
சேதிமம்—தேவர்கோயில்.
சேது—சிவப்பு.
சேது—செய்கரை, 2. சேதுவணை, 3. இராமேச்சுரம், 4. ஓர் தீர்த்தம்.
சேத்தல்—(தொ. பெ) சிவத்தல்.
சேத்திரம்—உடம்பு, 2. தலம், 3. வயல்.
சேத்து—வயல்.
சேத்து—சிவப்பு, 2. மிகுசிவப்பு, 3. துப்பு, 4. நெருக்கம், 5. கருத்து, 6. ஓரிடைச்சொல்.
சேந்த—(வி) சாம்ப.
சேந்தன்—முருகன், 2. திவாகரஞ் செய்வித்தோன்.
சேந்தி—கள்.
சேந்து—சிவப்பு, 2. தீ, 3. அசோகமரம்.
சேந்தை—மேற்கட்டி.
சேபாலங்கொட்டை—(வை. அ) சேங்கொட்டை.
சேப்பு—சிவப்பு.
சேமக்கலம்—எறிமணி.
சேமம்—காவல், 2. தஞ்சம், 3. புதைபொருள், 4. சவச்சேமம், 5. இன்பம், 6. அரணுளவிடம், 7. காராகிருகம், 8. சிறைச்சாலை.
சேமரம்—அழிஞ்சில் மரம்.
சேமன்—தந்திரி.
சேமிக்க—(வி) பத்திரம்பண்ண, 2. புதைத்துவைக்க.
சேமை— }
சேம்பு— } ஓர் செடி.
சேம்பை— }
சேயமம்—(வை. அ) கௌரிபாஷாணம்.
சேயவன்—முருகன், 2. செவ்வாய்.
சேயா—கடுக்காய்.
சேயார்—தூரத்தார், 2. பகைவர்.
சேயான்—சிவன், 2. முருகன்.
சேயிலம்—(வை. அ) இலுப்பைமரம்.
சேயிழை—நல்லணி, 2. பெண்.
சேயேபசம்—(வை. அ) மரமஞ்சள்.
சேயோன்—முருகன்.
சேய்—இளமை, 2. குழந்தை, 3. மகன், 4. சிவப்பு, 5. செவ்வாய், 6. முருகன், 7. தூரம், 8. மூங்கில்.
சேய்நீர்—ஓர்வித மருந்து நீர்.
சேய்மை—தூரம், 2. நீளம்.
சேர—(வி) கூட, 2. கிட்ட, 3. அடுத்திருக்க, 4, ஒருமிக்கச்சேர, 5. அடுக்க, 6. இணங்க, 7. பொருந்த, 8. ஒக்க, 9. அதிகரிக்க, 10. கலந்துபோக, 11. உரித்தாக, 12. சம்பந்தப்பட, 13. அணுக, 14. புணர, 15. அடைய, 16. ஓர் பட்சத்தைச் சேர.
சேரங்கை—சொரங்கை.
சேரமான்—அறுபத்து மூவரிலொருவர்.

சேரலன்—சேரன், 2. பகைவன்.
சேரன்—ஒரு தமிழரசன்.
சேரா—(வை. அ) கள்.
சேரார்—பகைவர்.
சேரான் — செங்கொட்டை மரம், 2. பகைவன்.
சேரி—ஊர், 2. தெரு.
சேருகம்—நாகணிவாய்ப்புள்.
சேறை—சிறங்கை.
சேர்—ஒரு முகத்தலளவு, 2. ஓர் நிறையளவு, 3. தானியப்போர், 4. ஒரேர்மாடு, 5. தலை.
சேர்த்துதல்—(தொ. பெ) இணைத்தல், 2. சேரப்பண்ணுதல்.
சேர்ந்தார்—உற்றார்.
சேர்பந்து—கசை
சேர்பு—வீடு.
சேர்ப்பன்—நெய்தனிலத்தலைவன்.
சேர்ப்பு—கடற்கரை.
சேர்ப்பூட்டு—இணையொத்தது.
சேர்மானம்—ஒன்றிப்பு.
சேர்விடம்—மனிதர்படுக்கை, 2. சேருமிடம்.
சேர்வு—திரட்சி, 2. வீடு, 3. மருதநிலத்தூர், 4. ஐக்கம், 5. கூட்டம், 6. அடைதல்.
சேர்வை—ஐக்கம், 2. கூட்டம், 3. சிலையிற்சேர்த்திடு மருந்து, 4. சேனை, 5. சேர்வைக்காரன், 6. கலப்புச்சரக்கு, 7. கலவை, 8. சேகரிப்பு, 9. திரட்சி, 10. ஓர் வகைக்கூத்து, 11. மாதர் காதணியிலொன்று, 12. உலோகக் கலப்பு.
சேர்வைராயன்மலை—சேலத்துக் கருகிலுள்ள ஓர் மலை.
சேலகம்—கோரைக் கிழங்கு.
சேலம்—ஒரூர்.
சேலியால் — (வை. அ) இலாமிச்சை, (ஒரு புல்.)
சேலேகம் — சந்தனமரம், 2. சிந்தூரம்.
சேலை—அசோகமரம்.
சேலை—சீலை, 2. மகளிராடை, 3. முழுப்புடவை.
சேலோதம்—சந்தனமரம்.
சேல்—கயல்மீன்.
சேவகம்—(வை. அ) பேயுள்ளி.
சேவகம் — சேவகத்தொழில், 2. வீரம், 3. யானைதுயிலிடம்.
சேவகனார்—ஐயனார்.
சேவகன் — வீரன், 2. பணிவிடைகாரன்.
சேவடி—சிவந்தபாதம்.
சேவலங்கொடியோன்—முருகன்.
சேவல்—கோழியினாண், 2. மயிலொழிந்த பறவையினாண், 3. காவல்.
சேவல்—(வை. அ) சேறு.
சேவனை—சேவகத்தொழில், 2. வணக்கம், 3. மௌனசேவித்தல்.
சேவாலங்கோட்டை—(வை. அ) கேர்வாளம்.
சேவிக்க—(வி) படையிற்சேவிக்க, 2. பணிவிடைசெய்ய, 3. வாத்தியமுழக்க, 4. சுவாமி சேவிக்க, 5. பெரியோரை வணங்க, 6. பறையறைந்து சேவிக்க.
சேவுகம்—சேவகம்.
சேவை—ஊழியம், 2. வழிபடுதல்.
சேவையூர்—சிதம்பரம்.
சேறல்—போதல், 2. நடத்தல், 3. எழுச்சி.
சேறு—அளறு, 2. கள், 3. இனிமை, 4. தித்திப்பு, 5. திருவிழா.
சேற்பனம்—சிலேட்டுமம்.
சேற்றுமம்—சிலேட்டுமம்.
சேனம்—பருந்து.
சேனம்பாம்பு—ஓர் மீன்.
சேனா—மலங்குமீன், 2. ஒரு பூண்டு.
சேனாசமுத்திரம்—பெருஞ்சேனை.
சேனாதிபதி—
சேனாபதி— } படைத்தலைவன்.
சேனாமுகம்—படையினேர்தொகை, அஃது பதாதி மூன்று கொண்டது.
சேனாவரையர்—தொல்காப்பிய உரையாசிரியர்.
சேனாவு—தகரைச்செடி.
சேனை—படை, 2. கடைவீதி, 3. ஆயுதம், 4. மிருகக்கூட்டம்.
சேனைத்தலைவன்—படைத்தலைவன்.

## சை

சை-இகழ்ச்சிக்குறிப்பு.
சைகதம்-மணல், 2. மணற்கரை.
சைகை- } கண்சமிக்கை, சாடை.
சைக்கினை- }
சைங்கிகேயம்-இராகு.
சைசவம்-இளமை.
சைதன்யம்- } அறிவு, 2. ஆத்து
சைதன்னியம்- } மா, 3. கடவுள்.
சைத்தியம்- } குளிர்மை, 2. குளிர்ச்சி
சயித்தியம்- } யுள்ளது.
சைத்திரம்- } சித்திரைமாதம், 2. சித்
சைத்திரிகம்- } திரவேலை.
சைத்திரரதம் – குபேரன் உத்தியான வனம்.
சைத்திரி-ஓரியாகம், 2. சித்திரை மாதம்.
சைத்திரியம்-தெளிவு.
சைந்தவம்-இந்துப்பு, 2. குதிரை, 3. சிந்துநதி, 4. தலை.
சைந்தவன்-துரியோதனன் தங்கையாகிய துர்ப்பலையை மணம்புரிந்தவன்.
சைந்தவி-சயிந்தவி, (ஓரிராகம்.)
சைமானம்-வெகுமானம்.
சைமினி-ஓரிருடி.
சைம்மினி-இயமன் பட்டணம்.
சையம்-கல், 2. மலை, 3. செல்வம், 4. ஓர்மலை.
சையெனல் – இகழ்ச்சிக்குறிப்பு, 2. வெறுப்புள்ளதாகுகை.
சையை-சைகை.
சையோகம்-புணர்ச்சி, 2. எழுத்தின் புணர்ச்சி.
சையோகை-மனைவி, 2. சிவத்துக்கின் பந்தருஞ் சத்தி.
சையோத்தி- }
சையோத்தியம்- } அயிக்கம்.
சய்யோத்தியம்- }
சைரிகம்-கலப்பு, 2. உழவெருது.
சைரிபம்-எருமை.
சைலகம்-மலையிருவேலி, (ஓர் வகைப் புல்.)
சைலம்-மலை, 2. கல்லுள்ளது.
சைவசமயம்-சிவபெருமானே தெய்வமென்று வழிபடுஞ் சமயம்.
சைவம்-சிவசமயம், 2. சிவபுராணம், 3. புலால் தின்னாமலிருக்கை.
சைவலம்-பாசி.
சைவன்-சிவனை வழிபடுவோன்.
சைவியம்-சைவத்திற்குரியது.
சைனன்-அருகசமயத்தவன், 2. அருகன், 3. புத்தன்.
சைனியம்- } சேனை.
சைன்னியம்- }

## சொ

சொகுசா-தம்பாக்கு.
சொகுசு-நேர்த்தி, 2. நாகரிகம்.
சொக்க – (வி) சோர, 2. மயங்க, 3. பள்ளம் விழ.
சொக்கட்டான்-சூது.
சொக்கநாதன்- } சோமசுந்தர மூர்
சொக்கலிங்கன்- } த்தி.
சொக்கப்பனை – விளக்கீட்டிலெரிக்குமொரு செய்கை விருட்சம்.
சொக்கம் – சுத்தம், 2. களிம்பின்மை, 3. சிறப்பு, 4. களவு, 5. கெம்புக்கல்.
சொக்கரை- } குறைவு, 2. சிறிய அ
சொக்கறை- } டைப்பு, 3. மதில் முதலியவற்றின் துவாரம்.
சொக்கலி-(வை. அ) மூக்கிளிச்செடி.
சொக்கன்-சிவன், 2. கையாள்.
சொக்கா- } ஒரு வகையங்கி.
சொக்காய்- }
சொக்காக்கீரை-ஒரு வகைக்கீரை.
சொக்காரன் – ஆஸ்திக்குப் பாத்தியஸ்தன்.
சொக்காலி- } சிறு பூளைப்பூடு.
சொக்காளி- }
சொக்கு-சோர்வு, 2. மயக்கம், 3. அழகு, 4. பொன், 5. சொக்கன், 6. கன்னம்.
சொக்குப்பொடி – அயர்ந்து நித்திரையாகும்படி மேற் போடும் பொடி.
சொக்குவித்தை-மயக்குவித்தை.
சொங்காரன்-சொக்காரன்

சொச்சம்—குறை, 2. பணவட்டி, 3. மிச்சம்.
சொச்சம்—மாசின்மை.
சொஸ்தம்—சுகம், 2. சுகமடைகை, 3. சௌக்கியம்.
சொஸ்தானம்—உயிர்த்தெழுகை.
சொஸ்திரி—
சொத்திரி— } குலஸ்திரீ.
சொடக்கு — கிலுகிலுப்பைச்செடி, 2. நெட்டிப்புல், 3. சோம்பற்றன்மை.
சொடிக்க—(வி) குறைக்க.
சொடுகு—பொடுகு.
சொட்ட—(வி) மழைதுளிக்க, 2. குட்ட, 3. வஞ்சிக்க, 4. அபகரிக்க.
சொட்டா—ஓர்வகைக் கட்கம்.
சொட்டு — குட்டு, 2. துளி, 3. துண்டு, 4. குற்றம்.
சொட்டை—பள்ளம், 2. பரிகாசம், 3. ஓர் பட்டயம்.
சொண்டி—வேர்க்கொம்பு.
சொண்டு—தலையழுக்கு.
சொண்டு—பறவைமூக்கு, 2. உதடு, 3. பாத்திரவிளிம்பு.
சொதை—ஐசுவரியம்.
சொத்தலி — பனங்காயின் பொய்க்கொட்டை.
சொத்தி—முடம், 2. நொண்டி.
சொத்து—பொருள், 2. உடைமை, 3. குறை, 4. உடலிற் பூசும்பசை.
சொத்துவம்—உரிமை, 2. சுயம்பு.
சொத்தை — புழு வண்டு முதலியன அரித்தது, 2. பழத்திற் சொத்தை, 3. சீர்கெடுதல், 4. கன்னம்.
சொந்தம்—உரியது.
சொப்பனம் — கனவு, 2. மாயத்தோற்றம்.
சொம்—உடைமை.
சொயம்—
சொயம்பு— } தானுயிருக்கை.
சொரங்கம்—கச்சோலம்.
சொரசத்தோரசி—(வை. அ) இலவங்கப்பட்டை.
சொரடு—கொடுக்கி.
சொரணை—சொருணை.
சொரிகுரும்பை—ஓர் நெல்.
சொரிதரல்—(தொ. பெ) மிகத்தருதல்.
சொரிய—(வி) சிந்த, 2. மிக, 3. உதிர.
சொரிவு—ஈவு, 2. உதிர்வு, 3. பொழிவு.
சொருக—(வி) நுழைக்க, கண்ணைச்சொருக.
சொருவணை—சுவரணை.
சொரூபம்—சாயல், 2. வடிவம், 3. விக்கிரகம், 4. அழகு, 5. பாவனை.
சொரூபன்—கடவுள்.
சொர்க்கம்—சுவர்க்கம்.
சொர்ணம்—
சொர்ன்னம்—
சொர்னம்— } பொன், 2. கோடாசுழிப்பூண்டு.
சொர்ப்பனம்—கனவு.
சொர்ன்னசீரம்—கரும்பு.
சொலிக்க—(வி) சுவாலிக்க, 2. பிரகாசிக்க, 3. அதிகரிக்க.
சொலிப்பு—சுவாலை, 2. பிரகாசம்.
சொலியன் — (வை. அ) முடக்கொத்தான், (ஒரு பூண்டு).
சொலுசொலெனல்—(தொ. பெ) பொலுபொலெனல்.
சொல்—மொழி, 2. வாக்கியம், 3. உறுதிச்சொல், 4. புகழ், 5. பெயர்ச்சொல் முதலியன, 6. கள், 7. நெல், 8. செந்நெல், 9. நெற்கதிர்.
சொல்ல — (வி) பேச, 2. எடுத்துச்சொல்ல, 3. உறுதிசொல்ல, 4. விரித்துச்சொல்ல, 5. பாட, 6. புத்திசொல்ல, 7. வரச்சொல்ல, 8. பிரசங்கஞ்செய்ய.
சொல்லானந்தம்—சொற்குற்றம்.
சொல்லுமரை—சொற்பயன்.
சொல்லேருழவர் — புலவர், 2. மந்திரிகள்.
சொல்வளம்—
சொல்வன்மை— } சொற்சாதுரியம்.
சொல்விளம்பி—கள்.
சொள்ளல்—குறைவு, 2. சொத்தை.
சொள்ளை—சொத்தை, 2. சொட்டு, 3. இழுக்கு.
சொறி — தினவு, 2. சொறிசிரங்கு, 3. காஞ்சொறிச்செடி.

தாருகன்— } குமரன் கொன்ற அசு
தாருகாசுரன்— } ரன், 2. காளியாற் கொலையுண்ட அசுரன்.
தாருணம்—பயம், 2. கூச்சம்.
தாருண்ணியம்—இளம்பருவம்.
தாரை—ஒழுங்கு, 2. எக்காளம், 3. சிறு சின்னம், 4. வழி, 5. மழைத்தாரை, 6. தத்தம், 7. பாய்கை, 8. கண்மணி, 9. கூர்மை, 10. கண், 11. கொடிப்படை, 12. சக்கராயுதம், 13. நா, 14. நேரோடுகை, 15. விண்மீன், 16. வலி, 17. மனைவி, 18. வாலியின் மனைவி, 19. வியாழன்மனைவி, 20. சீலை.
தார்—மாலை, 2 பூவரும்பு, 3. பூ, 4 கிண்கிணிமாலை, 5. கொடிப்படை, 6. படைவகுப்பு, 7. தாறு, 8. சேனை.
தார்க்கணிக்க— } (வி) திருட்டாந்தப்
தார்க்காணிக்க— } படுத்த.
தார்க்சிகன்—தருக்கசாஸ்திரி.
தார்க்கியன்—கருடன்.
தார்மிகன்—புண்ணியவான்.
தாலகேதனன்—பலராமன், 2. வீட்டுமாசாரி.
தாலபத்திரம்—பனையோலை.
தாலம் — பனைமரம், 2. கூந்தற்பனைமரம், 3. நா, 4. யானைச்செவி, 5. பூமி, 6. உண்கலம், 7. தட்டம்.
தாலம்பபாஷாணம்—ஒரு மருந்து.
தாலவட்டம்—யானைச்செவி, 2. யானைவால், 3. பூமி, 4. விசிறி.
தாலவிருந்தம் — பேராலவட்டம், 2. விசிறி.
தாலவ்வியம் — அண்ணத்தால் பிறப்பன.
தாலாட்டு—ஒரு விளையாட்டு.
தாலாப்—குளம்.
தாலாலம்—பழிமொழி.
தாலி—மாங்கல்லியம்.
தாலு—அண்ணம், 2. நா.
தாலுகா— } ஜில்லாவின் உட்பகுப்பு.
தாலூக்கா— }
தால்—தாலாட்டு, 2. நா, 3. பிள்ளைக்கவி யுறுப்பினொன்று.

தாவ—(வ) எட்டிப்பிடிக்க, 2. பாய, 3. அழிய, 4. தாண்ட, 5. நீட்ட, 6. பிடிக்க, 7. சாய.
தாவசி—ஓர் தவசி.
தாவடம் — கழுத்தணிமாலை, 2. இருப்பிடம்.
தாவடி—பிரயாணம், 2. போர்.
தாவட்டம்—சிற்பநூல் முப்பத்திரண்டி னொன்று, 2. ஓர்வகைக்கல்.
தாவணி—மாட்டைப்பிணிக்குந் தாம்பு.
தாவந்தம்—நரகம், 2. வேதனை.
தாவம்—காடு, 2. காட்டுத்தீ, 3. மருதநிலத்தூர், 4. வெப்பம்.
தாவரம்— } நிலை, 2. உறுதி, 3. இ
ஸ்தாவரம்— } டம், 4. பூமி, 5. மலை, 6. மரம், 7. உடல், 8. எழுபிறப்பி னொன்று, 9. வின்னாண், 10. உதவி, 11 அசரம்
தாவரிக்க—(வி) ஆதரிக்க, 2. நிலைபெற்றிருக்க.
தாவழக்கட்டு—மாட்டின் முன்னங்காலிற்கும் கழுத்திற்கும் கட்டும் கயிறு.
தாவளக்காரர்—தேசாந்தரவணிகர், 2. பொதிக்காரர்.
தாவளம்—மருதநிலத்தூர், 2. இருப்பிடம்.
தாவளி—கம்பளம்.
தாவனம்—சுத்திபண்ணுகை.
தாவாரம்—தாழ்வாரம்.
தாவிளை—சகாயம்.
தாவு—குதிரைநடை, 2. பற்றுக்கோடு, 3. ஒதுக்கிடம், 4. பகை, 5. வருத்தம், 6. வலி, 7. உறைவிடம்.
தாழ—(வி) குறைய, 2. வணங்க, 3. சீர்கெட, 4. சாய, 5. பதிய, 6. தங்க, 7. தோற்க, 8. சோம்ப, 9. மனஞ்சோர, 10. தொங்க, 11. அவாவ, 12. ஆழ, 13. மனக்கவிய, 14. சரிய.
தாழக்கோல்—திறவுகோல், 2. தாழ்ப்பாள்.
தாழஞ்சங்கு—வாயகன்றசங்கு.
தாழி—குடம், 2. சாடி, 3. பரணிநாள்.
தாழிசை—பாவினத்தொன்று.
தாழை—தாழைமரம், 2. தென்னமரம்.

தாழ்—கதவுறுதாழ், 2. தாழக்கோல், 3. சுவர்ப்புறத்துநீண்ட உத்திரம்.
தாழ்ச்சி—கீழ்மை, 2. தாழ்வு, 3. தாழ்மை, 4. குறைவு, 5. கேடு, 6. இகழ்ச்சி, 7. எளிமை, 8. தவறு.
தாழ்த்த—(வி) தாழச்செய்ய, 2. புதைக்க, 3. குறைக்க, 4. கீழ்ப்படுத்த, 5. பொழுதுபோக்க, 6. அடக்க
தாழ்ப்பம்—ஆழம்.
தாழ்ப்பாள்—தாட்பாள்.
தாழ்மை — கீழ்மை, 2. மனத்தாழ்மை, 3. நீசத்துவம்.
தாழ்வடம்—உருத்திராக்கவடம்.
தாழ்வாய்— } மோவாய்.
தாழ்வாய்க்கட்டை— }
தாழ்வாரம்—வீட்டிறப்பு.
தாழ்வு—பள்ளம், 2. சாய்வு, 3. தாழ்ச்சி.
தாள—(வி) பொறுக்க.
தாளகம்— } அரிதாரம்.
தாளக்கம்— }
தாளம்—இலயை, 2. ஓர் வாத்தியம், 3 சதி, 4 மாத்திரை, 5 கலைஞானம், 6. பனைமரம்.
தாளன்—குழூஉக்குறியிற் கனவீனன்
தாளாண்மை—முயற்சி
தாளி—ஓர் படர்கொடி, 2 அறுபடநாள், 3. முட்டைத்தாளி.
தாளி—பனைமரம்.
தாளிக்க — (வி) தாளிதஞ்செய்ய, 2. சுவைப்படுத்த, 3 கண்ணோய்மைக் குழையச் செய்ய.
தாளிக்கம்—தழைப்பு.
தாளிசம்—ஓர்செடி.
தாளிதம்—தாளிப்பு.
தாள்—நெல் முதலியவற்றின் தாள், 2. தாழ், 3. திறவுகோல், 4. ஒற்றைக்காகிதம், 5. அலகு, 6. சட்டையின் தாள், 7. விளக்குத்தண்டு, 8. கால், 9. விற்குதை, 10. முயற்சி, 11. ஆதி.
தாறு—வாழை கமுகு முதலியவற்றின் குலை, 2. இருப்புமுள், 3. அங்குசம், 4. நெய்வார்தடி, 5. விற்குதை, 6. ஈல், 7. அளவு.
தாறுகன்னி — வெள்ளைக்காக்கணஞ்செடி.
தாறுமாறு — ஒழுங்கின்மை, 2. முருட்டுத்தன்மை, 3. அதிக்கிரமம், 4. இறுமாப்பு.
தாற்பரியம்—எண்ணம், 2 நோக்கம், 3. கருத்து.
தாற்ற—(வி) கொழிக்க.
தானக்கை — உயிர்நிலை, 2. தகுந்த இடம்.
தானத்தான்—ஸ்தானிகன், 2. தலைமைக்காரன்.
தானம்—கொடை, 2. ஈகை, 3. உதவி, 4. யானைமதம்.
தானம்— } இடம், 2. இருப்பிடம், 3. உயிர்நிலை, 4. கர்ப்பக்கிரகம், 5. சுவர்க்கம், 6 வலி, 7. செய்யுட்பொருத்தம், 8. எழுத்துப்பிறக்குமிடம், 9. எண்ணின்தானம், 10. கிரகநிலை, 11. ஸ்நானம்.
ஸ்தானம்— }
தானவர்—அசுரர்.
தானவன்—சந்திரன், 2. அசுரன்.
தானாதிபதி—படைத்தலைவன்.
தானாபதி — படைத்தலைவன், 2. தூதன்.
தானாபத்தியம்—தூதின் செய்கை.
தானி — தானத்திலுள்ளது, 2. இராசதானி.
தானிகம்—கொத்துமல்லி.
தானியம்—நெல் முதலியன.
தானிகன்— } பூசாரி.
ஸ்தானீகன்— }
தானை — படை, 2. ஆயுதப்பொது, 3. சீலை.
தான்—அசைச்சொல்.
தான்—முழுப்புடைவை.
தான்றி—ஒரு மரம்.
தான்றோன்றி—வலியமுளைத்தது.

## தி

திகசம்—ஓமம்.
திகதி—தேதி.
திகந்தம்—திக்கின்முடிவு.
திகம்பரம்—நிருவாணம்.

திகம்பரர்—சமணமுனிவர், 2. திருவாணிகள்.
திகம்பரி—திருவாணி, 2. பார்வதி.
திகரடி—சோர்வு.
திகரம்—இளைப்பு, 2. ஈளை, 3. ஓரெழுத்து.
திகழ—(வி) சொலிக்க, 2. கிரணம் வீச, 3. தோற்றமாக, 4. தெளிவாக.
திகழ்—ஒளி.
திகளு—கொடுவேலிச்செடி.
திகாந்தம்—திகந்தம்.
திகிரி — வட்டம், 2. வண்டியுருளை, 3. சக்கராயுதம், 4 தேர், 5. மலை, 6. மூங்கில், 7. குயவன் சக்கரம்.
திகிரிக்கல்—சக்கரவாளகிரி, 2.கோரோசனை.
திகில்— } பயம்.
திகிர்— }
திகு—தாளக்குறிப்பு
திகுதிகெனல்—நெருப்புப்பற்றி யெரிதல், 2. சினக்குறிப்பு, 3. சீக்கிரக் குறிப்பு, 4. ஒலிக்குறிப்பு
திகை- திசை, 2. தேமல்.
திகைக்க—(வி) பிரமிக்க
திகைப்பு—மயக்கம்.
திகைப்பூடு— } ஒரு பூடு.
திகைப்பூண்டு— }
திக்கங்கம்—அட்டபாலர் குறி; அவை: கிழக்காதிமுறையே கொடி, புகை, சீயம், நாய், இடபம், கழுதை, யானை, காகம் என்பன.
திக்கயம்— } அஷ்டகசம்.
திக்கசம்— }
திக்கரிக்க—(வி) நிந்திக்க.
திக்காரம்—இகழ்ச்சி.
திக்கிட—(வி) திடுக்கிட.
திக்கு—வாய்த்தெற்று.
திக்கு—திசை, 2. ஆதரவு.
திக்குத்திக்கெனல்—தாளக்குறிப்பு, 2. அச்சக்குறிப்பு.
திக்குமுக்கு—மூச்சடங்கு வருத்தம்.
திக்குறு—புன்முருங்கைமரம்.
திங்கள்—சந்திரன், 2. மாதப்பொது; 3. சோமவாரம், 4. சாந்திரமாதம்.
திசாயம்—குங்கிலியம்.
திசை—திக்கு, 2. கிரகபலம், 3. பிரபுவின் தேசம்.
திசைச்சொல் – வெளிநாட்டிலிருந்து வந்து வழங்குஞ்சொல்.
திசைமுகன்—பிரமன்.
திடம்— } வலிமை, 2. தைரியம், 3. மெய்மை, 4. உறுதி, 5. நிலைதவறாமை.
திடன்— }
திடல்— } மேடு, 2. மலை, 3. மணற்குன்று, 4. புடைப்பு.
திடர்— }
திடன்—உறுதி, 2. வலி
திடாரி—தைரியவான்
திடாரிக்கம்-திடம்.
திடீரெனல்—சீக்கிரகுறிப்பு, 2. ஒலிக்குறிப்பு.
திடுகூறு—சடுதி.
திடுக்கம்—அச்சம்
திடுக்காட்டம்—திடுக்குறுதல்.
திடுக்கிட—(வி) அச்சத்தால் மனங்கலங்க, 2. பயத்தாலுடல் கம்பிக்க, 3. துணுக்கிட.
திடுக்கெனல்— அச்சக்குறிப்பு.
திடுதிடுக்க—(வி) தடதடக்க, 2. துடிக்க.
திடுதிடெனல்-சீக்கிரக்குறிப்பு, 2. ஈரடுக்கொலிக்குறிப்பு, 3. விசையோடு செல்லல், 4. சடிதியாய் வருதல்.
திடுமல்— } அடங்காததன்மை.
திடுமன்— }
திடுமெனல்—ஒலிக்குறிப்பு.
திடும்—தமுக்கு.
திட்க—(வி) பயப்பட.
திட்ட—(வி) நிந்திக்க, 2. சபிக்க.
திட்டம்—நிலவரம், 2. ஒப்புரவு, 3. கட்டளை, 4. மாதிரி, 5. கணிசம், 6. நேர்மை, 7. ஒழுங்கு, 8. பூரணம், 9. ஐயமின்மை, 10. செவ்வை.
திட்டவட்டம்—செவ்வை, 2. உறுதி.
திஷ்டம்— } காணப்படுவது.
திருஷ்டம்— }
திட்டனம்—இருப்பைமரம்.
திட்டாணி – மரத்தைச் சுற்றியமேடை.

திட்டாந்தம்—
திஷ்டாந்தம்—
திருஷ்டாந்தம்—
திருட்டாந்தம்— } சாதிருசம், 2. உறுதி, 3. மதிப்பு.

திட்டி—திணை.

திட்டி — பலகணிவாசல், 2. திட்டிவாயில்.

திட்டி—
திஷ்டி—
திருஷ்டி—
திருட்டி— } பார்வை, 2. கண், 3. ஞானம், 4 கண்ணூறு

திட்டித்தம்பம்—கண்கட்டுவித்தை.

திட்டு — குன்று, 2. ஆற்றிடைக்குறை, 3. கணையச்சுவர்

திட்டுமுட்டு — நெஞ்சடைப்பு, 2 ஓர் நோய்.

திட்டெனல்—ஒலிக்குறிப்பு.

திட்டை—மேடு, 2. திண்ணை, 3. திட்டு, 4. உரல்.

திட்டையிட—(வி) ஈறுகட்ட, 2. புண்ணில் தசைவளர.

திட்பம்—திடம், 2 காலநுட்பம், 3. மனவுறுதி, 4. நிச்சயம்.

திணற—(வி) மூச்சுத்தடுமாற.

திணி—திண்மை.

திணிகம்—போர்.

திணிதல் — (தொ. பெ) நெருங்கல், 2 திண்மையாயிருத்தல்.

திணித்தல்—(தொ. பெ) துறுத்தல், 2. நிறைத்தல்.

திணியன்—பருத்தவன்.

திணுக்கம்—நெருக்கம்

திணுங்க—(வி) நெருங்க.

திணை—பூமி, 2. இடம், 3. குடி, 4. பொருள், 5. குலம், 6. ஒழுக்கம், 7. ஐந்திணை, 8. பெருந்திணை.

திணைமயக்கம்-பலநிலத்தோரைக் கலந்துரைத்தல்.

திண்—வலி.

திண்கல்—சுக்கான்கல்.

திண்டகம்—திலுகிலுப்பைச்செடி.

திண்டாட்டம்—
திண்டாட்டு— } அலைக்கழிவு, 2. பகைவரால் நெருக்கப்படல்.

திண்டி—யானை, 2. பசலைக்கொடி.

திண்டி—தம்பட்டம், 2. ஓரசுரன்.

திண்டிமம்—தம்பட்டம்.

திண்டிறல்—அதிவீரம்.

திண்டு—சார்மெத்தை.

திண்ணகம்—செம்மறியாட்டுக்கடா, 2. துருவாடு, 3. தட்டார் கருவியிலொன்று.

திண்ணக்கம்—மனஉரம்.

திண்ணம்—வலி, 2. மெய்ம்மை.

திண்ணியன்—பருத்தவன்.

திண்ணெனல்—தந்திநாதம்.

திண்ணை-ஓட்டுத்திண்ணை, 2. வேதிகை.

திண்மை—வலிமை, 2. மெய்ம்மை, 3. கடினம், 4. நிதானம், 5. பாரம்.

திதஸ்தாபகம்—
திதிஸ்தாபகம்— } நிலைக்குமீள்கை.

திதம்—
ஸ்திதம்— } நிலை.

திதலை—
திதனி— } தேமல்.

திதளம்—மாமரம்.

திதி — காசிபப்பிரமாவின் மனைவிகளிலொருத்தி, 2. சிராத்தம்.

திதி—
ஸ்திதி— } நிலைபேறு, 2. காத்தல், 3. நிலைமை, 4. வாழ்வு, 5. கனம், 6. இருப்பு.

திதிகர்த்தா—மகாவிஷ்ணு.

திதிக்க—(வி) நிலைப்படுத்த.

திதிசர்—
திதிசுதர்—
திதிமைந்தர்— } அசுரர்.

திதிட்சை—பொறுமை.

திதீக்கை—
திதீட்சை— } ததேகநிஷ்டை.

தித்த—(வி) திருத்த.

தித்தகம்—மலைவேம்பு, (ஓர் மரம்.)

தித்தம்—கசப்பு, 2. நிலவேம்பு, (ஓர் மரம்), 3. மலைவேம்பு, (ஓர் மரம்.)

தித்தா—தாளக்குறிப்பு, 2. பீதரோகிணி, 3. வட்டத்திருப்பி.

தித்தி—ஓர் இசைக்கருவி, 2. தித்திப்பு, 3. தின்னற்குரியன, 4. வெள்ளிக்குண்டம், 5. குரவம், (ஓர் மரம்.)

தித்திக்க—(வி) இனிக்க.
தித்திப்பு—இனிப்பு.
தித்திரம்—அரத்தைச்செடி.
தித்திரி—சிச்சிலிக்குருவி, 2. ஓர் கௌதாரி, 3. ஓரிருஷி.
தித்திரு— } நாணற்புல்.
தித்திருச்சி— }
தித்துப்பாடு—திருத்தம்.
திந்திடம்— } புளியமரம்.
திந்திருணி— }
திபதிச்சம்— } வாலுளுவை, (ஓர் மருந்து.)
திபதிசம்— }
திப்பி—கோது
திப்பியம்—மேன்மை, 2. ஓமம்.
திப்பிலி—ஒரு சரக்கு; அது கண்டத்திப்பிலி யானைத்திப்பிலி முதற்பலவகைப்படும்.
திப்பிலியாட்டம்— } ஓர் விளையாட்டு, 2. சித்திரப்பேச்சு.
திப்பிலாட்டம்— }
திப்பை—மேடு.
திமி—நூறுயோசனை நீளமுள்ள மீன்.
திமிங்கிலகிலம்—திமிங்கிலத்தை விழுங்கு மீன்.
திமிங்கிலம்—யானையை விழுங்கு மீன்
திமிசம்— } வேங்கைமரம்.
திமிசு— }
திமிதம்—பேரொலி.
திமிதிமி—தாளக்குறிப்பு, 2. யானையை விழுங்கு மீன்.
திமிரம்—இருள், 2. நரகம், 3. குருட்டாட்டம்.
திமிராரி—சூரியன்.
திமிரி—திமிர்.
திமிர்—விறைப்பு, 2. மரத்தல், 3. பரிசமின்மை, 4. சோம்பல், 5. சன்னி, 6. மயக்கம், 7. மனக்கடினம்.
திமிர்தம்—ஒலி.
திமிர்தல்—(தொ. பெ) பூசுதல், 2. வளரல்.
திமிர்த்தல்—(தொ. பெ) திமிர்கொள்ளுதல்.
திமிர்ப்பூச்சி—வயிற்றுப்புழு.
திமிலம்—யானைமீன், 2. பேரொலி.
திமிலர் — நெய்தனிலமாக்கள், 2. மீன்காரர்.
திமிலிட—(வி) மிகவொலிக்க.
திமிலை—பம்பைமேளம்.
திமில்—தோணி, 2. மரக்கலம்.
திமிற—(வி) பலாத்காரமாய் விலக[illegible] வளர, 3. தேய்க்க, 4. சிந்த.
திமைக்க—(வி) இளப்ப.
திம்மலி—தடித்தசரீரமுடையவள்.
திம்மன்—ஓராண்குரங்கு, 2. இகழுஞ்சொல்.
திம்மை—சருணை, 2. பிரமை.
தியக்கடி—தியக்கம்.
தியக்கம்— } சோர்வு, 2. மயக்கம், 3 கலக்கம், 4. சஞ்சலம்.
தியக்கு— }
தியங்க—(வி) சோர, 2. சஞ்சலப்பட, 3. மயங்க.
தியசம்—மரமஞ்சள்.
தியந்தி—திராய்.
தியரடி—திகரடி.
தியாகம்—உபகரிப்பு, 2. கொடை, 3. விடுதல்.
தியாகராயன்—திருவாரூர் கோயில்கொண்ட சிவபெருமான்.
தியாகி—கொடையாளன்.
தியாச்சியம்—ஒவ்வொரு நட்சத்திரத்திலுஞ் சுபகாரியங்களுக்கு விலக்கப்பட்ட நேரம், 2. விலக்குகை.
தியாமம்—நான்முகப்புள்.
தியாலம்—நாளிலொருபங்கு.
தியானம்—யூகிப்பு, 2. தேவசிந்தனை, 3. அட்டாங்கயோகத்தொன்று, அஃது: ஐம்புலனடக்கிச் சிவயோகஞ் செய்தல். இது ஐவகைப்படுமென்பர்.
தியானிக்க—(வி) சிந்திக்க, 2. ஒன்றையேநினைக்க, 3. செபஞ்செய்ய.
தியானிப்பு—தியானித்தல்.
தியோதம்—வெயில்.
திரகமூலகம்—முடக்கொத்தான், (ஓர் பூண்டு.)
திரக்கத்தாரு—சிலப்பனைப்பூடு.
திரக்கம்—கொன்றைமரம்.
திரக்காரம்— } நிந்தை.
திரஸ்காரம்— }

திரங்க—(வி) திரைய.
திரங்கல்—மிளகு.
திரச்சீனமுகம்—நாணத்தால் தலையாட்டல்.
திரட்சி—கூட்டம், 2. திரண்டதன்மை.
திரட்ட—(வி) உருட்ட, 2. உருண்டையாகக்கடைய, 3. சேர்க்க, 4. சங்கிரகிக்க, 5. திரவியங்குவிக்க.
திரட்டுக்கலியாணம்—இருதுசாந்தி.
திரணச்சி—நவக்ஷாரம்.
திரணம்—அற்பம், 2. துரும்பு, 3 புல்.
திரணி—ஓர் செடி.
திரவண—உருண்டை, 2. திரண்டது, 3. வைக்கோற்றிரணை.
திரண்டகொடிச்சி—புற்றும்பழம்
திரந்திகம்—திப்பிலிமூலம்
திரப்பியம்—திரவியம்.
திரமம்—சாதிலிங்கம்.
திரமிடம்—திரவிடம்.
திரம்—, ஸ்திரம்— உறுதி, 2. பலம், 3. உரம், 4. நிலை, 5. மாறுமை, 6. முத்தி, 7. தகரைச்செடி.
திரயம்—மூன்று.
திரயோதசி—பதின்மூன்றுந்திதி.
திரலடி—ஏலம்.
திரவம் — நீர் முதலியவற்றி னெகிழ்ச்சி, 2. பொசிதல், 3. சாரம்.
திரவாதி—காட்டாமணக்கஞ்செடி.
திரவிடம்—, திராவிடம்— இது ஆரியர் தமிழற்கு இட்டபெயர். இது ஐவகைப்படும். தமிழ், ஆந்திரம், கன்னடம், மகாராட்டிரம், கூர்ச்சரம் என்பன.
திரவியம்- பாக்கியம், 2. ஓர்வகைக் கலப்பு மருந்து, 3. மூலபதம், 4. பொன், 5. அரும்பண்டம்.
திரள—(வி) உருண்டையாக, 2. கூட, 3. குவிய, 4. சேர, 5. இறுக, 6. வீங்க, 7. பருக்க, 8. இருதுவாக.
திரளி—ஓர் மீன்.
திரவை—உருண்டை, 2. நாலுண்டை.
திரள்—உண்டை, 2. குழியம், 3. கூட்டம், 4. சேனை.
திராங்கு—தாழ்ப்பாள்.
திராட்சம்—, திராட்சை— கொடிமுந்திரிகை.
திராணி—பலம், 2. சத்துவம்.
திராபை—புத்தியற்றவன்.
திராமரம்—பவளமல்லிகைமரம்
திராமிடம்—திராவிடம்.
திராய்—ஒரு கசப்பான பூண்டு.
திராவகம்—செய்நீர்.
திராவிடம்—தமிழிற்கு வடமொழியிற் கூறும் பெயர்.
திரி—விளக்குத்திரி, 2. மெழுகுதிரி.
திரி- மூன்று.
திரி—, திரீ — ஸ்திரீ.
திரிய—(வி) உழல, 2. அழிய, 3. மாற, 4. உருள, 5. சுருள, 6. மனங்கோண, 7. மாறுபட, 8. எழுத்துத்திரிய
திரிகடுகம்—, திரிகடுகு- ஒருநூல், 2. சுக்கு மிளகு திப்பிலி
திரிகண்டகம்- நெருஞ்சிற்பூண்டு
திரிகாலசந்தி- காலைமாலை உச்சிகளிற் பண்ணு மனுட்டானம்.
திரிகாலம்—முக்காலம்; அவை உச்சி, காலை, மாலை, 2. இறப்பு, நிகழ்வு, எதிர்வு.
திரிகாலோசிதம்—குசைப்புல்.
திரிகூடம்—ஒரு மலை.
திரிகை — இடக்கை மேளம், 2. எந்திரம், 3. குலாலசக்கரம், 4. முந்திரிகைமரம்.
திரிசங்கு—அரிச்சந்திரன் தந்தை.
திரிசடை—விபீடணன் மகள்.
திரிசிரபுரம்—திரிசிராப்பள்ளி.
திரிசூலம்—முத்தலைவேல்.
திரிசூலி—சிவன்.
திரிசொல்—செய்யுட்சொல்.
திரிதண்டம்—முக்கோல்.
திரிதரல்—(தொ. பெ) சுழலல், 2. திரிதல், 3. மீளல்.
திரிதியம்—செவ்வள்ளிக் கொடி.
திரிதிஙை—மூன்றுந்திதி.
திரிநேத்திரன்—சிவன்.
திரிபங்கி—மிறைக்கவியிலொன்று அஃது ஒரு செய்யுளாய் நின்று மூன்றாய்ப்

பிரித்தோத மூன்று செய்யுளாயும் நிற்குங் கவி.
திரிபதகை—கங்கை.
திரிபதார்த்தம் – சைவசித்தாந்த நூல்களிலே சொல்லப்படு மூன்று பதார்த்தங்களாகிய பதி, பசு, பாசம்.
திரிபலம்— } கடுக்காய், 2. நெல்லிக்
திரிபலை— } காய், 3. தான்றிக்காய்.
திரிபழகம்—பால், நெய், தேன்.
திரிபுடி—ஞாதுரு, 2. ஞானம், 3. ஞேயம்.
திரிபுடை—சத்ததாளத்தொன்று.
திரிபுண்டரம்—மூன்று வரியாய்ப்பூசும் விபூதிப் பூச்சு.
திரிபுரசுந்தரி—பார்வதி
திரிபுரதகனன்— } சிவன்.
திபுராந்தகன்— }
திரிபுரி—சாறடை, இது சாறணை.
திரிபுரை—பார்வதி.
திரிமூர்த்தி—பிரமா, விஷ்ணு, சிவன.
திரியம்பகன்—சிவன்.
திரியாவரம்—புரளி.
திரிவட்டம்—நூல் சுற்றுங்கருவி
திரு—இலக்குமி, 2. செல்வம், 3 மேன்மை, 4. அழகு.
திருகாணி—சுரையாணி.
திருகு—முறுக்கு.
திருகுகள்ளி—ஒருவகைக்கள்ளி.
திருகுதாளம்—மாறுபாடு.
திருகூசி—தமருசி.
திருக்கடைக்காப்பு—திவ்விய பிரபந்தத்தின் முடிவுப்பாட்டு.
திருக்கடையாப்பு – சம்பந்தர் பாடிய நூல்.
திருக்கடையூர்—தஞ்சாவூருக் கருகில் ஓர் சிவஸ்தலம்.
திருக்கு—முறுக்கு, 2. தந்திரம்.
திருக்கு—கண்.
திருசியம்—தோற்றமுள்ளது.
திருச்சிற்றம்பலம்—சிதம்பரம்.
திருடதை—உறுதி.
திருடம்—பலம்.
திருடன்—கள்வன், 2. விஷ்ணுகரந்தை.
திருடி—கள்ளி.
திருடு—களவு.
திருட்டாந்தம்—உதாரணம்.
திருட்டி—கண், 2. பார்வை.
திருணம்—துரும்பு, 2. புல்.
திருதி—உறுதி
திருதிமை—மூன்றுந்திதி.
திருத்தம்— ஒழுங்கு, 2 தீர்க்கம்.
திருத்தி—பூரணம், 2. மனோரம்மியம்.
திருநாமக்கத்திரி—ஓர் பாம்பு.
திருநாமச்செடி— } ஒருபூடு, அது நன்
திருநாமத்துத்தி— } னாரி.
திருநாள்—விசேஷ ஆராதனைத்தினம்.
திருநீலகண்டன்—ஓர் பூரான், 2. சிவதொண்டரிலொருவன்.
திருநீறு—விபூதி.
திருநீற்றுக்காப்பு—விபூதி யிட்டிரட்சை.
திருநீற்றுக்கோவில்—திருநீற்றுப்பை.
திருநீற்றுப்பச்சை— } உருத்திரசடைப்
திருநீற்றுப்பத்திரி } பூடு.
திருந்தலர்— } பகைவர்.
திருந்தார்— }
திருப்பதி—தேவதலம, 2. விட்டுணு.
திருப்பரங்குன்று—மதுரைக் கருகிலுள்ள ஒரு மலை, இது சுப்பிரமணியக் கடவுளுக்கு பிரதானதலமாயுள்ளது
திருப்பள்ளியெழுச்சி—தேவர்கள் அனந்தல் விட்டெழுதல்
திருமயிலை—மயிலாப்பூர்
திருமரம்—அரசமரம்.
திருமலர்—தாமரை.
திருமலை—கயிலாயமலை, 2. திருப்பதி.
திருமறுமார்பன் — விஷ்ணு, 2. அருகன்.
திருமாது—இலக்குமி.
திருமால்—மகாவிஷ்ணு.
திருமால்புதல்வன்—மன்மதன்.
திருமுகம்—கடவுள் சந்நிதானம், 2. பெரியோர் சமுகம், 3. ஸ்ரீமுகம், 4. நிருபம்
திருமுறை—திருவாசகம்.
திருமுற்றம்—குதிரை வையாளிவீதி, 2. கோயிற் சந்நிதானம்.
திருமுன்—தேவசந்நிதானம்.
திருமேனி—திவ்விய தேகம், 2. விக்கிரகம்.

திரும்ப—(வி) மடங்க, 2. மாற, 3. விலக, 4. மறுசமயத்திற்புக, 5. சாய, 6. மீள, 7. வளைய, 8. பின்னிட.
திருவடி—திவ்வியபாதம், 2. ஆருப்புண்.
திருவடிநிலை—பெரியோர் பாதுகைக்குப் பெயர்.
திருவட்டி—கள்ளிமரம்.
திருவன்—விகடக்காரன், 2. கள்வன்.
திருவாசகம் — மாணிக்கவாசக சுவாமிகளாற் செய்யப்பட்ட ஒரு தமிழ் வேதம்.
திருவாதிரம்—புரளி.
திருவாதிரை—ஒரு நக்ஷத்திரம்.
திருவாத்தான்— } விகடன்.
திருவாழ்த்தான்— }
திருவாய்மொழி—தெய்வவாக்கு, 2. வைணவரது தமிழ் வேதம்.
திருவாலி—கள்வன், 2. பொய்யன்.
திருவிளையாட்டு—தெய்வ விளையாட்டு
திருவுரு—விக்கிரகம், 2. வடிவம்.
திருவோணம்—ஒரு நட்சத்திரம்.
திருவோலக்கம்—மகா திவ்விய சபை.
திரேகம்—சரீரம்.
திரேக்காணம்—உதயராசியை மூன்று கப்பகிர்தல்.
திரேதம்— } ஓர் யுகம்.
திரேதாயுகம்— }
திரேதாக்கினி—முத்தீ.
திரை—உடற்றிரை, 2. வைக்கோற்புரி, 3. கொட்டைப்பஞ்சு, 4. அலை, 5. கடல், 6. ஆறு.
திரை—திரைச்சீலை.
திரைக்க—(வி) ஒதுக்க, 2. சுருக்க.
திரைய — (வி) திரங்க, 2. அலைய, 3. உறைய, 4. சுருங்க, 5. திரள.
திரையல்—வெற்றிலை.
திஸ்ரராசிகம்—முத்தொகை வினா.
திரோதம்— } பஞ்சகிருத்தியத் தொன்று.
திரோதயம்— }
திரோபவம்— } மயக்கம்.
திரோபாவம்— }
திரோபவிக்க—(வி) மறைக்க.
திர்ப்தி—திருத்தி.

திலகம்—சிந்தூரம், 2. பொட்டு, 3. நெற்றிச்சுட்டி, 4. மேன்மை, 5. கலித்துறை, 6. மஞ்சாடிமரம்.
திலதம்—பொட்டு, 2. நெற்றித்திலகம், 3. சுட்டி.
திலதர்ப்பணம் — எள்ளுந் தண்ணீரு மிறைத்தல்.
திலம்—எள், 2. மஞ்சாடிமரம்.
திலவகம்—விளாம்பட்டை.
தில்லாசா—தைரியப்படுத்தல்.
திலு—மூன்றின் குழூஉக்குறி.
திலுப்புலு—முப்பது.
திலோத்தமை—ஓரரம்பை.
தில்—அசைச்சொல், 2. ஒழியிசை, 3. காலம்.
தில்லம்—காடு.
தில்லானா—தாளக்குறிப்பு, 2. ஓர் சங்கக்குறிப்பு.
தில்லி—டில்லிப்பட்டணம்.
தில்லுமுல்லு—மாறுபாடு.
தில்லை—ஓர்மரம், 2. சிதம்பரம்.
தில்லைநாயகம்—ஓர்நெல்.
தில்லையம்பலம்—கனகசபை.
திவசம்—நாள், 2. சிராத்தம்.
திவடல்—(நொ பெ) துவளுதல்.
திவம்—தோற்றம், 2. பகல்.
திவரம்—நாடு.
திவலை—சிதறுந்துளி, 2. மழைத்துளி, 3. மழை.
திவவு—வீணை வலிக்கட்டு, 2. படிக்கட்டு.
திவள—(வி) துவள.
திவற—(வி) சாவ.
திவா—பகல்.
திவாகரம்—ஒரு நிகண்டு.
திவாகரன் — திவாகரஞ்செய்தவன், 2. சூரியன்.
திவாகீர்த்தி — அம்பட்டன், 2. சண்டாளன்.
திவாந்தம்—அந்தை.
திவாமணி—சூரியன்.
திவானி—நியாயஸ்தலம்.
திவான்ஜீ—மந்திரி.
திவோதாசன்—காசியரசன்.
திவ்வியகவி—தெய்வப்புலவன்.

திவ்வியசட்சு—ஞானக்கண், 2. தெய்விக பார்வை.
திவ்வியம்—தெய்வீகம், 2. மேன்மை.
திளைக்க—(வி) நெருங்க, 2. பூரிக்க, 3. போகிக்க, 4. பெருக.
திறக்க—(வி) வழியுண்டாக்க, 2. வெளிப்படுத்த, 3. தாழ்திறக்க, 4. விரிக்க, 5. அங்காக்க, 6. துளைக்க, 7. பிளவுபட, 8. விரிய, 9. ஒலியுரக்க.
திறக்கு—காரியம்.
திறத்தி—மருத்துவப்பெண்.
திறப்பணம்—தமருசி.
திறப்பு—காவலின்மை, 2. திறத்தல்.
திறமை—மேன்மை, 2. சமர்த்து, 3 வலிமை, 4. ஐசுவரியம், 5. தைரியம்.
திறம்—வகை, 2. தன்மை, 3. பக்கம், 4. வலிமை, 5. உறுதி, 6. சாமர்த்தியம், 7. மேன்மை, 8. ஐசுவரியம், 9. அதிகம், 10. குறை நரம்புள்ள வீணை, 11. காரணம், 12. மருத்துவம்.
திறம்ப—(வி) தவற, 2. மாறுபட.
திறல்—வலி, 2. போர், 3. பகை, 4. தைரியம்.
திறன்—குணம், 2. காரணம், 3. கூறுபாடு.
திறுங்கு—கதவடை தாழ்.
திறுணி—திராணி.
திறுதிட்டம்—
திறுதட்டம்— } நேர்நிற்கை.
திறுதிற்க்க—
திறுதிறென— } (வி) அஞ்சிவிழிக்க.
திறை—அரசிறை
திற்றி—தின்னற்குரியன.
தினகரன்—சூரியன்
தினகாலம்—எப்போதும்.
தினமணி—சூரியன்.
தினமானம்—நித்தமும்
தினவு—சொறி.
தினுசு—
தினுசுவாரி— } வகை.
தினை—ஓர் தானியம், 2. சிறுமை.
தினைக்குருவி—ஓர் சிறுகுருவி.
தின்மை—தீமை.
தின்றி—தீன்.
தின்ன—(வி) உண்ண, 2. சிற்றுண்டி புசிக்க, 3. மெல்ல, 4. பட்சிக்க, 5. அரிக்க.
தின்னி—தின்கிறவன்.

## தீ

தீ—நெருப்பு, 2. பஞ்சபூதத் தொன்று, 3. நரகம், 4. உயிரிலுள்ள தீ, 5. உதரத்துள்ள தீ, 6. சினத்திலெழுந் தீ.
தீ—உவப்பான, 2. இனிமையுள்ள.
தீ—அறிவு.
தீக்கஞ்சி—ஆரதிகருப்பூரம்.
தீக்கடன்—ஈமக்கடன்.
தீக்கடைகோல்—ஞெலிகோல்.
தீக்கதர்—தீட்சதர்.
தீக்கதிர்—உலையாணிக்கோல்.
தீக்கல்—தீத்தட்டிக்கல்.
தீக்காய்தல் — (தொ பெ) குளிர்காய்தல்.
தீக்குருவி—தழல்விழுங்கி.
தீக்குளித்தல்—(தொ பெ) அக்கினியிற் படிதல்.
தீக்கூர்மை—இந்துப்பு, 2. திலாசாரம்.
தீக்கை—மந்திரோபதேசம், 2. யாகம், 3. மயிர் களையாதிருக்கை.
தீக்கையோன்—குரு, 2 தீட்சை பெற்றவன்.
தீங்கு—பொல்லாங்கு, 2. கேடு, 3. தவறு.
தீச்சலம்—கடல்துரை.
தீச்சொல்—பழிச்சொல்.
தீஞ்சொல்—இனியசொல்.
தீட்சணம்—
தீக்ஷணம்—
திட்சணியம்— } வெப்பம், 2. கூர்மை, 3. உக்கிரம்.
தீட்சதர்—தீக்கதர்.
தீட்சை—
தீக்ஷை—
தீக்கை— } குருபதேசம், 2. ஞானபோதனை, 3. பக்குவான்மாவைக் கரையேற்றல், 4. விரதநியமம், 5. சங்கற்பம்.
தீட்ட—(வி) கூராக்க, 2. அரிசிதீட்ட, 3. அடிக்க, 4. பல்துலக்க, 5. எழுத, 6. சித்திரிக்க, 7. கட்ட.

தீட்டம்— } ஆசூசம், 2. மகளிர்தொடக்கு.
தீட்டு— }
தீட்பு—இழிவு, 2. குலவடு.
தீண்ட—(வி) தொட, 2. தொற்ற, 3. விஷந்தீண்ட, 4. கற்பழிக்க, 5. பற்ற.
தீண்டியம்—பவளக்குறிஞ்சி.
தீதல்—(தொ. பெ) கருகுதல், 2. தீந்துபோதல்.
தீது—தீமை, 2. குற்றம், 3. தீமையுடையது.
தீத்தம்— } பிரகாசம், 2. சிவாக மிருபத்தெட்டிடுென்று, 3. பெருங்காயம், 4. தீர்த்தம்.
தீப்தம்— }
தீந்தமிழ்—இனியதமிழ், 2. நற்றமிழ்.
தீபகம் — விளக்கு, 2. ஓரலங்காரம், அஃது ஓரிடத்து நின்றமொழி பலவிடத்து நின்று பொருடருவது, 3. புட்படுக்கும்படி கொண்டுபோகிறபுள்.
தீபகாந்தி—வயிரக்கல்.
தீபக்கால்—விளக்கேந்து கருவி, 2. விளக்குத்தண்டு.
தீபக்கொடிச்சி—ஆரதிகருப்பூரம்.
தீபதூபம்—விளக்கும் நறும்புகையும்.
தீபம்—விளக்கு, 2. சோதிநாள், 3. தீவு.
தீபவதி—ஆறு.
தீபவராடி—வராடிக்திறத்திலொன்று.
தீபனம்—பசி, 2. ஆகாரம்.
தீபாவலி— } ஐப்பசிமாதத்தில் அபரபக்கச் சதுர்த்தசியில் உஷத்காலத்தில் நரகாசுரனைத் திருமால் கொன்றதனால் இவ்வேளை எழுந்து அப்பியங்கஸ்நானஞ்செய்துகொண்டு கோடி தரித்துப் பலகாரங்களருந்தியுலகத்தார் மங்களங்கொண்டாடவேண்டுமென அவ்வசுரன் வேண்டுகோளால் திருமாலங்ஙனமேயாக வென்றதினமாம்.
தீபாவளி— }
தீபாளி— }
தீவாளி— }
தீபிகை— } விளக்கு.
தீவிகை— }
தீப்பி—நெருப்பு.
தீமை—பொல்லாங்கு, 2. கேடு.
தீம்—இனிமை, 2. தித்திப்பு.
தீம்பர் — கீழ்மக்கள், 2. தீங்குசெய்வோர்.
தீம்பு—பொல்லாங்கு, 2. கீழ்மை.
தீயகம்—நரகம்.
தீயம்—தித்திப்பு.
தீயர்—கீழ்மக்கள், 2. வேடர்.
தீயளி—காய்.
தீபாக்கீரை—பொன்னங்காணிக்கீரை.
தீர—முற்றாக.
தீர்—(வி) முடிய, 2. நீங்க, 3. தீர்மானமாக, 4. நிறைவேற, 5. ஓய, 6. நீள, 7. அற, 8. ஊமொழிய, 9. சாவைதீர, 10. வெடிதீர, 11. சாயந்தீர, 12. கணக்குத்தீர, 13. சுங்கந்தீர.
தீரத்துவம்—தைரியம்.
தீரம்—வலி, 2. தைரியம், 3. கரை, 4. சிறுவரம்பு.
தீராந்தி—விட்டம்.
தீராமை—கடுந்துரோகம், 2. பொய்க்குற்றச்சாட்டு, 3. வன்மத்தாற்சொல்லுங்கோள்.
தீரிக்கை—ஒழிந்தவேலை.
தீர்கடை—முடிவு, 2. முழுமை.
தீர்க்கக்கிரீபம்—ஒட்டகம்.
தீர்க்கசதுரம்—நீண்டசதுரம்.
தீர்க்கசந்தி-வடமொழிப் புணர்ச்சியிலொன்று. அது: அ ஆக்களின்பின் ஆவும் இ ஈக்களின்பின் ஈயும் உ ஊக்களின்பின் ஊவும் தோன்றல்.
தீர்க்கதண்டம் — சாஷ்டாங்க தண்டம்.
தீர்க்கதரிசனம்—முக்கால வருத்தமானமறிதல்.
தீர்க்கதரிசி — முக்கால வருத்தமானமறிவோன்.
தீர்க்கம்—நீட்சி, 2. நெட்டுயிரெழுத்து, 3. தூரம், 4. பூரணம், 5. உச்சரிப்பின் திறம், 6. திட்டம்.
தீர்த்தகர்— } சமணமுனிவர்.
தீர்த்தகரர்— }
தீர்த்தங்கரர்—ஜைனமதாசாரியர்.
தீர்த்தம் — சுத்தம், 2. புண்ணியதீர்த்தம், 3. திருமஞ்சனநீர், 4. ஓதியிறைக்கும் நீர், 5. புண்ணியகால ஸ்நான

சுத்தம், 6. திருவிழா, 7. துளசிதீர்த்தம்.
தீர்த்தர்—கடவுளர், 2. பரிசுத்தர்.
தீர்த்தன்—அருகன், 2. சிவன், 3. குரு, 4. உபாத்தியாயன்.
தீர்த்திகை—ஆறு.
தீர்ந்தவன் — தேறினவன், 2. துறந்தவன்.
தீர்ப்பு—நியமம், 2. முடிப்பு.
தீர்மானம்—நியமம், 2. முடிவு, 3. தீர்ப்பு, 4. தாளத்தீர்ப்பு, 5. முழுமை.
தீர்மானிக்க—(வி) நிருணயிக்க, 2. முடிக்க, 3. நியமிக்க, 4. தாளந்தீர்க்க.
தீர்மானிப்பு — முடிப்பு, 2. தாளத்தீர்ப்பு.
தீர்வை—தீர்மானம், 2. முடிவு, 3. சுங்கம், 4. விதி, 5. கருமாந்தம், 6. கிரி.
தீர்வைக்காரன்—ஆயக்காரன்.
தீவகம்—தீபிகை.
தீவட்டி—தீவர்த்தி.
தீவரம்—தீவிரம்.
தீவர்த்தி—எரிபந்தம்.
தீவாணம்—நியாயஸ்தலம்.
தீவாந்தரம்—தீவு.
தீவான் — ஒரு மகமதியதலைமை உத்தியோகஸ்தன், 2. கறையான்.
தீவி—புலி.
தீவிகை—தீபிகை.
தீவிதிராட்சம்—கொடிமுந்திரிகை.
தீவிரம்—சீக்கிரம், 2. பெருங்கோபம், 3. கொடுமை, 4. உறைப்பு, 5. சூரியகிரணம், 6. நரகம்.
தீவிளங்கும் வைரம்—மீனம்பர்.
தீவிளி—காய்.
தீவு—இனிமை.
தீவு—கடலிடைக்குறை, இது ஏழுவகை, 2. தீவாந்தரம்.
தீவேட்டல்—கலியாணம், 2. யாகம் பண்ணல்.
தீவேள்வி—கலியாணம்.
தீழ்ப்பு—சிவத்துவம்.
தீற்ற — (வி) ஊட்ட, 2. மெழுக, 3. வெடிப்புமாற்ற, 4. வயிறுதீற்ற, 5. பல்துலக்க.

தீனபந்து—கடவுள்.
தீனம்—குறை, 2. குரூரம்.
தீனன்—இரப்போன்.
தீனி—தின்.
தீன்—உணவு.

## து

து—ஒரிகழ்ச்சிக்குறிப்பு.
துகள்—புழுதி, 2. குற்றம், 3. பூந்தாது.
துகிரிகை—சாந்து, 2. சித்திரம்.
துகிர்—பவளம்.
துகிலிகை—எழுதுகோல், 2. சித்திரம்.
துகில்—சீலை, 2. விருதுக்கொடி.
துகினம்—பனி.
துகைக்க — (வி) இடித்துக்குழைக்க, 2. உழக்க, 3. வருத்த.
துகையல்—துகைத்தபொருள்.
துக்கடி—துண்டுபட்டது.
துக்கம் — விசனம், 2. உபத்திரவம், 3. நரகம், 4. குற்றம்.
துக்காணி — இரண்டு தம்படிகொண்ட ஒரு செம்பு நாணயம்.
துக்கிக்க—(வி) விசனப்பட, 2. வருந்த.
துக்கிதன்—துக்கிக்கிறவன்.
துக்கு — சிழ்மை, 2. உதவாதது, 3. துப்பு
துக்குடி—துக்கடி.
துக்குணி—அற்பம்.
துக்கை—சூதகம்.
துங்கதை—உயர்ச்சி, 2. பெருமை.
துங்கபத்திரி— } ஓர் நதி.
துங்கபத்திரை— }
துங்கம்—உயர்ச்சி, 2. பெருமை, 3. மந்தோச்சம்.
துங்கரிகம்—காவிக்கல்.
துசகம்—மாதுளைமரம்.
துசம்—குங்கிலியம்.
துசம்—கொடி, 2. இருபிறப்புள்ளது, 3. பல்.
துசன்—பார்ப்பான்.
துச்சம்—கொம்மட்டிக்கொடி, 2. பேய்க்கொம்மட்டிக்கொடி.
துச்சம்—அற்பம், 2. வெறுமை.
துச்சவனன்—இந்திரன்.

துச்சன்—அற்பன்.
துச்சாதனன்— } துரியோதனன் தம்பி.
துச்சாசனன்— }
துச்சி—புசிப்பு, 2. அநுபவம்.
துச்சிமை—கீழ்மை.
துச்சில்—ஒதுக்கிடம், 2. குட்டு, 3. சரீரம்.
துஞ்ச — (வி) உறங்க, 2. மந்தமாயிருக்க, 3. சாவ, 4. சோர, 5. நிலையுற.
துஞ்சற—முழுமையும்.
துஞ்சுமன்—சோம்பன்.
துடக்கம்—தொடக்கம்.
துடக்கறுப்பான்—கொத்தான்கொடி.
துடக்கு—தொந்தம், 2. தொடர்ச்சி.
துடக்கு—மகளிர் சூதகம்.
துடங்கு—(வி) தொடங்கு.
துடப்பம்—துடைப்பம்.
துடர்—தொடர்.
துடர்ச்சி—தொடர்ச்சி.
துடர்தல்—(தொ. பெ) தொடர்தல்.
துடவை—உழவுகொல்லை, 2 பூந்தோட்டம்.
துடி—குமரனுடல், 2. சத்தகன்னிகைகளாடல், 3. குறிஞ்சி நிலப்பறை, 4. பாலைநிலப்பறை, 5. உடுக்கை, 6. காலநுட்பம், 7. ஏலம், 8. அகிலமரம், 9. கூதாளிச்செடி, 10. இசங்கஞ்செடி, 11. உதடு, 12. முதன்மை.
துடிக்க—(வி) அசைய, 2. குதிக்க, 3. தத்தளிக்க, 4. மின்ன, 5. பசியினால் வருந்த.
துடிதுடிக்க — (வி) பதைபதைக்க, 2. கடுகடுக்க.
துடியடி—யானைக்கன்று.
துடியாஞ்சி—இசங்கஞ்செடி.
துடியானவன்—பலாஷ்டிகன்.
துடுக்கு—குறும்பு, 2. விரைவு.
துடுப்பாற்றி—ஓர் மீன்.
துடுப்பு—மருந்து நடவுங் கருவி, 2. சருவை, 3. வலிதண்டு, 4. பூங்கொத்து.
துடுமெனல்—ஒலிக்குறிப்பு.
துடுவை—நெய்த்துடுப்பு.

துடை—சுவர்க்கட்டை, 2. சுவர்ப்புறத்து நீண்ட உத்திரம், 3. விட்டம், 4. தொடை.
துடைகாலி — பாக்கியத்தை ஒழிக்கும் பெண்.
துடைக்க—(வி) சீக்க, 2. பெருக்க, 3. அழிக்க, 4. நீக்க, 5. வடுஅகற்ற, 6. நிர்மூலமாக்க, 7. கைவிட.
துடைப்பம்—வாருகோல்.
துடைவாசி—விஷமூங்கில்.
துட்க—(வி) அச்சங்கொள்ள.
துட்டம்— } தீங்கு, 2. கொடுமை, 3.
துஷ்டம்— } மூர்க்கம்.
துஷ்டன்—தேள்.
துட்டவி—ஒரு செடி.
துட்டாட்டம்—துட்டத்தனம்.
துட்டாப்பு—சிட்டைமரம், 2 சுமத்தல், 3. மந்தம்.
துட்டு—செப்புநாணயம், 2. நாணயம்.
துட்டு— } தீமை.
துஷ்டு— }
துட்டுக்கட்டை— } குறுந்தடி.
துட்டுத்தடி— }
துட்டுவம்—அற்பம்.
துட்டை— } வசவி.
துஷ்டை— }
துணங்கறல்—இருள், 2. திருவிழா.
துணங்கு—இருள்.
துணங்கை—இருகையுமுடக்கிப் பழுப்புடை யொற்றியாடல், 2. திருவிழா, 3. கூத்து.
துணர் — பூ, 2. பூங்கொத்து, 3. பூந்தாது.
துணர்க்க—(வி) முகைக்க.
துணவு—சீக்கிரம், 2. நுணைமரம்.
துணி—கந்தை, 2. சீலை, 3. துண்டம், 4. சோதிநாள், 5. தூக்கங்கள், 6. ஒளி, 7. தேரிடக்கியம், 8. தெளிவு.
துணிகரம்—தைரியம், 2. துணிவு.
துணிகரிக்க—(வி) துணிய.
துணிக்கை—துண்டு.
துணிச்சல்—துணிகரம்.
துணித்தல்—(தொ. பெ) அறுத்தல், 2. வெட்டல்.

துணிபு—தெளிவு, 2. தீர்மானம்.
துணிய—(வி) துண்டமாக, 2. எண்ண, 3. தெளிய, 4. முயல, 5. நிச்சயப் படுத்த.
துணுக்கம் — அச்சம், 2. உள்ளோசை.
துணுக்கிடுதல்—(தொ. பெ) பயப்படு தல்.
துணுக்கு—பயங்கரம்.
துணுக்கை—துண்டு.
துணை—உதவி, 2. சகாயம், 3. ஆதரவு, 4. அளவு, 5 ஒப்பு, 6 சல்லியம், 7. இணை.
துணைக்காரணம்—உபகரணம்.
துணைமை—உதவி.
துணைவன்—தலைவன், 2. தோழன், 3 மந்திரி, 4. உதவிசெய்வோன்.
துணைவி—மனைவி, 2 உதவிசெய்பவள், 3. சகோதரி.
துனைவு—சீக்கிரம்.
துண்டம் — துணிக்கை, 2. துணி, 3 பிரிவு, 4. கைவாய்க்கால்
துண்டம்—முகம், 2. மூக்கு, 3. பறவை மூக்கு, 4 யானைத்துதிக்கை, 5. சாரைப்பாம்பு
துண்டரிக்கம்— } குரூரம், 2. தொந்தரவு
துண்டிரிக்கம்— }
துண்டாயம்—பொற்பணம், 2. பொன் மணல்.
துண்டி—துண்டுநிலம், 2. சுழி.
துண்டிக்க—(வி) அறுக்க, 2. நறுக்க, 3. துண்டு துண்டாக்க, 4. சொல்லைத் துண்டிக்க, 5. பிரிக்க, 6. கடிய, 7. மறுக்க.
துண்டிவிநாயகன்—காசிக்கணபதி.
துண்டீரன்—ஓரரசன்.
துண்டு—துணிக்கை, 2. பங்கு, 3. சீட்டு, 4. துணி, 5. இரண்டு சிப்பம் புகையிலை, 6. நஷ்டம்.
துண்டுகத்திரி—ஓர் விஷப்புழு
துண்ணிட—(வி) திடுக்கிட.
துண்ணெனல்—அச்சக்குறிப்பு.
துதமுகம் — வேண்டாமைக்கு இடம் வலம் தலையாட்டல், 2. தலையாட்டம், 3. நாகந்தலையசைக்கை.

துதி— } தோத்திரம்.
ஸ்துதி— }
துதிக்க—(வி) தோத்திரிக்க, 2. நினைக்க.
துதிக்கை—தும்பிக்கை, 2. துதிக்குதல்.
துதியம்—சவரிலோத்திரம்.
துதியை—இரண்டாந்திதி.
துதை—நெருக்கம்
துதைய—(வி) நெருங்க, 2. மிகுதிப்பட.
துத்தநாகம்—நவலோகத்தொன்று.
துத்தம் — மத்திமநாதம், 2. நாவினுற் பிறக்குமிசை, 3. யாழினோர் நரம்பு, 4. நாய், 5. வயிறு, 6. நாண்முகப் புல்.
துத்தம்—பால், 2. கண்மருந்து.
துத்தி - உண்டற்குரியன, 2. பாம்பின் படப்பொறி, 3 தேமல், 4. ஓர்செடி.
துத்தியம்— } துதி, 2. வணக்கம்.
ஸ்துத்தியம்— }
துத்து—சேணப்பஞ்சு, 2. பொய்.
துத்துப்போடுதல்—(தொ. பெ) தூர்த் தல்.
துந்தம்—வயிறு.
துந்தி—வயிறு.
துந்துபி—துந்துமி, (பேரிகை.)
துந்துமாரி—முதலெழுவள்ளலி லொருவன்.
துந்துமி—மழைத்துளி.
துந்துமி — துந்துபி, 2. பறைப்பொது, 3. ஓரசுரன், 4. ஓர் வருடம்.
துந்துருபாவை— } துடிப்புள்ளவள்.
துந்துருமாவை— }
துபாக்கி— } சுடுங்கருவி.
துப்பாக்கி— }
துபாசி— } இருபாஷை யறிந்தோன்.
துபாஷி— }
துப்பாசி— }
துப்ப—(வி) உமிழ.
துப்பகம்—நெய்.
துப்பட்டா— } ஓர் சீலை.
துப்பட்டி— }
துப்பரவு—மேன்மை.
துப்பிரசம்—கருஞ்சொண்டி.
துப்பு—உணவு, 2. அனுபவம், 3. நெய், 4. பானம், 5. மிகுதி, 6. வலி, 7. சகா

யம், 8. துணைக்காரணம், 9. ஆயுதப் பொது, 10. சுத்தம், 11. அறிவு, 12. சிவப்பு, 13. அரக்கு, 14. பவளம், 15. பொலிவு, 16. பகை, 17. சாமர்த்தியம், 18. ஆராய்ச்சி, 19. குற்றம், 20. துணைக்கருவி, 21 கறை.
துப்புக்கேடு—சீர்கேடு.
துப்புரவு—ஐம்பொறி நுகர்ச்சி, 2. அனுபவம், 3. அலங்காரம், 4. முறைமை, 5. சுத்தம், 6. முழுமை, 7. மேன்மை.
துமாலா— } இறைவாங்காமை.
துமால்— }
துமாலா—கடையிழுப்புச்சரிகை.
துமானம்—ஆபரணப்பெட்டி.
துமி—மழைத்துளி, 2. சிறு திவலை.
துமிதம்—நீர்த்துளி.
துமித்தல்—(தொ. பெ) வெட்டல், 2. அறுத்தல்.
தும் — துகள், 2. உளப்பாட்டுத் தன்மைப் பன்மை விகுதி.
தும்பகா—தும்பைப்பூடு.
தும்பரம்—அத்திமரம்.
தும்பராஷ்டகம் — பேரரத்தை, (ஒரு மருந்து.)
தும்பல்—உயிர்ப்பு, 2. தும்முதல், 3 விடுதல்.
தும்பன்—தீயவன்.
தும்பால்—துமால்.
தும்பி—சுரைக்கொடி.
தும்பி—யானை, 2. கருவண்டு, 3. வண்டு, 4. வண்டிறுண், 5. ஓர்மீன், 6. கரும்பு, 7. கொத்தான்கொடி, 8. பனிச்சைக்காய்.
தும்பிக்கை—துதிக்கை.
தும்பிலி—ஒரு மரம்.
தும்பு—நார், 2. ஓர்கயிறு, 3. சிம்பு.
தும்புரு — ஓர் கந்தருவன், 2. நரம்புக் கருவியினொன்று.
தும்பை — ஓர்பூடு, 2. போர்செய்வோர் அணியும் மாலை, 3. ஓர்மீன், 4. கூட்டம், 5. வெற்றிலை. 6. போர்செய்

தும்ம—(வி) உயிர்க்க, 2. விட.
தும்மட்டி— } ஓர்செடி.
தும்முட்டி— }
தும்மு—கொசுகு.
துயக்க-(வி) தளர்த்த.
துயக்கம்— } தளர்வு.
துயக்கு— }
துயங்க—(வி) தளர.
துயம்—இரண்டு, 2. கொடி.
துயர—(வி) துக்கிக்க, 2. துன்பப்பட.
துயரம்—துக்கம், 2. பரிதாபம், 3. உபத்திரவம், 4. நோவு.
துயர்—துன்பம்.
துயல—(வி) அசைய.
துயவு—அறிவின்றிரிபு.
துயில—(வி) உறங்க.
துயில்—நித்திரை.
துயிற்ற—(வி) நித்திரைசெய்விக்க.
துயுலி—தொய்யில்.
துய்—நூற்கும் பஞ்சிற்றொடர் நுனி, 2 அறிவின்றிரிபு.
துய்க்க—(வி) நூனூற்க, 2. உண்ண, 3 ஐம்பொறியால் நுகர, 4 வினைப்பயன் அனுபவிக்க.
துய்ய—சுத்தமுள்ள.
துய்யவணரவியாக்கி — பவளப்புற்றுப் பாஷாணம்.
துய்யன் — பரிசுத்தன், 2. வெள்ளி மணல்.
துய்யாள் — சுத்தமுடையாள், 2 சரசுவதி.
துரகம்— } குதிரை, 2. குதிரைப் பற்பாஷாணம்.
துரகதம்— }
துரங்கம்— }
துரத்த—(வி) செலுத்த, 2. தள்ளிவிட, 3. தொடர, 4. அகற்ற.
துரந்தரன்—பாரஞ்சுமப்போன், 2. முயன்று நிற்போன்.
துரபிமானம்—வீண்பெருமை.
துரப்பணம்—தச்சர் கருவியிலொன்று.
துரம்—பொறுப்பு.
துரவு—கிணறு.
துராகதம்— } தீத்தொழில்.
துராகிருதம்— }

துராலோபம்—சிறுகாஞ்சொறி
துரால்—செத்தை, 2. துன்பம்.
துரிசு—துன்பம், 2. குற்றம், 3. துருசி.
துரிஞ்சில்—வௌவால், 2. உசிலமரம்.
துரிதம்—, துருதம்— } சீக்கிரம், 2. ஓர்தாளம், 3. பாவம், 4. கேடு, 5. கலக்கம், 6. துன்பம்.
துரியம் — சுமத்தல், 2. பொதியெருது, 3. நான்காமவத்தை, 4. சுத்தநிலை, 5. பரமாத்துமா.
துரியர்—சுத்தாத்துமாக்கள்.
துரியாதீதம்—ஆன்மாக்கள் மிகத் தூய்மையாய் நிற்கும் நிலை.
துரியோதனன்—திருதராட்டிரன் குமாரர் நூற்றுவரில் மூதசோன், (சுயோதனன்.)
துரீ—பாவாற்றி.
துரீல்—சடிதி.
துரு—இருப்புக்கறை, 2. களிம்பு.
துருகம்—துருக்கம்.
துருக்கம் — கஸ்தூரி மிருகம், 2. குங்குமமரம், 3. கலக்கம், 4. காடு.
துருக்கம்—மலையின்மேற்கோட்டை
துருக்கர்—ஒரு பாடைக்காரர்.
துருக்கல்—செம்புறைக்கல்.
துருக்கு—துருக்கர் தேசம், 2. மிலேச்சசாதி, 3. ஓர் பாஷை.
துருசி—, துரிசு— } மயிற்றுத்தம், 2. மாசு.
துருசு—சீக்கிரம்.
துருஷ்டு—பழுதுபார்த்தல்.
துருதம்—துரிதம்.
துருதுருக்க—(வி) துடிதுடிக்க, 2. ஆத்திரப்பட.
துருதுருப்பு—அமைவின்மை.
துருதுரும்பை—ஓர் பிள்ளைகள் விளையாட்டு.
துருதை—நினைவு, 2. சுறுசுறுப்பு.
துருத்தி—உலைத்துருத்தி, 2. நீர்த்துருத்தி, 3. மட்டத்துருத்தி, 4. ஆற்றிடைக்குறை.
துருத்தூரம்—ஊமத்தஞ் செடி.
துருந்த—(வி) துளைபருக்கப்பண்ண, 2. ஆராய.

துருபதன்—துரோபதை தந்தை.
துருபவருணி—காட்டாமணக்கஞ்செடி.
துருப்பணம்—தச்சர் கருவியிலொன்று.
துருப்பிடிக்க—(வி) தேடிபார்க்க.
துருமம்—மரப்பொது, 2. மனக்கலக்கம்.
துருமோற்பலம்—கோங்குமரம்.
துரும்பு—திரணம்.
துருவ—(வி) தொளைக்க, 2. தேங்காய் துருவ, 3. தேடிப்பார்க்க.
துருவண்ணம்—வெள்ளி.
துருவம்—அசையாமை, 2. துருவநட்சத்திரம், 3. பூச்சக்கரத்தின் முனை, 4. சத்ததாளத்தொன்று, 5. கிரகபுடம், 6. நித்தியயோகத்தொன்று, 7. மூலத்துருவம், 8. உபாயம்.
துருவன் — உத்தானபாதனுக்குச் சுநீதியிடத்திற் பிறந்தவன், 2. துருவ நட்சத்திரம், 3. அஷ்டவசுக்களிலொருவன்.
துருவாசன்—ஒரு ரிஷி.
துருவாடு—, துருவை— } செம்மறியாடு.
துருவுமணை—தேங்காய் துருவி.
துருளக்கம்—குங்கிலியம்.
துரை—சீமான், 2. அதிகாரி.
துரைசானி—, துரைச்சி—, துரைப்பெண்— } சீமன்மகள்.
துரைச்சி—லோகதிமிலை.
துரைத்தனம்—அதிகாரம்.
துரோகம்—பாதகம், 2 இரண்டகம்.
துரோகி—கொடும்பாவி, 2. இரக்கமற்றவன்.
துரோட்டி—துரட்டுக்கோல்.
துரோணம் — காக்கை, 2. சத்தமேகத்தொன்று, 3. பதக்கு, 4. எண்காற்புள், 5. வில், 6. தனுவிராசி, 7. தும்பைச்செடி, 8. தலைவாய்.
துரோணன்—, துரோணசாரி— } ஓர் வில்லாசிரியன்.
துரோபதை—பாண்டவர் மனைவி.
தூர் — திதப்பொருட்கு மோருபசருக்கம்.
தூர்க்கந்தம்—கெட்டநாற்றம்.

துர்க்கம்—துருக்கம்.
துர்க்கை—கொற்றவை, 2. பூராட்சத்திரம்.
துர்ச்சனன்—துஷ்டன்.
துர்த்துாரம்—ஊமத்தஞ்செடி.
துர்ப்பரிகம்—சிறுகாஞ்சொறி.
துர்ப்பலம்—பலவீனம், 2. சிறுமை.
துர்முகி—துன்முகி.
துர்லபம்—பெறுதற்கரிது.
துலக்க—(வி) மினுக்க, 2. பிரகாசிக்கப் பண்ண, 3. தெரியப்படுத்த.
துலக்கம்—பிரகாசம், 2. பளபளப்பு, 3. தெளிவு.
துலங்க—(வி) பிரகாசிக்க, 2. துலக்கப்பட, 3. தோன்ற, 4. தெளிய, 5. சிறக்க.
துலங்கு—தொழுமரம்.
துலம்—கனம், 2. துலாநிறை, 3. நீர்முள்ளிச்செடி, 4. கோரைப்புல்.
துலவம்—பஞ்சு.
துலா—நிறைகோல், 2. ஏற்றமரம், 3. பண்டி ஏர்க்கால்.
துலாகோடி — காலணியினொன்று, 2. பத்துக்கோடி.
துலாக்கட்டை—திராவி.
துலாக்கோல்—தராசுக்கோல்.
துலாந்து—ஓர்வகைப் பரண்.
துலாம்—நிறைகோல், 2. துலாராசி, 3. ஏற்றமரம், 4. ஓர் நிறை.
துலாம்பரம்—துலக்கம் , 2. தெளிவு, 3. பகிரங்கம்.
துலிதம்—அசைவு, 2. ஒப்பு.
துலுக்க—(வி) குலுக்க, 2. அசைக்க, 3. குலுக்கிநடக்க.
துலுக்கப்பூ—ஓர் பூ.
துலுக்கர்—துருக்கர்.
துலுக்காணம் — ஒருதேயம், 2. ஓர்வகைச் சதுரங்கவிளையாட்டு.
துலுக்கு—ஓர் பாடை.
துலை — துலாக்கோல், 2. துலாவிராசி, 3. நீரிறைக்குந்துலா, 4. துலைமுகம், 5. கனம், 6. ஒப்பு.
துலை—தூரம்.
துலைத்தல்—(தொ. பெ) தொலைத்தல்.
துலோபம்—கருஞ்சண்டி,
துல்லபம்—அருமை.
துல்லம்—பேரொலி.
துல்லியம்—உவமை, 2. சுத்தம்.
துல்லியோகிதாலங்காரம்—ஒப்புமைக் கூட்ட அணி.
துவக்க—(வி) ஆரம்பிக்க, 2. கட்ட.
துவக்கம்—ஆரம்பம்.
துவக்கு—சம்பந்தம், 2. சங்கிலி, 3. பிணக்கு, 4. துப்பாக்கி.
துவக்கு—தோல், 2. உடல்.
துவங்க—(வி) ஆரம்பிக்க.
துவங்கிசம்—சேதம்.
துவசம் — விருதுக்கொடி.
துவசர்—கள்விற்போர்.
துவசாரோகணம்—கொடியேற்றம்.
துவட்சி—அசைவு.
துவட்சிகை—கடுப்பிஞ்சு
துவட்ட—(வி) துடைக்க, 2. நெருப்பிற் புலர்த்த, 3. தோயச்செய்ய.
துவட்டர்—தச்சர், 2. கம்மாளர்.
துவட்டல்—துவட்டற்கறி.
துவட்டன்—துவாதசாசித்தர்களிலொருவன்.
துவட்டா— } விசுவகருமன்.
துவஷ்டா— }
துவட்டாநாள்—சித்திரை நட்சத்திரம்.
துவந்தம்—தொந்தம்.
துவந்துவம்—இரண்டு, 2. இரட்டை.
துவந்தனை—தடை, 2. அலைவு.
துவம்—அசையாநிலை, 2. தன்மை.
துவயம்—இரண்டு.
துவரம்—துவர்ப்பு.
துவரி—காவிநிறம்.
துவரை—ஓர் பயறு, 2. துவாரகை.
துவரைமல்லி—புஷ்பராகத்தரிப்பு.
துவர்—பகை, 2. சிவப்பு, 3. பவளம், 4. விறகு.
துவர்—துவர்ப்பு, 2. சீயக்காய் முதலியன.
துவர்க்கட்டி—காய்ச்சுக்கட்டி.
துவர்க்காய்—பாக்கு.
துவர்ச்சிகை—கடுக்காய்ப்பிஞ்சு.

துவர்தல்—(தொ. பெ) திமிர்தல், 2. தெளிதல், 3. பிரிதல்.
துவர்த்தல்—(தொ. பெ) துவர்ப்புக்கொள்ளுதல், 2. பூசுதல்.
துவர்ப்பு—அறுசுவையுளொன்று.
துவலை—திவலை, 2. மழைத்தூவல்.
துவல்—சீக்கிரம்.
துவள—(வி) அசைய, 2. மெல்லியதாயிருக்க, 3. நெளிய, 4 இறுக, 5 கசங்க, 6. ஒட்ட, 7 வாட.
துவறல்—துவலைவிடுதல், 2. விரைவு.
துவனம்—அக்கினி.
துவனி—ஒலி.
துவன்—வட்டத்திருப்பி.
துவன்ற—(வி) நிறைய, 2. நெருங்க, 3. மிக, 4. சாக.
துவா—இரண்டு.
துவாதசம்—பன்னிரண்டு.
துவாதசி—ஓர் திதி.
துவாந்தம்—இருள், 2. நரகம்
துவாபரம்— } மூன்றும் யுகம்.
துவாபரயுகம்— }
துவாரகை— } சத்தபுரியிலொன்று.
துவாரகாபுரி— }
துவாரபாலகன்—கடைகாப்போன்
துவாரம்—தொளை, 2. வழி, 3. வாயில்.
துவாலை—உதிரப்பெருக்கு, 2. தீட்டு, 3. பூச்சு, 4. பூச்சு மருந்து, 5. துண்டுத் துணி.
துவாளிக்க—(வி) குடைய.
துவி—இரண்டு.
துவிகபா—வட்டத்திருப்பி.
துவிகாயாசின்—செம்முருங்கைமரம்.
துவிசன்—இருபிறப்பாளன்.
துவிதம்—இரண்டு.
துவிதாத்துமகம்—சாதிக்காய்.
துவியம்—இரண்டாவது.
துவிருத்தி—கூறியதுகூறல்.
துவீபம்—தீவு.
துவேஷம்— } பகை.
துவேசம்— }
துவேஷிக்க—(வி) வெறுக்க.
துவை—இறைச்சி, 2. ஒலி, 3. பருகுதற்குரியன, 4. புளிங்கறி, 5. பிண்ணாக்கு.
துவைதம்—துவிதம்.
துவைத்தல்—(தொ. பெ) தோய்க்குதல், 2. இடித்தல், 3. பானம்பண்ணுதல், 4. ஒலித்தல்.
துவைபாயனன்—வேதவியாசன்.
துவைய—(வி) தோய, 2. பால்தோய, 3 மிதிக்கப்பட, 4. இடிக்கப்பட.
துவையல் — சுண்டாங்கி, 2. ஓர் பச்சடி, 3. துவைக்கப்பட்டவை.
துவ்வ—(வி) புசிக்க, 2. ஐம்பொறியால் நுகர, 3. அநுபவிக்க.
துவ்வாமை—வெறுப்பு.
துவ்வு—உணவு, 2. அநுபவம், 3. ஐம்பொறிநுகர்ச்சி.
துழக்க—(வி) குழைக்க.
துழவை—மூங்கிற்பற்றை.
துழனி — ஒலி, 2. பறவைக்கூட்டத்தொலி.
துழாய்—துளசிச்செடி
துழாவ—(வி) கலக்க, 2. கிளற, 3. தடவ, 4 ஆராய, 5. தண்டுவலிக்க, 6. வெட்ட.
துழாவாரம்— ஊர்ப்பேச்சுப்பேசுகை.
துளக்கம்—ஒளி, 2. அச்சம், 3. சோதிநாள், 4. அசைவு, 5. கலக்கம்.
துளங்க—(வி) அசைய, 2. கலங்க, 3. அஞ்ச, 4. துலங்க, 5. வெளிப்பட.
துளங்கொளி — மிகும் ஒளி, 2. கேட்டைநாள்.
துளசி—ஒரு செடி.
துளம்பிக்கிரி—ஆதொண்டைக்கொடி.
துளவம்— } துளசிச்செடி.
துளவு— }
துளவன் — திருமால், 2. சோரபாஷாணம்.
துளவை—துளை, 2. மூங்கிற்பற்றை
துளி—திவலை, 2. மழை.
துளி—பெண்ணாமை.
துளிக்க—(வி) மழைபெய்ய.
துளிர்—தளிர்.
துளிர்க்க—(வி) தளிர்க்க, 2. செழிக்க.
துளும்ப—(வி) அசைய, 2. ஏழும்ப, 3 சொலிக்க, 4. திமிர.

துளுவம்—ஓர் தேசம், 2. பதினெண்பா ஷையிலொன்று.
துவள — துவாரம், 2. வாயில், 3. உட்டுளை, 4. மூங்கில்மரம்.
துவளக்கை—யானைத்துதிக்கை.
துவளத்தல்—(தொ. பெ) துவாரஞ்செய்தல், 2. ஊடுருவல்.
துவளய—(வி) மூழ்க, 2. அனுபவிக்க.
துள்ள — (வி) குதிக்க, 2. குதித்துச் செல்ல, 3. கருவிக்க.
துள்ளலோசை—கலிப்பாவிசையோசை.
துள்ளல்—கூத்து, 2. ஆடு, 3. கொசுகு, 4. விரைந்து பாடுமிசை.
துள்ளி—திவலை.
துள்ளு—குதிப்பு.
துற—(வி) உண்ண.
துறக்க—(வி) கைவிட, 2 இல்லறந்துறக்க, 3. தவிர்க்க.
துறக்கம்—, துறக்கநாடு— } சுவர்க்கம்.
துறடு—, துறட்டி— } அங்குசம், 2. சிக்கு
துறட்டுப்பிடி—, துறட்டுவாதம்— } பிடிவாதம்.
துறந்தார்—, துறந்தோர்— } நீத்தோர்.
துறப்பணம்—, திறப்பணம்— } துளைக்குமூசி.
துறவர்—முனிவர்.
துறவறம் — இல்லறந்துறத்தல் அஃது நாலாச்சிரமத்தொன்று.
துறவி—சன்னியாசி.
துறு—செம்பூரான் கல்.
துறட்டி—சிற்றேலம்.
துறுதல்—(தொ. பெ) நெருங்குதல்.
துறுத்தல்—(தொ. பெ) அமுக்கல், 2. நுழைதல்.
துறுபவம்—நெருக்கம்.
துறும — (வி) நெருங்க, 2. திரள, 3. திரட்ட.
துறுவ—(வி) உண்ண, 2. நெருங்க.
துறை—சீர்த்துறை, 2. இறங்குதுறை, 3. வழி, 4. குடைபகுமிடம், 5. வண்ணாத்துறை, 6. துறங்குமிடம், 7. ஆறு, 8. கலித்துறை, 9. நூற்றுறை, 10. அகப்பொருட்டுறை.
துறைபோதல்—(தொ. பெ) முற்றக்கற்றறிதல்.
துறைமுகம்—ஏற்றுமதி இறக்குமதி செய்யுந்துறை.
துறைவல்லோர்—கற்றோர்.
துறைவன்—நெய்தனிலத்தலைவன்.
துறேட்டி—அங்குசம்.
துற்கை—துற்காதேவி.
துற்பரிகம்—சிறுகாஞ்சொறிக்கொடி
துறுவி—திப்பிலி.
துனி—துன்பம், 2. நோய், 3. புலவிநீட்டம், 4. அச்சம், 5. கோபம், 6. வெறுப்பு, 7. ஆறு.
துனை—, துனைவு— } வேகம்.
துன்—நெருக்கம்.
துன்பம்—வருத்தம், 2. உபத்திரவம், 3. கிலேசம்.
துன்பு—துன்பம்.
துன்மதி—ஐம்பத்தைந்தாவதாண்டு, 2. அவமதி.
துன்முகி—ஓராண்டு, 2. ஓரரக்கி.
துன்ற—(வி) நெருங்க, 2. நிறைய.
துன்ன—(வி) கிட்ட, 2. நெருங்க, 3. செருகப்பட, 4. வீங்க, 5. தைக்க.
துன்னபோத்து—உழவெருமை.
துன்னம்—தையல்.
துன்னர்—தையற்காரர், 2. சக்கிலியர்.
துன்னலர்—, துன்னார்—, துன்னாதார்— } பகைவர்.
துன்னூ—இறைச்சி, 2. முதுகு.
துன்னூசி—தையலூசி.

## தூ

தூ—சுத்தம், 2. வெண்மை, 3. புள்ளிறகு, 4. மாமிசம், 5. பகை, 6. பற்றுக்கோடு.
தூ—இகழ்ச்சிக்குறிப்பு.
தூக்க—(வி) உயர்த்த, 2. தூக்கிலே போட, 3. நிறுக்க, 4. ஏற்ற, 5.

எடுத்துவிட, 6. நங்கூரம்வலிக்க, 7. ஆராய்ச்சிசெய்ய.
தூக்கணங்குருவி—ஒரு குருவி.
தூக்கணம்-உறி, 2. தொங்கல், 3. தூக்கணங்குருவி.
தூக்கணுங்குருவி—தூக்கணங்குருவி.
தூக்கம்—நித்திரை, 2. அயர்வு, 3. சோம்பு, 4. தலையசைப்பு, 5. வாட்டம், 6. தணிவு, 7. விலையிறக்கம், 8. முகச்சோர்வு, 9. ஆபரணத்தொங்கல், 10. சல்லி, 11. சல்லியம், 12. காதணி.
தூக்கிரி—ஊர்காவற்காரன்.
தூக்கு—தொங்கல், 2. உறி, 3. நிறை, 4. கால்துலாம், 5. துலாராசி, 6. கைத்தூக்கு, 7. தூக்குமட்டப்பலகை, 8. தூக்கு நூல், 9. தூக்கணங்குருவி, 10. செய்யுள், 11. உயர்ச்சி, 12. உவமைச்சொல், 13. ஆராய்ச்சி, 14. கூத்து.
தூக்குமரம் — கொல்வோரைத் தூக்கு மரம்.
தூங்க—(வி) தொங்க, 2. துயில, 3. மந்தமாயிருக்க, 4, தலைசாய, 5. சோர, 6. வாட, 7. ஓர் நிலையாய் நிற்க, 8. தாமதிக்க, 9. அசைவாட.
தூங்கணம் — தூக்கு, 2. தூக்கணங்குருவி.
தூங்கமுட்டு—, தூங்கமுஷ்டு— } கோரைக்கிழங்கு.
தூங்கல் — தூக்கம், 2. மந்தமாயிருப்பது, 3. தொங்குவோன், 4. ஓரிசை, 5. ஏந்திசைத்தூங்கல், 6. யானை.
தூசரம்—நரை.
தூசர்—வண்ணார்.
தூசி—புழுதி, 2. கொடிப்படை, 3. படைவகுப்பு, 4. குதிரை.
தூசிகம்—புளியாரைக்கீரை.
தூசு—வஸ்திரம், 2. யானைக்கச்சை, 3. சித்திரைநாள், 4. தூய்து, 5. சுத்தம்.
தூசுப்பு—தண்ணீர்விட்டான்.
தூஷணம்—, தூஷணை— } வைதல், 2. உதாசினம், 3. தேவதூஷணம்.
தூஷிக்க—(வி) வைய, 2. பழிக்க.
தூட்டி—சீலை.
தூணம் — அம்புறைதூணி, 2. தூண், 3. பகை, 4. தூக்கணம்.
தூணி—அம்புக்கூடு.
தூணி—நாலுமரக்கால்.
தூணிகர்—செட்டிகள்.
தூணித்தல்—(தொ. பெ) பருத்தல்.
தூணியங்கம்—அத்திப்பிசின்.
தூணீரம்—அம்புக்கூடு.
தூண்—ஸ்தம்பம், 2. பற்றுக்கோடு.
தூண்ட—(வி) விளக்குத்தூண்ட, 2. எழுப்ப, 3. செலுத்த, 4. நினைப்பூட்ட.
தூண்டாவிளக்கு—தானே எரியும் விளக்கு.
தூண்டில்—மீன்பிடிக்குமுள், 2. துறடு.
தூதவளை—தூதுவளைக்கொடி.
தூதன்—, தூதி—, தூதிகை— } தூதுசெல்வோன்.
தூதன்—செய்தி யறிவிப்போன், 2. தானாபதி, 3. ஒற்றன், 4. சமாதானம்பேசுவோன்.
தூது—சிறுகல்.
தூது—செய்தி, 2. தானாபதித்துவம், 3. ஒற்றன், 4. தானாபதி, 5. ஓர் பிரபந்தம்.
தூதுணம்—ஓர்வகைப் புறா, 2. தூக்கணங்குருவி.
தூதுவணை—தூதுளைக்கொடி.
தூதுவன்—தூதன், 2. புதன்.
தூதுவளை—தூதுவளைக்கொடி.
தூதூ—உமிழ்தல்.
தூதை—சிறுமட்கலம்.
தூத்துக்குடி—தெற்குள்ள ஒரு பட்டினம்.
தூந்துதுருப்பிடித்தல் — (தொ. பெ) நுட்பஆராய்ச்சி செய்தல்.
தூபம்—நறும்புகை, 2. புகை, 3. தூபவருக்கம்.
தூபரதண்டி—ஊதாரி.
தூபரம்—கொம்பில்லாவிலங்கு.
தூபி—, ஸ்தூபி—, தூபிகை—, ஸ்தூபிகை— } சிகரம்.

தூபிதம்—சூடு.
தூமகேது—அக்கினி, 2. வால்வெள்ளி, 3. தீமைக்குறி.
தூமப்பிரபை—ஓர் நரகவுட்டம்.
தூமம்—புகை, 2. கலஞ்சுடு சூளை, 3. புளி நறளை.
தூமலம்—கருமை கலந்த சிவப்பு.
தூமான் — ஆபரணச் செப்பு.
தூமிரம்— } தூயலம்.
தூம்பிரம்— }
தூமை—சுத்தம், 2. வெண்மை, 3. மகளிர் சூதகம்
தூம்—ஓரளவு.
தூம்பா— } பாடை.
தூம்பை— }
தூம்பிரம்—தூமிரம்.
தூம்பு—உட்டுளை, 2. சலதாரை, 3. எரிமதகு, 4. மூங்கில்மரம், 5. அருநெறி, 6. வழி, 7. வாயில், 8. மரக்கால், 9. ஈயம்.
தூய—பரிசுத்தமான
தூயது— } சுத்தம்
தூய்து— }
தூயவர்—முனிவர்.
தூயவுடம்பினனாதல்— இறைவனெண்குணத்தொன்று.
தூயாள்—சரஸ்வதி.
தூய்மை—பரிசுத்தம்.
தூரதிட்டி— } செய்மைப்பார்வை, 2. முன்னுணர்ச்சி.
தூரதிஷ்டி— }
தூரதிருஷ்டி— }
தூரம்—ஊமத்தஞ்செடி.
தூரம்—சேய்மை, 2. உதிரக்கலப்பில்லாமை, 3. வித்தியாசம்.
தூரல்—துன்பம், 2. தூருதல்.
தூரி—பலகறை, 2. எருது, 3. வலை, 4. ஊசல்.
தூரி—தூரிகை.
தூரிகை— } எழுதுகோல்.
தூரிகைக்கோல்— }
தூரிக்கோல்— }
தூரியம் — இசைக்கருவி, 2. உவகைப்பறை, 3. முரசு, 4. பறைப்பொது, 5. எழுதுகோல், 6. நல்லாடை, 7. கைவேல், 8. எறிபடைப்பொது, 9. எருது.
தூரியன் — தூரத்திலுள்ளவன், 2. கடவுள்.
தூரேத்தி—கம்பந்திராய்ப்பூண்டு.
தூரோணம்—கவிழ்தும்பைச்செடி.
தூர்—வேர், 2. வண்டல், 3. பாத்திரத்தினடிப்புறம்
தூர்க்க—(வி) நிரப்ப, 2. கூட்ட.
தூர்க்கை—பூரநாள்.
தூர்ச்சடி—சிவன்.
தூர்த்தம்—துன்மார்க்கம்.
தூர்த்தன்—விடன், 2. வஞ்சகன்.
தூர்த்தை—தூர்த்தைக்குணமுள்ளவள்.
தூர்மம்—தேட்கொடுக்கிச்செடி.
தூர்வகம்—சுமத்தல், 2. பொதியெருது.
தூர்வாசம் — அட்டாதச உபபுராணத்தொன்று.
தூர்வாசன் — ஓரிருடி. அவர் அத்திரி மகாரிஷியின் புத்திரர்.
தூர்வை — கிணற்றடைதூர், 2. மிருதுவானநிலம், 3. செத்தை, 4. கிணற்றைச்சார்ந்த நிலம்
தூர்வை—அறுகம்புல்.
தூர்று—முசற்புல்.
தூலம்— } பருமை, 2. பஞ்சபூத காரியதேகம், 3. வீட்டு உத்திரம்.
ஸ்தூலம்— }
தூலம் — பஞ்சு, 2. நீர்முள்ளிச்செடி, 3. கோரைப்புல்.
தூலிக்க—(வி) பருக்க.
தூவ—(வி) சிதற, 2. இறைக்க, 3. மழை தூற, 4. சிறிது சிறிதாகப் பெய்ய.
தூவத்தி—வாள்.
தூவல்—நீர்த்துளி, 2. மழைத்துளி, 3. மழைத்தூவல், 4. மழை, 5. சித்திரந்தீட்டுகோல், 6. அம்பினிறகு, 7. இறகு.
தூவானம்—சிதறுமழை.
தூவி—இறகு, 2. அன்னத்தினிறகு, 3. மயிற்றோகை, 4. மீன்சிறகு.
தூவு—ஊன்.

தூளனம்— } தூள்.
தூளம்—
தூளி—புழுதி, 2. பராகம், 3. குதிரையி ளுர்ப்பு.
தூளிதம் — தூளாக்கப்பட்டது, 2 விபூதி.
தூளித்தல்—(தொ. பெ) பருத்தல்.
தூள்—துகள், 2. சூரணம், 3. கறித்தூள், 4. மூக்குத்தூள், 5. பொடி, 6. பூந்தாது
தூற—(வி) மழைதுளிக்க, 2 கிளைகக, 3. சடைபற்ற, 4. நிந்திக்க, 5 செய்தி பரம்ப.
தூறல் — பழிசொல்லல், 2. மழைபெய்தல்.
தூறு—சிறுசெடி, 2. பழிச்சொல், 3. கூட்டம்.
தூறுபட—(வி) பரவ, 2 சடைபற்ற, 3. பழி சொல்லப்பட
தூறுபுட்பம்—சீந்திற்கொடி.
தூற்ற—(வி) சிதற, 2. நெல்முதலிய தூற்ற, 3. புழுதி முதலியவீச, 4. வீண்செலவு செய்ய, 5. கோட்சொல்ல, 6. பழிகூற, 7. தலைமயிரைத் தூற்ற.
தூற்றல்—மழைத்துளி.
தூற்றுமைக்கோற்றுன்—ஓர் கொடி
தூற்றுத்தவலயன்—பிராய்மரம்.
தூனம்—வருத்தம், 2. அசைவு.

## தெ

தெகிடி—ஓர் விளையாட்டு, 2. புரட்டு.
தெகிட்டு—தெவிட்டு.
தெகிள்—ஓர் படர்கொடி.
தெகுட்டி— } தேட்கொடுக்கிச்செடி.
தெகுட்டிகை—
தெகுள—(வி) பெருக.
தெகுளம்—நிறைவு, 2. பெருக்கு.
தெக்கணம்—தெற்கு.
தெங்கணம்—ஓர் தேசம்.
தெங்கு—தென்னமரம்.
தெசம்—தசம், (பத்து.)
தெட்சகன்—இரட்சகன், 2. தட்சகன்.
தெட்சணம்— } தெற்கு.
தெட்சிணம்—
தெட்சணுவிருத்தம்—வலம்புரிச் சங்கு
தெட்சவணை—காணிக்கை.
தெட்ட—(வி) எத்த.
தெட்டத்தெளிய—மிகு தெளிவாய்.
தெட்டத்தெறிக்க—இரண்டாய்முறிய.
தெட்டு—யானைக்கனையம், 2. எத்து.
தெட்பம்—முதிர்ச்சி.
தெண்—தெளிவு.
தெண்ட—(வி) கிளப்ப, 2. நரம்புவலிக்க.
தெண்டம்—அபராதம்.
தெண்டன்—வணக்கம்
தெண்டித்தல் — (தொ பெ) சிட்சித்தல்.
தெண்டு—தண்டு
தெண்மடை— } நெருக்கிடை.
தெண்டகை—
தெண்மை—தெளிவு, 2. சாமர்த்தியம்.
தெத்தம்—தத்தம்.
தெத்து—தெற்று.
தெந்தனு—தாளக்குறிப்பு.
தெந்தி—நேர்வாளமரம்.
தெப்பம்— } புணை.
தெப்பல்—
தெப்பல்—அடிக்குமடி
தெம்பல்—சேறு
தெம்பாங்கு—ஓர்வகைச் சந்தம்.
தெம்மாடி—அறிவீனன்.
தெம்முனை — இரணகளம்.
தெய்தெய்—தாளக்குறிப்பு.
தெய்ய—ஓரிடைச்சொல்.
தெய்வசுரபி—காமதேனு.
தெய்வதம்—தெய்வம்.
தெய்வப்புலமை — தெய்வீகவுணர்ச்சியுடன்படுதல்.
தெய்வமணம்—திவ்வியவாசனை, 2. எண்வகை மணத்தினென்று; அது: வேள்வியாசாரியனுக்குக் கன்னியை யலங்கரித்துத் தீமுன்னர்க்கொடுப்பது.
தெய்வம்—கடவுள், 2. ஊழ், 3. எண்வகை மணத்திலொன்று, 4. வருடம், 5. ஐவகையாகத்தொன்று.

தெய்வாதீனம் – தெய்வசுதந்தரம், 2. தெய்வச்செயல்.
தெய்விகம்– } திவ்வியம், 2. தெய்வச்
தெய்வீகம்– } செயல். 3. மகிமை, 4. நற்செயல்.
தெரிசனம்– } தரிசனம்.
தெரிசனை– }
தெரிசித்தல்–(தொ. பெ) தரிசித்தல்.
தெரிப்பு – அறிவிப்பு, 2. சொல்லுதல், 3. எழுதுதல், 4. கொழிப்பு, 5. ஆராய்வு.
தெரிமா–சிங்கம்.
தெரிய – (வி) தோன்ற, 2. தெரிந்தெடுக்க, 3. ஆராய, 4. தேட.
தெரியலர்–அறிவீனர், 2. பகைஞர்.
தெரியல்–ஆராய்தல், 2. பூமாலை.
தெரிவு–ஆராய்வு.
தெரிவை–பெண், 2. இருபத்தாறு முதல் முப்பத்தொரு வயதிற் பெண்.
தெரு–வீதி, 2. வழி.
தெருட்சி–தெளிவு
தெருட்டு – இருது வாக்குமூலம், 2. அறிவிப்பு.
தெருட்டுதல் – (தொ பெ) மனதைத் தெளிவித்தல், 2. வற்புறுத்தல்.
தெருமர–(வி) சுழல, 2. நம்பிக்கையற்றிருக்க.
தெருள–(வி) தெளிய, 2. ஐயமற்றறிய, 3. இருதுவாக
தெருள்–தெளிவு.
தெலுகு– } ஓர் தேயம், 2. ஓர் பாஷை.
தெலுங்கம்– }
தெலுங்கு– }
தெல்– } ஓர் விளையாட்டு, 2. அஞ்சவிடம், 3. நெடும்பாத்தி.
தெல்லு– }
தெல்லோட்டு–அலைக்கழிப்பு.
தெவம்–மாமரம்.
தெவிட்ட–(வி) தேக்க, 2. வார்த்திசெய்ய, 3. நிறைய, 4. நினைக்க, 5. ஒலிக்க.
தெவிட்டல்– } உவட்டு, 2. வெறுப்பு.
தெவிட்டு– }
தெவிள–(வி) நிறைய.
தெவு–கொள்ளுதல்.
தெவுட்ட–(வி) தங்க, 2. கொப்பளிக்க, 3. அடைக்க, 4. மறைக்க, 5. நிறைய, 6. நினைக்க.
தெவுள–(வி) பெருக.
தெவ்–பகை, 2. போர், 3. பகைவன்.
தெவ்வினை–போர்.
தெவ்வு–சந்திரன், 2. பகை, 3. போர், 4. சத்துரு.
தெழிக்க–(வி) அதட்ட, 2. துவைக்க, 3. பெரிதொலிக்க, 4. சினக்குறிப்புக் காட்ட.
தெளிதல் – (தொ. பெ) அறிதல், 2. ஆராய்தல், 3. தெளிவாதல், 4. தேறுதல், 5. நன்கொலித்தல்.
தெளித்தல்–(தொ. பெ) கொழித்தல், 2. நிச்சயித்தல், 3. ஒலித்தல், 4. வடித்தெடுத்தல், 5. விதைத்தல், 6. புரோட்சித்தல்.
தெளிர்–உள்ளோசை.
தெளிர்தல்–(தொ. பெ) ஒலித்தல்.
தெளிவு – துலக்கம், 2. பிரகாசம், 3. வெளிப்படை, 4. நீக்கம், 5. தசாவஸ்தையிலொன்று, 6. மனஅமைவு, 7. கொழுப்பு, 8. அறிவு, 9. வடிகஞ்சி, 10. இலாபம்.
தெள்–தெளிவான.
தெள்– } தெள்ளுப் பூச்சி.
தெள்ளு– }
தெள்க–(வி) தெளிவாக, 2. கொழிக்க.
தெள்கு–ஒரு பூச்சி.
தெள்விளி–ஓர் பண்.
தெள்ள–(வி) புடைக்க, 2. கொழிக்க, 3. தெளிய, 4. அனுபவப்பட.
தெள்ளி–யானை.
தெள்ளிச்சி–பூநீறு.
தெள்ளிமை–தெளிவு, 2. அறிவு.
தெள்ளியர்–அறிவுடையோர்.
தெள்ளேணம் – மகளிர் விளையாட்டினொன்று.
தெற – (வி) தங்க, 2. அழிக்க, 3. வெகுள.
தெறி – அணி, அங்கி முதலியவற்றின் கடைப்பூட்டு, 2. தெறுகை.

தெறித்தல் – (தொ. பெ) சிந்தல், 2. துள்ளிவிழுதல், 3. சுண்டுதல்.
தெறிபட–(வி) அணிகுலைய, 2. நிக்கற, 3. அலைந்துலைய, 4. கலங்க.
தெறிப்பு–உதைந்துமீள்கை, 2. சிந்துகை, 3. முறிகை, 4. சுண்டுகை.
தெறுக்கால் – தேள், 2. விருச்சிகவிராசி.
தெறுநர்–பகைவர்.
தெற்கத்தி– } தெற்கேயுள்ள.
தெற்கித்தி– }
தெற்கு–தென்றிசை.
தெற்பை–தருப்பைப்புல்.
தெற்ற–(வி) இடற, 2. மாறுபட, 3. பின்ன, 4. அலைக்க, 5. வாய்கொன்ன.
தெற்றி–சித்திரகூடம், 2. திண்ணை.
தெற்று–அடைப்பு, 2. தேற்றம், 3. பின்னல்.
தெற்றெனல் – தெளிதல், 2 விரைவுக் குறிப்பு.
தெனுது–தெற்குள்ளது.
தென்–அழகு, 2. இசை, 3. கறுப்பு. 4. தெற்கு.
தென்– } தாளக்குறிப்பு.
தென்னு– }
தென்கலை–தமிழ்.
தென்கால்–தென்றற்காறறு.
தென்குமரி–ஓர் நதி.
தென்புலத்தார்–பிதிர்கள்.
தென்புலம்–பிதிர்கள் வாழுமிடம்
தென்மலை–பொதியமலை, 2. சோலைமலை.
தென்மேற்றிசைப்பாலன்–நிருதி.
தென்றமிழ்–செந்தமிழ்.
தென்றல்–முன்பனிப் பருவத்தின் காற்று.
தென்றற்றேரோன்–மன்மதன்.
தென்றி–தெற்கு, 2. தென்றல்.
தென்றிசைக்கோன்– } இயமன்.
தென்றிசைப்பாலன்– }
தென்னன்– } பாண்டியன்.
தென்னவன்– }

# தே

தே–ஓரெழுத்து.
தே–கடவுள், 2. கிருபை.
தேகபந்தம்–சரீரப்பற்று.
தேகம்–உடம்பு.
தேகயாத்திரை–மரணம், 2. சரீரபோஷணை.
தேகனி–மஞ்சள்.
தேக்க–(வி) நிறைய, 2. தெவிட்ட.
தேக்கம்–நிறைவு, 2. நிலைநீர், 3. தியக்கம்.
தேக்கல்–(தொ. பெ) தியங்குதல், 2. நிறைதல்.
தேக்கு–ஓர்மரம், 2. கமுகமரம், 3. நிறைவு, 4. தித்திப்பு.
தேக்கெறிய–(வி) தெவிட்ட, 2. நிறைய, 3. ஏப்பமிட.
தேங்க – (வி) நிறைய, 2. மிக, 3. அஞ்ச.
தேங்கல்–(தொ. பெ) நிறைதல்.
தேங்காய்–தெங்கங்காய்.
தேங்காய்த்துருவல்–தேங்காய்ப்பூ
தேங்காய்ப்பாரை–ஓர்மீன்.
தேங்காய்ப்பால்–தேங்காய்ப்பூவின் பால்
தேசகன்–அரசன்.
தேசசு–ஒளி.
தேசம்–நாடு, 2. இடம்.
தேசவழக்கம்–தேசாசாரம்
தேசா–ஓர்பண்.
தேசாட்சரி–ஓரிராகம்.
தேசாதி–கவரை சாதித்தலைவன்.
தேசாவரம்–ஒருசெடி.
தேசி – பெருங்குதிரை, 2. எலுமிச்சைமரம், 3. ஓரிராகம்.
தேசிகம் – அவ்வவநாட்டுச்சொல், 2. ஓர் கூத்து, 3. ஒளி, 4. பொன், 5. அழகு.
தேசிகன்–குரு, 2. வணிகன், 3. வேதாந்த தேசிகன், 4. வேதமோதுவிப்போன், 5. உபாத்தியாயன், 6. தேசாந்தரி.
தேசியம்–திசைச்சொல்.

தேசு—ஒளி, 2. விந்து, 3. பொன், 4. அழகு.
தேசோபிந்து—ஓர் உபநிடதம்.
தேசோமயம்—பேரொளி.
தேசோரூபம்—ஒளியுருவம்.
தேட—(வி) நாட, 2. சம்பாதிக்க, 3. பராமரிக்க, 4. உசாவ.
தேட்கடை — மூலநாள், 2. தேட்கொடுக்கி.
தேட்குடிச்சி—கருவண்டு.
தேட்கெண்டை—ஓர்மீன்.
தேட்கொடுக்கி—ஒருசெடி, தேங்கிட்டி.
தேட்டம்—கவலை, 2. பேரவா, 3. சேகரிக்கப்பட்டது.
தேட்டு—, தேட்டம்—, தேட்டை— } ஆராய்வு, 2. சம்பாத்தியப்பொருள்.
தேட்டை—தெளிவு, 2. தெளிந்தநீர்.
தேண்டுதல்—(தொ. பெ) தேடுதல்
தேதி—திகதி.
தேமல்—படர்சுணங்கு.
தேமா — இயற்சீர் வாய்பாடுகளுளொன்று, 2. தித்திப்புமாமரம்.
தேம்—இனிமை, 2. மணம், 3. தேன், 4. தேசம், 5. கள், 6. இடம், 7. எழுனுருபு, (உ—ம்) "கோடாய்தேத்து".
தேம்ப—(வி) விம்மியழ, 2. வாட, 3 மெலிய, 4. இளைக்க.
தேம்பல்—வாடல், 2. பழம்பூ.
தேம்பாவணி—ஓர் காப்பியம்.
தேயசு—ஒளி, 2. அழகு, 3. விந்து.
தேயம்—நாடு, 2. இடம், 3. களவு, 4. உடல், 5. கொடைப்பொருள்.
தேயு—அக்கினி, 2. அட்டமூர்த்தத்தொன்று.
தேய்கடை—தேய்வானது.
தேய்தல் — (தொ. பெ) உரைதல், 2. குறைதல், 3. மெலிதல், 4. கழிதல்.
தேய்த்தல்—(தொ பெ) உரைத்தல், 2. அழித்தல், 3. கொல்லல், 4. துடைத்தல், 5. குறைத்தல்.
தேய்ப்பு—தேய்த்தல்.
தேய்மானம்—தேய்வு, 2. பொன்னுரை தேய்மானம், 3. இக்கனம்.

தேய்வை—பரிமளச்சாந்து.
தேர—(வி) ஆராய, 2. அறிய, 3. சொல்ல 4. எண்ண, 5. நிச்சயிக்க, 6. பயில.
தேரகன்—தேர்ப்பாகன்.
தேரர்—புத்தர்.
தேரலர்—, தேரார்— } பகைவர், 2. மதியீனர்.
தேரன்—, தேரையர்—, தேரையன்— } ஆயுள் வேத மிகவுணர்ந்த ஓர் வைத்தியன்.
தேரி—மணற்றிட்டை.
தேரை — ஓர்வகைத் தவளை, 2. இட்டமானவீகை.
தேர்—இரதம், 2 உரோகணிநாள்.
தேர்க்கவி—மிறைக்கவியிளென்று, ரதபந்தம்; அது: தேரங்கமாய்க் கோடுகீறி யெழுத்தடைக்கும் கவி.
தேர்க்கூம்பு—கொடிஞ்சிமரம்.
தேர்க்கொடுங்கை—தேரின் மரச்சுற்று.
தேர்ச்சி—ஆராய்ச்சி, 2. கல்வி, 3. நுழைந்தறிகை, 4. எண்ணல், 5. தெளிவு.
தேர்ச்சித்துணைவர்—மந்திரிகள்.
தேர்நிலை—தேர்விடுமிடம்.
தேர்வு—ஆராய்வு, 2. தெளிவு.
தேல—(வி) விலக.
தேலிக்கை—இலேசு.
தேவகன்—தேவகிதந்தை.
தேவகி—கண்ணன்றாய.
தேவகிசூனு—, தேவகிநந்தனன்—, தேவகிமைந்தன்— } கிருஷ்ணபகவான்.
தேவகோட்டை — மதுரைக்கருகில் நாட்டுக்கோட்டையாரூர்.
தேவசாட்சி—ஆணை.
தேவசேவை — தெய்வ ஊழியம், 2. தெய்வதரிசனம்.
தேவசேனாபதி—குமாரக்கடவுள்.
தேவடியாள்—தேவதாசி.
தேவதச்சன்—விச்சுவகன்மா.
தேவதத்தம்—அருச்சுனன் கைச்சங்கு.
தேவதத்தன் — புத்தன்றம்பி, 2. ஒட்டமுமிளைப்பும், வியர்வும் வருவிக்கும் வாயு.

தேவதா—தேவதை.
தேவதாரம்— } ஐந்தருவினொன்று.
தேவதாரு— }
தேவதை—தேவி, 2. தெய்வம், 3. பேய்.
தேவநகர்—கோயில், 2. தேவர் நகரம்.
தேவநாகரம்— சமூஸ்கிருதத்தோர்வகை யட்சரம்.
தேவபதம் — ஆகாயம், 2. இராச சமூகம்.
தேவபதி— } இந்திரன்.
தேவராசன்— }
தேவபாடை—சம்ஸ்கிருதபாஷை.
தேவப்பிரமா—நாரதன்.
தேவமணி — சிவன், 2. கிருஷ்ணாபரணம், 3. குதிரை நற்சுழியினொன்று.
தேவமாதா—கன்னிமரியாள்.
தேவம்—தெய்வம், 2. குளிர்நாவல்.
தேவயானம்— } திவ்வியவிமானம்
தேவரதம்— }
தேவயானி—சுக்கிரன்புத்திரி.
தேவயானை— இந்திரன்பட்டதயானை. 2. சுக்கிரன் மகள், 3. முருகன் றேவி
தேவராளன்—சன்னதக்காரன்.
தேவருணவு—அமுதம்.
தேவர்—சுரர், 2. உயர்ந்தோர்.
தேவலன் — ஒருமுனி: அட்டவசுக்களிலொருவனாகிய பிரத்தியுஷன் மகன்.
தேவலோகம்—சுவர்க்கம்.
தேவவிரதன் — வீடுமன், 2. தேவனை வழிபடுவோன்.
தேவளம்—கோவில்.
தேவன்—கடவுள், 2. அருகன்.
தேவாங்கம்—பட்டுச்சீலை.
தேவாங்கு—ஒரு மிருகம்.
தேவாதி—கடவுள்.
தேவாரம் — திருஞானசம்பந்தமூர்த்திநாயனார், திருநாவுக்கரசுநாயனார், சுந்தரமூர்த்திநாயனார் என்னுஞ் சமயகுரவர் மூவராலே திருவாய்மலர்ந்தருளப்பட்டதொரு தமிழ் வேதம்.
தேவாலயம்—கோயில், 2. மேருகிரி.
தேவி — பார்வதி, 2. காளி, 3. தலைவி, 4. மனைவி, 5. துர்க்கை, 6. தேவப்பெண்.
தேவிகோட்டம் — காளிகோயில், 2. ஓரூர்.
தேவிபட்டினம்—ஓரூர்.
தேவீகம்—தெய்வீகம்.
தேவை — வேண்டுவது, 2. இராமநாதபுரம்.
தேளி—ஓர்மீன், 2. கேளித்தேங்காய்.
தேள்—தெறுக்கால், 2. விருச்சிகவிராசி, 3. அனுடநாள்.
தேறகம்— } தேறைமீன்.
தேறை— }
தேறலர்— } தெளியப்படாதவர், 2. அறியாதார்.
தேறலார்— }
தேறல்—கள், 2. தேன்.
தேறார்—அறிவிலார், 2 பகைவர்.
தேறு—துண்டு, 2. தேற்றாமரம், 3. தெளிவு, 4. நிச்சயம்.
தேறுகடை—தீர்மானம்.
தேறுதல—தைரியம், 2. ஆறுதல்.
தேறுதல்—(றொ. பெ) நிச்சயித்தல், 2. துணிதல், 3. தெளிதல், 4 ஆறுதல்.
தேறுநர்—கற்றோர், 2. நம்பத்தக்கவர்.
தேற்ற — (வி) ஆற்ற, 2. குணமாக்க, 3. மெய்ப்படுத்த, 4. பலமூண்டாக்க, 5. சுத்திகரிக்க, 6. தீர்க்க, 7. அறிய.
தேற்றம்—துணிவு, 2. தெளிவு, 3. நிச்சயம்.
தேற்றரவு—தெளிவு.
தேற்றா—ஒரு மரம்.
தேற்றார்—அறிவீனர், 2. பகைவர்.
தேனர்—திருடர்.
தேனிறால்—தேன்கூடு.
தேனீ—தேன்கூட்டுமீ.
தேனு—களவு.
தேனு— } பாற்பசு, 2. பசு, 3. தெய்வப்பசு, 4. எருமை, 5. குதிரை.
தேநு— }
தேனுகன்—ஓரசுரன்.
தேன்—மது, 2. கள், 3. வாசனை, 4. வண்டு, 5. பெண்வண்டு.
தேன்கதலி—ஒரு வாழை.
தேன்குழல்— } ஓர் பண்ணிகாரம்.
தேன்குழாய்— }
தேங்குழல்— }
தேன்வதை—தேனிறால்.

## தை

தை—ஓர்மாதம், 2. தானக்குறிப்பினொன்று, 3. பூசநாள், 4. மகரராசி.
தைசதம் — அக்கினிசம்பந்தம், 2 மூவாங்காரத்தொன்று.
தைதல்—(தொ. பெ) அலங்கரித்தல்.
தைதுலம்— } ஓர் கரணம்.
தைதுலை— }
தைத்தல் — (தொ. பெ) ஊடுருவுதல், 2. பொருத்துதல், 3. தையல் செய்தல், 4. கணக்குப்பூட்டுதல்.
தைத்தியர்—அசுரர், திதிபுத்திரா.
தைத்திரியம்—இரண்டாம்வேதமாகிய யசுர்.
தைப்பான்—தையற்காரன்.
தையல்—அழகு, 2. பெண்.
தைரியம்—துணிவு.
தைலக்காப்பு—எண்ணெய்க்காப்பு.
தைலபீதம்—அத்திப்பிசின்.
தைலமாட்ட — (வி) பிரேதாலங்காரம் பண்ண.
தைலம் — நல்லெண்ணெய், 2 எண்ணெய், 3. மருந்தெண்ணெய், 4. அபிஷேகதைலம், 5. சாரம், 6. சத்து.
தைலா—மரப்பெட்டி.
தைலாங்குருவி—தகைவிலான் குருவி.
தைலி—பணப்பை.
தைவதம்—தெய்வதம்.
தைவம்—தேவனதுடைமை.
தைவரல்— } (தொ பெ) தடவல்.
தைவருதல்— }
தைவிகம்— } தெய்வீகம்.
தைவீகம்— }
தைவிளை—தைவேளை.
தைவேளை—ஓர்பூண்டு.
தைனியம்—எளிமை, 2. உலோபம்.

## தொ

தொகம்—மதிப்பு.
தொகுதல்—(தொ. பெ) ஒருங்குகூடுதல், 2. திரளுதல், 3. தொகையாதல், 4. வேற்றுமையுருபு முதலிய மறைதல், 5. சுருங்குதல்.
தொகுதி—கூட்டம், 2. மக்கட்குழு, 3. விலங்கின்குழு, 4. பிண்டம், 5. திரட்சி.
தொகுத்தல்—(தொ. பெ) கூட்டல், 2. சுருக்குதல், 3. சம்பாதித்தல், 4. அளவுபடுத்தல், 5. ஒடுக்குதல்.
தொகை — கூட்டம், 2. தொகுதி, 3. பண இருப்பு, 4. சுருக்கம், 5. இனமுடைப்பு, 6. எண்ணினுறுப்பு, 7. தொக்குநிற்றல்.
தொக்க—சேர்ந்த.
தொக்கடம்—மிதித்தல் முதலியன.
தொக்கடவு—குறுக்குவழி.
தொக்கடி— } ஓலைக்குடலை, 2. சிறுகூடை, 3. காவற்குடிசை.
தொக்கட்டி— }
தொக்கடை—வறுமை.
தொக்கம்—வழக்கு.
தொக்கார்—அடுத்தோா, 2 தோழர்.
தொக்கு—அற்பம்.
தொக்கு—தோல், 2. மரப்பட்டை, 3. உடல்.
தொக்குத்தொக்கெனல்- ஈரடுக்கொலிக்குறிப்பு
தொங்க—(வி) தூங்க, 2. நிலுவைப்பட, 3. தங்க, 4. குதிக்க.
தொங்கல்-தொங்குதல், 2. ஆபரணக்கடைப்பூட்டு, 3. முன்றானை, 4. ஒட்டுப்பற்றியிருத்தல், 5. காதணி, 6. தூக்கங்கள், 7. பூமாலை, 8. மயிற்றோகை, 9. பீலிக்குடை, 10. வெண்குடை, 11. ஆண்மயிர்.
தொங்கன்—கள்வன்.
தொங்கிசம்—கேடு.
தொட — (வி) பரிசிக்க, 2. பிடிக்க, 3. பொருத்த, 4. தொடங்க, 5. அம்பெய்ய, 6. உண்ண, 7. தோண்ட, 8. தரிக்க.
தொடக்க—(வி) கட்ட, 2. சிக்குப்படுத்த, 3. தொடங்க, 4. பொருத்த.
தொடக்கம்—ஆதி, 2. தொடங்குகை.
தொடக்கு — மகளிர்சூதகம், 2. கட்டு, 3. பற்று.
தொடங்க—(வி) ஆரம்பிக்க, 2. முயல.

தொடங்கு—விலங்கு, 2. காலணி.
தொடர—(வி) பீசவிருட்ச ' நியாயமாத் தொடர, 2. இடையருதவர, 3. மு யல, 4. பின்செல்ல, 5. தேட, 6. வழக்காட, 7. கட்ட, 8. தாவ.
தொடரி — ஒரு செடி; அது புலிதொ டக்கி.
தொடர்—பஞ்சினூல், 2. பிசின், 3. பூ மாலை, 4. சங்கிலி, 5. விலங்கு, 6. பழமை.
தொடர்ச்சி — தொடர்பு, 2. வழக்குத் தொடர்ச்சி, 3. பூங்கொத்து, 4. முய ற்சி.
தொடர்ந்தார்— } மித்திரர்.
தொடர்ந்தோர்—
தொடர்பு— } தொடர்ச்சி, 2. சங்கிலித்
தொடர்வு— தொடர், 3. சிநேகம், 4. உறவு, 5. பரம்பரைத் தொடர்பு, 6. முறைமை, 7. ஒட்டுகை, 8. பாட்டு.
தொடலை—மாலை, 2. மகளிர் விளையாட் டு, 3. விளையாட்டு.
தொடி — கைவளை, 2. கங்கணம், 3. ஒரு பலம்.
தொடிசு—சம்பந்தம்.
தொடித்தலை விழுத்தண்டினார் — சங் கப்புலவரிலொருவர்.
தொடு—மருதநிலம், 2. தோட்டம், 3. வஞ்சம்.
தொடுகை—தோண்டுகை, 2. பரிசம்.
தொடுக்க — (வி) சேர்க்க, 2. கட்ட, 3. அம்புதொடுக்க, 4. மனதில்வைக்க, 5. தொடங்க, 6. இலேசாய்த் தொ டுக்க, 7. பொருத்த, 8. பெண்ணோடு சம்பந்தஞ்செய்ய, 9. உருவாக்க, 10. பாத்தொடுக்க, 11. வளைக்க.
தொடுக்கம்—பொன்.
தொடுசு—ஒட்டு, 2. சம்பந்தம்.
தொடுதோல்—செருப்பு.
தொடுபதம்—சோறு.
தொடுப்பு—கட்டு, 2. சங்கிலியிடுகை, 3. தளரக்கட்டுகை, 4. தொடுசு, 5. சே ர்க்கை, 6. தொடர்ச்சி, 7. கலப்பை யுழ்தலியன, 8. கட்டுக்கதை, 9. வெ றும் புறங்கூறல், 10. பாதரட்சை.

தொடுவு—கொல்லை.
தொடுவை—தொடுத்திருக்கிறது, 2. புதி ய யானையைப் பயிற்றும்யானை, 3. பாங்கன்.
தொடை—துடை, 2. பூமாலை, 3. நாணி, 4. அம்பு, 5. மதிற்சுற்று, 6. சுவர்ப் புறத்து நீண்ட வுத்திரம், 7. பூங்கொ த்து, 8. பாட்டு, 9. தொடர்ச்சி, 10. செய்யுளுறுப்பிலொன்று.
தொடைதட்டி வெள்ளாழர்—நாவிதர்.
தொடையல்—தொடர்ச்சி, 2. பூமாலை.
தொடவாழை — ஓர் செடி, 2. ஓர் நோய்.
தொட்டப்பன்—தலைதொட்ட பிதா.
தொட்டம்—துண்டுநிலம்.
தொட்டல்—(தொ. பெ) உண்டல், 2. தீண்டல், 3. தோண்டல்.
தொட்டாட்டுமணியம்— } குற்றேவல்.
தொட்டாட்டுவேலை—
தொட்டாய்ச்சி—ஞானத்தாய்.
தொட்டால்வாடி— } ஒரு செடி.
தொட்டாற்சிணுங்கி—
தொட்டாற்சுருங்கி—
தொட்டி—பத்தல், 2. நீர்த்தொட்டி, 3. தொட்டிக்கட்டு, 4. மரம் விறகு முத லியன விற்குமிடம், 5. சிப்பிவிற்கும் இடம், 6. வேலியடைப்பு.
தொட்டிக்கால்—படப்புக்கால்.
தொட்டிச்சி—தொட்டியப்பெண்.
தொட்டிப்பாஷாணம் — ஒரு பாஷா ணம்.
தொட்டியம் — ஓர்வித்தை, 2. ஓர்தே யம்.
தொட்டியர்—ஒரு சாதியார்.
தொட்டில்—குழந்தைகளை வைத்து ஆட் டுஞ் சிறுகட்டில்.
தொட்டு—(வி) தொடங்கி.
தொண்டகம்—குறிஞ்சிநிலப்பறை.
தொண்டமான்—குறுநிலமன்னன்.
தொண்டரடிப்பொடியாழ்வார்— ஓர் வைணவ சமயாசாரியர்.
தொண்டலம்—யானைத்துதிக்கை.
தொண்டன்—அடியான்.

தொண்டி—ஒரு பட்டினம்; அது சேர நாட்டிற் கடற்கரையிலுள்ளது, 2. கள்.
தொண்டி—துவாரம்.
தொண்டி— } தேவடியாள்.
தொண்டிச்சி— }
தொண்டு — பழமை, 2. தேவஊழியம், 3. அடிமை, 4. அடியான், 5. தொண்டுக்கட்டை, 6. ஒன்பது, 7. ஒரு பூண்டு, 8. கோழியுள்ளான், (ஓர்குருவி.)
தொண்டுசெய்தல்—(தொ. பெ) பணிசெய்தல்.
தொண்டுதுரவு—பணிசெய்கை, 2. சேவகர்க்குச் செய்யுமுதவி.
தொண்டை—மிடறு, 2. இனியகுரல், 3. பெருங்குரல், 4. யானைத்துதிக்கை, 5. ஆதொண்டைச்செடி, 6. கொவ்வைக்கொடி, 7. தொண்டைமண்டலம்.
தொண்டைகாட்ட — (வி) உரத்துப்பேச.
தொண்ணூறு—ஓரெண்.
தொதி—பப்பரப்புளிமரம்.
தொத்த—(வி) படர, 2. ஒட்ட, 3. நோய்தொடர.
தொத்தல்—பலவீனப்பட்டது.
தொத்தன்—அடிமைக்காரன்.
தொத்து—தொத்துவியாதியின் தன்மை, 2. ஒட்டு, 3. சார்பு, 4. அடிமை, 5. பழமை, 6. பூங்கொத்து.
தொந்தம்—சேர்க்கை, 2. சலஞ்சாதிப்பு, 3. போர், 4. தொடர்பு, 5. அன்னியோன்னியம், 6. உடன்படுகை, 7. தொடுசு.
தொந்தயுத்தம்—இருவர் செய்யும்போர்.
தொந்தரை— } வருத்தம்.
தொந்தரவு— }
தொந்தி—வயிறு, 2. தசைமடிப்பு.
தொந்திக்க—(வி) பற்ற, 2. தொடர, 3. பலநோய்கலக்க, 4. கலப்பிக்க.
தொப்பாரம்—தோட்சுமை, 2. புற்கட்டு, 3. பேரில்லம்.
தொப்பி—கள், 2. தலைக்குல்லா.
தொப்புத்தொப்பெனல்—ஈரடுக்கொலிக்குறிப்பு.
தொப்புள்—கொப்பூழ்.
தொப்பை—தொந்தி, 2. கொப்புளம்.
தொம்பம்—கம்பக்கூத்திலொன்று.
தொம்பரம்—பலர்க்குச் சமைத்த ஊண்.
தொம்பறை—களஞ்சியம்.
தொம்பாரம்— } பேரில்லம்.
தொப்பாரம்— }
தொம்பை— } தானியஞ் சேமிக்குங்கூடு.
தொம்பைக்கூடு— }
தொம்மனை— } மிகப்பருத்த தன்மை.
தொம்மை— }
தொய்ய—(வி) களைக்க, 2. இளைக்க, 3. தளர, 4. பெருமூச்செறிய, 5. வளைய, 6. தொப்பைவாட, 7. பலங்குறைய, 8. தைரியங்குறைய.
தொய்யகம்—தலையணியிலொன்று.
தொய்யல் — சந்தோஷம், 2. இன்பம், 3. சேறு, 4. உழவு, 5. துன்பம், 6. இளைத்தல்.
தொய்யா—கெடாத.
தொய்யில்—உழுநிலம், 2. சாந்தினுடைவில் இடுங்கோலம், 3. ஒரு கீரை.
தொலி—பழந்தோல், 2. உமி.
தொலிக்க—(வி)உமிபோக்க, 2. உரிக்க.
தொலியல்—உமிபோக்கிய அரிசி.
தொலை—தூரம், 2. எல்லை, 3. ஒப்பு.
தொலைய — (வி) முடிய, 2. ஒழிய, 3. நீங்க, 4. தோற்க.
தொல்—பழமை.
தொல்காப்பியக்குடி — மதுரைக்கருகிலொருபட்டினம், பழையகாப்பியக்குடி என்பர்.
தொல்காப்பியன்—ஓர் இலக்கணநூலாசிரியன்.
தொல்லை—தொந்தரவு, 2. பழமை.
தொழ—(வி) வணங்க, 2. கும்பிட.
தொழில்—செயல், 2. வேலை, 3. உத்தியோகம், 4. சாமர்த்தியம், 5. தன்மை, 6. குலாசாரம், 7. தந்திரம்.
தொழு—பசுக்கொட்டில், 2. தொழுமரம், 3. இரேவதிநாள், 4. குஷ்டநோய்.

தொழுகண்ணி – அரவாட்டிப்பச்சை; இது: வெட்டின தசையைக் கூட்டு மென்பர்.
தொழுகுலம்–பிராமணகுலம்.
தொழுதி–கூட்டம், 2. திரட்சி, 3. பறவைக்கூட்டத்தொலி.
தொழுத்தை – வசவி, 2. அடிமைப் பெண்.
தொழுந்தகை–தொழத்தக்கவன்.
தொழுப்பு–உழுதொழில்வளைப்பு.
தொழும்பர் – அடிமைகள், 2. குற்றேவல்செய்வோர்.
தொழும்பு–அடிமைத்தொழில்.
தொழுவம்–ஆணிலை.
தொழுவர்–தொழில்செய்வோர், 2. மருத நிலமாக்கள்.
தொளதொளத்தல்–தளர்வு.
தொளாயிரம்–தொள்ளாயிரம்.
தொளி–சேறு.
தொளுக்க–(வி) தொடுக்க, 2. தளரக் கட்ட.
தொளை–துவாரம், 2. வாயில், 3. உட்டுளை, 4. மூங்கில்.
தொள்கு–குழி.
தொள்ள–(வி) துளைக்க, 2. நெகிழ.
தொள்ளம்–சேறு, 2. தெப்பம்.
தொள்ளாடி–பலமற்றவன்.
தொள்ளாமணி – தொளைக்காத முழுமணி.
தொள்ளாயிரம்–ஒன்பதுநூறு.
தொள்ளாளி–தொழிலாளி.
தொள்ளி–குழைசேறு.
தொள்ளை–துளை, 2. துளையுடைப்பொருள், 3. மரக்கலம்.
தொறு–ஓர் பன்மையிடைச்சொல், 2. கூட்டம், 3. பசுக்கூட்டம், 4. பொலிவு, 5. தொழிலிற்பழகுதல், 6. அடிமை.
தொறுத்தி–இடைச்சி.
தொறுவியர்–ஆய்ச்சியர்.
தொறுவு–அடியான், 2. அடிமை, 3. செய்தொழில், 4. பசுக்கூட்டம்.
தொனி–ஒலி, 2. கண்டத்திசை.
தொனிக்க–ஒலிக்க.
தொனு–உக்காரம், (உக்கிரசத்தம்.)
தொனுப்ப–(வி) அலப்ப.
தொன்மரம்–ஆலமரம்.
தொன்மை – பழமை, 2. செய்யுள் வனப்பிலொன்று.
தொன்று–பழமை.
தொன்னீர்–கடல்.
தொன்னூல்விளக்கம் – ஓரிலக்கண நூல்.
தொன்னை–இலைக்கலம், 2. ஈனன்.

## தோ

தோ–நாயைக்கூப்பிடும் ஒலி.
தோகம்–சிறுமை.
தோகை–இறகு, 2. மயிற்றோகை, 3. வால், 4. மயில், 5. முன்றானை, 6. விருதுக்கொடி, 7. தொங்கல், 8. பெண். 9. பனங்கிழங்கின் வாற்றோல், 10. நுனித்தோல்.
தோகையர்–பெண்கள்.
தோக்கு–துப்பாக்கி.
தோக்கை–சீலை, 2. மேற்போர்வை, 3. முன்றானை.
தோசி–தோஷமுள்ளவன்.
தோசை–அப்பவருக்கத்திலொன்று.
தோடகச்சிரங்கு– } கொப்புளச் சிரங்கு.
தோடஞ்சிரங்கு– }
தோடகம்–தாமரை.
தோடம்– } குற்றம், 2. பாவம், 3. சன்னி, 4. பிணி, 5. ஓர்சுரம்.
தோஷம்– }
தோடயம்– } நாடகச்சிறப்புப் பாயிரக்கவி.
தோடையம்– }
தோடா–கைவளை.
தோடி–ஓரிராகம்.
தோடு–ஓலை, 2. பூவிதழ், 3. காதணி, 4. கூட்டம், 5. பழத்திரேடு, 6. வட்டமாக அரிந்தது, 7. வட்டத்திரளை.
தோடை–குளஞ்சிமரம், 2. சலாபக்குளியிலோர் குழூஉக்குறி.
தோட்கோப்பு–கட்டுச்சோறு.
தோட்சுமை–புயததிற்றூங்குஞ் சுமை, 2. காவடி.
தோட்டம்–கொல்லை.

தோட்டா—வெடிமருந்துச் சுருள்.
தோட்டி—கதவு, 2. வாயில், 3. சூழ்கழி யிருக்கை, 4. அழகு, 5. அட்டமங் கலத்தொன்று, 6. வெட்டியான், 7. சுத்திசெய்வோன்.
தோட்டி—யானைக்குடாரி, 2. கொக்கி.
தோட்டிமை—ஒற்றுமை.
தோட்டுச்சக்கரம்—ஓர்வித பாணம்.
தோட்டுச்சிரங்கு—தோடகச்சிரங்கு.
தோட்பட்டை—கைச்சிப்பு.
தோணுமுகம்—கழிபிருக்கை.
தோணி—மரக்கலம், 2. இரேவதி நாள், 3. மதிலுறுப்பு, 4. அம்பு, 5. சேறு, 6. நீர்.
தோணுக்கம் — மகளிர் விளையாட்டி னொன்று.
தோண்ட—(வி) அகழ, 2. குடைய, 3. முகக்க.
தோண்டான்—கோணுய்.
தோண்டி — தண்ணீரிறைக்குஞ் சிறு பாததிரம்.
தோண்மேல்—பிடரி.
தோதகத்தி—நூக்கமரம், 2. மரியாதை யற்றவள்.
தோதகம்—வருத்தம், 2. வஞ்சகம், 3. மரியாதையின்மை.
தோத்திரம்— } துதி, 2. வந்தனம்.
ஸ்தோத்திரம்— }
தோத்திரிக்க—(வி) புகழ.
தோப்பாடி — } துஷ்டன்.
தோய்ப்பாடி— }
தோப்பு—சோலை.
தோப்புக்கண்டம்—ஓர் தண்டனை, 2. ஓர் வணக்கம்.
தோப்பை—திண்மையின்றிப் பருத்தது.
தோமரம்—எறிபடை, 2. பெருஞ்சவள ம், 3. கைவேல், 4. தண்டம்.
தோம்—குற்றம், 2. தீமை.
தோம்பு—சிவப்பு.
தோய—(வி) நீரில்மூழ்க, 2. குளிக்க, 3. நனைய, 4. கலக்க, 5. நிலததிற்படிய, 6. புணர, 7. குறிக்கப்பட, 8. உறை ய, 9. அகப்பட்டுக்கொள்ள, 10 துவைச்சவிட.
தோயதரம்—மேகம்.
தோயமாபுரம்—ஓர் அசுரநகரம்.
தோயம்—சலம்.
தோரணம்—மகரிகை, 2. சித்திரகோபுரவாயில், 3. நீராடுமிடத்திற் கட்டும் வரம்பு, 4. தராசுதாங்கி.
தோரணி— }
தோரணிக்கம்— } நல்லொழுங்கு.
தோரவணை— }
தோரத்தம்—தொந்தரவு.
தோரி—சோறு.
தோரை—ஓர்வகை நெல், 2. இரத்தம், 3. மூங்கிலரிசி, 4. சரமணிக்கோவை, 5. விரலிறை, 6. கை, 7. மங்கனிறம், 8. ஓர்பனை, 9. மயில்விசிறி.
தோணை—ஓரெண்.
தோலா—ரூபாயிடை.
தோலாயா—இலவமரம்.
தோலான்—அற்பன்.
தோலி—ஓர்மீன், 2. அரக்கு.
தோலோதோல்—எவ்விதமும்.
தோல்—சருமம், 2. புறணி, 3. விதையின்மேற்றோல், 4. துருத்தி, 5. தோற்கேடகம், 6. யானை, 7. தோற்படலம், 8. பிரயோசனமில்லாதது, 9 அபசயம், 10. அழகு, 11. எண்வகை வனப்பிலொன்று, 12. சொல்.
தோல்வி—தோற்றல்.
தோல்வினைஞர்— } சக்கிலியா
தோல்வினைமாக்கள்— }
தோவத்தி—சோமன்.
தோழமை—நட்பு.
தோழம்—பசுக்கொட்டம்.
தோழன்—நண்பன், 2. பாங்கன்.
தோழி—சினேகிதி, (பாங்கி).
தோளணி—வாகுவலயம்.
தோளாமணி—துளைக்காதமுழுமணி.
தோளி—அவுரிப்பூண்டு.
தோளுதல் (தொ. பெ) துளைத்தல்.
தோள்—புயம், 2. கை.
தோள்கொடுத்தல்—(தொ. பெ) உதவுதல்.
தோறு — பன்மைப் பொருட்டுமோரிடைச்சொல்.

தோற்க—(வி) தோற்படைய, 2. அப சயப்பட, 3. தாழ, 4. பொறுக்க, 5. நியாயத்தில் தோர்க, 6. இழக்க.
தோற்கருவி — தோலான் மூடப்பட்ட வாச்சியம்; இது: ஐவகை வாச்சியத் தொன்று.
தோற்சித்திதை—தோற்றுருத்தி.
தோற்பரம்—கிடுகு, கேடகம்.
தோற்பு—தோல்வி.
தோற்றம் — காட்சி, 2. பிரகாசம், 3. தொடக்கம், 4. பிறப்பு, 5. மகன், 6. உற்பத்தி, 7. சாயை, 8. தரிசனம், 9. எண்ணம், 10. வருகை, 11. உதயம், 12. ஆவேசம், 13. சொல், 14. ஏற்றமொழி, 15. புகழ், 16. வலி, 17. நூதனக்காட்சி.
தோற்றரவு — தோற்றுதல், 2. ஆவேசம்.
தோற்றுங்கொள்ளி — } புறங்கொடுத்தவன்.
தோற்றுங்கோளி— }
தோற்றுவாய்—பாயிரம்.
தோற்றுவிக்க—(வி) தோன்றச்செய்ய, 2. உண்டாக்க, 3. பிறப்பிக்க, 4. உற்பவிக்கச்செய்ய.
தோற்றுன்னர்—சக்கிலியர்.
தோன்ற— (வி) எழுத்ததிகரிக்க.
தோன்றல் — மகன், 2. பெருமையிற் சிறந்தோன், 3. அரசன், 4. முல்லைத் தலைவன், 5. மூத்தோன், 6. ஆண்மகன், 7. வெளியாதல்.
தோன்றுத்துவண—கடவுள்.
தோன்றி — செங்காந்தட்பூ, 2. இரத்தம்.
தோன்றிகர்—செட்டிகள்.

## தௌ

தௌதம்—வெள்ளி.
தௌத்தியம்—தூது.
தௌரிதகம் — குதிரையின் மெல்லிய நடை.
தௌரிதம்—குதிரைநடை.
தௌர்ப்பல்லியம்—பலஹீனம்.
தௌர்ப்பாக்கியம்—நிர்ப்பாக்கியம்.
தௌவுதல்—(தொ. பெ) கெடுதல், 2. தத்துதல்.
தௌவை — அக்காள், 2. மூதேவி, 3. தாய்.

## ந

ந—இன்மை எதிர்மறை பிறிது என்னும் பொருள்களினும், நன்மைப்பொருளினும், ஒப்புப்பொருளினும் வருமோருபசர்க்கம், (உ-ம்) நக்கீரன், நப்பின்னை, நபட்சணம்.
நக—(வி) ஒளிவிட, 2. புன்னகைகொள்ள, 3. இகழ.
நகங்கிருதி—புண்ணியமேழினொன்று.
நகச்சுற்று — நகக்கண்ணில் வருமோர் நோய்.
நகட்ட — (வி) அரைக்க, 2. சாப்பிட்டுப்போட, 3. நகரச்செய்ய.
நகதி—ரோக்கக்காரன்.
நகது— } உரோக்கம்.
நகதா— }
நகம்—உகிர், 2. பறவைநகம், 3. அடிக்குளம்பு, 4. மலை, 5. பூமி, 6. மரம்.
நகர—(வி) தவழ, 2. மறைவாய்ப்போக.
நகரம்—பட்டணம், 2. மருதநிலத்தூர், 3. இராசமனை, 4. ஓரெழுத்து.
நகரா—ஓர் பறை.
நகரி — பட்டணம், 2. இராசமாநகரம், 3. ஓரூர்.
நகரை — ஓர்மீன், 2. ஓர்மரம், 3. ஓர்வகை யரிசி.
நகர்—வீடு, 2. கோயில்.
நகர்த்த — (வி) தள்ள, 2. கொஞ்சகொஞ்சமாய்க் கொண்டுபோக.
நகாசு—நுண்ணிய செய்கை.
நகாயுதம்—சிங்கம்.
நகிலம்— } முலை.
நகில்— }
நகுடம்—மூக்கு.
நகுடன்— } சந்திரகுலத் தரசரிலொருவன்.
நகுஷன்— }
நகுதா—மாலுமி.
நகுத்தம்—புன்கமரம்.
நகுலம்—கீரி.

நகுலன்—பஞ்சபாண்டவரி லொருவன், 2. பரிமாவுகைப்போன்.
நகை — ஆபரணம், 2. உடைமை, 3. சிரிப்பு, 4. இகழ்ச்சி, 5. களிப்பு, 6. இன்பம், 7. பிரகாசம், 8. ஈறு, 9. பல், 10. பூமொட்டு, 11. மலருதல்.
நகைக்க—(வி) சிரிக்க, 2. பரிகாசிக்க, 3. நிந்திக்க.
நகைப்பு—சிரிப்பு.
நகையால்—பகன்றைச்செடி.
நக்கபாரம்—, நக்கவாரம்— சில தீவுகள்.
நக்கரிக்க—, நக்கரைக்க— (வி) நகர, 2. படுகிடையாக, 3. தவழ.
நக்கல்—நக்கியுண்பது, 2. இலேகியம், 3. எச்சில்.
நக்கனத்துவம்—, நக்கனம்— திருவாணம்.
நக்கனப்பிரசாதனம்—வஸ்திரதானம்.
நக்கன்—திருவாணி, 2. சிவன், 3. அருகன், 4. நரி.
நக்கிப்பூ—தேட்கொடுக்கி, (ஒரு செடி.)
நக்கினம்—திருவாணம்.
நக்கீரன்—நற்கீரன்.
நக்குணி—ஓர்பாம்பு, 2. சிறுபிள்ளை.
நக்குதல் — (தொ. பெ) நாவாலெடுத்துண்ணல்.
நங்கணவாய்ச்சி—ஓர் பறவை.
நங்கு—பரிகாசம்.
நங்குரம்—, நங்கூரம்— மரக்கலத்தைத் தரிப்பிக்கும் ஒரு கருவி.
நங்கை—பெண்ணிற் சிறந்தாள், 2. சிறியாணங்கை, (ஒரு செடி.)
நசல்—வியாதி.
நசவனை—, நசிவனை— செம்மணியின் குற்றத்தொன்று.
நசிஉறத்—புத்திகற்பித்தல்.
நசிதல்—(தொ. பெ) நசுங்குதல், 2. ஈனப்படல், 3. கெடல்.
நசித்தல்—(தொ. பெ) அழித்தல், 2. சாதல், 3. நசுக்கப்பண்ணுதல்.
நசிப்பு—அழிவு.
நசியம்—மூக்கிலிடும் மருந்து.
நசியல்—நசிந்தது.
நசிருணி—, நசிருண்டி— தொந்தரவுசெய்வோன்.
நசீப்—விதி, 2. அதிஷ்டம்.
நசுகுணி—மெலிந்தோன்.
நசுக்க—(வி) கசக்க, 2. தடுக்க, 3. கீழ்ப்படுத்த.
நசுக்கான்—சிறியது.
நசுங்க—(வி) பிதுங்க, 2. நசுக்கப்பட, 3. கசங்க, 4. காரியங்கெட, 5. பெருமை குறைய.
நசுநசுக்க — (வி) தடுமாற, 2. தூறிக்கொண்டேயிருக்க, 3. ஈரிக்க.
நசுவல் — உலோபி, 2. மெலிந்தது, 3. முயற்சியற்றவன்.
நசை—ஆசை, 2. அன்பு, 3. ஒழுக்கம், 4. குற்றம், 5. பரிகாசம், 6. ஈரம்.
நசைய—(வி) அன்புற, 2. விரும்ப.
நசைவு—ஈரம்.
நச்ச — (வி) விரும்ப, 2. அலப்ப, 3. அலட்ட.
நச்சறுப்பாய்ஞ்சான் —, நச்சறுப்பான்— கழுதைப்பாலை, (ஓர் பூடு.)
நச்சினார்க்கினியார்—ஓர் உரை ஆசிரியர்.
நச்சினி—கேழ்வரகு.
நச்சு—ஆசை, 2. நஞ்சு.
நச்சுப்பார்வை — மோகப்பார்வை, 2. கோபப்பார்வை.
நச்சுப்பால்—கள்ளிப்பால், 2. சீம்பால், 3. இணங்காதபால்.
நச்செள்ளையார்—ஓர் சங்கப்புலவர்.
நஞ்சம்—நஞ்சு.
நஞ்சு — விடம், 2. தீமை, 3. நஞ்சுக்கொடி.
நஞ்சுண்டோன்—சிவபிரான்.
நஞ்சை—கழனி.
நடக்க—(வி) செல்ல, 2. சம்பவிக்க, 3. வழங்கிவர, 4. நிகழ்ந்துகொண்டிருக்க.
நடக்கை—ஒழுக்கம்.
நடத்த—(வி) நடக்கச்செய்ய, 2. கூட்டிக்கொண்டுபோக, 3. வழிநடத்த, 4. நடப்பிக்க, 5. ஓட்ட, 6. செய்ய.

நடத்தை—ஒழுக்கம், 2. நடை, 3. வாழ்வு.
நடபடி—ஒழுக்கம்.
நடபாவி—நடைகிணறு.
நடப்பிக்க—(வி) செய்விக்க, 2. நிருவாகம்பண்ண.
நடமாட—(வி) ஊடாட, 2. வர்த்திக்க, 3. சஞ்சரிக்க, 4. வழங்க, 5. கூத்தாட.
நடமாட்டம்—செல்வாக்கு, 2. பழக்கம், 3. நடனம்.
நடம்—கூத்து, 2. தாளவொத்தினால் நடிப்பது, 3. ஓர்பண்.
நடலம் — ஒய்யாரம், 2. செருக்கு, 3. நாகரிகங்காட்டல்.
நடலை—நடுக்கம், 2. துன்பம், 3. பொய், 4. வஞ்சனை.
நடவ—(வி) செலுத்த, 2. நடத்த.
நடவடி— } நடபடி.
நடவடிக்கை— }
நடவை—வழி, 2. வழங்குமிடம், 3. நடப்பட்டது, 4. தணக்கமரம்.
நடனம்—கூத்து.
நடன்—கூத்தன், 2. சிவன்.
நடாத்த — (வி) ஓட்ட, 2. காரியம் நடத்த.
நடி—பெருமை, 2. நாடகக்கணிகை.
நடிக்க—(வி) கூத்தாட, 2. பலகோலங்கொள்ள, 3. முறைகெட்டொழுக, 4. இல்லின்கண்வாழ, 5. விகாரப்படுத்த.
நடிப்பு—கூத்து, 2. பாவனைகாட்டல்.
நடு — இடை, 2. இடுப்பு, 3. நடுவுநிலைமை, 4. பூமி.
நடுகை—நடுதல்.
நடுக்க—(வி) நடுங்க, 2. அசைக்க, 3. நடுங்கச்செய்ய.
நடுக்கம்—அச்சம், 2. கிறுகிறுப்பு.
நடுக்கல்—அசைவு.
நடுக்கல்வாதம்—ஒரு நோய்.
நடுக்கு—நடுக்கம்.
நடுங்க—(வி) அசைய, 2. பதற.
நடுங்கநாட்டம்—அகப்பொருட்கிளவியி னொன்று; அது: தோழி தலைவியை நடுங்கநாடுதல்.
நடுங்கல்—(தொ. பெ) அஞ்சல், 2. நடுங்குதல்.
நடுத்தரம்—இடைத்தரம்.
நடுத்தீர்த்தல்—(தொ. பெ) நியாயந் தீர்த்தல்.
நடுநடுங்கல்— } (தொ. பெ) பயத்தால் மிகக் கலங்குதல்.
நடுநடுங்குதல்— }
நடுநாள்—சித்திரைநாள்.
நடுநிலை—நீதி.
நடுப்பகல்—மத்தியானம்.
நடுப்பார்த்தல் – (தொ. பெ) மத்தியஸ்தம் பார்க்கை.
நடுப்பேசுதல் – (தொ. பெ) நியாயம் பேசுதல்.
நடுமத்தியானம்—உச்சிக்காலம்.
நடுமையம்—உச்சம்.
நடுராசி—நடுத்தரம்.
நடுவறுத்தான் – (வை. அ) மூக்கறுத்தான், மூக்குரட்டைக்கொடி.
நடுவன்—இயமன், 2. நியாயாதிபதி.
நடுவின்மை—நீதிக்கேடு.
நடுவு—நடுவுநிலைமை, 2. மாதரிடை.
நடுவுநிலைமை—நியாயம், 2. நிதானம்.
நடேசன்—நடராஜன்.
நடை—ஒழுக்கம், 2. கூத்து, 3. செல்லுகை, 4. செல்வம், 5. முறை, 6. வழக்கம், 7. வழி, 8. நடைகூடம், 9. எழுத்துநடை சொல்நடை.
நடைபடி—நடத்தை.
நடைப்பரிகாரம்—பயணச்சாமான்.
நடைப்பாவாடை—சிலப்பாவாடை.
நடையன்—நடக்கிறவன், 2. உழவுமாடு குதிரை முதலியன, 3. செருப்பு.
நட்சத்திரகண்டகி – (வை. அ) அகாசிச்செடி.
நட்சத்திரசீரகம் – (வை. அ) ஒரு சீரகம்.
நட்சத்திரதீபம்—ஒரு விளக்கு.
நட்சத்திரமாலை—ஒரு சோதிடநூல்.
நட்சத்திரம்—தாரகைப்பொது, 2. நாண்மீன்; அவை: அச்சுவினி முதலாக இரேவதியிறுதியாக வுள்ளவற்றிற்கும் பெயர் கூறுவர்.

நட்டசந்திரன்—ஆவணிமாசத்துப் பூர்வபக்கச் சதுர்த்திப்பிறை.
நட்டணை—எண்ணுமை, 2. வெறுப்பு, 3. ஆகடியம், (பரிகாசம்.)
நட்டபாடை—ஒருபண்.
நட்டம்—அம்மணம், 2. நிறுதிட்டம்.
நட்டம்— } சேதம், 2. கேடு.
நஷ்டம்— }
நட்டல் — (தொ. பெ) சிநேகித்தல், 2. நடுதல்.
நட்டவர்—சிநேகிதர்.
நட்டழிவு—நட்டவுசேதம்.
நட்டாமுட்டி சிந்தனை—ஒரு நூல்.
நட்டார்— } உறவோர், 2. சிநேகிதர்.
நட்டோர்— }
நட்டாறு—நடு ஆறு.
நட்டி— } நட்டம்.
நஷ்டி— }
நட்டு—நட்டுவன், 2. கீழ்மை.
நட்டுவக்காலி— } ஒரு விஷசெந்து.
நட்டுவாய்க்காலி- }
நட்டுவம்—நாட்டியம் பழகுந்தொழில்.
நட்டுவன்—நடனமாட்டுவோன்.
நட்டுவிழுதல் — (தொ. பெ) தலைகீழாய் விழுதல்.
நட்பாளன்—நண்பன்.
நட்பு—உறவு, 2. சிநேகம், 3. (யாழின்), நாலாநரம்பு.
நணந்தம்—புன்கமரம், 2. சணற்பயிர்.
நணுகலர்— } பகைவர்.
நணுகார்— }
நணுகுதல் — (தொ. பெ) கிட்டல், 2 சார்தல்.
நண்டு—கற்கடகவிராசி, 2. ஞெண்டு.
நண்டுக்காற்கீரை—ஒரு கீரை.
நண்டுக்காற்புல்—ஒரு புல்.
நண்ண—(வி) கிட்ட, 2. ஒட்ட, 3. பொருந்த, 4. இருக்க.
நண்ணுநர்—மித்திரர்.
நண்பகல்—மத்தியானம்.
நண்பன்—கணவன், 2. தோழன், 3. சணற்பயிர்.
நண்பு—நட்பு.
நதம்—மேற்கோடுமாறு, (ஆணாறு.)

நதி—கிழக்கோடுமாறு, (பெண்ணாறு.)
நதிக்கரை—ஆற்றங்கரை.
நதிசரம்—ஆற்றுச்சார்பிற் பிறந்தயானை.
நதிபதி—கடல், 2. வருணன்.
நதுக்க—(வி) அவிக்க, 2. மறைக்க, 3. கெடுக்க.
நத்தத்தனார்—சங்கப்புலவரில் ஒருவர்.
நத்தமாலம்—புன்கமரம்.
நத்தம்—சங்கு, 2. நத்தை, 3. ஊர்.
நத்தம்—இரா, 2. இருள், 3. புன்கமரம்.
நத்து—ஓர் கூகை.
நத்து—சங்கு, 2. மூக்கணி.
நத்துதல்—(தொ. பெ) விரும்பல்.
நத்தை—ஒரு பூண்டு; அது: கடைச்சாரணையென்றும், நாரத்தை என்றுங் கூறுவர், 2. கடுகு.
நத்தைச்சுண்டி—நத்தைச்சூரி.
நத்தைச்சூரி—(வை. அ) ஓர் பூண்டு.
நந்தகம்—மகாவிஷ்ணுவின் வாள்.
நந்தகோபன்—கண்ணமூர்த்தியை வளர்த்த தந்தை.
நந்தகோபாலர்—இடையர்.
நந்தம்—கஸ்தூரி, 2. சங்கு.
நந்தவனம்—நந்தனவனம்.
நந்தனவனம்—பூந்தோட்டம்.
நந்தன்—அரசாண்ட ஒரு சக்கிலியன், 2. சிர்பந்தபாஷாணம், 3. நந்தகோபன், கண்ணபிரானை வளர்த்த தந்தை.
நந்தி—எருது, 2. ஒருநதி, 3. ஒரு மலை, 4. ஓரரசன், 5. சிவன், 6. சிறுபறை, 7. செக்கான், 8. நந்திதேவன், 9. உபபுராணத்தொன்று.
நந்திகேசன்— } சிவன், 2. சிவனூர்தி.
நந்திகேசுரன்— }
நந்திகேச்சுரன்— }
நந்திப்பூசனி—சாம்பறபூசனிக்கொடி.
நந்தியாவட்டம்—நந்தியாவர்த்தம்.
நந்தியாவர்த்தம்—ஒரு பூச்செடி.
நந்தினி — வசிட்டர் காமதேனுவின் கன்று.
நந்து—சங்கு, 2. நத்தை.
நந்தை—கொத்தான்கொடி.
நந்தை—பஞ்சதெய்வப் பசுவிலொன்று.

நங்நான்கு—நான்கு நான்கு.
நபம்—ஆகாயம்.
நபாபு—
நபாப்— } துலுக்க அரசன்.
நபி—இஸ்லாமார்க்கத்துத் தீர்க்கதரிசி.
நபுஞ்சகம்—பேடு.
நபுஞ்சகன்—பேடன்.
நப்பாலத்தனார்—சங்கப்புலவரி லொருவர்.
நப்பின்னை—இலட்சுமி.
நம—மந்திரங்களின் முடிவிலொருறுப்பு, 2. வணக்கம்.
நமக்காரி — (வை. அ) வறட்சுண்டிச் செடி.
நமத்தம்—சடாமாஞ்சி, (ஒரு மருந்து.)
நமர்—நம்மவர்கள்.
நமள்—நம்மவள்; இது: கிளைப்பெயர்.
நமன்—இயமன்.
நமன்—நம்மவன்.
நமிநந்தியடிகள்—அறுபத்துமூவரிலொருவர்.
நமூது—சாட்சி.
நமூனு—மாதிரி.
நமை—நினவு, 2. ஒரு மரம்.
நமைக்க—(வி) நினவுண்டாக.
நம்—நமது, 2. ஒரு சாரியை.
நம்ப—(வி) மெய்கொள்ள, 2. பற்றுவைக்க, 3. விசுவாசிக்க, 4. விரும்ப.
நம்பன்—சிவன், 2. விரும்பத்தக்கவன்.
நம்பி—ஆணிற்சிறந்தோன், 2. ஒரு வேடுவேராசன். [இவன் வள்ளியம்மையாரைத் தனக்கு மகளா கைக்கொண்டவன்.]
நம்பிக்கை—விசுவாசம், 2. உறுதிப்பாடு.
நம்பியாண்டார் நம்பி—திருத்தொண்டர் திருவந்தாதி செய்தருளியவர்.
நம்பு—ஆசை.
நம்பூரி—மலையாளப் பார்ப்பாரினுயர்ந்தோர்.
நம்மாழ்வார்—தாம்பிரவன்னி நதிக்கருகிலிருந்த ஒரு வேளாள வைணவாசாரியர்.
நயக்க—(வி) விரும்ப.
நயச்சொல்—முகமன் வார்த்தை.

நயத்தல்—(தொ. பெ) ஆசைப்படல், 2. இன்பமுறல், 3. நன்மைப்படல், 4. பயன்படல், 5. மகிழ்ச்சியுறல்.
நயந்தோர்—மித்திரர்.
நயப்பித்தல்—(தொ. பெ) இன்புறுவித்தல், 2. சந்தோஷப்படுத்தல், 3. நன்மைப்படுத்தல்.
நயப்பு—மலிவு, 2. ஆசை, 3. அன்பு.
நயமாலி—மனோசிலை, (ஒரு மருந்து விலைவுப்பாடண முப்பத்திரண்டி லொன்றென்பர்.)
நயம்—மலிவு, 2. நன்மை, 3. இன்பம், 4. பயன், 5. மேன்மை, 6. உபசரிப்பு, 7. நீதி, 8. மகிழ்ச்சி.
நயவர்—சிநேகிதர்.
நயவான்—நயப்புள்ளோன்.
நயனப்பத்து—கண்ணினைப்பத்துச்செய்யுளாற் கூறுமோர் பிரபந்தம்.
நயனம்—கண்.
நயன்—நன்மை.
நயினார்—ஆண்டவன், 2. எசமானன், 3. ஐயனார், 4. நாயனார்.
நரகத்தர்—நரகத்திலிருக்கிறவர்கள்.
நரகம்—பாவலோகம், வேதாகமங்களின் மொழிவழி நடவாதாரைத் தண்டித் தற்பொருட்டுக் கடவுளாலமைக்கப் பட்ட சிறைக்களம்.
நரகல்—மலம்.
நரகன்—ஓரசுரன், (இவனைத் திருமால் கொன்றார்), 2. நரகத்திலுள்ளோன்.
நரகாரி—மகாவிஷ்ணு.
நரகாலி—மாட்டுக்கு வருமோர் நோய்.
நரகு—நரகம்.
நரங்குதல்—(தொ. பெ) தேய்ந்து தேய்ந்து கெடுதல்.
நரசிங்கம்—திருமால் தசாவதாரத்தொன்று; அஃது இரணியனைக் கொல்லத் தூணிற்பிறந்த அவதாரம்.
நரத்துவம்—மானிடத்தன்மை.
நரந்தம்—கஸ்தூரி மிருகம், 2. நரந்தப்புல், 3. நாரத்தை.
நரப்புக்கருவி — வீணைமுதலிய வாத்தியம்.

நரமேதம்—ஒரு யாகம், (அது நரபலி யிட்டுச் செய்வது.)
நரம்பு—தந்தி, 2. நாடி, 3. நார், 4. வீணை, 5. இலை முதலியவற்றி னரம்பு.
நரம்புக்காய்—முருங்கைக்காய்.
நரம்புச்சிலந்தி—ஒரு புண், இதில் நரம் பும் வெளிவரும்.
நரர்—மனிதர்.
நரலல்— } (தொ. பெ) ஒலித்தல்.
நரலுதல்— }
நரலை—கடல்.
நரலோகம்—பூமி.
நரல்—செத்தை, 2. சனம்.
நரல்வு—ஓசை.
நரவலிக்க—(வி) சோர.
நரற்ற—(வி) ஒலிக்க.
நரன்—மனிதன், 2. அருச்சுனன்.
நராதிபன்—அரசன்.
நராந்தம்—காகம்.
நராபோகம் — நினைத்திராத வாழ்வுபெறல்.
நராலை—நரகம்.
நரி—ஓர் மிருகம்.
நரிக்க—(வி) பிரமிக்க, 2. நிந்திக்க.
நரிக்கொன்றை—ஒரு மரம்.
நரிப்பயறு—ஒரு புன்பயறு, (மின்னிப் பயறு.)
நரிப்பு—இகழ்வு.
நரிப்புறம்—மிருகசீரிடம்.
நரிமருட்டி—கிலுகிலுப்பைச்செடி.
நரியனெல்—ஒருவகை நெல்.
நரியுடை — (வை. அ) மொசுமொசுக் கைக்கொடி.
நரிவாற்புல்—ஒரு புல்.
நரிவெருத்தலையார் — ஒரு சங்கப்புலவர்.
நருக்குதல்—(தொ. பெ) நொருக்குதல்.
நருக்கெனல்—ஓரொலிக்குறிப்பு.
நருங்க—(வி) நசுங்க.
நருநருத்தல்—ஈரடுக்கொலிக்குறிப்பு.
நருநரெனல்—(தொ. பெ) நருநருத்தல்.
நருமதை—ஓர் ஆறு.
நரேந்திரன்—அரசன், (நரர்களுக்கு மேலானவன்.)

நரை—இடபம், 2. சாமரை, 3. நாரைப் புள், 4. வெண்மை.
நரைக்க—(வி) மயிர்வெளுக்க, 2. வெளிற, 3. நிறம்வெளுக்க.
நரைக்கொள்ளு—சீர்க்கோழிப்பூடு.
நரைமை—வெண்மை.
நரையன்—நரைத்தவன், 2. வல்லூறு.
நலக்க—(வி) கசங்கச்செய்ய, 2. அழுக்காக்க.
நலங்கல் — (தொ. பெ) முடங்கல், 2. வருந்தல்.
நலத்தல்—(தொ. பெ) நயத்தல்.
நலப்பாடு—மிகுநன்மை.
நலம் — நன்மை, 2 அழகு, 3. பயன், 4. உபகாரம், 5. இன்பம், 6. கண்ணோட்டம், 7. விலங்கின் விதை, 8. உயர்வு, 9. சுக்கு.
நலன் — நலம், (இறுதிப்போலியாயினது.)
நலி—நோய்.
நலிய — (வி) மெலிய, 2. தோற்க, 3. சரிய, 4. அழிய, 5. வருந்த.
நலிவு—அழிவு, 2 மெலிவு, 3. வருத்தம்.
நல்— } நன்மையான, 2. ஏற்ற, 3.
நல்ல— } மிகுந்த, 4. அதிகமான.
நல்கல் — (தொ. பெ) ஈதல், 2. உண்டு பண்ணல், 3. பயன்படல், 4. பெறுதல், 5. மகிழ்தல்.
நல்குரவு—தரித்திரம்.
நல்கூர்தல் — (தொ. பெ) தரித்திரப் படல்.
நல்கூர்ந்தோன்—தரித்திரன்.
நல்கூர்வேள்வியார் — சங்கப்புலவரில் ஒருவர்.
நல்லபாம்பு—நாகப்பாம்பு.
நல்லம்—கறுப்பு.
நல்லம்மான் பச்சரிசி—ஒரு பூண்டு.
நல்லரிவஞ்சம் — போகபூமியாறிலொன்று.
நல்லவழி — நன்னடக்கை, 2. நற்குலம்.
நல்லவெல்லம்—கருப்பங்கட்டி.
நல்லவேளை — நற்சமயம், 2. நல்வேளைப்பூடு.

நல்லவை—நற்சவை, 2. மேன்மையுள்ளவை.
நல்லன்—நல்லவன்.
நல்லாதனூர் — திரிகடுகமென்னு நூல் செய்த ஓராசிரியர்.
நல்லாபிள்ளை—பாரதம் பாடினோர்.
நல்லாள்—நலமுடையவள், 2. பெண்.
நல்லோர்—அறிஞர், 2. மகளிர்.
நவசி—ஓர் தென்னமரம், 2. ஓர் கமுக மரம்.
நவச்சாரம்— } ஒரு மருந்து.
நவக்ஷாரம்— }
நவதளம்—தாமரைத்தளிர்.
நவதி — தொண்ணூறு, 2. பொடுதலைப் பூண்டு.
நவத்தம்—சடாமாஞ்சி, (ஒரு மருந்து.)
நவநீதம்—புதுமை, 2. புதுவெண்ணெய்.
நவப்பிரீதி—வெடியுப்பு.
நவமணி—ஒன்பது இரத்தினம்; அவை: கோமேதகம், நீலம், பவளம், புருடராகம், மரகதம், மாணிக்கம், முத்து, வயிரம், வயிடூரியம் என்பன.
நவமி—ஒன்பதாந்திதி.
நவம் — கார்காலம், 2. கேண்மை, 3 பூமி.
நவம்—ஒன்பது, 2. புதுமை.
நவரசம்—ஒன்பது சுவை; அவை: அற்புதம், இரௌத்திரம், கருணை, குற்சை, சாந்தம், சிங்காரம், பயம், பெருநகை, வீரியம் என்பன.
நவரதம்—நவரசம்.
நவராத்திரி — கன்னிமாதத்தில் இலக்குமி சரசுவதி துர்க்கையாகிய சத்திகளைப் பூசிக்கும் ஒன்பது தினம்.
நவரோசு—ஓரிராகம்.
நவாடா—தோணி.
நவியம்—கோடாலி, 2. மழு.
நவியம்—புதுமை, 2. புதியது.
நவிரம்—ஆண்மயிர், 2. உச்சி, 3. தலை, 4. மயில், 5. மலை, 6. மருதயாழ்த்திறம், 7, வாள், 8. புன்மை.
நவில—(வி) சொல்ல, 2. கற்க.
நவிழ—(வி) அவிக்க.

நவிற்ற—(வி) சொல்ல, 2. அதிகாரத்தோடுரைக்க.
நவின்றோர்—பயின்றோர்.
நவீனம்—புதுமை.
நவுக்கர்—வேலையாள்.
நவுரி—எக்காளம்.
நவை—குற்றம், 2. இகழ்ச்சி.
நவ்வி—தோணி, 2. இளமை, 3. அழகு, 4. மான், 5. அத்தநாள்.
நவ்வு—மரக்கலம்.
நழுக்கம்—ஆழமின்மை, 2. மழுக்கம்.
நழுக்குதல்—(தொ. பெ) மழுங்கல்.
நழுங்க—(வி) மழுங்க, 2. குழிய.
நழுவ—(வி) வழுவ, 2. விழ, 3. விலக, 4. தப்பித்துக்கொள்ள.
நள—வியாழவட்டமாகிய அறுபது வருடங்களிலே ஐம்பதாவதாண்டு.
நளகூபரன்—குபேரன் மகன்.
நளத்தம்—சடாமாஞ்சி, (ஒரு மருந்து.)
நளம்—தாமரை, 2. சிற்பநூல், 3. அகலம்.
நளன்—முதலேழு வள்ளலிலொருவன்.
நளி — குளிர்ச்சி, 2. செறிவு, 3. கூட்டம், 4. பெருமை, 5. அகலம், 6. தேள்.
நளிர்—குளிர், 2. நண்டு, 3. பெருமை, 4. பகை, 5. குளிர்காய்ச்சல்.
நளினம்—தாமரை, 2. இங்கிதம், 3. நிந்தை, 4. பரிகாசம்.
நளினி—இலக்குமி, 2. தாமரைத் தடாகம், 3. ஓர்பண்.
நளிவை—இலக்குமி, 2. சரஸ்வதி.
நளுங்கு—ஒரு கிளிஞ்சில்.
நளுத்தை—ஓர்பண்.
நவள—வலத்தோல்.
நள்ளலர்— } பகைஞர்.
நள்ளார்— }
நள்ளல்—(தொ. பெ) நட்பாகப் பொருந்துதல்.
நள்ளாறு—ஓர் சிவஸ்தலம்.
நள்ளி—நண்டு, 2. கர்க்கடகவிராசி, 3. உறவு, 4. கடையேழு வள்ளலி லொருவன்.
நறவம்—வாசனை, 2. தேன், 3. அனிச்ச மரம், 4. குங்குமமரம்.

நறவு—வாசனை, 2. தேன், 3. கள், 4. குங்குமமரம்.
நறவள—ஒருபூடு; இது: சிறுநறளை, பெருநறளை, புளிநறளை என மூவகைப் படும்.
நறு—வாசனை, 2. கள், 3. தேன்.
நறியது—நல்லது.
நறு—நறுமை.
நறுக்க—(வி) தறிக்க, 2. துண்டிக்க.
நறுக்கு—துண்டு, 2. சீட்டு, 3. நாகசுரத்தின் நாக்கு.
நறுக்குத்திப்பிலி—தேசாவரம் என்னுஞ் சரக்கு.
நறுக்குமூலம்—திப்பிலிக்கொட்டை, 2. வெட்டிவேர்.
நறுதடி—அடைகல்.
நறுநறெனல்—ஈரடுக்கொலிக்குறிப்பு.
நறுநாற்றம்—சுகந்தம்.
நறுநெய்—பசு நெய்.
நறுந்தொகை—அதிவீரராமபாண்டியன் செய்த ஒரு சிறிய நீதிநூல்.
நறுமருப்பு—இஞ்சி.
நறுமுதல்—(தொ. பெ) பற்கடித்தல்.
நறுமை—நன்மணம், 2. நன்மை.
நறும்பிசின்—சாதிசம் என்னும் பிசின்.
நறுவியது—நல்லது.
நறுவிலி—ஒரு மரம்.
நறை—வாசனை, 2. நறும்புகை, 3. கள், 4. குற்றம், 5. தேன்.
நற்கீரன்—நக்கீரன்.
நற்சாங்கம்—சாலம்பபாஷாணம்.
நற்சாந்து—சுண்ணச்சாந்து.
நற்சாரி—நவச்சாரம்.
நற்சீரகம்—கறிச்சீரகம்.
நற்செங்கல்—மஞ்சட்காவிக்கல்.
நற்பலம்—வெட்பாலைமரம்.
நற்பிரியம்—ஓர்செடி, 2. மிகுபட்சம்.
நற்றத்தனார்—ஓரிலக்கண நூலாசிரியர்.
நற்றமிழ்—இனியதமிழ்.
நற்றாய்—பெற்றதாய்.
நற்றிணை—ஒரு நூல்.
நற்றுடி—காகமரம், 2. வேர்.
நற்றுளி—அத்திப்பிசின்.
நனந்தலை—[illegible], 2. உச்சி.
நனவு—சாக்கிரம், (தெளிவு), 2 பகல், 3. மெய்ம்மை.
நனி—பெருமை, 2. மிகுதி.
நனை—கள், 2. பூவரும்பு, 3. பூந்தேன்.
நனைக்க—(வி) ஈரமாக்க.
நனைய—(வி) ஈரிக்க.
நனைவு—ஈரம், 2. நனைதல்.
நன்காடு—இடுகாடு.
நன்கு—நன்மை, 2. அழகு, 3. மிகுதி.
நன்செய்—நெல்விளைநிலம்.
நன்பகல்—உச்சிக்காலம்.
நன்மை—உபகாரம், 2. உதவி, 3. சன்மார்க்கம், 4. சமாதானம், 5. க்ஷேமம், 6. நற்குணம், 7. நல்வினை.
நன்மைப்பகுதி— } நல்வினைப்பயன்.
நன்மைப்பேறு— }
நன்மையானபெண்—இருதுவான பெண்.
நன்றி—நன்மை, 2. பட்சம், 3. செய்நன்றி.
நன்று—நல்லது, 2. நன்மை, 3. பெருமை, 4. மிகுதி, 5. வாழ்வு.
நன்ன — (வி) நடித்து நறுக்க, 2. பல்லாற்கடிக்க.
நன்னடை—நல்லொழுக்கம்.
நன்னயம்—உபசாரச்சொல்.
நன்னர்—நன்மை.
நன்னலம்—சிறந்த நலம்.
நன்னாரி—ஒரு பாற்கொடி.
நன்னி—சிற்றுரு.
நன்னிலம்—நற்றரை, 2. நன்செய்.
நன்னிலை — ஒழுக்கம், 2. சுகம், 3. தவம்.
நன்னிறம்—வெண்மை.
நன்னுதல்—பெண்.
நன்னூல்—நல்லநூல், 2. பவணந்தி முனிவர்செய்த இலக்கணநூல்.
நன்னெறி — நல்வழி, 2. சிவப்பிரகாசராற் செய்யப்பட்ட ஒரு நீதிநூல்.

## நா

நா—நாக்கு, 2. மணிநா, 3. துலைநா, 4. பூட்டின்றுள், 5. திறவுகோலின் நாக்கு, 6. அக்கினிச்சுவாலை, 7. நடு.

நாககங்கணன்—சிவன்.
நாககர்ணம்—செவ்வாமணக்கஞ்செடி.
நாககற்பம்—செவ்வீயம்.
நாககெந்தி — நேர்வாளக்கொட்டை, 2. வஞ்சிக்கொடி.
நாகசம்—சிந்தூரம், 2. வங்கம்.
நாகசுரம்—ஒருகுகுழல்.
நாகணம் — ஒரு பரிமளத்திரவியம், 2. நகம், 3. நேர்வாளக்கொட்டை.
நாகணவாய்— } ஓர் பறவை.
நாகணவாய்ப்புள்— }
நாகதாளி—ஒரு மரம்.
நாகதாளிக்கள்ளி—ஒரு மரம்.
நாகதீபம்—ஐந்தலை விளக்கு.
நாகதேவன்—ஆதிசேடன்.
நாகதேனி—பெருமருந்து.
நாகந்தி—நாகணம், (இது நேர்வாளம்.)
நாகபடம் — ஓர் காதணி, 2. பாம்பின் படம்.
நாகபட்டினம்—ஓரூர்.
நாகபந்து—அரசமரம்.
நாகபாசம் — பாம்புருவான வோர் படைக்கலம், 2. ஒரு முடிச்சு.
நாகப்பச்சை—ஓரிரத்தினம்.
நாகப்பூ—சிறுநாகப்பூ.
நாகமல்லி—நாகமல்லிகைச் செடி.
நாகமல்லிகை — ஒரு மல்லிகை; இது: அணிச்சமென்பர்.
நாகமாதா—துளசிச்செடி.
நாகம்—நல்லபாம்பு, 2. ஈயம், 3. காரீயம், 4. கருங்குரங்கு, 5. யானை, 6. புன்னைமரம், 7. ஓர் மருந்து, 8. ஓர் கரணம், 9. ஆகாயம், 10. சுவர்க்கம், 11. நாகப்பூ, 12. நற்புடவை, 13. நாகலோகம்.
நாகரம்—ஒரு பாடை, 2. ஒரு வண்டு, 3. தென்றொடை, 4. சுக்கு.
நாகரன்—நகரத்தான்.
நாகரி—குருக்கத்திமரம்.
நாகரிகம்— } சாதுரியம், 2. உபசாரணை, 3. கண்ணோட்டம், 4. விநோதம்.
நாகரீகம்— }
நாகரை—ஒரு பூடு.
நாகலோகம் — கீழேழுலகினொன்று, 2. தேவலோகம்.
நாகல்—நாவன்மரம்.
நாகவம்—ஓர் கரணம்.
நாகவல்லி—ஒரிதழ்த்தாமரை, 2. வெற்றிலை.
நாகவள்ளி—வள்ளிக்கிழங்கு, 2. வெற்றிலைக்கொடி.
நாகவாயு—தசவாயுக்களினொன்று; அது: விக்கல் முதலியவற்றை யுண்டாக்கும்.
நாகன் — நாகவாயு; இது: தசவாயுவினொன்று.
நாகு — இளமை, 2. சங்கு, 3. நத்தை, 4. எருமை மரைபெற்றம் நந்து என்னுமிவற்றின் பெண்.
நாகூர்—ஓரூர்.
நாகேசுரம்—கும்பகோணத்தருகில் திருநாகேசுரம் என்னும் ஓரூர், 2. சிறுநாகப்பூ.
நாகை—நாகபட்டணம்.
நாக்கப்பாம்பு— }
நாக்கப்பூச்சி— } நாங்கூழ்.
நாக்கைப்பூச்சி— }
நாக்கு—நா, 2. தானியக்கதிர், 3. படவு வலிக்குந் துடுப்பு.
நாக்குப்புற்று—ஒரு நோய்.
நாக்குமீன்—ஓர் மீன்.
நாக்குழிஞ்சான்—ஒரு செடி.
நாங்க—(வி) தைரியங்குன்ற.
நாங்கூழ்—நாகப்பூச்சி.
நாசகாலம்—அழிவுகாலம்.
நாசம் — அழிவு, 2. மரணம், 3. ஒடுக்கம்.
நாசயோகம்—மரணயோகம்.
நாசனம்—நாசம்.
நாசன்—இயமன்.
நாசாக்கிரம்—நாசிநுனி.
நாசி—மூக்கு, 2. மூக்குத்துளை, 3. கதவுநிலையின் மேற்சட்டம், 4. சலதாரையின் வாய்.
நாசிகை-மூக்கு, 2. கதவுநிலையின் மேற்சட்டம்.
நாசிக்க—(வி) அழிய, 2. நசிக்க.

நாசியம்—மூக்காங்கயிறு.
நாசுவன்—அம்பட்டன்.
நாசோற்பத்தி—அழிந்து பிறப்பது.
நாஞ்சிநாடு—மலையாளம்.
நாஞ்சில்—கலப்பை, 2. மதிலுறுப்பு.
நாடகசாலை—கூத்துப் பயிலுமிடம்.
நாடகத்தமிழ்—நாடகவழக்குத் தமிழ்; அது: முத்தமிழிலொன்று.
நாடகத்தி—கூத்துவிளையாடும் பெண்.
நாடகம் — கலைஞான மறுபத்துநான்கி லொன்று, 2. கூத்து.
நாடகர்—கூத்தர்.
நாடல்—(தொ. பெ) ஆராய்தல்.
நாடன்—கார்த்திகைநாள், 2. சோழரா சர்களுடைய பட்டப்பெயர்.
நாடன்பருத்தி—ஒரு செடி.
நாடா—நூனாழி.
நாடான் — சாணருக்குரிய பட்டப்பெ யர்.
நாடி—தாது, 2. நாழிகை, 3. நரம்பு, 4. உட்டுளை, 5. யாழ்நரம்பு, 6. மூக்கு, 7. ஆண்மயிர், 8. தாமரைத்தாள்.
நாடிகேளம்—நாரிகேளம்.
நாடிமண்டலம்—சூரியனடுவீதி.
நாடு — இராச்சியம், 2. மருதநிலம், 3. தேசம், 4. பரப்பு, 5. இடம், 6. பூமி, 7. உலகம், 8. பக்கம்.
நாடுதல்—(தொ. பெ) தேடுதல், 2. நினை த்தல்.
நாட்டம்—அழகு, 2. ஆராய்ச்சி, 3. ஒரு பண், 4. கண், 5. சோதிடநூல், 6. வாள்.
நாட்டல்—(தொ. பெ) நாட்டுதல்.
நாட்டவன்—நாட்டான்.
நாட்டாண்மை—ஊரதிகாரம்.
நாட்டார்—ஊரார்.
நாட்டியம்—கூத்து.
நாட்டு—ஸ்தாவரம்.
நாட்டை—ஓர்பண், 2. ஓரிராகம்.
நாட்பு—போர், 2. போர்க்களம்.
நாட்பொருத்தம் — ஜென்ம நட்சத்திரப் பொருத்தம்; இஃது தசப்பொருத்தத் தொன்று.

நாண—(வி) கூச, 2. பின்னிட, 3. அட ங்க, 4. வாட, 5. அஞ்ச, 6. பிணங்க.
நாணகம்—நாணயம்.
நாணம்—வெட்கம்; இது: மகடூஉக்குண நான்கிலொன்று.
நாணயம்—வாக்குப்பிசகாமை.
நாணயம்— } நேர்மை, 2. உண்மை,
நாவணயம்— } 3. நிருணயம், 4. தவ றுமை, 5. உயர்வு.
நாணல் — ஒருபுல், 2. நாணுதல், 3. வளைதல்.
நாணுங்கள்ளி—ஓர் கள்ளி.
நாணி—நாணமுடையாள், 2. வின்னாரி.
நாணுகம்—குதிரை.
நாண் — கயிறு, 2. வின்னாரி, 3. வெட் கம்.
நாண்மீன் — அசுபதி முதலிய நட்சத்தி ரம்.
நாதம்—சத்தம், 2. சங்கோசை, 3. மந் திரலிபியினரைவட்டம், 4. சோணி தம், 5. உமை.
நாதன் — கடவுள், 2. சிவன், 3. அரு கன், 4. குரு, 5. இராசன், 6. எப் பொருட்கு மிறைவன், 7. கணவன், 8. மூத்தவன், 9. முனிவன்.
நாதாக்கள்—ஞானியர்.
நாதாந்தசோதி—கடவுள்.
நாதார்—ஏழைக்குடிகள்.
நாதி—ஓர் பெருங்காயம், 2. ஞாதி.
நாதிக்க—(வி) ஒலிக்க.
நாதேயம்—இந்துப்பு, 2. சீந்திற்கொடி.
நாத்தனார்— } கணவன் சகோதரி.
நாத்தி— }
நாத்தி— } இன்மை.
நாஸ்தி— }
நாத்திகம்— } தெய்வமின்மை.
நாஸ்திகம்— }
நாத்திகன்—சூனியவாதி.
நாந்தகம்—வாள், 2. கிருஷ்ணபகவான் வாள்.
நாந்தல்—ஈரம்.
நாந்தி—ஒருவனைப் புகழ்ந்துபாடிய கவி, 2. பதினாறு கருமத்தொன்று, 3. தற் சிறப்புப்பாயிரம்.

நாந்திகந்துரு—மரமஞ்சள்.
நாபம்—நாபி.
நாபி—ஒருவிடமூலிகை; அது: வற்சநாபி, பச்சைநாபி, வசம்பு, அந்தணநாபி, பிரமநாபி, சத்திரியநாபி, அரசநாபி, வைசியநாபி, சூத்திரநாபி எனப் பல வகைப்படும், 2. கொப்பூழ்.
நாப்பண் — நடு, 2. தேர்நடு, 3. யாழி னுறுப்பு.
நாப்பு—பரிகாசம்.
நாமகள்—சரச்சுவதி.
நாமசங்கிதை — சிற்பநூன் முப்பத்தி ரண்டினொன்று.
நாமடந்தை—சரச்சுவதி.
நாமதேயம்—பெயர்.
நாமமிடுதல்—(தொ. பெ) நாமக்குறியிட் டுதல், 2. பெயர்கொடுத்தல்.
நாமம்—பெயர், 2. திருநாமம், 3. நிறை கோலின்நடு, 4. அச்சம், 5. கீர்த்தி, 6. தும்பைப்பூடு.
நாமவந்தம் — நெரிஞ்சில், (ஒரு முட் பூண்டு.)
நாமவெகுண்டம் — } தும்பைப்பூடு.
நாமவைகுண்டம் — }
நாமுடி—நாதுனி.
நாமோச்சாரணம்—நாமவுச்சரிப்பு.
நாம்—அச்சம், 2. பால்பகாவுயர்திணைத் தன்மைப்பன்மை.
நாம்பல்—இளைத்தமிருகம், 2.இளைத்தல்.
நாயகச்சி—நாயகத்தி.
நாயகத்தி—தலைவி.
நாயகம்—ஆளுகை, 2. தலைமை, 3. மாலையின் பிரதானமணி.
நாயகன் — அரசன், 2. எப்பொருட்கு மிறைவன், 3. சிவன், 4. கணவன், 5. பாளயக்காரன்.
நாயகி — எசமாட்டி, 2. பெருமையிற் சிறந்தவள், 3. மனைவி.
நாயரஞ்சி—நாயுருவிச்செடி.
நாயனார்—தந்தையர், 2. நாதனார்.
நாயன்—எசமான், (ஆண்டான்), 2. கடவுள், 3. பெருமையிற் சிறந்தோன்.
நாயன்மார்—ஆண்டவர், 2. தலைவர், 3. பெருமையிற் சிறந்தோர்.
நாயில்—ஞாயில், (மதிலுறுப்பு.)
நாயிறு—சூரியன், 2. ஓர்கிழமை.
நாயிறுவணங்கி—கொழிஞ்சிமரம்.
நாயுருவி — ஒரு செடி; அது: செந்நாயுருவி, வெண்ணாயுருவியென இருவகைப்படும்.
நாய்—ஞமலி, 2. சூதாடுகருவி, 3. தென்மேற்றிசைப்பாலன் குறி.
நாய்கர்—செட்டிகள்.
நாய்க்கடுகு—நாய்வேளைப்பூடு.
நாய்க்கரந்தை—குன்றிக்கொடி.
நாய்ச்சிமார் -நாய்ச்சியார்.
நாய்ச்சியார்—எசமாட்டிகள்.
நாய்ச்சீரகம்—ஓர் சீரகம்.
நாய்த்தயிர்வேளை—ஒரு செடி.
நாய்த்துளசி—ஓர் துளசிச்செடி, 2. கஞ்சாங்கோரைப்பூண்டு.
நாய்நாக்கி— } இலைக்கள்ளி மரம்.
நாய்நாக்கு— }
நாய்ப்பயறு—ஒரு பூடு.
நாய்ப்புடுக்கன்—ஒரு மரம்.
நாய்ப்புடோல்—ஒரு கொடி.
நாய்வேளை—ஒரு பூடு.
நாரகர்—நரகத்தில் விழுகிறவர்கள்.
நாரங்கம்—நாரத்தை.
நாரசிங்கம் — அட்டாதச வுபபுராணத் தொன்று, 2. உபநிடத முப்பத்திரண்டினொன்று, 3. நாரசிங்கம் அஃது திருமாலவதாரத்தொன்று.
நாரசிங்கன்—மகாவிஷ்ணு.
நாரசிம்மம் — காமிகத்தின் மூவகைப் பேதங்களினொன்று, 2. சர்வோத்தமென்னு மாகமம், 3. நரசிங்கம்.
நாரணவன்—ஓர்கிருமி, 2. மாட்டுநோயிலொன்று.
நாரணன்—மகாவிஷ்ணு.
நாரணி—துர்க்கை.
நாரதம்—பதினெண் புராணத்தொன்று, 2. முகில்.
நாரதன்—ஒருதேவவிருடி; இவர்: பஞ்சபாரதீயம் என்னுமிசைத் தமிழ்நூலாசிரியர், 2. கலகஞ்செய்வோன்.
நாரதீயம்—அட்டாதச வுபபுராணத்தொன்று, 2.பதினெண்புராணத்தொன்று.

நாரத்தம்—சடாமாஞ்சி, (ஒரு மருந்து), 2. வசம்பு, (ஓர் மருந்து.)
நாரத்தம்புல்—ஒரு புல்.
நாரத்தை—நாரந்தம்.
நாரம்—அன்பு, 2. நீர், 3. பாசி, 4. நாரத்தை.
நாராங்கி—கதவுறு தாழ்ப்பாள்.
நாராசம்—சலாகை, 2. ஓரம்பு, 3. இருப்பாணி, 4. எழுத்தாணி.
நாராயணகவுளம்—ஒரு பண்.
நாராயணப்பிரியன்—சிவன்.
நாராயணம்—உபநிடதங்களி லொன்று, 2. அரசமரம், 3. மீன்.
நாராயணன் — மகாவிஷ்ணு, 2. இந்திரன்.
நாராயணி—இலக்குமி, 2. துர்க்கை, 3. கங்கை, 4. சத்தமாதரி லொருத்தி, 5. ஓரிராகம்.
நாரி — பன்னாடை, 2. நாணி, 3. யாழ் நரம்பு, 4. வாசனை, 5. இடை.
நாரி—பெண், 2. பார்வதி.
நாரிகேளம் — தென்னமரம், 2. தேங்காய்.
நாரிபாகன்—சிவன்.
நாரியங்கம்—தேன்றொடை.
நாரை—ஓர் நீர்ப்பறவை.
நார்—அன்பு, 2. கயிறு, 3. கல்நார், 4. தும்பு, 5. பன்னாடை, 6. பனைமட்டை முதலியவற்றின் வெளிப்பக்கத்தைப் போர்த்திருக்குங் கடினமான தோல்.
நார்ச்சீலை — மரவுரியாகிய ஆடை, 2. வலைக்கோணி.
நால — (வி) தொங்க, 2. இறங்க, 3. தனிவிழ.
நாலடி— } ஒருநூல்; இது: பதினெண் கீழ்க்கணக்குனுள்
நாலடியார்— } முதலாவது சைனமுனிவர்களா லியற்றப்பட்டது.
நாலா—வாய்க்கால்.
நாலாம்வருணம்— } [illegible]த்தசாதி, சது
நாலாம்வருணர்— } [illegible]த்தவருணம்.
நாலாயிரப்பிரபந்தம்—ஆழ்வார்கள் பாடிய திவ்வியப்பிரபந்தம்.

நாலி—கார்த்திகைப்பூ, 2. முத்து.
நாலிகம் — எருமை, 2. காகம், 3. தாமரை.
நாலிகை—மூங்கில்.
நாலு—நான்கு.
நாவலங்கள்ளி—இலைக்கள்ளி மரம்.
நால்—நான்கு.
நால்வகைச்சாந்து — கலவை, பீதம், புலி, வட்டிகை யென்பன.
நால்வகைச்சொல்—பெயர், வினை, இடை, உரியென்பன.
நால்வகைச்சேனை—யானை, தேர், பரி, காலாள்.
நால்வகைத்தோற்றம்—நான்குவகைப் பிறப்பு; அவை: அண்டசம், சுவேதசம், உற்பிச்சம், சராயுசம் என்பன.
நால்வகைப்பொருள் — அறம், பொருள், இன்பம், வீடு என்பன.
நால்வகையரண் — மலை, காடு, மதில், நீர்.
நால்வகையாழ்—பேரியாழ், மகரயாழ், சகோடயாழ், செங்கோட்டியாழ், என்பன.
நால்வகையுபாயம்—சாமம், பேதம், தானம், தண்டம்.
நால்வகையூறுபாடு — குத்தல், வெட்டல், எய்தல், எறிதல்.
நால்வர் — திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார், திருநாவுக்கரசுநாயனார், சுந்தரமூர்த்திநாயனார், மாணிக்கவாசக சுவாமிகள் என்பவர், 2. நான்குபேர்
நால்வாய்—யானை.
நால்விதப்பண்—பாலை, குறிஞ்சி, மருதம், செவ்வழி.
நால்விதப்புண்ணியம்—தானம், கல்வி, தவம், ஒழுக்கம்.
நால்வேதம்—தைத்திரியம், பௌடியம், தலவகாரம், சாமவேதம்.
நாவடக்கம்—மௌனம்.
நாவணம்—உண்ணு.
நாவரசர் — சிவதொண்டர் அறுபத்துமூவரி லொருவரான திருநாவுக்கரசநாயனார், 2. புலவர்,

நாவரட்சி—நீர்த்தாகம்.
நாவரணை—நாப்புற்றாகிய ஒரு வியாதி.
நாவரவளை—நாவரணை.
நாவரையர்—திருநாவுக்கரசுநாயனார்.
நாவலந்தீவு—சத்ததீவினொன்று.
நாவலர்—கற்றவர், (புலவர்.)
நாவல்—இரகசக்குறிப்பு, 2. ஒரு மரம்; அது: குழிநாவல், சிறுநாவல், சம்புநாவல், கிழநாவல், பெருநாவல் எனப் பலவகைபடும்.
நாவழி—நாக்கு வழிக்குங் கருவி.
நாவாய்—மரக்கலம், 2. இரேவதிநாள்.
நாவாள்—சரச்சுவதி.
நாவி—ஊமத்தை, (ஒரு செடி), 2. ஒரு மருந்து. 3. ஒருவகை மரக்கலம், 4. கத்தூரி, 5. கத்தூரி மிருகம்.
நாவிகன்—கப்பற்காரன்.
நாவிதச்சி—அம்பட்டத்தி.
நாவிதர்—அம்பட்டர்.
நாவிதன்—கார்த்திகைநாள், 2 நாய்கர் மகளிர் பார்ப்பாரைக் கரவிற்கூடிப் பெற்றபிள்ளை, 3. பூராநாள்.
நாவித்தண்டை—எருமுட்டைப் பீநாறிப்பூண்டு.
நாவிநெய்—மயிர்ச்சாந்து.
நாவிப்பிள்ளை—ஒரு மிருகம்.
நாவியம்—கார்த்திகைப்பூ.
நாவு—நாக்கு.
நாவுதல்—(தொ. பெ) நேம்புதல்.
நாவுரி—நாழியும் உரியும். [நாடுரியென்பது, இக்காலத்து நாவுரியென மரீஇயிற்று.]
நாவுழலை—விடாய்.
நாவூறு—நாவேறு.
நாவேறு—நாத்தோடம்.
நாவை—கலப்பையினா, 2. படைவாள்.
நாழி — அம்பறாத்தூணி, 2. உட்டுளைப் பொருள், 3. ஒருபடி, 4. நாழிகை, 5. நானாழி, 6. பூரட்டாதிநாள்.
நாழிகை — நாடா, 2. விநாடி யறுபது கொண்ட காலம்.
நாழிகைவட்டம்— } காலவளவைக்காட்டுமோர் சூத்திரம்.
நாழிகைவட்டில்— }

நாளகம்—இலாமிச்சம்புல்.
நாளம்—உட்டுளை, 2. காம்பு.
நாளரம்—இலாமிச்சம்புல்.
நாளாய்ந்தோர்—வைத்தியர்.
நாளி—கள், 2. நாய்.
நாளிகம்—தாமரை, 2. வள்ளிக்கீரை, 3. வள்ளிக்கொடி.
நாளிகேரம்— } தென்னமரம்.
நாளிகேளம்— }
நாளினி—புளிமாமரம்.
நாளும்—எப்பொழுதும்.
நாளை—மற்றைநாள்.
நாளோலை — சாதகம், 2. முகூர்த்த வோலை.
நாள்—ஓரிரவும் பகலுங்கொண்டதினம், 2. காலம்.
நாறல்—(தொ. பெ) நாறுதல்.
நாறனா—சடைச்சிச்செடி.
நாறி — நன்னாரி, (ஒரு பாற்கொடி), 2. கற்றாழை, (ஓர் செடி.)
நாறு—நாற்று.
நாறுசட்டி—பெருங்காயம்.
நாறுதல் — (தொ. பெ) தோற்றுதல், 2. மணத்தல், 3. முளைத்தல்.
நாற்கணம்—உயிர்க்கணம், வன்கணம், மென்கணம், இடைக்கணம் என்பன.
நாற்கதி — தேவர், நரகர், மனிதர், விலங்கு என்பன.
நாற்கவி—நாலுவிதக்கவி; அவை: ஆசு, சித்திரம், மதுரம், வித்தாரம் என்பன.
நாற்கவிராசநம்பி—புளியங்குடியில் நாற்கவிகளையும் பாடவல்லராகிய அகப்பொருளிலக்கணம் பாடிய ஒரு சமணப் புலவர்.
நாற்குணம் — ஆடூஉக்குணம் நான்கு; அவை: அறிவு, ஓர்ப்பு, கடைப்பிடி, நிறைவு என்பன.
நாற்கோணம்—நாலுமூலை.
நாற்சந்தி—நாலுதெருக்கூடுமிடம்.
நாற்பான்—நாற்பது.
நாற்பொருள் — அறம், பொருள், இன்பம், வீடு எனப்படும் பொருள்கள்.

நாற்றம்—தூர்க்கந்தம், 2. நற்கந்தம், 3. கள், 4. தோன்றுதல்.

நாற்றிசை — நான்குதிக்குகள்; அவை: கிழக்கு, தெற்கு, வடக்கு, மேற்கு என்பன.

நாற்று—முளைத்தபயிர்.

நாணம் — வாசனை, 2. கஸ்தூரி, 3. கஸ்தூரி மிருகம், 4. கவரிமா.

நானம்—குளித்தல், 2. முழுகுநீர்.

நானு—பல.

நானிலம் — நால்வகை நிலம்; அவை: குறிஞ்சி, நெய்தல், மருதம், முல்லை.

நான்—யான்.

நான்கு—நாலு.

நான்மாடக்கூடல்—மதுரை.

நான்முகப்புல்—ஒரு புல்.

நான்முகன்—அருகன், 2. பிரமன்.

நான்முகன்றேவி—சரச்சுவதி, 2. மனோசிலை, (ஒரு மருந்து விளைவுப்பாடாண முப்பத்திரண்டினொன்றென்பர்.)

## நி

நி — இன்மை, அதிகம், சமீபம், நிச்சயம், வன்மை, விருப்பம் இவைகளைக் காட்டும் ஓர் உபசர்க்கம்.

நிகடம்—சமீபம்.

நிகண்டு—சொற்பயன் விளக்கும் நூல்.

நிகமம் — வேதம், 2. கடைவீதி, 3. நகரம்.

நிகர—ஒருவமச்சொல்.

நிகரம் — கூட்டம், 2. நி என்னு மெழுத்து.

நிகருவம்— } அடக்கம்.
நிகர்வம்— }

நிகர்—உவமை, 2. பிரகாசம், 3. சமானம்.

நிகர்க்க — (வி) உவமிக்க, 2. போர்செய்ய.

நி[illegible]—ஒப்பு, 2. போர்.

[illegible]—தோன்றுமேல்.

[illegible] (வி) நட[illegible] 2. நிறைவேற, 3. [illegible], 4. [illegible]க்க.

[illegible]மானகாலம்.

[illegible] 2. சம்பவம்.

நிகழ்த்த—(வி) நடப்பிக்க, 2. சொல்ல.

நிகழ்வு—சம்பவிப்பு, 2. நிகழ்காலம்.

நிகளம்—சங்கிலி, 2. விலங்கு.

நிகற்பம்—ஓரெண்; அது: கற்பம் பத்து.

நிகா—குறிப்பு.

நிகாசம்—உவமை.

நிகாதம்—வஞ்சனை.

நிகாயம் — கூட்டம், 2. மருதஞ்சார்ந்தவூர், 3. வீடு.

நிகாரணம்—கொலை.

நிகாரம்—பனி.

நிகிதம்—படை.

நிகிலம்—எல்லாம்.

நிகுஞ்சம்—புதர்வீடு, 2. மலைக்குகை.

நிகும்பம்—நேர்வாளக்கொட்டை.

நிகும்பலை—இந்திரசித்து யாகஞ்செய்தவிடம்.

நிகேதனம் — வீடு, 2. தேவர்கோயில், 3. மருதநிலத்தூர்.

நிக்கிரகம் — நாசம், 2. கட்டுப்பாடு, 3. தண்டனை, 4. தோல்வி.

நிக்கிரகானுக்கிரம்—தண்டனையு மிரக்கமும், 2. இன்பதுன்பங்களூட்டல்.

நிசம்—நிச்சயம், 2. உண்மை, 3. நாணயம்.

நிசா—இரவு.

நிசாகசம்—வெள்ளாம்பற்கொடி.

நிசாகம்—மஞ்சள்.

நிசாகரன்—சந்திரன்.

நிசாசரர்—அசுரர், 2. இராக்கதர்.

நிசாசரி—கூகை.

நிசாடு—மஞ்சள்.

நிசாந்தம்—விடியற்காலம், 2. வீடு.

நிசாரணம்—கொலை.

நிசாரம்—சாரமில்லாதது, 2. வருத்தம்.

நிசார்— } ஓர்விதக் காற்சட்டை.
நிசாறு— }

நிசார்த்தம்—பாதிராத்திரி, 2. மெய்.

நிசானம்—ஓர் கட்பறை.

நிசான்—கொடி.

நிசி—இருள், 2. மஞ்சள், 3. பொன்.

நிசிதம்—இகழ்ச்சி, 2. கூர்மை.

நிசுவாசம்-சிவாகம மிருபத்தெட்டினொன்று, 2. வெளிக்குவிடும் சுவாசம்.

நிசுனம்—நீர்க்கடம்பமரம்.
நிசை—இரவு.
நிச்சம்—நித்தம்.
நிச்சயம்—உறுதி, 2. தீர்ப்பு, 3. நியமம்.
நிச்சயிக்க-(வி) உறுதிப்படுத்த, 2. தீர்மானிக்க.
நிச்சயிப்பு—உறுதிப்பாடு, 2. தீர்ப்பு.
நிச்சலம்—அசைவின்மை.
நிச்சலும்—எப்பொழுதும்.
நிச்சிதார்த்தம்—மணம் நடக்கவேண்டுமென்ன உறுதிபண்ணிக்கொள்ளுதல்.
நிச்சித்தம்—மனோலயம்.
நிச்சிந்தன்—கடவுள், 2. அருகன்.
நிச்சிந்தை—நினைவற்றிருக்கை.
நிச்சியம்—வெள்ளுள்ளி.
நிச்சுவாசம்—சுவாசம் விடுதல்.
நிஷதம்— } நிடதம்— } ஓர் மலை, 2. ஓர் தேயம்.
நிஷாணி—கையொப்பம்.
நிஷித்தம்—இகழ்ச்சி, 2. தவறு.
நிஷேதம்— } நிடேதம்— } விலக்கு, 2. ஒழிவு.
நிஷ்கம்— } நிட்கம்— } பொன்னிறை, 2. பொன்.
நிஷ்கருஷம்— } நிட்கருடம்— } நிஷ்கருஷை— } நிட்கருடை— } நிச்சயம்.
நிஷ்களங்கம்— } நிட்களங்கம்— } சுத்தம்.
நிஷ்கலம்— } நிட்களம்— } உருவின்மை.
நிஷ்காமியம்— } நிட்காமியம்— } விருப்பமின்மை.
நிஸ்காரம்—நிந்தை.
நிக்ஷேபம்— } நிட்சேபம்— } புதைபொருள்.
நிஷ்டூரம்— } நிட்டூரம்— } கொடுமை, 2. இடையூறு.
நிஷ்டை— } நிட்டை— } தியானம், 2. அசையாமை.
நிஷ்பலம்— } நிட்பலம்— } பயனின்மை.
நிஷேதனம்—கொலை.

நிணக்க-(வி) கொழுக்க, 2. முடைய.
நிணம்—கொழுப்பு.
நிணறு—உருக்கம்.
நிண்ட-(வி) கிண்ட.
நிர்ணயம்—நிச்சயம்.
நிதம்—நித்தியம்.
நிதம்பம்—மலைப்பக்கம், 2. அல்குல்.
நிதரிசனம்—திருஷ்டாந்தம்.
நிதலம்—கீழேழுலகத்தொன்று.
நிதனம்—அழிவு.
நிதார்த்தம்—நிச்சயம், 2. நீதி, 3. உண்மை.
நிதானம் – நிச்சயம், 2. நேர்மை, 3. தீர்மானம், 4. சமம், 5. பிரமாணம், 6. உத்தேசம், 7. மதிப்பு, 8. நோக்கம், 9. ஆதிகாரணம், 10. பொன், 11 படை.
நிதானவன்—நேரானி.
நிதானிக்க-(வி) நிச்சயிக்க, 2. உத்தேசிக்க, 3. அனுமானிக்க.
நிதி—பொக்கசம், 2. நிறைவு, 3. பொன், 4. ஆபரணத்திறவுங்கணி.
நிதியம்—திரவியம், 2, கடவுள்மணி.
நித்தம்—அனவரதம், 2. நித்தியாக்கினி.
நித்தன்— } நித்தியன்— } கடவுள்.
நித்தியகருமம் – நித்தியவிதி, 2. நித்தியபூசை.
நித்தியநைமித்திகம்—பூசனையும் விழாவும்.
நித்தியப்படி—நாடோறும்.
நித்தியபோகம்—குறையாச் சம்பத்து.
நித்தியவிதி—ஓமகுண்டம்.
நித்தியானந்தன்—கடவுள்.
நித்திரை—உறக்கம்.
நித்திலம்—முத்து.
நிநதம்— } நிநாதம்— } ஒலி.
நிந்தகன்—பழி சொல்வோன்.
நிந்தனை—நிந்தை.
நிந்தாஸ்துதி – இகழ்தல்போற்றுதல்.
நிந்திகம் – கண்டங்[illegible] தசமூலத்தொன்று.

நிந்திக்க-(வி) இகழ.
நிந்தை-தூஷணை.
நிபத்தி-உண்மை.
நிபந்தம்-கடமை.
நிபந்தனம்-கட்டு.
நிபந்தனை-ஏற்பாடு, 2. கட்டுப்பாடு, 3. தண்டனை.
நிபம் - உவமை, 2. காரணம், 3. வஞ்சனை.
நிபாதம் - இறங்குதல், 2. விழுதல், 3. விடுகை.
நிபிடம்- நெருக்கம், 2. மிருதி.
நிபுணத்துவம்-சாமர்த்தியம்.
நிபுணன்-அறிஞன், 2. மிகவல்லோன், 3. புதன்.
நிப்பரம்-பாரமின்மை, 2. அசைவின்மை.
நிமலம்-அழுக்கின்மை.
நிமலன்-கடவுள், 2. சித்தன்.
நிமாசு-துருக்கர் தொழுகை.
நிமி-சூரியகுலத்தரசரி லொருவன்.
நிமிடம்- } காலநுட்பம்.
நிமிஷம்- }
நிமிண்டுதல்-(தொ. பெ) கிள்ளல்.
நிமித்தக்காரர் - வருங்காரியஞ் சொல்வோர்.
நிமித்தசூடாமணி-ஓர் சகுனநூல்.
நிமித்திகன்-புரோகிதன், 2. குறிசொல்வோன்
நிமித்தியம்-சகுனம், 2. காரணம்.
நிமிர்ச்சி-உயர்ச்சி, 2. நிமிர்வு, 3. நீட்சி.
நிமிர்தல் - (தொ. பெ) உயர்தல், 2. ஓடல், 3. நீளல், 4. வளர்தல.
நிமிர்த்தல்-(தொ. பெ) நிமிர்த்துதல்.
நிமிர்த்துதல்-(தொ. பெ) உயர்த்துதல், 2. நீட்டல், 3. பிரித்தல்.
நிமிர்ப்பு-நிமிர்ச்சி.
நிமிளை-அம்பரை.
நிமீலனம்-கண்ணிமைப்பு, 2. மரணம்.
நிமை-இமை.
நிம்பத்தாரோன்-பாண்டியன்.
நிம்பம்-வேப்பமரம்.
நிம்மந்தம்-இச்சையின்மை.
நியக்குரோதம்-ஆலமரம்.
நியதம்-இன்றியமையாமை.
நியதி-செய்கடன், 2. ஏற்பாடு, 3. ஊழ், 4. முறைமை.
நியமம்-செய்கடன், 2. முறைமை, 3. நிச்சயம், 4. தெரு, 5. கடைவீதி, 6. யோகத்தொன்று, 7. கோயில், 8. இடம், 9. தீர்மானம்; 10. நித்தியகருமம், 11. கோட்பாடு, 12. வழக்கம்.
நியமனம்-கட்டளை.
நியமிக்க - (வி) ஏற்படுத்த, 2. தீர்மானிக்க, 3. சங்கற்பஞ்செய்ய; 4. பிறப்பிக்க, 5. நிலைப்படுத்த.
நியமிதம்-நியமனம் பெற்றது.
நியர்ப்புதம்-பதினாயிரங்கோடி.
நியாசம்-வைப்பு, 2. நிம்பமரம்.
நியாயக்கேடு-நியாயமின்மை.
நியாயதுரந்தரன் - நியாயம் பேசுவோன.
நியாயம்-நீதி, 2. இடம், 3. நடு, 4. வாக்குவாதம், 5. நன்னெறி, 6. வழக்கு, 7. ஆதாரம், 8. தருக்கம், 9. கட்டுப்பாடு, 10. போக்கு.
நியுதம்-நூறாயிரம்.
நியோகம்-கட்டளை.
நியோகித்தல்-(தொ. பெ) ஏவுதல்.
நிரக்க-(வி) நெருங்க, 2. பரவ, 3. கலக்க.
நிரக்கு- } சாமானிலை.
நெரக்கு- }
நிரங்குசம்-கட்டுப்படாமை.
நிரஞ்சனம்-அழுக்கின்மை.
நிரஞ்சனன்-கடவுள்.
நிரஞ்சனி-பார்வதி.
நிரட்சம்- } பூகோள சமரேகை.
நிரக்ஷம்- }
நிரட்சரேகை- }
நிரந்தம்-நெருக்கிடை.
நிரந்தரம்-எப்பொழுதும்.
நிரந்தரன்-கடவுள்.
நிரப்ப-(வி) நிறைக்க, 2. பரப்ப, 3. பூர்த்திசெய்ய.
நிரப்பம்-பூரணம்.
நிரப்பு - வறுமை, 2. குன்றவு, 3. சோம்பு.

நிரம்ப—(வி) நிறைய, 2. பொலிய, 3. பருவமடைய, 4. முற்ற.
நிரயம்—நரகம்.
நிரல்—ஒழுங்கு.
நிரவ — (வி) சமனுக்க, 2. குறைதீர்க்க, 3. சரிப்படுத்த.
நிரவம்—தொனியின்மை.
நிராகரணம்— } மறுத்தல்.
நிராகரிப்பு— }
நிராகாரம்—மறுப்பு.
நிராகிருதம்—தள்ளுண்டது.
நிரியாணம் — யானைக்கடைக்கண், 2. பிறவிநீங்கல்.
நிரீட்சணம்—பார்வை.
நிருதன்—இராக்கதன்.
நிருதி — தென்மேற்றிசைப் பாலன், 2. முதலெழுவள்ளலி லொருவன்.
நிருபம்—கட்டளை.
நிருபன்—அரசன்.
நிருமலன்—அருகன், 2. சிவன், 3. மலத்துடக்கற்றவன்.
நிருமித்தல்—(தொ. பெ) ஆராய்தல், 2. உண்டாக்குதல்.
நிருவகித்தல்—(தொ பெ) தாங்குதல், நிலைப்படுத்தல்.
நிருவாணம்—இருக்குவேத உபநிடதங்களுளொன்று, 2. உடையின்மை, 3. பிறப்பொழிபு.
நிருவாணி — உடையிலான், 2. சிவன், 3. அருகன்.
நிரூபணம்—ஆராய்கை.
நிரை—ஒழுங்கு, 2 வரிசை, 3. படைவகுப்பு, 4. பசு, 5. பசுக்கூட்டம், 6. நிரையசை.
நிரைச்சல்—மறைப்பு, 2. ஓர் விளையாட்டு, 3. இரவல்.
நிரையம்—நரகம்.
நிரோட்டம்— } மிறைக்கவியிலொன்
நிரோஷ்டம்— } று: அது: இதழ் முயற்சியாற் பிறக்குமுயிரும் மெய்யும் உயிர்மெய்யுமின்றிவரப் பாடப்படுவது.
நிரோதம்—ஆணவமலம்.
நிர் — உறுதிப்பொருளையு நீக்கப்பொருளையுந் தருமோருபசருக்கம், அஃது நிரு என்றும் நிர் என்றும் வழங்கும்
நிர்க்குணன்—கடவுள்.
நிர்க்குண்டி—வெண்ணொச்சிச் செடி.
நிர்ணயம்— } நிச்சயம், 2. ஆராய்வு,
நிருணயம்— } 3. தீர்ப்பு.
நிர்த்தாட்சிணியம்—கண்ணோட்டமின்மை.
நிர்த்தூளி—சருவநாசம்.
நிர்ப்பந்தம்—தொந்தரை
நிர்ப்புதம்—ஒரெண.
நிர்மாணம்—செய்கை.
நிர்மாலியம்—பூசித்துக்கழித்தபொருள்
நிர்வாகம்—நிருவாகம்.
நிர்விகற்பம்—வேறுபாடின்மை.
நிலக்கடம்பு—ஒருபூடு.
நிலக்கடலை—வேர்க்கடலை.
நிலக்கணம்—மூன்றுநிரையசை யடுத்துவருஞ்சொல்.
நிலக்காரை—ஒரு முட்செடி.
நிலக்குமிழ்—ஒரு செடி.
நிலக்கூந்தல்—எலிச்செவிப்பூடு.
நிலப்பனை — ஒரு பூடு, (நிலப்பனைக்கிழங்கு,)
நிலப்பாகல்— }
நிலப்பாலை— } ஒருபூடு.
நிலப்பாலை— }
நிலப்பாவாடை—நிலத்திலடக்க விரிக்கும் புடவை.
நிலப்பொட்டு—மண்ணைத் தேய்த்திடுந்திலதம், 2. ஒருவகைக் காளான்.
நிலம்பி—கொசுகு.
நிலயம்— } பூமி, 2. இடம், 3. பிரதானஸ்தானம், 4. நிலை,
நிலையம்— } 5. கோயில், 6. மருதநிலத்தூர், 7 இலக்கு, 8. படி, 9. இல், 10. கூத்து
நிலவ— } (வி) பிரகாசிக்க, 2. வழங்க.
நிலாவ— }
நிலவடலி—சிறுபனைமரம்.
நிலவு— } ஒளி, 2. சந்திரிகை, 3. சந்
நிலா— } திரன்.
நிலாக்கொழுந்து—இளம்பிறை.
நிலாமணி—சந்திரகாந்தம். மணி—கல்.

நிலாமுகி— } சகோரம், (சக்கர
நிலாமுகிப்புள்— } வாகப்புள்.)
நிலாமுற்றம் — நிலாக்காலத் துலாவச் செய்யும் வீட்டின் வெளி.
நிலாவிரை—ஓராவிரை.
நிலுவை—இறுத்துமிஞ்சினதொகை.
நிலை—குணம், 2 தேர்த்தட்டு, 3. கதவு நிலை, 4. இல்லிடம், 5. தொழில், 6. சரியைமுதலியன, 7. உறுதி, 8. மதம், 9. வைதீகநிலை, 10. கிரகநிலை, 11. முறைமை, 12. ஆதனம், 13. ஆபரணத்திற்றொங்கணி, 14. வசிக்குமிடம், 15. இடம், 16. பூமி, 17. காலம், 18. தாண்டுதுறை.
நிலைகலங்குதல் — (தொ. பெ) தடுமாறல்.
நிலைகுலைதல்—(தொ. பெ) நிலைகெடுதல்.
நிலைக்கடகம்—பெருங்கூடை.
நிலைக்கல்—ஆட்டுக்கல்.
நிலைக்களம்—இருப்பிடம்.
நிலைக்கால்—வாசற்கால்.
நிலைக்குடி—பழங்குடி.
நிலைபரம்—உறுதி.
நிலைப்பாடு—உறுதிப்பாடு.
நிலைமை—குணம், 2. தன்மை, 3. நிலைவரம், 4. உண்மை, 5. பூஸ்திதி, 6. உறுதி.
நிலையங்கி—உடன்முற்று மூடுகிற சட்டை.
நில்லாமை — அநித்தியம், 2. உறுதிப்படாமை.
நிவகம்—கூட்டம்.
நிவக்க—(வி) உயர.
நிவர்த்தித்தல்—(தொ. பெ) விட்டு நீங்குதல்.
நிவறல்— } (தொ. பெ) பொடியா
நிவறுதல்— } தல், 2. மொய்த்தல்.
நிவாசம்—இருப்பிடம்.
நிவாதகவசர்—தோயமாபுரத்தசுரர்.
நிவாரணம்—நீங்குகை, 2. ஒழிப்பு.
நிவாரம்—தடை.
நிவிர்ததானம்—நவதானத்தொன்று.
நிவிர்த்தன்—துறவி.
நிவிர்த்தி—பிராயச்சித்தம், 2. ஒழிப்பு, 3. துறவு.
நிவிர்த்திக்க—(வி) விலக்க.
நிவேசம்—மாளிகை, 2. பிரவேசம்.
நிவேசனம் — வீடு, 2. ஊர்.
நிவேதனம்—ஒப்புவிக்கை, 2. நைவேத்தியம், 3. சொல்லுகை.
நிவேதிக்க—(வி) நைவேத்தியஞ்செய்ய.
நிவேத்தியம்—நைவேத்தியம்.
நிழலல்—(தொ. பெ) நிழலுதல்.
நிழலி—காற்று.
நிழலுதல்—(தொ. பெ) நிழல் செய்தல்.
நிழல் — சாயை, 2. விம்பம், 3. முன்னடையாளம், 4. வெறுந்தோற்றம், 5. தஞ்சம், 6. குளிர்ச்சி, 7. அருள், 8. செல்வம், 9. ஒளி, 10. நோய், 11. நீதி.
நிழற்ற—(வி) நிழல்செய்ய, 2. துணையாக, 3. ஆதரிக்க.
நிறக்க—(வி) நிறமாக, 2. நிறம்பிடிக்க, 3. சீர்ப்பட.
நிறம் — வருணம், 2. உடம்பின்மேனி, 3. சாயம், 4. ஒளி, 5. குணம், 6. மார்பு.
நிறுக்க—(வி) தூக்க.
நிறுதிட்டம்—நேரநிற்கை, 2. நெறிப்பு.
நிறுத்த—(வி) நிற்கச்செய்ய, 2. தடுக்க, 3. தாமதப்படுத்த, 4. முடியச்செய்ய, 5. பரிபாலிக்க, 6. பலிப்பிக்க, 7. தள்ளிவைக்க, 8. சீர்திருத்த, 9. வைக்க, 10. ஸ்தாபிக்க, 11. நியமிக்க, 12 நன்னெறியில் நிறுத்த, 13. மனதைநிறுத்த, 14. உத்தியோகத்தில் வைக்க, 15. ஒப்புவிக்க.
நிறுத்தம்—நிறுத்திவாசிக்கை.
நிறுப்பான் — துலா, 2. துலாராசி, 3. நிறுக்கிறவன்.
நிறுப்பு—நிறுத்துகை, 2. ஸ்தாபிப்பு, 3. வைப்பு, 4. தாமதிப்பு, 5. பரிபாலிக்கை.
நிறுவ—(வி) செங்குத்தாய்நிறுத்த, 2. நாட்ட, 3. வைக்க.
நிறுவாணம்—நிருவாணம்.

நிறை—தராசு, 2. பாரம், 3. துலாராசி, 4. நூறுபலம், 5. மிகுதி, 6. நிறைவு, 7. சீர்ச்சால், 8. மாட்சிமை, 9. அழிவின்மை, 10. முறையினிலைமை, 11. நிறுத்துகை, 12. வரையறை, 13. தைரியம், 14. மனவுறுதி, 15. நீதி, 16. கற்பு.
நிறைகலை — பூரணமிசம், 2. பூரணதேயசு, 3. பூரணசந்திரன், 4. முழுக்காட்சி, 5. பூரணசத்தி, 6. முழுவெறி.
நிறைக்க — (வி) நிறையச்செய்ய, 2 மிகுதியாக்க, 3. திணிக்க, 4. பரவச்செய்ய.
நிறைசெல்வன்—குபேரன்.
நிறைதருதூறு—சீந்திற்கொடி.
நிறைமொழியாளர்—சான்றோர்.
நிறைய — (வி) மிக, 2. பூரணப்பட, 3. பெருக, 4. திருத்தியாக, 5. பரிபூரணமாக.
நிற்காரம்— } இகழ்ச்சி.
நிஸ்காரம்— }
நிற்குணம்—குணதீதம்.
நிற்பாக்கியம்—எதுமின்மை.
நிற்புதம்—ஒரெண்.
நிற்றல்—(தொ. பெ) நிலைநிற்குதல், 2 நிற்குதல்.
நினதம்— } சத்தம்.
நினுதம்— }
நிவைதல்—(தொ. பெ) நினைக்குதல்.
நினைத்தல்—(தொ. பெ) ஆலோசித்தல், 2. தியானித்தல்.
நினைப்பு—எண்ணம், 2. ஞாபகம், 3. பாவனை, 4. நோக்கம், 5. விழிப்பு, 6. நினைப்பூட்டுங் குறிப்பு, 7. வீண்தோற்றம்.
நின் — உனது.
நின்று—ஓரசைச்சொல். (உ—ம்.) "சொல்லினின்றான்" சொன்னான் என்பது பொருள்.
நின்றுசிணுங்கி—சிறியாணங்கை, (ஒருசெடி.)
நின்றுபயனின்மை—நூற்குற்றம் பத்தினொன்று.

# நீ

நீகம்—தவளை, 2. மேகம்.
நீகாசம்—உவமை.
நீகாமன்— } மாலுமி.
நீகான்— }
நீகாரம்—பனி.
நீக்கம்—நீங்குகை, 2. பிளப்பு, 3. நீளம்.
நீக்கல்—(தொ. பெ) அகற்றல், 2. கோல்லல், 3. மாற்றல், 4. தள்ளல்.
நீக்கு—விலக்கு, 2. பிளப்பு, 3. மீதி.
நீக்குப்போக்கு — இடைவெளி, 2. வழிவகை, 3. கிரியைக்கிரமம், 4. உபாயம்.
நீங்க—(வி) பிரிய, 2. சிதற, 3. மாற, 4. விலக, 5. கழிய, 6. தள்ளுண்ண, 7. நீந்த, 8. பிளவுபட, 9. அகல.
நீசகன்—கீழ்மகன்.
நீச்சல்— } நீந்துகை, 2. ஆழம், 3. மீன்கவிச்சு.
நீச்சு— }
நீஞ்சுதல்—(தொ. பெ) நீந்துதல்.
நீடாணம்— } குழம்பு.
நீட்டாணம்— }
நீடிக்க—(வி) நீள, 2. ஆயுசுநீடிக்க, 3. நிலைநிற்க.
நீடு—நெடுங்காலமட்டும்.
நீடுதல்—(தொ. பெ) நீளுதல், 2. நிலைத்திருத்தல், 3. நெடுங்காலத்திற் கிருத்தல்.
நீட்சி—நீளம், 2. விசாலம்.
நீட்சிமை—நெடுமை.
நீட்ட — (வி) நீடிக்கச்செய்ய, 2. அடித்து நீட்ட, 3. ஈய, 4. தாமதப்படுத்த.
நீட்டம்—நீளம்.
நீட்டிக்க — (வி) நெடும்பொழுதாக, 2. தாமதிக்க, 3. முடிக்க.
நீட்டு—நீளம்.
நீட்டுப்போக்கு—அகலநீளம், 2. திராணி.
நீட்பம்—நீளம்.
நீண்டவன்— } ஸ்ரீ மகாவிஷ்ணு.
நீண்டோன்— }
நீதம்—நன்னெறி, 2. நீதி.

நீதி—நியாயம், 2. தகுதி, 3. பிரமாணம், 4. நன்னெறி, 5. முறைமை, 6. உண்மை.
நீதியரன் — கடவுள், 2. நீதியுள்ள அரசன்.
நீத்தம்—வெள்ளம்.
நீத்தார்—முற்றத்துறந்த முனிவர்.
நீத்து—நீந்தல், 2. நீந்துபுனல்.
நீந்த—(வி) நீரில் நீந்த, 2. நீந்தியேற, 3. கடக்க.
நீபம் — கடம்பமரம், 2. உத்திரட்டாதி நாள்.
நீப்பு—துறவு, 2. பிரிவு.
நீமம்—ஒளி.
நீம்பல்—வெடியுப்பு.
நீர—குணத்தையுடையன.
நீரம்—தண்ணீர்.
நீரரமகளிர்—நீரில்வாழும் தெய்வப்பெண்கள்.
நீரழிவு—ஓர்நோய்.
நீராசனம்— } ஓர் ஆலாத்தி.
நீராஞ்சனம்— }
நீராம்பல்—ஆம்பற்கொடி, 2. ஓர்நோய்.
நீராவி—கேணி, 2. புகை.
நீராழி—கடல்.
நீராழிமண்டபம் — குளத்திடையே கட்டியமண்டபம்.
நீரெட்டி—ஒரு மரம்.
நீரேற்றம் — நீர்ப்பெருக்கு, 2. சலதோஷம், 3. ஓர்நோய்.
நீரோசை—மகிழ்ச்சி.
நீரோருகம்—தாமரை.
நீர்—சலம், 2. இரசம், 3. ஈரம், 4. புண்பொழிநீர், 5. மூத்திரம், 6. பூராடநாள், 7. குணம், 8. நிலை.
நீர்க்க—(வி) நீராக.
நீர்க்கமல்லி—ஒரு நீர்ப்பூண்டு, அல்லி.
நீர்க்குண்டி—வெண்ணொச்சிச்செடி.
நீர்க்குளரி—கல்லாரச்செடி.
நீர்க்குறிஞ்சா—ஒரு செடி.
நீர்க்கொழுந்து—நீர்முகம்.
நீர்க்கோத்தை—ஓர்வகைத் தண்ணீர்ப்பாம்பு.
நீர்ச்சீலை—குளிசீலை.
நீர்ச்சுனை—தீர்த்தடாகம்.
நீர்ச்சூலை—அண்டவாயு.
நீர்ச்சோறு—பழஞ்சோறு.
நீர்த்தாமரை—சலதாரை, 2. நீரோட்டம்.
நீர்த்தானம்—உதயத்திற்கு நாலாமிடம்.
நீர்த்திவலை—நீர்த்துளி.
நீர்த்தூம்பு—மதகு.
நீர்நாள்—பூராடம்.
நீர்நிலை—குளம், 2. நீரளவு.
நீர்ப்பஞ்சு—கடற்காளான்.
நீர்ப்பனை—புல்லாமணக்குஞ்செடி.
நீர்ப்பாடு—விஷூக்கிராணி, 2. நீரழிவு, 3. நீர்க்குறைவு.
நீர்ப்புடையன்—ஓர்பாம்பு.
நீர்மட்டம்—சரிமட்டம்பார்க்குங்கருவி.
நீர்மிட்டான்—தண்ணீர்மிட்டான்.
நீர்முகம்—இறங்குதுறை, 2. நீர்ப்பெருக்கின்முனை.
நீர்மை — நிலைமை, 2. குணம், 3. ஒப்புரவு.
நீர்வாரம்—குளநெல்.
நீலங்கட்டுதல்—(தொ.பெ) நீலந்தீர்தல், 2. பெரும் பொய்கூறல்.
நீலந்தர்—இராகம் பாடுவோர்.
நீலபுஷ்பம் — விஷ்ணுகரந்தைப்பூடு, 2. எட்டிமரம்.
நீலமணி — நீலரத்தினம், 2. கண்ணிற்கருமணி.
நீலமேனியன்—மகாவிஷ்ணு.
நீலம்—நீலநிறம், 2 நீலச்சாயம், 3. ஓரிரத்தினம், 4. கறுப்பு, 5. இருள், 6. கருங்குவளை, 7. விஷம், 8. காற்று, 9. பனைமரம்.
நீலன் — சனி, 2. ஓர் வானரப்படைத்தலைவன், 3. ஓரரசன், 4. கொடியன், 5. நீலியென்னும் பைசாசத்தால்கொல்லப்பட்ட ஓர் வணிகன்.
நீலாம்பரன்—பலபத்திரன்.
நீலாம்புரி—ஓரிராகம்.
நீலி—நீலிப்பூண்டு, 2. கறுப்பு, 3. காளி, 4. துர்க்கை, 5. பார்வதி, 6. மருதோன்றி மரம், 7. கொடியள், 8 பாம்பு விஷப்பல்லிலொன்று.
நீலோற்பலம்—கருங்குவளை.

நீல்—காற்று, 2. நீலம்.
நீவ-(வி) தடவ, 2. பூச, 3. உருவி விட.
நீவரம்—சலம்.
நீவாரம்—குளநெல்.
நீவான்—மீகாமன்.
நீவி—சீலை, 2 கொய்சகம்.
நீவியம்—சீலை.
நீவிர்—நீங்கள் இஃது முன்னிலைப் பன்மைப்பெயாகளிலொன்று.
நீழல்—நிழல், 2. ஒளி, 3. நோய்.
நீளம்—நெடுமை, 2. தூரம், 3. தாமதம்.
நீளி—நெடியன், 2. நெடிது.
நீளிக்க-(வி) நாட்போக, 2. நெடுநாளிருக்க, 3. நீள, 4 தாமதிக்க.
நீள்—நீளம், 2. உயர்ச்சி, 3. ஒளி.
நீறணிந்தோன்—சிவன்.
நீறு—சாம்பல், 2. திருநீறு, 3. புழுதி, 4. சுண்ணம்.
நீறுபடுதல்—(தொ. பெ) நீறுகுதல், 2. அழிதல்.
நீறுபூத்தல்—(தொ. பெ) சாம்பற்பொடித்தல்.
நீற்ற-(வி) பஞ்சலோக முதலியவற்றை நீறுக்க, 2. நீறுகக, 3. பொடி செய்ய.
நீற்றுப்பெட்டி — எண்ணெயூற்றுங் கூடை, 2. பிட்டுச்சுடும்பெட்டி.

## நு

நுகம்—நுகத்தடி.
நுகம்புரட்டி—கட்டுக்கமையாத எருது, 2. ஒழுங்கு தவறுகிறவன்.
நுகர — (வி) தின்ன, 2. விழுங்க, 3. அனுபவிக்க.
நுகர்ச்சி— நுகர்வு— } உண்கை, 2. அனுபோகம்.
நுகைய—(வி) தளர, 2. இளக, 3. நெகிழ.
நுக்க-(வி) தளரச்செய்ய, 2. பொடியாக்க.
நுக்காங்குலை—காய்விழுந்த பனங்குலை.
நுக்கு—எட்டிமரம்.
நுங்க-(வி) விழுங்க.
நுங்கு—பனையிளங்காய்க் குள்ளிருக்கும் கொட்டை, 2. பனையிளங்காய்.
நுங்கை—உடன்றங்கை.
நுசுப்பு—இடை.
நுடக்கம்—நுட்பம், 2. தள்ளாட்டம், 3. முடக்கம்.
நுடக்குதல்—(தொ. பெ) மாய்த்தல்.
நுடங்க — (வி) தள்ளாட, 2. முடங்க, 3. துவள, 4. நுட்பமாக.
நுட்பம் — நுண்மை, 2. சொற்பம், 3. சூட்சம், 4. ஓரலங்காரம் அஃது குறிப்பாற் கருத்தறிவித்தல், 5. எளிது, 6. திட்பம்.
நுணக்கம்—முடக்கம், 2. அசைவு.
நுணங்க—(வி) மெலிய, 2. நுண்மையாக, 3. முடங்க, 4. வாட, 5. துவள.
நுணங்கு—நுண்மை, 2. தேமல்.
நுணலை—தவளை, 2. ஓர்மீன்.
நுணல்—தவளையிலோர்பேதம்.
நுணவு—நுணாமரம், 2. தணக்கமரம்.
நுணவை—தணக்கமரம்.
நுணா—தணககமரம்.
நுணாச—(வி) தடவ.
நுணாவ—(வி) தடவித்தெரிய.
நுணி—முனை.
நுணிக்க-(வி) நுட்பமாகச்செய்ய, 2. கூர்மையாகப்பார்க்க.
நுணித்தல்—குணம்.
நுணுக—(வி) நுண்மையாக, 2. குறுக, 3. கூர்மையாக.
நுணுக்க—(வி) நுண்மையாக்க, 2. கூராக்க, 3. பொடியாக்க.
நுணுக்கம் — நுண்மை, 2. கூர்மை, 3. சூட்சம், 4. அடக்கம், 5. உலோபத்தனம்.
நுணுங்க—(வி) நுண்மையாக.
நுண்—அணு.
நுண்ணிச்சிறை — கொசுக்கட்டைக் குருவி.
நுண்ணிடை—சிற்றிடை, 2. பெண்.
நுண்ணியர்—அறிவுடையோர், 2. மந்திரியர்.

நுண்மை—நேர்த்தி, 2. வேலைத்திறம், 3. நுட்பம், 4. கூர்மை, 5. ஆழ்ந்த தன்மை.
நுதம்ப—(வி) நனைந்திளக, 2. நனைந்த மூக்காக.
நுதல—(வி) கருத, 2. குறிக்க, 3. சொல்ல.
நுதலணி—இலம்பகம், (நுதலணிமாலை.)
நுதலிப்புகுதல் — முப்பத்திரண்டுத்தியினொன்று, அஃது சொல்வனென்று கூறிப்புகுதல்.
நுதல்—நெற்றி, 2. புருவம், 3. சொல்.
நுதி—முனை.
நுதுக்க—(வி) அவிக்க, 2. அழிக்க, 3. அழுத்த, 4. அடக்க.
நுந்த—(வி) தூண்ட, 2. தள்ள.
நுந்தை—உந்தை.
நுபம்—, நூபம்— } எருக்கஞ் செடி.
நும்—விரவுத்திணை முன்னிலைப்பன்மை, 2. ஒருசாரியை.
நுரை — பேனம், 2. குமிழி, 3. வெண்ணெய்.
நுரைக்க—(வி) நுரையுண்டாக.
நுவணம்—, நுவணை— } நுண்மை, 2., பஞ்சுநூல், 3. கல்விநூல், 4. தினைமா.
நுவல—(வி) சொல்ல.
நுவல்—சொல்.
நுழாய்ப்பாக்கு—முதிராப்பாக்கு.
நுழுந்த—(வி) பதுங்க, 2. மறைய, 3. நகர, 4. கவர, 5. நுழைக்க.
நுழுவல்—நுழாய்ப்பாக்கு, 2. நழுவல்.
நுழைக்க—(வி) உட்செலுத்த.
நுழைச்சல்—நுழைவழி.
நுழைய—புக, 2. அகப்பட, 3. பதிய, 4. வஞ்சகமாய்ச்சார.
நுழைவு—கூரியபுத்தி.
நுளம்பு—கொசுகு, 2. மின்மினிப்பூச்சி.
நுளை—ஈனம், 2. குறடு.
நுளையர்—நெய்தனிலமாக்கள்.
நுள்ளான்—ஓர் சிற்றெறும்பு.
நுன்னுதல்—(தொ. பெ) இன்னுதல்.
நுனி—முனை, 2. நுண்மை.
நுனிக்க—(வி) கூராக்க.
நுவண—முனை.
நுன்—உனது.

## நூ

நூக்க—(வி) தள்ள, 2. செலுத்த.
நூக்கம்—தோதகத்திமரம்.
நூங்க—(வி) அதிகரிக்க.
நூங்கு—பெருமை, 2. மிகுதி.
நூதனம்—புதுமை, 2. நவமானது.
நூபம்—எருது, 2. எருக்கஞ்செடி.
நூபுரம் — காற்சிலம்பு, 2. பாதகிண்கிணி.
நூர — (வி) அவிய, 2. ஆற, 3. பதனழிய.
நூர்க்க—(வி) அணைக்க, 2. ஆற்ற.
நூலாதாரம்—முதல்புத்தகம்.
நூல்—இழை, 2. கல்விநூல், 3. சாஸ்திரம், 4. எண்ணம், 5. பூணூல், 6. பொருத்தனைநூல், 7. தாலிநூல், 8. எற்றுநூல்.
நூல்வல்லோர்—கல்விமான்கள், 2. மந்திரியர்.
நூவு—எள்.
நூழில் — குவியல், 2. படர்கொடி, 3. கொடிக்கொத்தான், 4. கொலை, 5. யானை.
நூழை—நுண்மை, 2 சிறுதுவாரம்.
நூற—(வி) அழிக்க, 2. நசுக்க.
நூறு—ஓரெண், 2. ஓர் வழக்க வாழ்த்து.
நூறை—மலங்குமீன்.
நூற்பா—சூத்திரப்பா, 2. தறியிற்பிணைக்கும்பா.
நூற்ருறு—நூனுழி.
நூனம்—குறைபாடு, 2. உண்மை.
நூனுதிகம்—, நூனுதிக்கம்— } அருமை பெருமை.
நூனுழி—நாடா.
நூன்மடந்தை—சரச்சுவதி.
நூன்முகம்—பாயிரம்.
நூன்முடிபு—, நூன்முடிவு— } நூலினது பொருளுணக்கம்.

# நெ

நெகல்—(தொ. பெ) நெகிழ்தல்.
நெகிடி—நெருப்புக்குவை.
நெகிழம்—பாதச்சிலம்பு.
நெகிழி—நெருப்புறுவிறகு.
நெகிழ்க்க—(வி) தளர்த்த, 2. நசுக்க, 3. பிரிக்க, 4. மலர்த்த.
நெகுதல் — (தொ. பெ) உருகுதல், 2. கரைதல்.
நெக்கல் — தளர்ந்தது, 2. அறக்கனிந்தது, 3. உக்கல்.
நெக்குதல்—(தொ. பெ) இளப்பல், 2. துரத்தியடித்தல்.
நெக்குரோதம்—ஆலமரம்.
நெசவு—நெசவுத்தொழில்.
நெச்சி—கடுக்காய்.
நெஞ்சகம்—நெஞ்சு.
நெஞ்சாங்கட்டை— நெஞ்செலும்பு, 2. சவஞ்சுடுவதற்கு நெஞ்சில் வைக்குங் கட்டை, 3. துராலோசனை.
நெஞ்சாங்குலை—ஈரற்குலை.
நெஞ்சு—மனம், 2. மனச்சாட்சி, 3. மார்பு, 4. தொண்டை, 5. தைரியம், 6. துணிவு.
நெடநெடெனல்—ஈரடுக்கொலிக் குறிப்பு.
நெடி—சிள்வண்டு, 2. மிளகாயின்காரம், 3. நாற்றம்.
நெடிக்க—(வி) நீடிக்க.
நெடியோன்—துளசிச்செடி, 2. திரிவிக்கிரமனுன விட்டுணு.
நெடிலி—கடற்பறவையிலொன்று.
நெடில்—நீளம், 2. நெட்டெழுத்து, 3. மூங்கில்.
நெடு—நீண்ட.
நெடுக — (வி) நீடிக்க, 2. உயர, 3. மறைந்துபோக, 4. சாக.
நெடுக்கு—நீட்சி.
நெடுங்கணக்கு—மூலாதாரம், 2. பெருந்தொகை, 3. பழங்கடன்.
நெடுங்கழுத்தன்—ஒட்டகம்.
நெடுங்குரலன்—கழுதை.
நெடுந்தகை—பெருங்குணத்தையுடையவன்.
நெடுந்துயில் — நீண்ட தூக்கம், 2. மரணம்.
நெடுந்தெரு—இராசவீதி,2.நேரானதெரு.
நெடுப்பம்—நீட்சி.
நெடுமை — நீட்சி, 2. உயரம், 3. நீண்டது, 4. பெண்மயிர்.
நெடுமொழி—தற்புகழ்ச்சி, 2. புகழ்ச்சி.
நெடும்பயணம்—நெடும் பிரயாணம், 2. மரணம்.
நெடும்பா—ஆடாதோடை, (ஒரு மருந்துச் செடி.)
நெட்ட — (வி) தள்ள, 2. சீக்க.
நெட்டி—நெட்டை; அஃது: யாக்கைக் குற்றத்தொன்று, 2. ஓர் புல்.
நெட்டிலிங்கு—அசோகமரம்.
நெட்டில்—மூங்கில்.
நெட்டு—காம்பு, 2. குலை.
நெட்டுதி—
நெட்டுத்தி— } ஓர்வித சங்கு.
நெட்டுரம்—நீட்டுரம்.
நெட்டை—நெடுமை, 2. முழுவெலும்பு, 3. நெட்டி.
நெண்ட—(வி) நெளிய.
நெத்தலி—
நெத்திலி— } ஓர்பொடிமீன்.
நெம்ப—(வி) கிளப்ப.
நெம்பு—இருசூர்ஆணி, 2. ஏணிப்பழு, 3. ஏற்றமடலாணி, 4. உலுக்குமரம், 5. விலாவெலும்பு.
நெய்—கிணம், 2. கிருதம், 3. உதிரம், 4. சித்திரைநாள்.
நெய்க்க—(வி) கொழுக்க, 2. கசிய.
நெய்க்குறி — தேரையர்செய்த வொரு நூல்.
நெய்க்கொட்டான்—பூவந்திமரம்.
நெய்ச்சட்டி—ஒரு கீரை.
நெய்ச்சிட்டி—சிற்றிலைச்செடி.
நெய்ச்சுட்டி—ஓர் கீரை.
நெய்தல் — ஆம்பல், 2. ஐந்நிலத்தொன்று; அது: கடலுங்கடல்சார்ந்த இடமும், 3. இரங்கலாகிய உரிப்பொருள்.

நெய்தற்பறை—சாப்பறை.
நெய்தற்றெய்வம்—வருணன்.
நெய்ந்தை—பெருமை.
நெய்த்தோர்—இரத்தம்.
நெய்ப்பு — புல்லாமணக்கஞ்செடி, 2. கொழுப்பு.
நெய்ய—(வி) ஆடைமுதலிய நெய்ய.
நெய்யரி—பன்னாடை.
நெரட—(வி) வருத்தமாக, 2. தடவ.
நெரி—நெரிவு, 2. சேலையின்முரிப்பு, 3. மடிப்பு.
நெரிக்க—(வி) நொறுக்க, 2. கையை நெரிக்க, 3. நருக்க, 4. நசுக்க, 5. நிமிட்ட, 6. கெட்டித்தனமாய நடத்த.
நெரிசல்-நெரிந்தது.
நெரிஞ்சி—நெருஞ்சில், (ஒரு முட்பூண்டு; இது தசமூலத்தொன்று.)
நெரிதர—(வி) முறிந்தோட, 2. சாய.
நெரியாசம்— } எரிகாசு.
நெரியாசி— }
நெருக்க—(வி) ஒடுக்க, 2. சனம்நெருக்க, 3. ஒட்ட, 4. இறுக்க, 5. பலவந்தம் பண்ண, 6. கொடுமைசெய்ய, 7. வருத்த, 8. சண்டையிற்கிட்ட, 9. சீக்கிரப்படுத்த, 10. நசுக்க, 11. அடரச்செய்ய, 12. வருந்திக்கேட்க, 13. தாக்க, 14. அடைக்க, 15. சுருக்க, 16. தொடர, 17. பரம்ப.
நெருக்கம் — அடர்வு, 2. தழைப்பு, 3. நெருங்குகை, 4. வேலைச்சங்கடம், 5. ஒடுக்கம், 6 இடைவிடாமை, 7. பலவந்தம், 8. கொடுமை, 9. துன்பம், 10. வியாதி மும்முரம், 11. கிட்டினவுறவு, 12. கைஇறுக்கம்.
நெருங்க—(வி) அடர, 2. கிட்ட, 3. அருகாக, 4. தொடர, 5. கொடுமையாக, 6. வருந்த, 7. மும்முரிக்க, 8. சிறிதாக, 9. நசுங்க, 10. பின்செல்ல.
நெருங்கல் — உறுதிச்சொல், 2. கொல்லல், 3. செறிவு.
நெருஞ்சி— } நெரிஞ்சில்; அது: கொடி நெருஞ்சில், செப்புநெருஞ்சில், பெருநெருஞ்சில், யானைநெருஞ்சில் எனப் பலவகைப்படும்.
நெருஞ்சில்— }
நெருட—(வி) இழைபொருத்த, 2. தடவ, 3. நிமிண்ட, 4. வஞ்சிக்க.
நெருடன்—வஞ்சகன்.
நெருடு — நிமிண்டுகை, 2. இழைப்பொருத்து, 3. தடவுகை, 4. நூல்நெருடு, 5. கருகல், 6 சொற்சங்கடம், 7. மய்க்கவெழுத்து, 8. வஞ்சனை.
நெருநல்—முன்னைநாள், 2. சற்றுமுன்.
நெருநெருத்தல்— } ஒலிக்குறிப்பு, 2. சீக்கிரக்குறிப்பு.
நெருநெரெனல்— }
நெருப்பு—அக்கினி.
நெரேலெனல்—ஒலிக்குறிப்பு.
நெல்— } சாலி, 2. நெற்பயிர், 3. ஓரளவு.
நெல்லு— }
நெல்லி—ஒருமரம்.
நெளி—ஓர் மோதிரம்.
நெளிச்சல்—(தொ. பெ) வளைதல்.
நெளிய—(வி) ஊர, 2. கெந்த, 3. நகர, 4. கூன, 5. வளைய.
நெளியல்—நெளிவுள்ளது.
நெளிர்—பேசலாலெழுமொலி.
நெறநெறெனல் — ஈரடுக்கொலிக்குறிப்பு.
நெறி—சுளுக்கு, 2. கண்மண்டைக்குழி, 3. வழி, 4. நீதிமார்க்கம், 5. யதார்த்தம், 6. நீதி, 7. விதம், 8. செவ்வை, 9 வரிசை, 10. குணம், 11. வாழைப்பட்டையினடி.
நெறிக்க—(வி) செவ்வேவிறிக, 2. புருவம் நெளிக்க, 3. மயிர்சுருள, 4. கோபத்துடன் பார்க்க, 5. செவிநிமிர்த்த, 6. சிலுப்ப.
நெறிக்கோரை—ஒருபுல்.
நெறிமை—நீதி.
நெற்ற—(வி) தள்ள.
நெற்றி — நுதல், 2. தண்டிகையின் தலைப்பு, 3. வீட்டின்முகடு, 4. முன்னணி, 5. மலையுச்சி, 6. மரத்தினுனி, 7. படைவகுப்பு.
நெற்றிக்கண்ணன்—சிவன்.
நெற்றிச்சுட்டி—ஓராபரணம், இதனை நிலண்டிற் சுடிகையென்பர்.
நெற்றிப்பட்டம்—ஓராபரணம்.

நெற்றிமுட்டு — சரிநேர், 2. எதிர்கை மரம், 3. கைமரத்தினடி, 4. முட்டுச்சந்து.
நெற்றியிற் கல்லைவைத்தல் — ஓர் தண்டனை.
நெற்று—உலர்ந்தபழம்.
நென்பு—பழு, 2. மர ஆப்பு.
நென்மா—அரிசிமா.
நென்னல்—நேற்று.

## நே

நே—அன்பு.
நேசம்—அன்பு.
நேசன்—சிநேகன், 2. பத்தன்.
நேசிக்க—சினேகிக்க, 2. சினேகம்பாராட்ட.
நேட—(வி) தேட, 2. விரும்ப, 3. நாட.
நேத்தி—, நேர்த்தி—, நேற்றி— நேர்ச்சி.
நேத்திரம்—கண், 2. பட்டுவஸ்திரம்.
நேபாளம்—ஓர் தேயம்.
நேமகம்—ஏற்பாடு, 2. காணிக்கைப் பிரதிஷ்டை, 3. விவாகவாக்குத்தத்தம்.
நேமனம்—நியமனம்.
நேமி — வட்டம், 2. சக்கராயுதம், 3. உருளை, 4. கடல், 5. பூமி, 6. மூங்கில், 7. சக்கரவாகப்புள்.
நேமித்தல்—(தொ. பெ) நியமித்தல்.
நேமிநாதம்—ஓரிலக்கணநூல்.
நேமிநாதன்—கடவுள், 2. அருகன், 3. மகாவிஷ்ணு.
நேமிப்புள்—சக்கரவாகப்புள்.
நேமியான்—, நேமியோன்— மகாவிஷ்ணு.
நேம்பல்—(தொ. பெ) அரிசி முதலியவற்றைப் புடைத்து கல்லாய்தல்.
நேயம்—நன்மை, 2. அன்பு, 3. நெய், 4. நிலப்பனை, (ஒருபூடு, நிலப்பனைக் கிழங்கு.)
நேர—உவமை உருபு.
நேரம்—காலம், 2. பகலிற்பாதி, 3. சமயம், 4. குறித்தகாலம்.
நேரம்—குற்றம், 2. அபராதம்.
நேரலர்—, நேரார்— பகைவர்.
நேரி—சோழதேயத்தோர் மலை.
நேரிசம்—எறிபடை.
நேரிட — (வி) எதிராக, 2. சம்பவிக்க, 3. கைகூட, 4. ஏதுவாக.
நேரிழை—பெண்.
நேரேடு—நாவன்மரம்.
நேர்—செவ்வை, 2. ஒழுங்கு, 3. நெறி, 4. உவமை, 5. நீளம, 6. வரிசை, 7. நேரசை, 8. எதிர், 9. உடன்பாடு, 10. கற்பு, 11. நுணுக்கம், 12. பாதி, 13. ஆணை சத்தியம்.
நேர்ச்சி—இணக்கம், 2. தகவு, 3. சம்மதம், 4. பிரதிக்கினை, 5. சினேகம், 6. நேர்.
நேர்த்தி—சிறப்பு, 2. திருத்தமுள்ளது, 3. நேருதல்.
நேர்பட—(வி) சந்திக்க, 2. இணங்க, 3. சம்மதிக்க, 4. சிநேகிக்க.
நேர்பாடு—நீதி, 2. நேர்.
நேர்பு—நீளம், 2. எழுச்சி, 3. சந்திப்பு, 4. போக்கு.
நேர்மை — செவ்வை, 2. நிதானம், 3. உண்மை, 4. அறம், 5. நுண்மை, 6. திருத்தம், 7. சமம்.
நேர்வளம் — செவ்வழியாழ்த்திறம், 2. பாலையாழ்த்திறம்.
நேர்வாளம்—நேர்வாளக்கொட்டை.
நேர்வான்—சித்திரைநாள்.
நேற்றி—செவ்வை.
நேற்று—முன்னைநாள்.

## நை

நை—ஓரிகழ்ச்சிக்குறிப்பு.
நைகரம்—துன்பம்.
நைசிகம்—, நைசியம்— காக்கை, 2. நாசியிற்புகுத்து மருந்து.
நைச்சியம்—தாழ்வு.
நைடதம்—, நைஷதம்— ஓர் காவியம்.
நைட்டிகம்—ஒருவகை விரதம்.
நைதிகை—முல்லை.

நைதேனல் — இரகசக்குறிப்பு, 2. மெலிவின் குறிப்பு, 3. மனநோதல்.
நைத்திகம்—நித்தியத்துவம்.
நைநையெனல்—இகழ்ச்சிக்குறிப்பு.
நைபுணன்—நிபுணன்.
நைமிசம்— } ஓர்வனம்.
நைமிசாரணியம்— }
நைமித்தியம்—பொருத்தமுடையது.
நைய—(வி) அவசமாக.
நையல்—மெலிவு, 2. துன்பம்.
நையாண்டி—பரிகாசம், 2. இகழ்ச்சி.
நையாயிகம்—ஓர் மதம்.
நையாயிகன்—நையாயிக மதானுசாரி.
நைருதி—தென்மேற்றிசை.
நைவளம்—குறிஞ்சி யாழ்த்திறம்.
நைவு—நைதல்.
நைவேதனம்—நிவேதனம்.
நைவேத்தியம்—தேவர்க்குச் சமர்ப்பிப்பது.

# நொ

நொ—துன்பம், 2. நோய்.
நொங்கு—நுங்கு.
நொசி—மெல்லியது.
நொசிய—(வி) நுண்மையாக, 2. வருந்த
நொசிவு—துவள்வு, 2. நுண்மை, 3. வருத்தம்.
நொச்சி — ஒரு செடி; அது: கருநொச்சி, நீர்நொச்சி, வெண்ணொச்சி எனப் பலவகைப்படும், 2. சிற்றூர், 3. மதில்.
நொடி—கைநொடி, 2. காலநுட்பம், 3. விடுகதை, 4. பள்ளம், 5. சொல்.
நொடிக்க — (வி) விரல்நொடிக்க, 2. பால்சுரக்க, 3. சொல்ல, 4. இரகசியமாகச் சொல்ல, 5. சாடையாகப் பேச, 6. அழிக்க.
நொடுக்குநொடுக்கெனல் — ஒலிக்குறிப்பு, 2. பாதகுறட்டிடுவொலி, 3. அலப்பல், 4. படபடத்தற்குறிப்பு.
நொடுநொடுக்க—(வி) நடிக்க, 2. நடுக்காயிருக்க.
நொடை—விலை, 2. விற்றல்.
நொண்ட — (வி) நொண்டிநடக்க, 2. விழுங்க.
நொண்டி—முடவன், 2. நொண்டி நாடகம், 3. முடம், 4. பொய்க்காலால் நடிப்போன்.
நொதி—பெருஞ்சேறு.
நொதிக்க—(வி) பொங்க, 2. சீக்கட்ட, 3. ஊற, 4 நுரைக்க, 5. கொப்புளிக்க
நொதுக்க—(வி) அவிக்க.
நொதுநொதுப்பு—இளக்கக்குறிப்பு.
நொதுமலர்—அயலோர்.
நொதுமல்—அயல்.
நொந்தலை— } பலவீனம், 2. வறுமை.
நொந்தலைமை— }
நொப்பு — ஆட்டின் மூலையிற் சுற்றிய ஓலை, 2. தடை.
நொய் — இடித்தவரிசி, 2. இலேசு, 3. மென்மை.
நொய்து—நொய்மை, 2. விரைவு.
நொய்மை—மென்மை, 2. தளர்ச்சி, 3. பாரமின்மை, 4. மிருதுத்துவம், 5. உடையுந்தன்மை, 6. இலேசு, 7. இழிவு, 8. வறுமை, 9. பலமின்மை, 10. மனத்திடமின்மை, 11. மனவுருக்கம்.
நொய்யவன்—எளியவன், 2. இழிஞன்.
நொய்யெனல்—நுண்மைக்குறிப்பு.
நொய்வு—மெலிவு.
நொரு — பயிரினடியில் முளைப்பது, 2. காய்ப்புமாறின பின்னரும்பும் பிஞ்சு.
நொருகை—தின்பண்டம்.
நொருக்குதல் — (தொ. பெ) அடித்தல், 2. நெரித்தல்.
நொருங்குதல்—(தொ. பெ) நெரிதல்.
நொருவல்—நொருங்குண்ட துகள்.
நொவல— } அப்பவருக்கம்.
நொவலயல்— }
நொவ்வ—(வி) நோவ, 2. மெலிய.
நொவ்வு—நொய்மை, 2. உடையுந்தன்மை, 3. வாட்டம், 4. நோ.
நொளநொளக்க— } (வி) மிருதுவாக, 2. குழைய.
நொளுநொளுக்க— }
நொளுக்கல்— } பிஞ்சு, 2. இளம்பாக்கு.
நொளுவல்— }
நொள்கல் — முகத்தல், 2. அச்சக்குறிப்பு.

நொள்ளல்—கண்குழிதல், 2. துளம்பு, 3. கொசுகு.
நொள்வளை—குருடு, 2. நாகரவண்டு.
நொறிதல்—விரைவு.
நொறில்—அடக்கம், 2. விரைவு.
நொறுக்க—(வி) பொடியாக்க, 2. நருக்க.
நொறுங்க—(வி) பொடியாக, 2. துக்கப்பட.
நொறுவை— } சிற்றுண்டி.
நொறுவைப்பண்டம்— }
நொற்பம்—நொய்து.
நொன்வனை—நையாண்டி, 2. பரிகாசம்.

## நோ

நோ—வருத்தம், 2. வியாதி, 3. துக்கம், 4. சிதைவு, 5. பலகீனம், 6. இன்மை.
நோக—(வி) வருந்த, 2. அழுகிப்போக, 3. துக்கப்பட, 4. வறுமைப்பட, 5. நொந்துபேச.
நோக்க—(வி) பார்க்க, 2. நேர்பார்க்க, 3. மனஞ்செலுத்த, 4. கடாட்சிக்க, 5. கவனிக்க, 6. கிரகம்நோக்க, 7. இரட்சிக்க.
நோக்கம்—பார்வை, 2. எண்ணம், 3. கண், 4. தோற்றம், 5. தன்மை, 6. போக்கு, 7. கணிசம், 8. விருப்பம், 9. கவனம், 10. கடாட்சம், 11. அழகு, 12. உயர்ச்சி, 13. கிரகநோக்கு.
நோக்கர்—கழைக்கூத்தர்.
நோக்காடு—நோதல், காடு—தொழிற்பெயர் விகுதி.
நோக்குவித்தை—ஓர் தந்திரவித்தை.
நோஞ்சல்—மெலிதல்.
நோடாலம்—உல்லாசம், 2. பரிகாசம்.
நோட்டம்—பணநோட்டம், 2. கணிப்பு, 3. வெல்லமுயலுகை.
நோண்ட—(வி) தோண்ட, 2. முகக்க, 3. சொற்பமாய்த்திருட, 4. கிமிண்ட, 5. கிள்ள, 6. கிளற.
நோதலை—நோய், 2. தரித்திரம்.
நோம்பு—நோன்பு.
நோய்—நைதல், 2. பழம்பிணி, 3. வருத்தம், 4. அழுங்கை.
நோய்க்க—(வி) மெலிய, 2. வாட, 3. சாரமொழிய.
நோய்ச்சல்—நோய்கொள்ளல்.
நோய்ஞ்சல்—இளைப்புள்ளது.
நோய்முகன்—சனி.
நோலாமை—தவமின்மை, 2. பொறையின்மை.
நோவு—நோய், 2. வருத்தம்.
நோழிகை—நூல்தாறு.
நோற்க—(வி) தவஞ்செய்ய, 2. சகிக்க.
நோற்பு—தவம், 2. விரதம்.
நோனாமை—தவமின்மை, 2. பொறுத்தலில்லாமை.
நோனார்—தவமில்லார், 2. பகைவர்.
நோன்பு—தவம், 2. விரதம்.
நோன்மை—பொறுமை, 2. தவம், 3. வலிமை, 4. பெருந்தன்மை.
நோன்றல்—(வி) தன்னல், 2. பொறுத்தல்.
நோன்றாள்—வலிய கால்.

## ப

ப—இருடிகளில் ஓர் பாகத்தைக் காட்டுமொரு கீழ்வாயிலக்கக்குறி.
பஃறொழிசைக்கொச்சகக்கலிப்பா—பல தாழிசைகளோடு மற்றையுறுப்புக்களையும் பெற்றுவருவது.
பஃறி—ஓடம், 2. மரக்கலம், 3. இரேவதி நட்சத்திரம்.
பஃறொடை வெண்பா—நான்கடியின் மிக்க பலவடிகளைப் பெற்றுவரும் வெண்பா.
பகடம்—தந்திரம்.
பகடி—பரிகாசம், 2. விகடம், 3. அகசியக்காரன்.
பகடு—பெருமை, 2. எருது, 3. பொதி எருது, 4. எருமைக்கடா, 5. ஆண்யானை, 6. ஓடம், 7. தெப்பம்.
பகடை—சூதின்ருயத்தில் ஒன்று, 2. சக்கிலிச்சாதி, 3. அதிஷ்டம்.
பகட்ட—(வி) காகரிக்காட்ட, 2. அரோசிக்க, 3. சித்திரைமயக்க, 4. மயக்க, 5. வஞ்சிக்க.

பகட்டு-பிரகாசம், 2. மயக்கம், 3. வெளி வேஷம், 4. நாகரிகம், 5. இறுமாப்பு.
பகண்டை—கவுதாரி.
பகந்தரம்—ஓர் குதநோய்.
பகபகெனல் — ஈரடுக்கொலிக் குறிப்பு, 2. வெம்புதல்.
பகம் — அவாவின்மை, ஈச்சுரத்தன்மை, கீர்த்தி, செல்வம், ஞானம், வீரிய மென்னு மறுகுணம், 2. அழகு, 3. கொக்கு.
பகர-(வி) சொல்ல, 2. கூற, 3. விற்க
பகரம்—மினுக்கம், 2. அலங்காரம், 3. ப எனும் எழுத்து.
பகரிப்பு—மினுக்கு.
பகர்ச்சி—சொல்.
பகலவன்—சூரியன், 2. பரணிநாள்.
பகலோன்—சூரியன்.
பகல்—பகற்காலம், 2. மத்தியானம், 3. பிரகாசம், 4. சூரியன், 5. முகூர்த்தம், 6. நாள், 7. நடு, 8. நுகத்தாணி.
பகல்மானம்—பகனாழிகை.
பகவதி—தருமதேவதை, 2. பார்வதி, 3. துர்க்கை.
பகவதிநாள்—பூரநாள்.
பகவன்—கடவுள், 2. அருகன், 3. சிவன், 4. திருமால், 5. பிரமன், 6. புத்தன், 7. குரு.
பகவான்—கடவுள், 2. துவாதசாதித்தரி லொருவன்.
பகவு—பிளப்பு, 2. துண்டு.
பகழி—அம்பு, 2. அம்பின்குதை.
பகன்—துவாதசாதித்தரிலொருவன், 2. பகாசுரன்.
பகன்றை — சிறுசிறுப்பைச் செடி, 2. சிவதைக்கொடி, 3. சீந்திற்கொடி.
பகாசுரவைரி—வீமன்.
பகாலம்—கபாலம்.
பகிடி—விகடம், 2. பரிகாசம், 3. பகிடிக்காரன்.
பகிர-(வி) பங்கிட.
பகிரங்கம்—மறைப்பின்மை.
பகிரண்டம்—அண்டத்தின்வெளி.
பகினி—உடன்பிறந்தாள்.
பகீரதன்—சூரியகுலத்தரசரிலொருவன்.
பகீரதி—கங்கை.
பகீரிடுதல்— } அச்சக்குறிப்பு.
பகீரெனல்— }
பகுக்க-(வி) பிரிக்க, 2. ஈய, 3. தறிக்க, 4. துண்டிக்க.
பகுதி-பங்கு, 2. திறை, 3. படை.
பகுதி—இயல்பு, 2. சொன்முதனிலை.
பகுவபஞ்சம்—உபநிடதமுப்பத்திரண்டி னொன்று.
பகுளம்—கிருட்டிணபக்கம்.
பகை — வெறுப்பு, 2. பகைஞன், 3. விரோதம்.
பகைக்க-(வி) விரோதிக்க.
பகைமம்—விரோதம்.
பகோளம்—வானவட்டம்.
பக்கணம்—வேடர்வீதி, 2. ஊர்.
பக்கணம்— } பற்பல திவிற்பண்டம்.
பக்ஷணம்— }
பக்கம்— } புறம், 2. அருகு, 3. இடம், 4. பிரிவு, 5. நட்பு, 6. கோட்பாடு, 7. புட்சிறகு.
பக்ஷம்— }
பட்சம்— }
பக்கரை—அங்கவடி.
பக்கர்—இனத்தார்.
பக்கல்—பக்கம், 2. இனம்.
பக்கா—பெரியது.
பக்கி— } பறவை.
பக்ஷி— }
பக்கிட-(வி) நடுக்கிட, 2. வெடிக்க.
பக்கு—மரப்பட்டை, 2. புண்ணசறு, 3. பற்பற்று, 4. சளிப்பக்கு, 5. பொருக்கு, 6. பிளப்பு.
பக்குப்பக்கெனல்—அச்சக்குறிப்பு, 2. மிகுதிக்குறிப்பு.
பக்குவம்-தகுதி, 2 முதிர்ச்சி, 3. திராணி, 4. ஆத்துமபரிபாகம், 5. தெருட்சி, 6. போக்கு.
பக்குவர்—மோட்சபக்குவர்; அவர்: கருமகாண்டிகர், ஞானகாண்டிகர், பக்திகாண்டிகர்.
பக்தன்—பத்தன்.
பக்தி—பத்தி.
பங்கஜம்— } தாமரை.
பங்கசம்— }
பங்கயம்— }

பங்கம்—சேறுபாடு, 2. தோல்வி, 3. வெட்கம், 4. மூடம், 5. ஈனம், 6. மானபங்கம், 7. அலை, 8. குளம், 9. துண்டு, 10. குழைசேறு, 11. பாவம், 12. புழுதி.
பங்கம்பாலை— பங்கம்பாளை— } ஆடுதின்னாப்பாலை.
பங்கயத்தவன்— பங்கயன்— பங்கயாசனன்— } பிரமன்.
பங்கா—காற்றசைக்குமோர் கருவி.
பங்காரு—பொன்.
பங்காளம்—ஓர்தேயம், 2. ஓர் பண்.
பங்காளி—கூட்டாளி.
பங்கி—ஆண்மயிர், 2. மயிர்.
பங்கீடு—பங்கு.
பங்கு—பகுதி, 2. நியமிப்பு, 3. பாதி, 4. கூட்டு.
பங்கு—நொண்டி, 2. சனி.
பங்குசம்—தலைக்கோலம்.
பங்குனி—ஓர் மாதம், 2. உத்திரநாள்.
பங்கேருகம்—தாமரை.
பசக்க—(வி) பசுமையாக, 2. துன்பத்தானிறம் வேறுபட, 3. மங்கிப்போக.
பசண்டை—பசுமை.
பசந்து— பசுந்து— } கண்ணுக்கழகு, 2. நேர்த்தி.
பசபசக்க—(வி) தினவெடுக்க, 2. முறுமுறுக்க.
பசப்ப—(வி) ஏய்க்க, 2. ஓயாமற்பேச.
பசப்பு—பொன்மை, 2. பசுமை நிறம்.
பசமந்திரம்—மரமஞ்சள்.
பசலை—காமத்தாலுண்டாம் பசப்பு.
பசளி—மடைமுகம், 2. ஒரு கீரை.
பசளை—ஓர் கீரை, 2. எருமுதலியவுரம்.
பசறு—பச்சிலைச்சாறு.
பசனம்—சமையல்.
பசாசு—பேய்.
பசாடு—மாசு.
பசாரி—விபசாரி.
பசார்— பஜார்— } கடை.
பசானம்— பசான்— } ஓர் நெல்.

பசி—உணவைத்தகிக்கும் அக்கினி.
பசிக்க—(வி) பசியெழ.
பசிதம்—திருநீறு.
பசிரி— பசிரிக்கீரை— பயிரி— } ஓர் பூடு; அது: குதிரைப்பசிரி, பெரும்பசிரி, வரட்பசிரி எனப் பலவகைப்படும்.
பசு — பெண்டசு, 2. எருது, 3. இடபவிராசி, 4. சிவனுடையது, 5. யாகத்துக்குரிய ஆடு, 6. மிருகம்.
பசுங்கதிர்—இளங்கதிர், 2. சந்திரன்.
பசுத்துவம்—ஆன்மதத்துவம்.
பசுநா—பராய்மரம்.
பசுந்து—அழகு, 2. பசுமை, 3. மென்மை.
பசுபதி—சிவன்.
பசுமை—பச்சை, 2. செழுமை, 3. குளிர்ச்சி, 4. சாரம், 5. பொன்னிறம், 6. பசுமைச்சால்வை, 7. உண்மை, 8. செல்வம்.
பசும்பிடி—பச்சிலைமரம்.
பசும்புல்—பச்சைப்புல், 2. விளைபயிர்.
பசேலெனல்—பச்சைநிறமாயிருத்தல்.
பசை — பற்று, 2. பிசின், 3. ஈரம், 4. சாரம், 5. அன்பு, 6. கொழுப்பு, 7. இலாபம், 8. விருப்பம், 9. முழவின் மார்ச்சனை.
பசைய—(வி) அன்புகொள்ள, 2. சாரமுள்ளதாக, 3. இளக, 4. பிசைய, 5. ஒட்ட.
பச்சடி—ஒருகறி.
பச்சவடம்—ஒருவகைச்சீலை.
பச்சாத்தாபம்—அநுதாபம், 2. இரக்கம்.
பச்சிமம்—மேற்கு, 2. பின்.
பச்சிலை—ஓர் மரம், 2. பச்சையிலை, 3. பசுமருந்து.
பச்சிலையோனன்—பச்சோந்தி.
பச்சுடம்பு—குழந்தையினுடல்.
பச்சை—பசுமை, 2. வேகாதது, 3. இளமை, 4. உலராதது, 5. இடக்கர்மொழி, 6. மரகதம், 7. மகாவிட்டுணு, 8. புதன், 9. தெய்வமுதலியவற்றிற்குப் படைப்பது, 10. உடம்பிற் குத்தும் பச்சை, 11. மிருதி, 12. தோல், 13. பரிமளம், 14. புதர்.

பச்சைக்கூடு—துலதேகம்.
பச்சைச்சடையன்—வயிரவன்.
பச்சைப்பெருமாள் — ஓர்நெல், 2. திருமால்.
பஸ்மம்—சாம்பர்.
பக்ஷி—பறவை.
பஞ்சகம்—ஐந்தின்கூட்டம்.
பஞ்சகோலம்—சுக்கு, திப்பிலி, திப்பிலி மூலம், செவ்வியம், சித்திரமூலமிவற்றின் சேர்க்கை.
பஞ்சதாரை—சருக்கரை.
பஞ்சபாணன்—காமன்.
பஞ்சபாணி—பார்வதி.
பஞ்சபாதகம்—ஐந்து துரோகம்; அவை: கொலை, பொய், கள்ளுண், களவு, குருநிந்தை என்பன.
பஞ்சமம்—சத்ததானத்தொன்று.
பஞ்சமி—ஐந்தாந்திதி.
பஞ்சமூலம்—ஐவகை மூலிகை; அவை சிறு பஞ்சமூலம், பெரும் பஞ்சமூலம் என இருவகைப்படும்.
பஞ்சம்—ஐந்து, 2. கருப்புக்காலம், (சிறுவிலைக்காலம்.)
பஞ்சரம்—கூடு, 2. பன்னுங்கூடு, 3. மட்கலம் வனையுங்கூடம், 4. இடம், 5. கழுகு, 6. செருந்திமரம்.
பஞ்சராத்திரம்—வைணவமதத்தொன்று.
பஞ்சரிக்க—(வி) உபசாரமாய்ப்பேச, 2. கெஞ்சிக்கேட்க.
பஞ்சலிப்பு—எளிமைகூறல்.
பஞ்சலோபி—மிகஉலுத்தன்.
பஞ்சவடி—ஒரு சுத்தஸ்தலம்.
பஞ்சவர்—பாண்டுமக்கள்.
பஞ்சவன்—பாண்டியன்.
பஞ்சனம்—அழிவு.
பஞ்சா — மகமதியருடைய விழாக்களிற் கொண்டாடுமொரு சின்னம்.
பஞ்சாங்குலம்—ஆமணக்குச்செடி.
பஞ்சாடுதல்—(தொ. பெ) கண்பஞ்சடைதல்.
பஞ்சாமிர்தம்—ஐந்தமுதம்: அவை சருக்கரை, நெய், தேன், தயிர், பால்.
பஞ்சாமிலம் — இலந்தை, புளியாரை, நெல்லி, எலுமிச்சை, மாதுளைசேர்ந்தது.

பஞ்சாயுதபாணி—மகாவிட்டுணு.
பஞ்சாய்—நிரட்கோரைப்புல்.
பஞ்சாரம்—எருதுபரியிவற்றினுயுள், 2 பழையது.
பஞ்சார்த்தல்—(தொ. பெ) பஞ்சாடுதல்.
பஞ்சானனம்—சிங்கம்.
பஞ்சான்—பச்சைக்குழந்தை.
பஞ்சி—துறு, 2. சடைந்தது, 3. வருந்தம், 4. சோம்பு, 5. பஞ்சு.
பஞ்சிகம்—தாளி, (ஒரு படர்கொடி.)
பஞ்சிதம்—விண்மீன்.
பஞ்சீகரணம் — பஞ்சபூத வழிசகூட்டம்.
பஞ்சு—சீலை, 2. பருத்திப்பஞ்சு முதலியன.
பஞ்சுரம்—ஓர்பண், 2. குறிஞ்சியாழ்த்திறம், 3. பாலைநிலத்திராகம்.
பஞ்சுருட்டான்— } ஓர் பசுங்குருவி.
பஞ்சுருத்தான்— }
பஞ்சூகம்—பெருமை.
பஞ்சை—தரித்திரம், 2. இரப்போன், 3. பலவீனன்.
படகம்—போர்ப்பறை, 2. தம்பட்டம், 3. திரைச்சீலை, 4. பரண், 5. கவரிமான்.
படகு— } சிற்றோடம், 2. தோணி.
படவு— }
படக்குப்படக்கெனல்—ஈரடுக்கொலிக்குறிப்பு, 2. துடித்தல்.
படங்கன்—கடலிலோர்மீன்.
படங்கு — பெருங்கொடி, 2. மேற்கட்டி, 3. கூடாரம், 4. பெருவரிச்சல், 5. மெய்போற்பேசுகை.
படபடத்தல்— } தீவரித்தல், 2. துடித்தல், 3. உதடு துடித்தல், 4. கோபக்குறிப்பு, 5. ஈரடுக்கொலிக்குறிப்பு, 6. அடித்தல்.
படபடப்பு— }
படபடெனல்—(தொ. பெ) மனதடித்தல், 2. துடித்துப்பேசல், 3. அசைதல், 4. வெடித்தல், 5. தீவரித்தல்.
படப்பம்—மருங்கிலோர்குடிசை.
படப்பு—கொல்லை, 2. வைக்கோற்போர்.
படப்பை—பக்கத்தோட்டம், 2. கொல்லை, 3. நாடு, 4. மருதநிலத்தூர்

படமஞ்சரி—ஓர்ராகம்.
படமரம்—நெய்வார் கருவியில் ஒன்று.
படம்—சீலை, 2. எழுதும்படம், 3. திரைச்சீலை, 4. விருதுக்கொடி, 5. யானைமுகபடாம், 6. பாம்பின்படம், 7. காலின்படம்.
படர—(வி) செல்ல, 2. கொடிபடர, 3. ஓட, 4. பெருக, 5. ஊர, 6. பரவ, 7. நினைக்க.
படரடி—சிதறடிப்பு.
படர்—செல்லுகை, 2. வழி, 3. நினைவு, 4. துக்கம், 5. நோவு, 6. பகை, 7. மேடு, 8. படைவீரர்.
படர்க்கை—மூன்றாமிடம்.
படர்ச்சி—செல்லுகை, 2. கொடி ஓடுகை, 3. விரிவு.
படர்தாமரை—ஒரு கரப்பனோய்.
படலம் — கூட்டம், 2 அதிகரிப்பு, 3. அடுக்கு, 4. நேத்திரப்படலம், 5. அரதனக்குற்றம், 6. தூசியின் மிகுதி, 7. நூலிற்பிரிவு.
படலிகை—பெரும்பீர்க்கு, (ஒருகொடி), 2. வட்டம், 3. கைம்மணி, 4. இலைப்பு.
படலை—பூமாலை, 2. கோர்த்தமாலை, 3. முடிமாலை, 4. கிண்கிணிமாலை, 5. வாயகன்றபறை.
படல்—ஓலைக்கதவு, 2. மறைக்கும்படல்.
படனம்—படித்தல், 2. மனப்பாடம்.
படன்—படைவீரன்.
படாகி—புளுகுகிறவன்.
படாகை—கொடிச்சீலை, 2. கிராமம்.
படாடோபம்—உடைப்பகட்டு.
படாந்தரம்—கோள், 2. கட்டுக்கதை.
படாபஞ்சனம்—திர்க்கதரிசி.
படாப்பழி—பெரும்பழி.
படாம்—சீலை, 2. திரைச்சீலை, 3. பெருங்கொடி.
படாம்வீடு—கூடாரம்.
படாரன்—பிடாரன்.
படாரிடுதல்— } ஒலிக்குறிப்பு.
படாரெனல்— }
படாவஞ்சனம்— } கொடியவஞ்சனை, 2. கடும்பொய்.
படாவஞ்சனை— }

படி—சோபானம், 2. நிலை, 3. குணம், 4. பகை, 5. பூமி, 6. அங்கவடி, 7. நிறையறிகருவி, 8. நூறுபலங்கொண்டது, 9. ஆள்படி, 10. விதம், 11. ஒப்பு, 12. உண்ணுமளவு.
படிகம்—பளிங்கு, 2. கூத்து, 3. பிச்சை, 4. வெள்ளிலோத்திரம்.
படிக்க—(வி) வாசிக்க, 2. கற்க, 3. பாட, 4. பழக.
படிக்கம்—தம்பலப்படிக்கம்.
படிக்காசு—இராமநாதபுரம் இரகுநாத சேதுபதியின் சமஸ்தானத்தில் ஓர் புலவன்.
படிக்காரம்—சீனக்காரம்.
படிசம்—தூண்டில்.
படிசு—நிலைமை.
படிதம்—கூத்து
படித்தரம்—நிபந்தனை.
படித்திரம்—குட்டிறைச்சி.
படிப்பு—வாசிப்பு, 2. கல்வி, 3. பழக்கம்.
படிமதாளம்—நவதாளத்தொன்று.
படிமம்—வெறியாட்டு, 2. வெண்கலம்
படிமை தவவேடம்
படியகம்—படிக்கம்
படியரம்—ஓர் அரம்.
படிவம்—உடலுருவம், 2 வடிவம், 3. சரீரம், 4. நோன்பு, 5. சித்திரரூபம்.
படிவர்—முனிவர், 2. சடைமுடியோர்.
படிவு—கீழ்ப்படிவு, 2. அழுந்துகை, 3. குளித்தல், 4. வணக்கம்.
படிறு — பொய், 2. வஞ்சனை, 3. திருட்டு.
படினம் — மென்மை, 2. பக்குவம், 3. வெற்றி.
படீரம்—சந்தனம், 2. சிவப்பு.
படீரிடுதல்— } ஒலிக்குறிப்பு.
படீரெனல்— }
படு — கள், 2. குலை, 3. குளம், 4. கன்மை.
படுகர் — பள்ளம், 2. குளம், 3. வயல், 4. மருதநிலம், 5. இழிந்தேறும்வழி, 6. ஓர்சாதி.
படுகளம்—அமர்க்களம்.

படுகை — ஆற்றங்கரையடுத்த நன்செய் புன்செய்.
படுக்க-(வி) கிடக்க, 2. போரடிக்க, 3. தளவரிசைசெய்ய, 4. பிடிக்க, 5. செய்ய, 6. கொல்ல.
படுக்கை-சயனிக்கை, 2. மக்கட்படுக்கை, 3. விலங்கின் படுக்கை, 4. வள்ளத்தினடியில் பரப்பும் புல்.
படுதல்-(தொ. பெ) உண்டாதல், 2. ஒலித்தல், 3. சகித்தல், 4. சாதல், 5. தாழ்தல், 6. விளித்தல், 7. பூத்தல், 8. அகப்படுதல்.
படுதா-திரைச்சீலை.
படுத்தடி-முரட்டுத்தன்மை.
படுத்துவம்-வலிமை.
படுநிலம்-பாலைநிலம் (நீரில்லா நிலம்), 2. மயானம்.
படுமலைப்பாலை-ஓரிசை.
படுவர்-கள்விற்போர்.
படுவன்-ஒரு சிலந்தி.
படுவி-கூறியவள், 2. தொழுத்தை.
படுவை-தெப்பம்.
படை-அடுக்கு, 2. செதிள், 3. சேனை, 4. திரள், 5. போர், 6. ஆயுதம், 7. கருவி, 8. கலப்பையிலோருறுப்பு, 9. கல்லணை, 10. சயனிக்கை.
படைக்க-(வி) சிருஷ்டிக்க, 2. பரிமாற, 3. நிவேதிக்க, 4. சம்பாதிக்க, 5. உடைத்தாக.
படைக்கலம் — ஆயுதம், 2. எழு, 3. எறிபடை.
படைச்சால்-உழவுசால்.
படைத்தோன்-சிருட்டிகர்த்தா.
படையல்-நிவேதனப்பொருள், 2. அடிக்குமடி.
படையாச்சி-ஒரு சாதி.
படைவரம்-குதிரைச்சேணம்.
படைவீடு-ஆயுதசாலை, 2. பாசறை.
பட்கை-பாம்பின் மேல்வாயிலோர்பல்.
பட்சணம்— } பக்ஷணம்— } பட்சணை— } உண்கை, 2. இரை.
பட்சம்— } பக்ஷம்— } நேசம்.

பட்சி— } பக்ஷி— } பறவை.
பட்சிக்க-(வி) உண்ண, 2. அழிக்க.
பட்டகசாலை— } பட்டசாலை— } கூடம்.
பட்டகம்-புழுக்கொல்லிச்செடி.
பட்டடை-குவியல், 2. அடைகல், 3. அடைகுறடு, 4. கம்மியர் கார்கசாலையும், கருவியும், 5. தாங்குகருவி, 6. தானியஉறை, 7. தானியப்படுக்கை, 8. தோணிதாங்கி, 9. தாபரம், 10. கழுத்தணி, 11. தாங்குபலகை.
பட்டடையார்-முதல்வேலைகாரர்.
பட்டணசுவாமி — ஓர்ஞானி.
பட்டணம்-நகரம்.
பட்டப்பகல்-நடுப்பகல்.
பட்டம்-நெற்றிப்பட்டம், 2. ஆதிக்கப்பெயர், 3. ஆளுகை, 4. பூண், 5. பட்டை, 6. காற்றாடி, 7. சீலை, 8. வழி, 9. விலங்கின் படுக்கை, 10. கவரிமா, 11. குளம், 12. ஆயுதம்.
பட்டயம்-வாள், 2. சாதனம்.
பட்டறை — கண்டத்தணியு மோராபரணம்.
பட்டன் — கலைஞானபண்டிதன், 2. ஓர் சாதிப்பிராமணன், 3. கவிபாடுபவன்.
பட்டா— } பட்டாக்கத்தி— } வாள்.
பட்டா-பட்டயம், 2. வண்டிச் சில்லுகளுக்குப் போடப்படுமோரிரும்பு வளையம்.
பட்டாங்கு — உண்மை, 2. மெய்பேசுகை, 3. சித்திரச்சேலை.
பட்டாசு-சீனவெடி.
பட்டாடை-பட்டுவஸ்திரம்.
பட்டாணி — ஓர்வகைப் பயறு, 2. ஓர் சாதியான், 3. ஓர் குருவி.
பட்டாபிஷேகம்-முடிசூட்டல்.
பட்டாரகன்-அருகன், 2. குரு, 3. தேவன்.
பட்டாளம்-படைவகுப்பு.
பட்டி — ஆட்டுக்கிடை, 2. பாக்குவெற்றிலைச்சுருள், 3. அட்டவணை, 4. விக்கிரமாதித்தன் மந்திரி, 5. களவு, 6.

நெகிழ்ச்சி, 7. வேசி, 8. பலகறை, 9. ஓர்செடி, 10. தெப்பம், 11. பிள்ளை, 12. நாய், 13. நிலத்தின் அளவு.
பட்டி—இடம், 2. சிற்றூர், 3. சீலை.
பட்டிகர்— } திருடர்கள்.
பட்டிகள்— }
பட்டிகை—அரைஞாண், 2. முலைக்கச்சு, 3. சீலை, 4. தெப்பம், 5. தோணி, 6. சீந்திற்கொடி, 7. சுவர்த்தலத்தின் சித்திரக்கம்பி.
பட்டீடை — நந்தியாவட்டம், (ஒரு பூச்செடி.)
பட்டிணி—பட்டினி.
பட்டிமண்டபம்—வித்தியாமண்டபம்.
பட்டிமை—வஞ்சகம், 2. களவு.
பட்டியல்—வலிச்சல்.
பட்டிணம் — சிறுநகர், 2. நெய்தனிலத்தூர்.
பட்டினவர் — நெய்த நிலமாக்கள்.
பட்டினி—உண்ணாதிருத்தல்
பட்டு—பட்டாடை, 2 மடிப்பு, 3 மேற்போர்வை, 4. சிற்றூர்.
பட்டுவாடா— } சம்பளம் முதலிய கொடுத்தல்.
பட்வாடா— }
பட்டை—மரத்தோல், 2. வாழைப்பட்டை, 3. சரிகைப்பட்டை, 4 பட்டைக்கோடு, 5. தோள்மூட்டு, 6. பொற்சரிகைப்பட்டி, 7. கழுத்துப்பட்டை, 8. பனம்பட்டை, 9. இறைகூடை, 10. போதிகை, 11. மணியிற்றீரும்பட்டை, 12. பட்டைத்தையல், 13. பொடிப்பட்டை.
பட்டைக்காறை—ஓர் கழுத்தணி.
பட்டையம்—வாள்.
பட்டோலை—அரசர்விடுந் திருமுகம், 2. எழுதச்சமைத்த ஓலை, 3. அட்டவணை, 4. ஒருவர் சொல்ல எழுதிய ஓலை.
பணதி—ஆபரணம்.
பணம்—பருமை.
பணம்—திரவியம், 2. பணம், 3. காசு.
பணயம்—அடகு, 2. பணம்.
பணர்—மரக்கிளை.
பணவம்—தம்பட்டம்.
பணவன்—பணிசெய்மகன்,
பணாடவி—ஆதிசேஷன்.
பணி—செய்கை, 2. தொழில், 3. ஆபரணம், 4. திருப்பணி, 5. வேலை, 6. ஊழியம், 7. தொண்டு, 8. கட்டளை, 9. சொல், 10. பட்டுச்சேலை.
பணி—பாம்பு.
பணிகாரம்—அப்பவருக்கம்.
பணிக்க—(வி) சொல்ல, 2. கொடுக்க, 3. கட்டளையிட, 4. தாழ்த்த, 5 குறைக்க.
பணிக்கம்—திருத்தம்.
பணிக்கன்—கூத்தாட்டுவோன், 2. சிலம்பம் பயிற்றுவோன், 3. யானைப்பாகன், 4. ஆயுதம்பயிற்றுவோன், 5. உபாத்தியாயன், 6. கொற்றர் தலைவன், 7. நாவிதன், 8. விஷவைத்தியன், 9 சாராயங் காய்ச்சுகிறவன்.
பணிக்கு—திருத்தம், 2. சௌக்கியம்.
பணிக்கை—சேர்த்திபாயிருக்கை.
பணிதி—ஆபரணம், 2. அலங்கரிப்பு.
பணிய—(வி) தாழ, 2. வணங்க, 3 இறங்க, 4. குறைய, 5. எளிமையாக
பணியாரம்—பணிகாரம்
பணியார்—பகைவர்,
பணியிறைக்கு—தண்ணீர்விட்டான் பூடு.
பணிலம்—சங்கு, 2. வலம்புரிச்சங்கு, 3. சொல்.
பணிவிடை—குற்றேவல், 2. வேலை, 3 கட்டளை.
பணிவு — தாழ்வு, 2. பதுங்குகை, 3 கீழ்ப்படிகை, 4. வணக்கம்.
பணை—பருமை, 2. பெருமை, 3. மரக்கொம்பு, 4. மூங்கில், 5. அரசமரம், 6. மருதநிலப்பறை, 7. முரசு, 8. பறைப்பொது, 9. மருதநிலம், 10. வயல், 11. குதிரைப்பந்தி, 12. விலங்கின் படுக்கை, 13. பிழை.
பணைக்க—(வி) பருக்க, 2. தவற, 3 செழிக்க.
பணையம்—பண்யம்.
பண் — இசைப்பாட்டு, 2. நிறைநரம்புள்ளவீணை, 3. குதிரைக்கல்லணை, 4.

தகுதி, 5. அமைவு, 6. வாகனங்களின் மேற்றவிசு, 7. மரக்கலத்தின் இடப்புறம், 8. பாய்மரக்கயிறு, 9. தொண்டு.
பண்டகசாலை—களஞ்சியம்.
பண்டசாலை—பண்டகசாலை.
பண்டபதார்த்தம் — இரசநிரசவஸ்துகள்.
பண்டம் — பொருள், 2. பொன், 3. சரக்கு, 4. பணிகாரம், 5. அறிவு.
பண்டர்—பாடற்கிழ்மக்கள்.
பண்டனம்—போர்.
பண்டாகி—செம்பு, (ஒருசெடி.)
பண்டாரம்—பொக்கசம், 2. பொக்கிஷசாலை, 3. பலபண்டம்.
பண்டாரம்—மடாதீனத்தான், 2. மஞ்சட்பொடி.
பண்டாரி—பொக்கிஷக்காரன், 2. வேளாண்மை செய்வாரிலோர் வகுப்பு, 3. சாவாய்ச்சுயம்பாகி.
பண்டி—வண்டி, 2. உரோகிணி நாள்.
பண்டி—வயிறு.
பண்டிகை — திருவிழா, 2. ஓர்வகைச் சிற்பவேலை.
பண்டிதம் — வைத்தியம், 2. வித்துவத்துவம்.
பண்டிதன் — வித்துவான், 2. வைத்தியன், 3. புதன், 4. சுக்கிரன்
பண்டிலன்—தூதன்.
பண்டு—பழமை, 2. முன்.
பண்டுசம்—ஓமம்
பண்டையர்— } முன்னோர்.
பண்டையோர்— }
பண்ணவர் — முதற்கடவுளர், 2 வானவர், 3. முனிவர், 4. பாடகர்.
பண்ணவன்—தேவன், 2. அருகன், 3. ஆசிரியன், 4 திண்ணியன்.
பண்ணிகாரம் — பலபண்டம், 2. அப்பவருக்கம்.
பண்ணியம் — விற்கப்படுபொருள், 2. பலபண்டம், 3. அப்பவருக்கம்.
பண்ணியாசிவகம்—நடை.
பண்ணுதல்—(தொ. பெ) செய்தல்.
பண்ணுவார்—நிரைப்பார்கள், 2. யாழ்ப்பாணர்.
பண்வணை—வாரக்குடி, 2. கும்பம், 3. ஓர்செடி, 4. ஓர்வகைக்கீரை, 5. விலங்கின்மேற்சேணம், 6. வயல், 7. விலங்கின்படுக்கை, 8. குளம், 9. மருதநிலம், 10. மரக்கலம், 11. மகளிர் கூட்டம், 12. மகளிர் விளையாட்டு.
பண்வணையாள்—வயல்வேலைக்காரன்.
பண்வணைவீடு—தானிய வீடு.
பண்பு—குணம், 2. விதம், 3. தகைமை, 4. சுபாவம்.
பண்புரைப்பார்—தூதுவர்.
பண்மை—தகுதி
பதகம்—பறவை, 2. பாதகம் என்பதின் குறுக்கம்.
பதகளிக்க—(வி) மனந்தளம்ப.
பதகன்—கொல்வோன்.
பதக்கம் — மார்பணி, 2. மாதரணிவடம்.
பதக்கு — குறுணி, இரண்டு மரக்கால் கொண்ட அளவு.
பதக்குப் பதக்கெனல் — அச்சக்குறிப்பு.
பதங்கமம்—பறவைப்பொது.
பதங்கம்—பறவை, 2. விட்டிற் பறவை, 3. பாதரசம், 4. திராவகம்.
பதங்கன்—சூரியன்.
பதங்கு—குழி, 2. ஒட்டுவரிசை, 3. பிளந்தபனையின்பாதி.
பதசம்—பறவை, 2. சந்திரன்.
பதஞ்சலி—ஓர் இருஷி.
பதஞ்சலியம்—பதஞ்சலி செய்தநூல்.
பதடி—பதர்
பதட்டம்—பதற்றம்.
பதணம்—மதிலுண்மேடை, 2. மதில்.
பதத்திரம்—சிறகு.
பதத்திரி—பறவை.
பதரியாசம்—ஓர்பூடு, 2. காலடி.
பதபதெனல்—ஈரடுக்கொலிக்குறிப்பு.
பதப்பாடு—மதிலுறுப்பு.
பதமம்—சந்திரன், 2. பறவை, 3. விட்டிற்பறவை.
பதமை—மிருது, 2. அமைதி, 3. மெல்லோசை, 4. மெத்தெனவு, 5. இணக்கம், 6. தாழ்மை.

பதம்—பக்குவம், 2. சோறு, 3. உண்ணுகை, 4. அழகு, 5. அறுகம்புல், 6. காலம், 7. நாழிகை, 8. சிந்து.
பதம்—கால், 2. செய்யுளடி, 3. மொழி, 4. இடம், 5. வரிசை, 6. பதவி, 7. அடையாளம், 8. வழி, 9. வீடுகட்ட நல்லிடமறியத் திட்டும் யந்திரம்.
பதரி—இலந்தைமரம்.
பதர்—பதடி, 2. அற்பம், 3. அறிவீனன்.
பதலம்—பதனம்.
பதலை மலை, 2. சிறுமலை, 3. மத்தளம், 4. வாயகன்றபறை, 5. தாழி, 6. ஒருகட்பறை, 7. தோணி.
பதவி — வழி, 2. நிலை, 3. செல்வம், 4. முத்தி, 5. கடவுள்பதவி, 6. தேவலோகம்.
பதவு—மெத்தனவு, 2. புற்கட்டு.
பதவை—வழி.
பதற—(வி) பதைபதைக்க, 2. தவிக்க, 3. திடுக்கிட, 4. அங்கலாய்க்க.
பதனம்—பத்திரம்.
பதனி—பதநீர், (பனைநீர்.)
பதன்—பக்குவம்.
பதாகன்—அரசன்.
பதாகினி—போர்ச்சேனை.
பதாகை — விருதுக்கொடி.
பதாசனம்—பாதபீடிகை.
பதாதி—காலாள், 2. சேனை, 3. படையிலோர்தொகை, 4. அங்கலாய்ப்பு.
பதாரம்—கால் துகள், 2. தெப்பம்.
பதார்த்தம்—கறிகள், 2. பொருள், 3. பதப்பொருள்.
பதி—இடம், 2. வீடு, 3. ஊர், 4. மருதநிலத்தூர், 5. நகரம், 6. பேயோட்ட வைக்கும் விளக்கு.
பதி — தலைவன், 2. கொழுநன், 3. அரசன், 4. எப்பொருட்கு மிறைவன், 5. மூத்தோன், 6. குரு.
பதிகம்—பத்துச் செய்யுளான் முற்றுப்பெறுமோர் பிரபந்தம், 2. முகவுரை, 3. பாசி.
பதிகன்—காலாள், 2. வழிச்செல்வோன்.
பதிக்க—(வி) அழுத்த, 2. இழைக்க, 3. முத்திரிக்க, 4. குழியாக்க, 5. தாழ்த்த, 6. எழுத, 7. பதியம் போட, 8. அடக்க.
பதிக்கினி—புருஷனைக் கொல்லுகிறவள்.
பதிதம்—வருணாச்சிரமந் தவறுகை.
பதித்திரி—உலைத்துருத்தி.
பதிப்பு—பதித்தல்.
பதிமை—பிரதிமை.
பதிய—(வி) அழுந்த, 2. இழைக்கப்பட, 3. முத்திரையழுந்த, 4. அமைய, 5. தாழ, 6. எழுதப்பட, 7. குனிய, 8. தங்க, 9. பணிய.
பதியம்—பதிப்பது, 2. பாசி.
பதிரன்—செவிடன்.
பதில்—வதில்.
பதிவிரதி—, பதிவிரதை— } கற்புடையாள்.
பதிவு—அழுந்துகை, 2. தாழ்வு, 3. நிலாப்பதிவு, 4. சாய்வு, 5. பதுக்கம், 6. கணக்கிற்பதிவு, 7. ஊன்றுகை, 8. சாந்தம், 9. விலைதணிவு.
பதிற்றந்தாதி — பத்துவெண்பா பத்துக் கலித்துறை பொருட்டன்மை தோன்றப் பாடப்படுமோர் பிரபந்தம்.
பதிற்றுப்பத்து—நூறு, 2. ஒருநூல்.
பதிற்றொன்பான்—தொண்ணூறு.
பதினாயிரம்—பத்தாயிரம்.
பதுக்கம்—ஒளிப்பு, 2. கபடம், 3. பதுங்குகை, 4. ஒதுக்கம்.
பதுக்காய்—கூழை, 2. உள்ளான் குருவி.
பதுக்கை — சிறுதிட்டை, 2. சிறுதூறு, 3. பாறை.
பதுங்க—(வி) ஒளிக்க, 2. பதிவிருக்க, 3. பின்னிற்க, 4. ஒடுங்க.
பதுமகோசரம் — நாட்டியத்தில் ஐந்து விரல்களும் மேனோக்கவிற்போல வளைத்துக்காட்டல்.
பதுமநிதி—தாமரையுருவாய்க் கிடக்கும் ஒருவகை நிதி.
பதுமபந்து—சூரியன், 2. தேனீ.
பதுமம்—தாமரை, 2. ஓர் புராணம், 3. சோதிநாள், 4. முடியுறுப்பு, 5. கோடாகோடி, 6. பதுமாசனம்.
பதுமயோனி—பிரமன்.
பதுமராகம்—செம்பு, 2. ஓர் இரத்தினம்.

பதுமரேகை — கையிரேகைகளிலொன்று.
பதுமனார்—நாலடியாருக்கு உரையெழுதின ஓர் ஆசிரியர்.
பதுமன்—பிரமன், 2. அட்டநாகத்தொன்று.
பதுமினி—நால்வகைப் பெண்களிலொருத்தி.
பதுமை—இலக்குமி, 2. காளி, 3. பொம்மை.
பதைக்க—(வி) துடிக்க, 2. அவஸ்தைப்பட, 3. வாஞ்சைப்பட, 4. அஞ்ச.
பதைபதைப்பு—மிகப்பதைத்தல்.
பதோதகம் — சதக்கல், 2. நடக்கையில் நீர்குடிக்கை.
பத்ததி—ஒழுங்கு, 2. கிரியைகளை விதிக்கிற நூல், 3. வழி.
பத்தம்—கட்டு, 2. உண்மை, 3. நன்றியறிகை.
பத்தர்—தட்டார், 2. தேவதொண்டர்.
பத்தல்—ஓர் தொட்டி, 2. நீர் இறைக்குஞ்சால், 3. யாழின் ஓருறுப்பு.
பத்தன்—தட்டானுக்குப் பட்டப்பெயர்.
பத்தன்— பக்தன்— } பத்தியுள்ளோன், 2. தொண்டன்.
பத்தா— பர்த்தா— } கணவன்.
பத்தாசு—மஞ்சி, (படகு.)
பத்தாயம்—தானிய முதலிய கொள்ளுந்தானம், 2. பெரும்பெட்டகம்.
பத்தாயி—சாராயவகை.
பத்தி—வரிசை, 2. வகுப்பு, 3. நிரை, 4. முறைமை, 5. வீட்டிறப்பு, 6. தூணினிடைவெளி, 7. பாத்தி, 8. விசுவாசம், 9. வழிபாடு, 10. அன்பு, 11. சார்பு, 12. ஒழுக்கம், 13. பதாதி.
பத்திமை—வணக்கம்.
பத்தியம்—இதம், 2. இணக்கம், 3. ஆரியமாந்திரமிவற்றின் செய்யுள்.
பத்திரம்—சீட்டு, 2. இலை, 3. புத்தகத்தேடு, 4. பூவிதழ், 5. சிறகு, 6. அம்பிறகு, 7. அம்பு, 8. மெல்லியதகடு, 9. உடைவாள், 10. பத்திரவாகரணம், (பஞ்சாங்கத்திலறிக), 11. அழகு, 12. மலை, 13. முடியுறுப்பு, 14. சர்க்கிரதை, 15. உறுதி.
பத்திரவம்—பத்திரவாகரணம்.
பத்திரன்—சிவன், 2. வீரபத்திரன்.
பத்திரி—கொத்தனம்.
பத்திரி—இலை, 2. அம்பு, 3. பறவை, 4. குதிரை, 5. காளி.
பத்திரிகை—திருபம்.
பத்திரை — இரண்டாமேழாம் பன்னிரண்டாந்திதி, 2. நற்பசு, 3. காளி.
பத்திரைகேள்வன் -வீரபத்திரன்.
பத்தினி — கற்புள்ளமனைவி, 2. இருஷிபத்தினி.
பத்து—ஓரெண், 2. தேவபத்தி.
பந்தகம்—கட்டு.
பந்தம்—முடிப்பு, 2. கட்டு, 3. தொடர், 4. திரட்சி, 5. கொண்டை, 6. உறவு, 7. முறைமை, 8. ஏற்பாடு, 9. மதில், 10. பெருந்துருத்தி, 11. மலம், 12. தீவர்த்தி, 13. தலை; இஃது யாப்புறுப் பெட்டிலொன்று, 14. அழகு.
பந்தயம் — ஓட்டம், சூதாடவைக்கும் பொருள்.
பந்தர்—ஓர் பட்டணம், 2. பந்தல்.
பந்தல்—காவணம், 2. கொடிபடர்பந்தல்.
பந்தனம்—கட்டு, 2. கட்டுகை, 3. காவல் செய்கை.
பந்தனை — கட்டு, 2. நிருணயம், 3. மகள்.
பந்தன்—ஓர் பாஷாணம், 2. ஓர் வாணிகன்; இவன்பேரில் ஔவை பந்தனந்தாதி எனும் நூல் பாடினார்.
பந்தி — ஒழுங்கு, 2. விருந்தின்பந்தி, 3. குதிரை முதலியவற்றின் பந்தி, 4. லாயம்.
பந்திக்க—(வி) கட்ட, 2. மாயாபந்தமாக்க.
பந்து — சுற்றம், 2. சுற்றத்தார், 3. விளையாடும் பந்து, 4. நூற்பந்து, 5. மட்டத்துருத்தி, 6. திரிகை, 7. தராசலோசனை.
பந்துக்கட்டு—கட்டுப்பாடு, 2. கட்டுக்கதை, 3. சம்பந்தக்கட்டு.
பந்துத்துவம்—இனதர்மம்.

பந்துரம்—அழகு.
பந்துவராளி—ஓர் இராகம்.
பந்தேஹாரு—சிறைச்சாலை.
பந்தையம்—பந்தயம்.
பப்பரப்புளி-பெருக்கமரம்.
பப்பரம்—ஓர் தேயம், 2. ஓர் பாடை.
பப்பரவாகனன்— } அருச்சுனன் குமாரன்.
பப்பருவாகனன்— }
பப்பளி—பப்பாளிமரம்.
பப்பளிச்சேலை—ஓர்வகைச் சேலை.'
பப்பாதி—பாதிபாதி.
பப்பாளி—பப்பளி.
பப்பீ—பரப்பு, 2. ஒப்பு, 3. பருப்பு.
பப்புவர்—புகழ்வோர்.
பமரம்—வண்டு.
பமோஜிப்—எற்க.
பம்—விண்மீன்.
பம்ப—(வி) நெருங்க, 2. பரவ, 3. எழும்ப, 4. பொலிய.
பம்பரத்தி—காமாதுரமுள்ளவள்.
பம்பரம்—ஓர் விளையாட்டுக்கருவி, 2. மந்தரகிரி, 3. வேசி.
பம்பா— } ஓர் நதி.
பம்பாநதி— }
பம்பை—ஓர்பறை, 2. முல்லைநிலப்பறை, 3. பம்பாநதி, 4. பாம்பன்வாய்க்கால்.
பம்மை—பறட்டைமயிர்.
பம்ம—(வி) நாலோட்ட, 2. மறைய.
பம்மாத்து—வெளிவேஷம்.
பயக்க—(வி) பயன்தர, 2. உண்டாக்க, 3. பிறப்பிக்க, 4. சித்திக்க.
பயங்கரம்—அச்சம்.
பயசு— } பால்.
பயம்— }
பயணம்—பிரயாணம்.
பயந்தாள்—தாய்.
பயப்பு—நிறம், 2. பசப்பு, 3. பயன்.
பயம்—அச்சம், 2. ஒடுக்கவணக்கம், 3. நீர், 4. பால், 5. குளம், 6. அமிர்தம், 7. பயன்.
பயம்பு—பள்ளம், 2. யானைபடுங்குழி.
பயரை—ஓர் மரம்.
பயல்—பையல், சிறுவன்.
பயறி—ஒரு குருநோய்.
பயறு—ஓர் தானியம், 2. சித்திரைநாள்.
பயற்றங்காய்—ஒரு காய்.
பயனுவமம்— } பயனைப்பற்றிவரு முவமை; அது: கற்பகவள்ளல் என்றாற்போல்வது.
பயனுவமை— }
பயன்—பலன், 2. பிரயோசனம், 3. சொற்பொருள், 4. அகலம்.
பயன்—பால், 2. நீர்.
பயிக்கம்—பிச்சை.
பயித்தியம்—பைத்தியம், 2. மதிகேடு, 3. மிண்டுத்தனம்.
பயிரங்கம்—அறிக்கைப்பத்திரம்.
பயிரி—ஒரு கீரை.
பயிர்—பைங்கூழ், 2. ஒலி, 3. பறவைக்குரல், 4. அழைப்பு.
பயிர்க்க—(வி) ஒலிக்க.
பயிர்ப்பு—அசுத்தம், 2. பயிலாத பொருளில் வருமருவருப்பு; இது: மகளிருக்குணம் நான்கினொன்று.
பயில—(வி) பழக, 2. சொல்ல, 3. நிகழ, 4. முயல, 5. நடக்க, 6. நெருங்க, 7. ஒலிக்க.
பயில்—பழக்கம், 2. சைகை, 3. சொல், 4. குழூஉக்குறி, 5. பாதி.
பயில்வு—பயிற்சி, 2 செய்கை.
பயிறல்—கூடுதல், 2. பேசலாலெழும்பும் ஒலி.
பயிற்சி—அப்பியாசம், 2. கைப்பழக்கம்.
பயிற்ற—(வி) கல்விபயிற்ற, 2. தொழில் பழக்க.
பயினி—இணக்கம்.
பயின்—பிசின், 2. உட்படுகுருத்து.
பயோததி—பாற்கடல்.
பயோதரம்—முலை, 2. மேகம்.
பய்யன்—பையன்.
பர—வேறு, 2. உசித, 3. திவ்விய, 4. விரோத, 5. மிகுந்த, 6. முன்.
பரகதி—முத்தி.
பரகிதம்—ஓர் வகைச் சோதிடநூல், 2. பிறர்க்கு நன்மையானது.
பரகுடிலம்—பிரணவம்.
பரக்க—(வி) பரம்ப, 2. விருத்தியாக, 3. மிக.

பரச—(வி) தோத்திரிக்க.
பரசிராமன் — மழுவுடையிராமன்; இவன்: சமதக்கினியும் இரேணுகையுந் தந்தை தாயாகத் திருமாலவதாரம்.
பரசு—கோடரி, 2. மழுவாயுதம்.
பரசுபாணி—சிவன், 2. பரசுராமன்.
பரடு—கரடு.
பரணம்—கவசம், 2. பட்டுச்சீலை, 3. தாபரிப்பு, 4. சம்பளம், 5. பரணி.
பரணர்—ஓர் சங்கப்புலவர்.
பரணி—ஒரு பிரபந்தம்.
பரணி—அடுப்பு, 2. ஓர் நாள், 3. அணிகலச்செப்பு முதலியன, 4. எரிமதகு, 5. கூத்து.
பரண்—இதணம், 2. மேற்றட்டு
பரண்டை—கணைக்கால்.
பரதகண்டம்—நவகண்டத்தொன்று.
பரதசாத்திரம்—நடனநூல்.
பரதந்திரம்—சுதந்திரமின்மை, மற்றொருவரைச் சார்ந்திருப்பது.
பரதம்—நடனநூல், 2. கூத்து, 3. நவகண்டத்தொன்று, 4. ஓரெண்.
பரதர்—நெய்தனிலமாக்கள், 2. செட்டிகள், 3. வைசியர்.
பரதவர்—நெய்தனிலத்துத் தாழ்ந்த ஆடவர்.
பரதன் — இராமன்தம்பி, 2. பரதநூல் செய்தோன், 3. ஓரிருஷி, 4. சந்திரகுலத்தோரரசன், 5. நடனம்பயின்றோன்.
பரதாக்கிரசன்—இராமபிரான்.
பரதி—நாடகி.
பரத்தர்—தூர்த்தர்.
பரத்துவம்—கடவுட்டன்மை.
பரத்துவாசன்—சத்த இருஷிகளிலொருவன், 2. துரோணாசாரியன்றந்தை.
பரத்தை—ஒரு செடி, 2 வேசி.
பரந்தாமன்—திருமால்.
பரபத்தியம் — புணங்கொடுக்கல் வாங்கல்.
பரபரத்தல்— } தீவரித்தல், 2. முயற்சி,
பரபரப்பு— } 3. நினைவு, 4. வயிறெரிதல்.
பரபரெனல்—(தொ. பெ) சீக்கிரக்குறிப்பு.
பரபிருதம்—காகம், 2. குயில்.
பரபிருத்தம்—காகம்.
பரபுட்டம்—குயில்.
பரபுட்டை—வேசி.
பரபோகம்—பேரின்பம்.
பரப்ப — (வி) பொருள்பரப்ப, 2. விரிக்க, 3. பரவச்செய்ய, 4. விருத்திசெய்ய, 5. ஒழுங்கின்றிவைக்க.
பரப்பல்—(தொ. பெ) பரவுதல்.
பரப்பு—விரிவு, 2. வியாபகம், 3. மிகுதி, 4. ஓர் நிலவளவுப் பிரமாணம், 5. கடல், 6. மேற்பரப்பு, 7. படுக்கை.
பரம — சிரேஷ்ட, 2. பிரதான, 3. திவ்விய.
பரமகதி—மோட்சம்.
பரமகருத்தன்—கடவுள்.
பரமசுந்தரி—தருமதேவதை.
பரமநிவர்த்தி—பாசவிமோசனம்.
பரமம்—உச்சிதம், 2. கடவுள்.
பரமன்—கடவுள், 2. சிவன்.
பரமாணு—தாக்கீது.
பரம் — உடல், 2. குதிரைக்கல்லணை, 3. மெய்க்கவசம்.
பரம்—மேலுலகம், 2. முற்றத்துறத்தல், 3. கடவுள், 4. பாரம்.
பரம்ப—(வி) பரவ, 2. விரிய, 3. படர.
பரம்பரம் — சுதந்திரம், 2. வமிசம், 3. பாரம்பரை.
பரம்பரன்—கடவுள்.
பரம்பரை—தொன்றுதொட்டது.
பரம்பர்—ஓர் சாதியார்.
பரம்பு — கழனி திருத்தும் பலகை, 2. வரம்பு.
பரர்—அன்னியர், 2. பகைவர்.
பரல்—பருக்கைக்கல், 2. வித்து.
பரவ—(வி) பரவ, 2. சொல்ல, 3. புகழ, 4. வணங்க.
பரவசம்—தன்வசமற்றிருத்தல்.
பரவணி—வமிசம்.
பரவர்—வலைஞர்.
பரவா— } முக்கியம்.
பர்வா— }

பரவை—பரப்பு, 2. கடல், 3. இலக்குமி கூத்து, 4. பிரபலம், 5. பரவியிருக்கும் நீர், 6. திடல், 7. சுந்தரர் மனைவி.
பரன்—கடவுள்.
பராகண்டம்— } அசட்டை, (பராமு
பராகண்டிதம்— } கம்.)
பராகம்—தூளி, 2. மகரந்தம், 3. வாசனைத்தூள்.
பராக்கதம்—தைரியம்
பராக்கிரமம்—வீரம், 2. வலி.
பராக்கிரமிக்க—(வி) ஆக்கிரமிக்க.
பராக்கு—அசட்டை, 2. விளையாட்டு, 3. நோக்கம், 4. ஓர் பிரபந்தம்.
பராசத்தி—பஞ்சசத்தியிலொன்று, அஃது பிராணன் முதலிய வாயுவாகநிற்பது.
பராசயம்—தோல்வி.
பராசரம் — சுருமநூல் பதினெட்டிலொன்று.
பராசரன்—வியாசன் தந்தை
பராசரியம்—சிற்பநூல் முப்பத்திரண்டிலொன்று.
பராசனம்—கொலை.
பராசியம்—பலரறிந்தது.
பராடம்—பாலைநிலம்.
பராதீனம்—சுதந்திரமற்றது
பராபத்தியம்—பாரபத்தியம்
பராபரம்—கடவுள், 2. சுடுத்தரம்.
பராபரி—ஒழுங்கு.
பராபரிக்க—(வி) ஒழுங்குபடுத்த.
பராபவ—ஓர் வருடம்.
பராபவம்—அபசாரம், 2. தோல்வி.
பராமரிக்க — (வி) நடத்த, 2. பத்திரப்படுத்த, 3. வளர்க்க, 4. ஆதரிக்க, 5. ஆராய.
பராமரிசம்—தீர்க்கவிசாரித்தறிகை
பராமுகம் — அறிமுகப்படாமை, 2. கவனிப்பின்மை.
பராயணம்—பற்று, 2. அறுசமயத்தொருவகுப்பு, 3. இராசிமண்டலம்.
பராயணி—கன்னன்.
பராரி—தன்னுபடி.
பராரை—உன்னோசை, 2. பருமரத்தடி.
பரார்த்தம்— } ஆயிரங்கோடாகோடி, 2.
பரார்த்தம்— } பிரமனுயிரிற் பாதி.

பராவ—(வி) சொல்ல, 2. துதிக்க, 3 வணங்க.
பராவர்த்து—கனிசம்.
பரி—சுமை, 2. குதிரை, 3. பாதுகாப்பு, 4. அக்கினி, 5. பருத்தி, 6. வழி, 7. கறுப்பு, 8. அன்பு, 9. வருத்தம், 10. பெருமை, 11. உயரம், 12. விரைவு
பரிகம்—அகழ், 2 வளைதடி, 3. மதிலுண்மேடை.
பரிகலம்—உண்கலம், 2 சேனை, 3. பரிவாரப்பேய்.
பரிகாசம்— } பகிடி, 2. நிந்தனை.
பரியாசம்— }
பரிகாரம்—நீக்குகை, 2. மாற்றுமருந்து, 3. வைத்தியம், 4. பராமரிப்பு, 5 போஷிப்பு, 6. பெண்மயிர்.
பரிகை—அகழ், 2. மதிலுண்மேடை.
பரிக்க—(வி) சுமக்க, 2. காக்க.
பரிக்காரம்—அலங்காரம்.
பரிக்கிரகம்—மனைவி, 2. அங்கீகரிப்பு.
பரிக்கை—பரிட்சை.
பரிசணிக்க—(வி) மிருதுவாய்ப்பேச.
பரிசம்—கற்பாஷாணம், 2. மணவாளன் பெண்ணின் பிதாமாதாவுக்குக் கொடுக்கும்வெகுமானம், 3. கிரகணம்பற்றல்.
பரிசனம் — ஏவல் செய்வோர், 2. சூழ்வோர், 3. உறவு.
பரிசனன்—காற்று.
பரிசவை—பழக்கம், 2. ஐக்கம்.
பரிசன்னியம்—பொன்மலை.
பரிசாரகம்—ஏவல்வேலை.
பரிசாரம்—பரிவாரம்.
பரிசிக்க—(வி) தொட்டறிய, 2. மறைக்க, 3. அனுபவிக்க, 4 பழக.
பரிசில்—வெகுமதி.
பரிசு — பெருந்தன்மை, 2. குணம், 3. தன்மை, 4. நாகரிகம்.
பரிசு—வெகுமதி, 2. நற்குணம்.
பரிசை—கேடகம்.
பரிச்சதம்—மூடி.
பரிச்சித்து—அருச்சுனன் பௌத்திரன்.
பரிச்சேதம்—கண்டிப்பு, 2. இலக்கியப்பிரிவு, 3. பகுத்தறிகை, 4. எல்லை, 5. முழுவதும்.

பரிச்சை—பழக்கம்.
பரிஞ்சு—வாட்பிடி.
பரிஷ்காரம்—அலங்காரம், 2. முடிவு.
பரிட்சாவிற்பத்தி—அப்பியாசத்திறம்.
பரிட்சிக்க—(வி) சோதிக்க, 2. அப்பியாசிக்க.
பரிட்சித்து—பரிச்சித்து.
பரிட்சை—சோதனை, 2. அப்பியாசம்.
பரிட்டினகம்—பட்சி வட்டமிடுதல்.
பரிணமிக்க—(வி) பேதப்பட, 2. வேறுபட.
பரிணயம்—விவாகம்.
பரிணாமம்—வேறுபாடு.
பரிதபித்தல்—(தொ. பெ) இரங்குதல், 2. துக்கித்தல்.
பரிதாபி—ஓராண்டு.
பரிதானம்—கைக்கூலி, 2. பொருள்கொடுத்துப் பொருள்வாங்குதல்.
பரிதி—வட்டம், 2. சக்கராயுதம், 3. பரிவேடம், 4. தேருருளை, 5. சூரியன், 6. ஒளி, 7. யூபஸ்தம்பம், 8. யாகமேடை.
பரித்தல்—(தொ. பெ) காத்தல், 2. சுமத்தல்.
பரித்தியாகம்—முற்றும் விடுதல்.
பரித்தியாகி—சன்னியாசி.
பரிபக்குவம்—ஏற்றசமயம்.
பரிபவம்—தோல்வி, 2. எளிமை, 3. வியாகுலம்.
பரிபாகி—முத்திபடையும் பக்குவன்.
பரிபாடல்—எட்டுத் தொகையில் ஐந்தாவது தொகையாகிய ஒரு நூல்; இது: கடைச்சங்கப் புலவர்களாலியற்றப்பட்ட எழுபது பரிபாடல்களையுடையது.
பரிபாடை—சங்கேதம், குழூஉக்குறி.
பரிபாலனம்—ஆளுகை, 2. காவல்.
பரிபுரம்—காற்சிலம்பு.
பரிபூரணம்—எங்கு நிறைதல், 2. திருத்தி.
பரிபூரணி—இலட்சுமி, 2. பார்ப்பதி.
பரிப்பு—பரித்தல்.
பரிமளகந்தி—வியாசன்றாய்.
பரிமளம்—மிகுமணம், இது: அட்டயோகத்தொன்று.

பரிமாணம்—அளவு.
பரிமாறுதல்—(தொ. பெ) இடுதல், 2. கொடுத்துமாறுதல்.
பரிமேலழகர்—திருவள்ளுவர் குறளுக்கு உரைசெய்த ஓரந்தணக் கவிஞர்.
பரியகம்—காற்சரி, 2. பாதகிண்கிணி.
பரியங்கம்—கட்டில்.
பரியந்தம்—எல்லை.
பரியம்—பரிசம்.
பரியாயச்சொல்—ஒரு பொருள் குறித்த மறுசொல்.
பரியாயநாமம்—ஒருபொருட் கினமாயிருப்பது.
பரியாயம் — ஒன்றற்குரியன, 2. மாதிரி, 3. ஒழுங்கு.
பரியாரி—நாவிதன்.
பரிவட்டம்—சீலை, 2. தெய்வார் கருவியிலொன்று.
பரிவருத்தனை — ஓரலங்காரம், அஃது பொருள் ஒன்றற்கொன்று கொடுத்து வேறொன்று கொண்டனவாகக் கூறுவது.
பரிவாரம்—சூழ்வோர், 2. படை.
பரிவிருத்தி — கிரகச்சுற்று, 2. முழுவட்டம்.
பரிவு — அன்பு, 2. இன்பம், 3. துன்பம்.
பரீகம்—நித்தியயோகத்தொன்று.
பரீட்சணம்—சோதனை.
பரீட்சிக்க—(வி) சோதிக்க, 2. பயில.
பரீட்சை— } சோதனை, 2. ஆராய்வு, 3
பரீக்ஷை— } அப்பியாசம்.
பரீஷ்டி—ஆராய்வு.
பரு—சிலந்தி, 2. பருமை.
பருக—(வி) குடிக்க, 2. புசிக்க, 3. நுகர.
பருக்க—(வி) பெருக்க, 2. வளர, 3. கனக்க, 4. பெருக, 5. அதிகரிக்க.
பருக்கன்—பரும்படியானது.
பருக்கை—பளிங்கு, 2. சோறு, 3. பருக்கைக்கல்.
பருணிதர்—புலவர்.
பருத்தி—ஓர் செடி.
பருத்தித்துறு—வாய்க்கிரந்தி.
பருந்து—ஓர் பறவை.

பருபருக்கை – வேவாச்சோறு, 2. பால் போல்வன.
பருபாரித்தல் – (தொ. பெ) மிகப்பருத் தல்.
பருப்பதம்–மலை.
பருப்பதி–பார்வதி.
பருப்பம் – பருமை, 2. பருத்தல், 3. அளவு.
பருப்பிக்க–(வி) பருக்கச்செய்ய, 2. பா ரித்துரைக்க.
பருப்பு–வித்தினுட்பருப்பு.
பருமம்–மூவாறு கோவைமணியணி, 2. அடிப்பு.
பருமம்–கவசம், 2. குதிரைக்கல்லணை.
பருமல்–கட்பற் குறுக்குமரம்.
பருமன்–பருத்தது.
பருமிக்க–(வி) சிலம்பஞ்செய்ய, 2. அல ங்கரிக்க, 3. எக்களிக்க.
பருமிதம்–எக்களிப்பு, 2. மகிழ்ச்சி.
பருமை – பெருமை, 2. பருப்பம், 3. பரும்படியான தன்மை, 4. கனம்.
பரும்படி–உரப்பு, 2. செவ்வையின்மை.
பருவதம்– } மலை.
பர்வதம்– }
பருவம்–காலம், 2. இருது, 3. பௌர் ணமி, 4. இளமை, 5. அமாவாசி, 6. கணு, 7. உயர்ச்சி, 8. தக்ககாலம், 9. வயது, 10. பக்குவம், 11. சிலை மை, 12. அளவு, 13. தகுதியான வய து, 14. ஓர் நூற்கூறுபாடு.
பருவரல்–துன்பம்.
பருவருக்க–(வி) வருந்த, 2. அருவருக்க.
பருவல்–பருத்தது.
பருவு–பரு உகரஞ்சாரியை.
பரூஉ–பருமை, 2. பறித்தல்.
பரை–ஓரளவு.
பரை–பார்வதி.
பரோட்சம்–அறிரியமானவை.
பர்காவணி–நாணய பரீட்சை.
பர்க்கம்–ஒளி.
பர்க்கன் – சூரியன், 2. சிவன், 3. விஷ் ணு, 4. பிரமன்.
பர்ணம்–பன்னம், (இலை.)
பர்தரப்–தள்ளுதல்.
பர்த்தா–பத்தா, (கணவன்.)
பர்ப்படாகம்– } ஓர் மருந்துப்பூடு.
பர்ப்பாடகம்– }
பல–ஒன்றல்லன.
பலகணி–சாளரம்.
பலகறை–கவடி.
பலகாரம்–அப்பவருக்கம், 2. தின்பண்ட முதலியவை, 3. யானைமேற்றவிசு.
பலகை–மரப்பலகை முதலியன, 2. கே டகம், 3. நெற்றியெலும்பு.
பலக்க–(வி) உறுதிப்பட, 2. வன்மை யாக, 3. அதிகப்பட.
பலசூதனன்–இந்திரன்.
பலட்சயம்–பலவீனம்.
பலண்டு–வெங்காயம்.
பலண்டுறுகம்–ஓர் பாஷாணம்.
பலதேவன்– } பலபத்திரன்.
பலராமன்– }
பலபத்திரன்–பலதேவன்.
பலபலெனல்–இலகுதல், 2. ஒலிக்குறி ப்பு.
பலபை–சூரியன் மையவரியினிற் கை யிற் கடிகாரமத்தியில் விழுநிழல்.
பலப்பட –(வி) ஸ்திரப்பட, 2. பயப் பட, 3. சூலாக.
பலப்பம்–ஓர்வகை மாக்கல்.
பலம் – வலி, 2. வன்மை, 3. படை, 4. உறுதி, 5. ஓர்நிறை, 6. நிறைகல், 7. காய், 8. பழம், 9. விளைப்பேறு, 10. பயன், 11. பொன், 12. கிழங்கு, 13. தசை, 14. நெற்றி.
பலரறிசொல் – பிரசித்தவார்த்தை, 2. அலர்மொழி, 3. உயர்திணைப் பன் மைச்சொல்.
பலர்–அனேகர், 2. சபை.
பலர்க்கம்–கதுப்பு.
பலவத்தர் – பரிசமாத்திரா தத்துவத் திருக்குமோ ருருத்திரர்.
பலவந்தம்–கட்டாயம்.
பலவன்–ஒரு மருந்துப்பூண்டு; அது: வெடிப்பலவன், பேய்ப்பலவன் என இருவகைத்து.
பலவு–பலாமரம்.

மனுநீதி— } மனுமுறை.
மனுநெறி— }
மனுவந்தரம்—மனுவின் காலவளவு.
மனுவர்—கம்மாளர்.
மனுஸ்ம்ருதி—மனுதர்மசாஸ்திரம்.
மனை—இரண்டாயிரத்து நானூறு குழி கொண்டநிலம், 2. வீடு, 3. மனைவி, 4. குடும்பம், 5. சூதாடுபலகையி னறை.
மனைக்கிழத்தி—மனைவி.
மனைக்கோள்—பல்லி.
மனையறம்—இல்லொழுக்கமாகிய தருமம்.
மனையாட்டி— } மனைவி.
மனையாள்— }
மனைவாழ்க்கை—இல்லாச்சிரமம்.
மனைவி—நாயகி.
மனோகரம்—அழகு, 2. மகிழ்ச்சி.
மனோசிலை—ஒரு மருந்து; விளைவுப்பாடாண முப்பத்திரண்டி னொன்றென்பர்.
மனோச்சாகம்—மனவூக்கம்
மனோபலம்—தைரியம்.
மனோபாவம்—மனவெண்ணம்.
மனோபாவனை—மனப்பாவிப்பு.
மனோரஞ்சிதம்—மனப்பிரியம்.
மனோரதம்—இன்பம், 2. விருப்பம்.
மனோரம்மியம்—மனத்திருத்தி.
மனோலயம்—மனவொடுக்கம்.
மனோற்பவன்—மன்மதன்.
மனோன்மணி—பார்வதி, 2. அப்பிரகம்.
மன்—அசைச்சொல் (உ—ம்.) அது மற் கொண்கன்றேரே, 2. பெருமை, 3. ஆக்கம், 4. மிகுதி, 5. அரசன், 6. நிலைபேறு.
மன்பதை—மக்கட்பரப்பு.
மன்மத — இருபத்தொன்பதாவது வருஷத்தின் பெயர்.
மன்மதன் — காமன், 2. மனங்கலக்குவிப்போன்.
மன்வந்தரம்—மனுவந்தரம்.
மன்விருத்தம்—ஆசிரியவிருத்தம்.
மன்ற—அசைச்சொல், 2. உறுதியாக, 3. நிச்சயமாக.

மன்றம்—அம்பலம், 2. வெளி, 3. நெடுந் தெரு, 4. வாசனை, 5. நிச்சயம்.
மன்றல்—விவாகம், 2. வாசனை, 3. பாலையாழிசை.
மன்றுட—(வி) வேண்ட.
மன்று—சபை, 2. சிதம்பரம், 3. வெளி.
மன்னவன்— } அரசன், 2. உத்திரட்டாதி, 3. எப்பொருட்கு மிறைவன்.
மன்னன்— }
மன்னார்—ஒரூர், இது கடற்கரையிலுள்ளது, 2. பகைவர்.
மன்னிக்க—(வி) பொறுக்க.
மன்னிறைதருதல்—(தொ. பெ) இறை கொடுத்தல்.
மன்னுதல்—(தொ. பெ) நிலைபெறுதல், 2. சேர்தல்.
மன்னை—தொண்டை, 2. கோபம், 3. கதுப்பு.
மன்னோ—அசைச்சொல்.

## மா

மா—இடிததமா, 2. மாமரம், 3. தேமாமரம், 4. சரச்சுவதி, 5. விலங்கின் பொது, 6. குதிரைப்பொது, 7. வலி, 8. கறுப்பு, 9. சீலை, 10. வண்டு, 11. வயல், 12. துகள், 13. அழைப்பு, 14. நஞ்சுக்கொடி.
மா—இலக்குமி, 2. செல்வம், 3. அழகு, 4. வெறுப்பு, 5. மாதா.
மாகதர்—இருந்தேத்துவோர், 2. மகத தேயத்தார்.
மாகதி—திப்பிலி, (ஒரு சரக்கு), 2. முல்லைக்கொடி.
மாகந்தம்—மாமரம்.
மாகம்—மாசிமாதம், 2. மகநாள், 3. ஆகாயம்.
மாகயம்—கௌரிபாடாணம்.
மாகாணம் — தேசம், 2. தாலுகா, 3. நாடு.
மாகாணி—ஓரெண். அது பதினாறிலொன்று.
மாகுலவர்—வேடர்.
மாகேசுவரி—பார்வதி.
மாக்கள்—மனிதர்கள், 2. விலங்குகள்.

மாங்கல்யம்— } தாலி.
மாங்கல்லியம்— }
மாங்கன்—ஓர் மீன், 2. ஓரீரல்.
மாங்கிசம்— } மாமிசம்.
மாங்கிஷம்— }
மாங்குடி—ஓரூர்.
மாசக்காய்—ஒருமருந்துச் சரக்கு. (இதனை மாச்சக்காயென்பர்).
மாசம்—மாதம்.
மாசனம்—ஓர் லாகரி மருந்து.
மாசி—ஓர் மாதம், 2. மகநாள், 3. புது வரம்பு, 4. மேகம்.
மாசிகம்— } இறந்தோர்க்கு மாசந்தோறுஞ்செய்யுமோர்கடன்.
மாசியம்— }
மாசிப்பத்திரி—ஓர் பூடு.
மாசு—அழுக்கு, 2. குற்றம், 3. மேகம், 4. கருமை, 5. பால்வீதிமண்டலம்.
மாசுணம்—மலைப்பாம்பு, 2. பெரும்பாம்பு.
மாசேனன்—அருகன், 2. திருமால்.
மாசை—பொன்.
மாச்சரியம்—பொறாமை.
மாச்சல்—வருத்தம்.
மாஞ்சி—சடாமாஞ்சில், (ஒரு மருந்து), 2. பெருங்கோரைப்புல், 3. மண்ணீரல்.
மாடகம்—வீணை முறுக்காணி.
மாடம்—உப்பரிகை, 2. வீடு, 3. உழுந்து.
மாடல்—(தொ. பெ) செய்தல்.
மாடன்—முட்டாள், 2. ஓர்பேய்.
மாடி—அரமனை, 2. இக்கட்டு, 3. கோபம், 4. புடவையோரம்.
மாடு—மாட்டின்பொது, 2. இடம், 3. பக்கம், 4. ஓருருபிடைச்சொல்.
மாடு—செல்வம், 2. பொன், 3. அகன்மணி.
மாடை — பொன், 2. அரைவராகனெடைப்பொன்.
மாட்சி— } மகிமை, 2. அழகு.
மாட்சிமை— }
மாட்ட — (வி) பூட்ட, 2. அடிக்க, 3. நுழைக்க.
மாட்டார்—இயலாதோர்.

மாட்டிலையான்—பெரிய ஈ.
மாணம் — மாட்சிமை. (அம்—சாரியையென்பர்.)
மாணல்—மாட்சிமை.
மாணவகன் — மாணாக்கன், 2. பிரமசாரி.
மாணவன்—மாணாக்கன்.
மாணவ்வியம்—பிள்ளைத்தன்மை.
மாணாக்கன்—கற்போன்.
மாணி—ஆண்குறி, 2. குறள்வடிவம்.
மாணிக்கம்—நவமணியிலொன்று.
மாணிக்கவாசகர்—திருவாதவூரடிகளுக்கொருபெயர்.
மாண்—பெருமை.
மாண்டூகம்—உபநிடத முப்பத்திரண்டனுளொன்று.
மாதங்கம்—யானை, 2. அரசாட்சி.
மாதங்கர்—சண்டாளர்.
மாதங்கன்—கீழ்மகன், 2. வேடன், 3. அரசமாதுக்கும் வேடனுக்கும் பிறந்து செருப்புத்தைப்போன்.
மாதங்கி—காளி, 2. துர்க்கை.
மாதம்—மாசம், 2. கிராம்பு.
மாதரி—காளி.
மாதர்—பெண்கள், 2. தலைவியர், 3. அழகு, 4. ஆசை.
மாதலி— } இந்திரன்சாரதி.
மாதுலி— }
மாதவம் — வசந்தகாலம், 2. வைகாசி மாதம், 3. கள், 4. தவம்.
மாதவன்—வசந்தன், 2. மகாவிஷ்ணு.
மாதவி—தூதிகை, 2. நாடகக்கணிகை, 3. அருச்சுனன் மனைவி, 4. கோவலன் காதல்மாது, 5. குருக்கத்திமரம்.
மாதவளை—மாதுளஞ்செடி.
மாதா—தாய், 2. பார்வதி.
மாதாமஹன் — தாயைப்பெற்ற பாட்டன்.
மாதி—வட்டமாயோடல்.
மாதிகம்—குதிரைமார்க்கம்.
மாதிரம்—ஆகாயம், 2. திசை, 3. பூமி, 4. மலை, 5. யானை.
மாதிரி—சாயல்.
மாதிரிகை—விதம்.

மாது—பெண், 2. ஓரசைச்சொல்.
மாதுகரம்— } பிரமசாரிப்பிச்சை.
மாதூகரம்—
மாதுரியம்—இனிமை.
மாதுரு—மாதா.
மாதுலன்—தாயுடன்பிறந்த மாமன்.
மாதுலுங்கம்— } மாதளஞ்செடி
மாதுளங்கம்—
மாதுளம்—
மாதுவம்—கள்.
மாதோ—ஓரசைச்சொல்.
மாத்தியானம்— } மத்தியானம்
மாத்தியான்னம்—
மாத்திரம்—பிரமாணம, 2. தனிமை.
மாத்திரை—குளிகை, 2. அளவு, 3. எழுத்தினளவு, 4. கணம், 5. காலவிரைவு.
மாத்திரைக்கோல்—அளவுகோல்.
மாந்த—(வி) உண்ண, 2. குடிக்க, 3. ஊழ்வினைப்பயனனுபவிக்க.
மாந்தம்—ஒருநோய், (மந்தம்.)
மாந்தன்—ஆண்மகன், 2 மனிதன்.
மாந்தாதா—ஓரரசன்.
மாந்தி—மாமரம், 2. ஓர் கலியாணச்சடங்கு.
மாந்திரியர்—மந்திரவாதிகள்.
மாந்தை—ஒரூர்.
மாபலன்—காற்று.
மாபலி—ஒரு சக்கரவர்த்தி.
மாப்பிள்ளை—மணமகன்.
மாப்பு—மன்னிப்பு, 2. மிகுதி, 3. மீன்திரள்.
மாமகன்—அம்மான், 2. பிசுனன்.
மாமடி—மாமன்.
மாமணி—மாணிக்கம்.
மாமன்—தாயுடன்பிறந்தோன், 2. அத்தைகொழுநன்.
மாமாங்கம்—கும்பகோணத்தில் பன்னிரண்டு வருஷத்துக்கொருதரம் நடக்கும் விசேஷ திருவிழா.
மாமி—அம்மான்மனைவி.
மாமிசம்— } தசை.
மாம்சம்—
மாமிலத்து— } பணம் அறுவிடுமுறை.
மாமலத்து—
மாமூலனார்—சங்கப்புலவருளொருவர்.
மாமூல்—புராதனவழக்கம்.
மாமை—அழகு, 2. நிறம்.
மாயம்—வஞ்சனை, 2. தந்திரம், 3. பொய், 4. தீமை, 5. அழகு, 6. கறுப்பு.
மாயவரம்—ஒரூர்.
மாயவன்—திருமால், 2. கரியவன்.
மாயாதேவி—புத்தன்றாய்.
மாயாபுரி — சப்தபுரிகளிலொன்று, 2. பித்தளை, 3 பாபசரீரம்.
மாயாவி—ஓரசுரன்; இவன் வாலியாற் கொல்லப்பட்டவன்.
மாயிலி—ஓர்வகைப் படவு.
மாயுநாடி—பித்தநாடி
மாயூரம்—ஒரூர், 2. மயில்.
மாயேசுவரி — சத்தமாதரி லொருத்தி, பார்வதி.
மாயை—பொய், 2. மாயாசத்தி, 3. வஞ்சகம், 4. இந்திரசால முதலியன, 5. இலக்குமி, 6. காளி, 7. இரதி, 8. சத்தபுரியிலொன்று, 9. வித்தியாதத்துவம் எழிலொன்று.
மாயையுற்றாள்—காளி.
மாயோன்—திருமால்.
மாய்ச்சல்—சாவருத்தம்.
மாய்ச்சி—பூட்டு விலங்கு.
மாய்தல்—(தொ பெ) சாதல், 2 மறைதல்.
மாய்த்தல் — (தொ. பெ) கொல்லல், 2. மறைத்தல்.
மாய்மாலம்—மாரீசம்.
மாரகம்—மரணம், 2. மரணம் வருவிக்கிறது, 3. மாரி.
மாரகன்—கொல்வோன்.
மாரசயன்—புத்தன்.
மாரணம்—கொலை, 2. மந்திரத்தாற் கொல்லல்.
மாரன்—காமன்.
மாராட்டம்—ஒரு தேயம்.
மாராயம்—நற்செய்தி, 2. வந்தனம்.
மாரி—மழை, 2. மேகம், 3. நீர், 4. கள்.
மாரி—சாவு, 2. ஓர் ஒட்டுநோய்.
மாரிசா—பெருந்திரைக்கிளர்ச்சி, 2. மாறுபாடு.

மாரிநாள்—உத்திரநாள்.
மாரீசம்—வஞ்சகம்.
மாரீசன்—இராவணன் மாமனுன ஓரரக்கன்.
மாருதம்—காற்று, 2. வாயு.
மாருதி—அனுமான், 2. வீமன்.
மார்—மார்பு, 2. இடைச்சொல்.
மார்கழி—ஓர் மாதம், 2. மிருகசீரிடம்.
மார்க்கசிரம்—மார்கழிமாதம்.
மார்க்கணம்—இரப்பு, 2 அம்பு, 3. தேடுகை.
மார்க்கண்டர்— } மிருகண்டு முனிவர் புத்திரர்.
மார்க்கண்டேயர்— }
மார்க்கம்—வழி, 2. ஒழுக்கம், 3. மார்கழிமாதம், 4. நெடுங்தெரு, 5. ஓர் கூத்து.
மார்ச்சனம்—துடைத்தல்
மார்ச்சனி—விளக்குமாறு.
மார்ச்சனை—முழவொலி, 2 முழவின் வார்.
மார்ச்சாலம்—பூனை.
மார்த்தாண்டன்—சூரியன்
மார்பகம்— } நெஞ்சு.
மார்பம்— }
மார்பு—நெஞ்சு, 2. அகலம்
மால—(வி) மயங்க.
மாலதி—சிறுசண்பகம், 2. மல்லிகை, 3. விளக்குத்தண்டு.
மாலமாய்ம்—பேயின்றந்திரம்.
மாலம்—குங்குமமரம், 2. பேய்.
மாலயம்—சந்தனம்.
மாலர்—கவசம், 2. வேடர், 3. புலையர்.
மாலவன்—புதன்.
மாலி—ஓரிராக்கதன், 2. மாலையணிந்தோன், 3. கள்.
மாலிகை—மாலை, 2. விரல்படரிற்குங்குழூஉ.
மாலிங்கம்—இலிங்கபாஷாணம்.
மாலிமி—இளம்பருவத்திற் செய்நட்பு.
மாலியவான்—ஓரரக்கன்.
மாலினி—துர்க்கை.
மாலுகம்—வேப்பமரம்.
மாலுதானம்—கண்குத்திப்பாம்பு.
மாலுமி—கப்பலோட்டி.

மாலூரம்—வில்வமரம்.
மாலை—பூ முதலிய தொடுத்தமாலை, 2. ஓர் பிரபந்தம், 3. ஒழுங்கு, 4. இயல்பு, 5. அந்திப்பொழுது, 6. பெண்.
மாலைக்கண்—மாலைக்காலத்திருட்பிடிக்குங்கண்.
மாலைசூட்டு—சுயம்வரம்.
மாலைமாற்று—ஓர் சித்திரகவி.
மாலையணி—ஓரலங்காரம். (முன்வந்த சொல்லைப் பின்னு மறுவதித்து மொழிதல்.)
மாலோன்—திருமால், 2. புதன்.
மால்—பெருமை, 2. மயக்கம், 3. மகாவிஷ்ணு, 4. அருகன், 5 இந்திரன், 6. புதன், 7. சோழன், 8. காற்று, 9. மேகம், 10. கருமை, 11. வேட்கை, 12. கண்ணோணி, 13. சிற்பத்தொழிற் கருவியிலொன்று.
மால்பு—கண்ணேணி.
மாவலர்—குதிரைப்பாகா, 2. யானைப்பாகர்.
மாவிலங்கு— } ஓர் மரம்.
மாவிலங்கை— }
மாவிளம்—வில்வமரம்.
மாவுத்தன்—யானைப்பாகன், 2. குதிரைப்பாகன்.
மாழாக்க—(வி) மயங்க.
மாழை—பொன், 2. அழகு, 3. திரட்சி, 4 அறிவின்மை, 5. உலோகக்கட்டி, 6 ஓலை, 7. மாமரம், 8. புளிமாமரம்.
மாழ்கு—மிருகசீரிடம்.
மாழ்குதல்—(தொ. பெ) மயங்குதல்.
மாள—ஓர் முன்னிலை அசை.
மாள—(வி) அழிய, 2. ஒழிய, 3. இயல.
மாளயம் – புரட்டாசிமாதத்திற் பண்ணும் பொதுச்சிரார்த்தம்.
மாளவம்—தேய்மைம்பத்தாறி னொன்று.
மாளவி—ஓரிராகம்.
மாளிகை—அரசன்மனை, 2. வீடு.
மாறன்—பாண்டியன், 2. சடகோபாழ்வார்.
மாருட—(வி) புரட்ட, 2. தமொற.
மாருட்டம்—மாறுபாடு.

மாறு—துடைப்பம், 2. மிலாறு, 3. வேறு, 4. பகை, 5. கைம்மாறு
மாறுகண்—ஓரக்கண்.
மாறுகம்—சீலை
மாறுகோள் — விரோதம், 2. ஒவ்வாமை.
மாற்சரியம்—பொறாமை, (இஃது உட்பகையாறினுென்று.)
மாற்ற—(வி) வேறுபடுத்த, 2. செம்மைப்படுத்த, 3. நீக்க, 4. கலைக்க, 5. கெடுக்க, 6. நிக்கிரகிக்க, 7 பணமாற்ற, 8 தாமதிக்க.
மாற்றம்—சொல, 2. பகை, 3. வேறுமை.
மாற்றலர்—பகைவர்.
மாற்றவள்—சக்களத்தி
மாற்றுன்—பகைவன்.
மாற்று—உபசாந்தம, 2. மாறுதல், 3. பொன்வெள்ளிகளின் மாற்று
மான—உவமைச்சொல, 2 முன்னிலை பகைச்சொல், 3 ஓர் வினையெச்சம்.
மானசம் — மானதம்; அது மனத்தாற் செய்வது, 2. மானசவாவி மானமடு எனவுங் கூறுவர்
மானதம்—மானசம்
மானதீபம்—உபநிடத முப்பத்திரண்டி னுென்று
மானத்தாழ்ச்சி—மானக்கேடு.
மானவம்—உபபுராணத்தொன்று.
மானவர்—மனிதர், 2. மானமுள்ளவர்.
மானுகம்—பெருநாரை
மானுர்—பெண்கள், 2. பகைவர்
மானிக்க—(வி) மதிக்க.
மானிடம்— } மனுஷப்பிறப்பு.
மானுடம்— }
மானுஷம்— }
மானியம் — அரசர்கள் சம்மானமாக விட்ட நிலம்.
மானினி—பெண்.
மானுதல்—(தொ. பெ) ஒத்தல்.
மான்—ஓர் மிருகம், 2. உருவம், 3. குதிரை, 4. மகரராசி, 5. மகரமீன், 6. விலங்கின்பொது.
மான்மகன்—பிரமன், 2. மன்மதன்.
மான்மதம்—கஸ்தூரி.
மான்மியம்—மகிமை.
மான்றலை—மிருகசீரிடம்.
மான்றல்—(தொ பெ) மயங்கல்.

## மி

மிக—(வி) அதிகரிக்க
மிகுக்க—(வி) அதிகப்படுத்த, 2. உயர்த்த, 3. பெருக.
மிகுதம்— } அதிகம், 2. மீதி, 3. திரட்சி, 4 பூரிப்பு, 5. பொலிவு.
மிகுதி— }
மிகை—மிகுதி, 2 துன்பம், 3. கேடு, 4. வருத்தம், 5 குற்றம்.
மிக்கவன்— } உயர்ந்தோன்
மிக்கான்— }
மிக்கிளமை—கட்டிளமை.
மிக்கோர்—அறிஞர்.
மிசிரம்—கலப்பு.
மிசுக்கன்—ஈனன், 2 தரித்திரன்.
மிசுக்கை—அற்பத்தனம்.
மிசை—உயர்ச்சி, 2 மேடு, 3 தரித்திரம, 4. சோறு, 5 மேல்.
மிசைய—(வி) உண்ண.
மிசைவடம்—வீரதண்டை
மிச்சம்—மீதி.
மிச்சிரம்—கலப்பு.
மிச்சில்—எச்சில், 2. ஒழிபொருள்.
மிச்சை—பொய், 2. அஞ்ஞானம், 3. தரித்திரம்.
மிஞிறு—வண்டு.
மிஞ்ச—(வி) மிக, 2. பெருமைகொள்ள.
மிஞ்சி—காலணியிலொன்று.
மிடல்—வலி.
மிடறு—தொண்டை, 2. கழுத்து, 3. கீழ்வாய்.
மிடா—குழிசி, 2. பானை.
மிடி—தரித்திரம்.
மிடிக்க—(வி) வறுமையுற.
மிடிமை—வறுமை.
மிடியன்—தரித்திரன்.
மிடுக்கு—வலி.
மிடை—தூறு.
மிடைய—(வி) நெருங்க.
மிட்டா—சுதந்திரம்.

மிட்டாயி—பலகாரம்.
மிணுமிணுத்தல்— } ஓரொலிக் குறிப்பு.
மிணுமிணுப்பு— }
மிண்ட—(வி) நெருங்க, 2. தள்ள.
மிண்டி—கிளப்புமோர்கருவி.
மிண்டு—மதத்தாற்செய்பிழை.
மிதக்க—(வி) மேலெழும்ப, 2. மட்டு மிஞ்ச, 3. மேலாக, 4 வெறும் பெருமைபண்ண.
மிதம்—அளவு.
மிதலை—கொப்பூழ்.
மிதவை—தெப்பம், 2. சோறு.
மிதி—நெய்வார்கருவியிலொன்று, 2. ஞானம்.
மிதிக்க — (வி) காலான்மிதிக்க, 2. குதிக்க
மிதியடி—பாதகுறடு
மிதிலை—சனகநகர்.
மிதுக்கை—ஓர் கொடி.
மிதுனம்—மிதுனவிராசி, 2 இரட்டை.
மித்தியம்— } பொய்
மித்தியை— }
மித்திரம்—நட்பு.
மித்திரன்—சினேகிதன், 2 சூரியன்
மித்திரை—தோழி.
மித்துரு—சினேகன்
மித்தை—பொய்
மியா—முன்னிலையசைச்சொல், (உ—ம்.) கேண்மியா.
மிரட்ட—(வி) பயமுறுத்த, 2. மயக்க.
மிரதம்—பாம்பு.
மிரளுதல்—(தொ. பெ) பயப்படுதல்.
மிராசி— } உரிமை.
மிராசு— }
மிரிகை—முறுக்காணி.
மிரியல்—மிளகு.
மிருகசீரிடம்—ஓர் நட்சத்திரம்.
மிருகண்டன்— } ஓரிருடி.
மிருகண்டு— }
மிருகதரன்—சந்திரன்.
மிருகதூர்த்தகன்—நரி.
மிருகநாபி — கஸ்தூரி, 2. கஸ்தூரிப் பூனை.
மிருகராசன்—சிங்கம்.
மிருகாங்கன்—சிவன், 2. சந்திரன்.
மிருகாரி—சிங்கம், 2. புலி, 3. நாய்.
மிருகேந்திரன்—சிங்கம்.
மிருசம்—காட்சி.
மிருடங்கணம்—பிள்ளை
மிருடன்—சிவன்.
மிருடாலகம்— } மாமரம்.
மிருஷாலகம்— }
மிருடோத்தயம்—பொய்.
மிருதகம்—பிரேதம.
மிருதங்கம்—முழவு.
மிருதம்—மரணம், 2. பாஷாணம் முப்பத்திரண்டிலொன்று, 3. போர்.
மிருதாண்டன்—சூரியன்.
மிருதாரசிங்கி — சிங்கிபாஷாணம், 2. ாயம், 3. ஓர் பூடு.
மிருதி—தருமநூல், 2. நினைப்பு, 3. மரணம்.
மிருது—மென்மை, 2. சாந்தம்.
மிருதுன்னகம்—பொன்
மிருதை—பூமி.
மிருத்தஞ்சயன்— } சிவன்.
மிருத்தியுஞ்சயன்— }
மிருத்திகை—மண்.
மிருத்தியு—இயமன்.
மிருத்து—மண், 2. மரணம.
மிருநாளம்—தாமரைககொடி.
மிலாரடி—மயக்கம்.
மிலாறு—வளார்.
மிலேச்சம்—சரச்சுவதியாற்றின் வடதேசம்.
மிலேச்சன்—அறிவீனன், 2 மிலேச்ச தேசத்தோன்.
மிலைச்ச—(வி) அணிய.
மிலைய—(வி) அணிய, 2. சூட.
மிழலை—நிரம்பாமென்சொல்.
மிழற்ற—(வி) மென்மையாய்ச்சொல்ல.
மிளகாய்—ஓர் செடி.
மிளகு — ஓர் சரக்கு, உறைப்புச்சுவையுடையது
மிளகுசம்பா—ஓர் நெல்.
மிளிர—(வி) பெருமைப்பட, 2. ஒளி செய்ய.
மிளிர்—பெருமை, 2. ஒளி.

மிளிறு—கரடி.
மிறல்—பெருமை.
மிறை — அச்சம், 2. குற்றம், 3. வருத்தம்.
மிறைக்க – (வி) துன்பப்பட, 2. துன்பஞ்செய்ய.
மினக்கெட—(வி) தடைபட
மினவ—(வி) உபசரிக்க.
மினுக்க—(வி) விளக்க.
மினுக்கம்— } ஒளி, 2. பகட்டு
மினுக்கு— }
மினுங்க—(வி) பிரகாசிக்க.
மின் — மின்னல், 2. ஒளி, 3. பெண்மகள்.
மின்ன—(வி) ஒளிசெய்ய
மின்னல்—மின்.
மின்னார்—பெண்கள்.
மின்னி—நீர்ப்பயறு.
மின்னுதல்—(தொ. பெ) பிரகாசித்தல்

## மீ

மீ — மேல், 2. மேற்புறம், 3. உயர்ச்சி, 4. மகிமை.
மீகாமன்— } மாலுமி.
மீகான்— }
மீக்குவம்—மருதமரம்
மீக்கூர்தல்—(தொ. பெ) மிகப்பெருகுதல்.
மீக்கூறு— } புகழ்.
மீக்கூற்று— }
மீக்கோள்—மேற்போர்வை.
மீசரம்— } மேலானது, 2. விரைவு.
மீசுரம்— }
மீசு—மிகுதி.
மீசை — மேலுதட்டின்மேலுள்ள ரோமவரிசை.
மீட்ட—(வி) விரலாலுடிக்க, 2. வீணைவாசிக்க, 3. நாணேற்றியீர்க்க.
மீட்டும்—திரும்பவும்.
மீதி—மிகுந்தது.
மீது—மேல், 2. அதிகம்.
மீதுரை—பல்கால் விளம்பல்.
மீதூர—(வி) நெருங்க.
மீந்திருக்க—(வி) மிஞ்சியிருக்க.
மீமாஞ்சை—பிரமாணத்தாலுண்மையறிதல், 2. புறச்சமயமாறினொன்று.
மீமிசை—மேல்.
மீள—(வி) இரட்சிக்கப்பட, 2. திரும்ப.
மீளி—அரசன், 2. திண்ணியன், 3. பாலைநிலத்தலைவன், 4. மேன்மக்கள், 5. பெருமை, 6. வலி.
மீற—(வி) கடக்க, 2. அதிகரிக்க, 3. மீந்திருக்க.
மீனக்கொடியோன்— } மன்மதன், 2. பாண்டியன்.
மீனகேதனன்— }
மீனமாதம்—பங்குனி.
மீனம்—மீன், 2. ஓரிராசி.
மீனம்பர்—ஓர் மருந்து; இது கடலிலுண்டாகுஞ் செம்மீன் வைரமென்பர்.
மீனவன்—பாண்டியன்.
மீனாட்சி — மதுரையங்கண்ணியம்மை, 2. பொன்னாங்காணிக்கீரை.
மீனாம்பூச்சி—மின்மினிப்பூச்சி.
மீனாய்—நீர்நாய்.
மீனேறு—மகரமீன்.
மீன்—சித்திரைநாள், 2. விண்மீன், 3. நெய்தனிலப்பறை, 4. மச்சம்.
மீன்கொத்தி—ஓர் புள்.
மீன்வேட்டை—மீன்பிடி.

## மு

முகக்கடுப்பு—முகச்சினப்பு.
முகக்கிளர்ச்சி—முகமலர்வு.
முகக்குறி—முகச்சாடை.
முகக்கோட்டம்—முகப்பொலிவழிவு.
முகங்கொடுத்தல் – (தொ. பெ) இசைதல்.
முகச்சாடை—முகக்குறி.
முகஞ்சுண்டுதல் — (தொ பெ) முகங்கருகுதல்.
முகஞ்செய்தல்—(தொ. பெ) பலித்தல்.
முகடி—மூதேவி.
முகடு—மலையினுச்சி, 2. வீட்டினுச்சி, 3. விட்டம், 4. உச்சி.
முகட்டுப்பூச்சி—மூட்டைப்பூச்சி.
முகதா—சமுகம்.
முகத்தல்—(தொ. பெ) தோண்டல், 2. மொள்ளல்.

முகத்தாட்சணியம் — ஒருவர் முகங் கண்டவுடனே யுண்டாகு மிரக்கம்.
முகத்துதி—ஒருவன்முன் புகழ்தல்.
முகத்துவாரம்—கடலுமாறும் பொருந் துமிடம், 2. வீட்டின் முன்வா யில்.
முகபடாம்—யானையின் முகப்போர்வை.
முகப்பு—தலைப்பு, 2. முன்.
முகமண்டலம்—முகவட்டம்
முகமலர்ச்சி—சந்தோஷம்.
முகமன்—உபசாரம், 2. முகஸ்துதி.
முகம்—வாய், 2. வதனம்; (அது சரீரத் திலோர் உறுப்பு), 3. வாயில், 4. தொடக்கம், 5. தோற்றம், 6. முக ப்பு, 7. முனை, 8. நோக்கம், 9. முதன்மை, 10. இடம்
முகர—(வி) மோக்க.
முகரம்—காகம், 2 சங்கு.
முகரி—மல்லிகைப்பூ, 2 தாழைமரம்
முகரிமை—பேரறிவு
முகரியோலை— } முடக்கோலை
முரியோலை— }
முகவாசம்—தாம்பூலதிரவியம்
முகவாசல்—தலைவாசல்.
முகவிலாசம்—முகத்தெளிவு.
முகவுரை — பாயிரம், நூலுக்குமுன் சொல்லப்படுவதாகலினிப்பெயர்த்து.
முகவை—இராமநாதபுரம்
முகவண—முதன்மை
முகன்—முகம்.
முகாந்தரம்—ஏது.
முகாமை—முதன்மை.
முகாரி — ஓரிராகம், 2. முதன்மைக்கா ரன்.
முகிய—(வி) முடிய.
முகில்—மேகம்.
முகிழம்—மலரும்பருவத்தரும்பு.
முகிழ்—காம்படி, 2. விரியாத்தளிர்.
முகிழ்க்க—(வி) குவிய.
முகினி—புளியமரம்.
முகுடம்—முடி.
முகுந்தம்—குபேரனவநிதிகளிலொன்று.
முகுந்தன்—மகாவிஷ்ணு.
முகுரம்—கண்ணாடி.
முகுர்த்தம்— } ஓர் காலவரையறை, 2. சுபவேளை.
முகூர்த்தம்— }
முகுள்—மலரும்பருவத்தரும்பு.
முகை — மலரும்பருவத்தரும்பு, 2. மிடா, 3. கூட்டம்.
முகைக்க—(வி) அரும்ப.
முக்காடு—மூடிக்கொள்வது.
முக்காணி — சிற்றிலக்கத்தொன்று; (மூன்றுகாணி).
முக்காணியர்—ஓர்வகைப் பார்ப்பார்.
முக்காரம்—எருதினுக்கிரசத்தம்.
முக்கியம்—பிரதானம், 2. மேன்மை.
முக்கு—பிரயாசம், 2. முடுக்கு.
முக்குதல் — (தொ. பெ) முட்டுப்பட டனுங்குதல்.
முக்குடைச்செல்வன்— அருகன்.
முக்குணம் — சத்துவம், ரசசு, தாம மாகிய மூன்று குணங்கள்.
முக்குவர்—ஓர்வகைச் சாதியார்
முக்குளிக்க—(வி) நீரில்மூழ்க.
முக்கூடல்—ஓர் மலை.
முக்கூட்டு—அடுப்பு, 2. பரணி.
முக்கோல்—திரிதண்டம்; அது: மூன்று கோல் ஒன்றாகச் சேர்த்துக கட்டப் பட்ட தண்டு, 2. திருவோணம்.
முக்கோற்பகவர்—திரிதண்ட சந்நியாசி கள்.
முசரு— } தயிர்.
முசர்— }
முசலம்—உலக்கை, 2. இருப்புலக்கை.
முசலி — பலபத்திரன், 2. முதலை, 3. ஓந்தி, 4. பல்லி, 5. உடும்பு, 6 தாழைமரம்.
முசலிகாதநம் — யோகநிலையிலொன்று; அது: இருகாலு மிருகையுஞ் சம்மண மாக மடக்கி மார்பு நிலத்திலே தோ யக்கிடப்பது.
முசலை—முயலை, ஓர் கோரைக்கிழங்கு.
முசல்—முயல்.
முசிக்க—(வி) இளைக்க, 2. மெலிய.
முசிரன்—கொடையாளி.
முசிறு—முயிறு.
முசு—ஓர் சாதிக்குரங்கு.
முசுகுந்தன்—ஓர் சக்கரவர்த்தி.

முசுக்கட்டைப்பூச்சி—கம்பளிப்பூச்சி.
முசுடர்— } கீழ்மக்கள்.
முசுண்டர்— }
முசுண்டி—ஓர் படைக்கலம்.
முசுப்பு—எருத்துத்திமில்.
முசுமுசுக்கை—ஒரு கொடி.
முசும்ப—(வி) மொறுமொறுக்க.
முசுறு—முயிறு.
முச்சட்டை—வேடிக்கை
முச்சந்தி — திரிகாலசந்தி. அது; காலை, உச்சி, மாலையென்பன, 2. மூன்றுதெருக்கூடுமிடம்.
முச்சி—உச்சி, 2. உச்சிக்கொண்டை, 3 மயிர்முடி
முச்சியர்—வன்னக்காரர், 2 மரவினையாளர்.
முச்சுடர் — மூன்றுசுடர். அவை: அக்கினி, ஆதித்தன், சந்திரன்
முச்சூடும்—முழுதும்
முச்சை—மூன்றொன்றாய் முடிவது.
முஸ்திப்பு—ஆயத்தம்.
முஷ்கரம்—முருட்டாட்டம
முஷ்டி— } முடக்கியகை, 2 ஆயுதப்பிடி, 3 ஒரு பிடி.
முட்டி— }
முஞ்ச—(வி) முடிய, 2 சாக.
முஞ்சி—முஞ்சிப்புல்.
முடக்க — (வி) முடங்கச்செய்ய, 2 தடுக்க.
முடக்கம்—தண்டு, 2. கைகால் முடக்கம்.
முடக்கு — மடக்கு, 2 விரலணியிலொன்று.
முடங்கல் — நோய், 2. மடங்கல், 3. மூங்கில், 4. ஓலைச்சீட்டு, 5 தாழைமரம்.
முடங்குதல்—(தொ. பெ) மடங்குதல்.
முடமுடெனல்-ஈரடுக்கொலிக்குறிப்பு.
முடம்—வளைவு, 2. குற்றம், 3. நொண்டி.
முடலை — உண்டை, 2 நாற்றம், 3 பெருமை, 4. வலி.
முடவன் — காலிலி, 2 அருணன், 3. சனி.
முடி—கிரீடம், 2. குடுமி, 3. மயிர்முடி, 4. தலை, 5. நாற்றுச்செடி, 6. தேங்காயிற்பாதி.

முடிக்க—(வி) சூட்ட, 2. அழிக்க.
முடிச்சு—முடியப்பட்டது.
முடிச்சுமாறி—திருடன்.
முடிப்பு—தீர்மானம், 2. முடிச்சு.
முடிவாங்குதல்—(தொ. பெ) பிறவிமயிர்களைதல்.
முடிவு—சாவு, 2. கடை.
முடிவுரை—கடைக்காப்பு.
முடுகல்—எதிர்த்தல், 2. துரத்தல், 3. வலி, 4. சீக்கிரம், (விரைவு.)
முடுகியல்—கலிப்பாவினோருறுப்பு. அது அராகம.
முடுகு—கடமைப்பெண்.
முடுக்கர்—மலைக்குகை, 2. அருவழி.
முடுக்கு—மூலை, 2. கோணதெரு, 3 நெருக்குதல், 4. துரிதப்படுதல்.
முடுவல்—செந்நாய், 2 நாய், 3. பெண்ணாய்.
முடுவற்படையோன்—வயிரவன்.
முடை—நாற்றம், 2. புலால், 3. ஓலைக்குடை.
முடைய—(வி) பின்ன, 2. இழைக்க.
முட்ட—நிறைய.
முட்ட—(வி) தடுக்க, 2. எதிர்க்க, 3. தாக்க.
முட்டடி—சமீபம்.
முட்டம்—ஓரூர்.
முட்டல் — (தொ. பெ) கிட்டல், 2. உதைத்தல்.
முட்டி—ஓர் செடி, 2. ஆயுதப்பிடி, 3. எட்டிமரம்.
முட்டி—கலசம் இது கலைஞானம் அறுபத்துநான்கிலொன்று.
முட்டிகை—தட்டார்குறடு.
முட்டு—இடுக்கண், 2. முட்டுகை, 3. தாங்கல், 4. குறைவு, 5. அடைப்பு, 6. கடிவாளம், 7. முழங்கால், 8. மேடு, 9. பெண்கள் பூப்பு.
முட்டுக்கால்—முழந்தாள்.
முட்டுப்பாடு—வருத்தம், 2. தீமை
முட்டை—அண்டம், 2. தவிடு, 3. சிறுகரண்டி.
முணங்க—(வி) அடங்க, 2. குரலடங்கிப்பேச.

முணங்கு—அடக்கம்.
முணுமுணெனல்—ஒலிக்குறிப்பு.
முண்டகம் — தாமரை, 2. கள், 3. தாழைமரம், 4. முட்செடி, 5. நெற்றி.
முண்டகன்—பிரமன்.
முண்டம்—தலை, 2. நெற்றி, 3. மழித்த தலை, 4. உடற்குறை, 5. நிர்வாண சரீரம், 6. உண்டை, 7. உபநிடத முப்பத்திரண்டினொன்று.
முண்டனம்—மொட்டை.
முண்டன் — மொட்டைத்தலையன், 2. நாவிதன்.
முண்டாசு—தலைப்பாகை.
முண்டி — நாவிதன், 2. மொட்டைத தலையன்
முண்டிக்க—(வி) சிரைக்க.
முண்டிதம்—மொட்டை.
முண்டிரம்—உபநிடத முப்பத்திரண்டி னொன்று.
முண்டு—துண்டுவேஷ்டி
முண்டை—விதவை.
முண்மா—முட்பன்றி.
முதம்—உவகை.
முதலி—முதல்வன்.
முதலை—வன்மீன்.
முதலோன்—முதல்வன்.
முதல்—ஆதி, 2. பணமுதல், 3. கடவுள்.
முதல்முதல்—துவக்கம்
முதல்வர்—வானோர், 2. அதிபதிகள்
முதல்வன்—கடவுள், 2. அரசன்.
முதல்வி—தலைவி.
முதவை—முதலை.
முதனாள்—அசுபதி, 2. முந்தினநாள்.
முதனிலை—பகுதி.
முதன்மை—முன்னீடு, 2. அதிகாரம்.
முதாரி— } நிறைகன்றுத்தாய்ச்சி.
முதாரு— }
முதிதம்—உவகை.
முதியன்—மூத்தோன்.
முதிர—(வி) முற்ற, 2. பழுக்க, 3. தேற.
முதிரம்—மேகம்.
முதிரன்—துர்ச்சனன்.
முதிரை—அவரை, துவரை முதலியன, 2. கொள்ளு.
முதிர்ப்பு—கலக்கம், 2. முதிர்ச்சி.
முதிர்வு—மூப்பு.
முதிர்வேனில்—ஆனி ஆடியின்பருவம்.
முது—பழமை.
முதுகாடு—சுடுகாடு.
முதுகு—பின்புறம்.
முதுகுகாட்ட—(வி) புறங்காட்ட.
முதுகுன்று—திருமுதுகுன்று. அது விருத்தாசலம்.
முதுக்குறைவு—பேரறிவு, 2. பெண்புத்தியறிகை.
முதுநிலம்—களர், 2 பெரும்பாழ்நிலம்.
முதுமகன்—சனி.
முதுமை—பழமை, 2. மூப்பு, 3 பழமொழி
முதுவர்—புலவர்.
முதைப்புனம்—பழங்கொல்லை.
முதையல்—முதிர்காடு.
முத்தகம் — தனித்தனியே முற்றுப்பெறுஞ்செய்யுள்
முத்தக்காசு—கோரைக்கிழங்கு.
முத்தம் — பிரியம், 2. உதடு, 3. கொஞ்சுதல், 4. விடுதல், 5. முத்து, 6. மருதநிலம்.
முத்தர்—முத்திக்குரியோர்.
முத்தன்—முத்திபெற்றோன்.
முத்தாபலம் — முத்து, 2. இசங்குஞ்செடி.
முத்தாமணக்கு— ஓராமணக்கஞ்செடி.
முத்தாவலி—முத்துமாலை.
முத்தி—பிறப்புநீங்குகை, 2. மோட்சம்.
முத்திரிகை — எழுத்துப்பதிந்த மோதிரம்.
முத்திரிக்க—(வி) முத்திரைபோட.
முத்திருக்கஞ்செடி—ஒரு பூடு
முத்திரை—இலாஞ்சனை, அடையாளம்.
முத்து—ஓரிரத்தினம், 2. வைசூரிக்குரு, 3. பிரியம்.
முத்துக்குமாரன் — புள்ளிருக்குவேளூர் முருகர்பெயர்.
முத்துக்குளித்தல் — (தொ. பெ) முத்தெடுக்க நீரில் முழுகல்.

முத்துக்கொட்டை-ஆமணக்கங்கொட்டை.
முத்துச்சலாபம் – முத்துக்குளிப்பின் பேறு.
முத்தை – மிகவுந்தெளிவிலாள், 2. கோரைக்கிழங்கு, 3. திரட்சி.
முத்தையன் – புள்ளிருக்கும் வேளூர் முருகக்கடவுளின் பெயர்.
முத்தொழிலார்–வைசியர்பொது.
முந்தல்–(தொ. பெ) முந்துதல், (முற்படல்.)
முந்தன்–கடவுள்.
முந்தி–முன்னுக.
முந்திரி – ஓர்சிற்றிலக்கம்; அது. முந்நூற்றிருபது பாகத்தொன்று.
முந்திரிகை–ஒரு மரம்.
முந்து–வெண்ணுரை, 2. பழமை.
முந்தூழ்–பழவினை.
முந்தை–பழமை.
முந்தையோர்–முன்னோர்.
முந்நீர்–கடல்.
முப்பான்–முப்பது.
முப்புள்ளி–ஆய்தவெழுத்து
முமுடம்–துறவு.
முமூட்சு–மோட்சாபேட்சை.
மும்முரம்–உக்கிரம்.
மும்முரிக்க–(வி) உக்கிரங்கொள்ள.
மும்மை – முப்பிறப்பு. உம்மை, இம்மை, மறுமை.
முயக்கம்–முயக்கு.
முயக்கு–முயங்கல்.
முயங்கல்–(தொ. பெ) பொருந்தல்.
முயல – (வி) முயற்சிசெய்ய, 2. தொடங்க.
முயல்–முசல்.
முயறல்–(தொ. பெ) முயலுதல்.
முயற்கோடு–இன்மையுவமை.
முயற்சி–ஊக்கம்.
முயிறு–ஓரெறும்பு.
முரசக்கொடியோன்–தருமராசன்.
முரசம்–வாச்சியப்பொது.
முரசு–போர்ப்பறை, 2. பல்லினீறு, 3. உத்திரட்டாதிநாள்.
முரடு–யாக்கைமூட்டு, 2. கணு.
முரட்கை–கலிப்பா.
முரட்டாட்டம்–முரட்டுத்தனம்.
முரண–(வி) மாறுபட, 2. போரிட.
முரண்–முரடு, 2. கொடுமை, 3. வலி, 4. மாறுபாடு, 5. ஓர்தொடை, 6. போர்.
முரண்டு–மாறுபாடு.
முரதம்–பாஞ்சசன்னியம்.
முரம்பு–உப்பளம், 2. கல்லின்மேடு, 3. கழி, 4. பரல்படுத்துயர் நிலம், 5. பாறை.
முரலல்–(தொ. பெ) ஒலித்தல்.
முரளி– } ஊதுகுழல், 2. மூக்கால்வாசிக்குஞ் சிறுகுழல்.
முரலி– }
முரற்ற–(வி) ஒலிக்க.
முரன்–ஓரரக்கன்.
முராரி–மகாவிஷ்ணு.
முரிப்பு–எருத்துத்திமில்.
முரிய–(வி) ஒடிய, 2. கெட.
முருகன்–இளையோன், 2. குமரன், 3 வெறியாட்டாளன்.
முருகியம்–குறிஞ்சிநிலப்பறை.
முருகு–அகிலமரம், 2. அழகு, 3. இளமை, 4. எழுச்சி, 5. கள், 6. திருவிழா, 7. முருகன், 8. வாசனை, 9. காதணியினொன்று.
முருகேசன்–சுப்பிரமணியன்.
முருக்க–(வி) அழிக்க, 2. கொல்ல.
முருக்கு – கிஞ்சுகமரம், 2. எலுமிச்சை மரம், 3. கொலை.
முருங்க–(வி) அழிய.
முருங்கை–ஓர் மரம்
முருடர்–வேடர்.
முருடு–ஓர் வாச்சியம், 2. பறைப்பொது, 3. பெருங்குறடு, 4. வெட்டியமரத்தினடி.
முருந்து–வெண்மை, 2. வெண்குருத்து, 3. இறகினடிக்குருத்து.
முருமுரன்.– சூரியன் குதிரையினொன்று.
முலாம்–பொன்வெள்ளிப்பூச்சு
முலை–கொங்கை, 2. விலங்கின்மடி
முலைக்கண் – முலைப்பால்வருந் துவாரம்.

முல்லை—ஒருபண், 2. கற்பு, 3. வெற்றி, 4. காட்டுமல்லிகைச்செடி.
முல்லையர்—இடையர்
முழக்க—(வி) தொனிக்கச்செய்ய.
முழக்கம்—குமுறுகை, 2 ஆரவாரம், 3 ஒலி, 4. இடிமுழக்கம.
முழங்க—(வி) ஒலிக்க, 2 வானங்குமுற.
முழம்—இருசாண்கொண்டது
முழல்—கழற்சிக்கொடி.
முழவம் — குடமுழா, 2. வாச்சியப்பொது.
முழவு— } பறைப்பொது.
முழா— }
முழாசு—சுவாலை.
முழி—விழி.
முழுகல்— } (தொ பெ) குளித்தல்.
முழுகுதல்— }
முழுக்காட்டு—நீராட்டு.
முழுக்கு—ஸ்நானம்.
முழுங்குதல்—(தொ. பெ) விழுஙகல்
முழுத்தம்—முகூர்த்தம்.
முழுத்தல்—(தொ. பெ) முழுமையாதல்
முழுமகன்—அறிவிலான்.
முழுமுதல்—கடவுள்.
முழை—குகை, 2. துடுப்பு.
முழைஞ்சு—மலையினுட்குகை.
முழைத்தல்—எழுத்தில்லாவோசை.
முளரி — தாமரை, 2. ஓமவிறகு, 3 கடைக்கொள்ளி, 4. காடு, 5. நுண்மை, 6. நெருப்பு, 7. முட்செடி, 8. விறகு.
முளவு—முட்பன்றி.
முளா—முள்ளங்கிக்கிழங்கு.
முளி—செம்முள்ளிச்செடி, 2. மரக்கணு.
முளிக்க—(வி) காய, 2. வறுக்க.
முளை—அங்குரம், 2. ஆப்பு, 3. தறி, 4. கதவின்முளை, 5. பூட்டின்முளை, 6. மகன், 7. பருவின்முளை, 8. மூங்கில், 9. தண்டாயுதம்.
முளைக்க—(வி) வெளிப்பட, 2. அரும்பு.
முளைபடித்தல்—(தொ. பெ) ஆப்பறை
முளையாணி—கதவுக்குமிரும்பு.
முளையான்—குழந்தை.

முள்— } கண்டகம், 2. மீன்முள், 3. முட்கருவி, 4. தராசுமுள், 5. இறகுமுள், 6. நுண்மை.
முள்ளு— }
முள்வறையன்— } ஓர் கறையான்.
முள்வாயன்— }
முள்ளங்கி—ஒரு கிழங்கு.
முள்ளி — ஒரு செடி; அது கறிமுள்ளி, அடுக்குமுள்ளி, ஆற்றுமுள்ளி, கழுதைமுள்ளி, செம்முள்ளி, நீர்முள்ளி, வறள்முள்ளியெனப் பலதிறப்படும்.
முள்ளிலவு—ஒரு மரம்.
முறண்டுகம்—அவுபலபாஷாணம்
முறம்—சுளகு, 2. விசாகநாள்.
முறி — எழுதுமுறி, 2. உயர்ந்தவெண்கலம், 3. உலோகத்துண்டு, 4. ஓர் வகைப் புடவை, 5. இலை, 6. தளிர், 7. அடிமை.
முறிகரை—இடிகரை
முறிக்க—(வி) முறியச்செய்ய, 2. துண்டிக்க.
முறுக — (வி) திருக, 2. விரைய, 3. காந்த, 4 முதிர.
முறுக்க—(வி) திரிக்க, 2. முறுக்கிப்பிடிக்க, 3. பிணங்க.
முறுக்கு — ஓர் பண்ணிகாரம், 2. பிணக்கு, 3. வீறுப்பு.
முறுமுறுக்க—(வி) குறைசொல்ல
முறுவல்—நகை, 2. பல்.
முறை—ஒழுக்கம், 2. கிரமம், 3. உறவின்முறை, 4. குணம், 5. பழமை, 6. தரம், 7. ஓரிடைச்சொல், 8. முறைப்பாடு, 9. வரிசை, 10. புத்தகம்.
முறைகேடு—தப்புநெறி.
முறைக்க—(வி) நெறிக்க
முறைக்காய்ச்சல்—ஒன்றைவிட்டொருநாள்வருஞ்சுரம்.
முறைப்பாடு—முறையீடு.
முறைமை—ஒழுக்கம், 2. கிரமம்
முறையிடுதல் — (தொ. பெ) குறைசொல்லல்.
முற்கம்— } அண்ணவோசை.
முற்கு— }
முற்கம்—பச்சைப்பயறு.
முற்கரம்—ஓர் படைக்கலம்.

முற்சனி—மகநாள்.
முற்பகல்—ஒரு பகலின் முற்பகுதி.
முற்படல்—(தொ. பெ) எதிர்ப்படுதல், 2. முந்துதல்.
முற்ற—(வி) முதிர, 2. வயிரங்கொள்ள, 3. முடிய, 4. வளைக்க.
முற்ற—எல்லாம்.
முற்றம்—முன்றில், வீட்டுமுற்றம்.
முற்றில்—சிறுமுறம், 2. விசாகநாள்.
முற்று — தெரிநிலைவினைப்பகுதி, 2. முடிவு.
முற்றுகை—முற்றுதல்.
முற்றும்—முழுதும், 2. கடை.
முனி—ஞானி, 2. தவத்தோன், 3. குரு, 4. அகத்திமரம், 5. புத்தன், 6. யானைக்கன்று, 7. வில்.
முனிய—(வி) கோபிக்க, 2. வெறுக்க.
முனிவர் — தவத்தோர், 2. சடைமுடியோர்.
முனிவு—கோபம், 2. வெறுப்பு.
முனை—துனி, 2. கூர்மை, 3. யுத்தம், 4 பகை, 5. முதன்மை, 6. துணிவு, 7. வெறுப்பு.
முனைய—(வி) போர்கலக்க.
முனைவர்—பகைவர், 2. முனிவர்.
முனைவன்—புத்தன், 2. அருகன், 3 பகைவன்.
முன்—முதலான, 2. முதன்மை, 3. பழமை, 4. எழனுருபு, (உ—ம்.) கற்றார் முற்றோன்றாகழிவிரக்கம்.
முன்கை — கெண்டைக்கை, (முன்புறம்.)
முன்பன்—முதல்வன்.
முன்பிறந்தாள்—அக்காள்.
முன்பு—பழமை, 2. வலி, 3. முன்.
முன்றில்—முற்றம்.
முன்றோன்றல்—தமையன்.
முன்னடி—முன்னே.
முன்னணி—முற்படை.
முன்னணை—மாட்டுத்தொட்டி, 2. முதற்பிள்ளை.
முன்னம்—குறிப்பு, 2. சீக்கிரம், 3. கருத்து, 4. முற்காலம், 5. மனம்.
முன்னர்—முன், 2. இடம், 3. ஆதி.
முன்னல்—(தொ. பெ) நினைத்தல்.
முன்னவள்—தமக்கை.
முன்னவன்—கடவுள், 2. தமையன், 3 முதலானவன்.
முன்னிடுதல்—(தொ. பெ) நேரிடுதல்.
முன்னிலை — காரணம், 2. மூவிடத்தொன்று, 3. காரியத்திற்கு முன்னிற்பது.
முன்னீடு—தலைமை.
முன்னூல்—பழையநூல்.
முன்னை—அக்காள், 2. பழமை.
முன்னோர் — பழையோர், 2. மந்திரிகள்.
முன்னோன் — கடவுள், 2. விநாயகன், 3 தமையன்

## மூ

மூகம்—ஊமை, 2. மௌனம்.
மூகன்—ஓரசுரன், 2. ஊமை.
மூகை—ஊமை.
மூக்க—(வி) முதுமையுற, 2. முடிய
மூக்கரட்டை — மூக்கிரட்டை ஒரு செடி.
மூக்கறை—நாசியறுபட்டவன்.
மூக்காவலை— } ஓர் பூடு
மூக்காவளை— }
மூக்கிறைச்சி—ஓர் பூடு.
மூக்கு—நாசி, 2. பறவைமூக்கு, 3 கலயத்தின்மூக்கு, 4. விளக்கின்மூக்கு, 5. தாணியத்தின்மூக்கு.
மூக்குத்தி—மாதர் மூக்கணி.
மூக்குத்தூள்—புகையிலைப்பொடி.
மூங்கா—கீரி.
மூங்கில்—ஓர் மரம்.
மூங்கிற்புதர்—மூங்கிற்கிளை.
மூங்கு—சிறுபயறு.
மூங்கை—ஊமை.
மூச—(வி) மொய்க்க.
மூசாப்பு—மந்தாரம், 2. முட்டுமூச்சு.
மூசை—மட்குகை.
மூச்சு—சுவாசம், 2. ஆண்மை.
மூச்சை—மூர்ச்சை.
மூஷிகம் — எலி, 2. ஒருதேயம். இப்பெயர்முழுது கொச்சியென்பர்.

மூஞ்சி—முகம்.
மூஞ்சுறு— } சுசுந்தரி.
மூஞ்சூறு— }
மூஞ்சை—கோணியமுகம்.
மூட — (வி) பொத்த, (அடைக்க), 2. மறைக்க, 3. நிரவ.
மூடதை—அறியாமை.
மூடம்—அறிவின்மை, 2. மந்தாரம்.
மூடர்—அறிவிலோர், 2. கீழோர்.
மூடி — மேன்மூடி, 2. கொத்துமல்லிப் பூண்டு.
மூடிகம்—பெருச்சாளி.
மூடை—பொதிப்பை.
மூட்ட—(வி) இசைக்க, 2. மூளச்செய ய, 3. அதிகப்படச்செய்ய, 4. சண் டைமூட்ட.
மூட்டம்—மூடியிருப்பது, 2. உலேமுகம், 3. ஆயத்தம்.
மூட்டு—எழுச்சி, 2. பொருத்து, 3. கடி வாளம்.
மூட்டை—சாமான்சுமை, 2. முகட்டுப் பூச்சி.
மூதணங்கு—காடுகாள், 2. மூத்தவளா கிய மூதேவி.
மூதண்டம்—பழையலோகம்
மூதரித்தல்— } (தொ. பெ) மூப்புவித் தல்.
மூதலித்தல்— }
மூதறிவு—பேரறிவு.
மூதா—தம்பலப்பூச்சி.
மூதாட்டி—முதியவள்
மூதாதை—பாட்டன்.
மூதிரி—எருமை.
மூதிரை—திருவாதிரைநாள்.
மூதுரை—பழமொழி
மூதேவி—சேட்டை.
மூதை—இசங்குசெடி.
மூத்தல்—(தொ. பெ) முதிர்தல்.
மூத்தார்—புருஷன்தமையன்.
மூத்தாள்—முன்பிறந்தாள், 2. மூதேவி, 3. கிழவி.
மூத்திரம்—சிறுநீர்.
மூத்திராசயம் — மூத்திரந்தங்குமிடமா கிய சலப்பை.
மூத்தோர்—பண்டிதர், 2. முதியோர்.
மூப்பன் — முதன்மைக்காரன், 2. முதி யோன்.
மூப்பு—முதுமை, 2. தலைமை.
மூய—(வி) மூட.
மூரல்—பல், 2. சிரிப்பு, 3. சோறு.
மூரி—சோம்பல், 2. எருமை, 3. எருது, 4. நெரிவு, 5. பழமை, 6. பெருமை, 7. வலி.
மூர்க்கம்—உக்கிரம், 2. சலஞ்சாதித்தல், 3. நாகப்பூச்சி.
மூர்க்கன்—நாகப்பாம்பு, 2. உக்கிரமுள் ளோன்.
மூர்ச்சனை— } நினைவுமயக்கம்.
மூர்ச்சனம்— }
மூர்ச்சை—அறிவுமயக்கம்.
மூர்த்தம் — இருகடிகைப்பொழுது, 2. உடம்பு, 3 தலை
மூர்த்தன்னியம்—கிளர்ச்சி.
மூர்த்தி—வடிவுடையவன், 2. திருமால், 3. அருகன், 4 சிவன். 5. புத்தன்.
மூர்த்திகரம்—தெய்வீகம்
மூர்த்திகன்—குமரன், 2 வயிரவன்.
மூர்த்தினி—தலை.
மூலகந்தம்—வெட்டிவேர்.
மூலகம் — கிழங்கு, 2. முள்ளங்கிக்கிழ ங்கு.
மூலக்கடுப்பு—ஒரு நோய்
மூலக்கிரந்தி—ஓர் நோய்.
மூலக்கிராணி—ஓர் கிராணிநோய்.
மூலதனம் — மூலதிரவியம், முதற்ப ணம்.
மூலத்தானம் — ஆலயங்களின் கர்ப்ப கிரகம்
மூலபலம் — அறுவகைப்படைகளி னொன்று, மூலப்படை.
மூலபாடம் — உரையின்றியெழுதும்பா டம்.
மூலப்பகுதி— } முக்குணமுந் தோ ன்றுதற்கிடமாகி ய பிரகிருதி என்றறிக.
மூலப்பிரகிருதி— }
மூலப்பொருள்—கடவுள்.
மூலமந்திரம்—பஞ்சாக்கர மந்திரம்.
மூலமலம்—ஆணவமலம்.
மூலம்—வேர், 2. தலைமை, 3. காரணம்,

4. ஓர் நட்சத்திரம், 5. உரையில்லாப் பாடம், 6. மூலாதாரம்.
மூலவிக்கிரகம்—மூலஸ்தான விக்கிரகம்.
மூலவிருள்—ஆணவமலம்.
மூலாதாரம்—ஆறுதாரங்களிலொன்று.
மூலி— } வேருள்ளதாகிய மரமுத
மூலிகை— } லியன, 2. மருந்துப் பூடு.
மூலியம்—கொண்டபொருள், 2. சம்பளம்.
மூலை—கோணம், 2. வீடு
மூவ—(வி) முடிய.
மூவா—இறவாத.
மூழி— } அகப்பை, 2. சோறு.
மூழை— }
மூழ்கல்—(தொ. பெ) முழுகுதல், 2 கெடுதல்.
மூழ்த்த—(வி) அமிழ்த்த, மொய்க்க.
மூள—(வி) நெருப்புப்பற்ற.
மூளி—காதறை, 2. விளிம்பற்றது.
மூளை—தலை முதலியவற்றினுள்ளதாகிய வொருவகை மாமிசம்.
மூன்று—ஓரெண்.

## மெ

மெச்ச—(வி) வியக்க, 2. புகழ, 3. மதிக்க.
மெட்டு-இராகமெட்டு, 2. கிராமத்தைச் சூழ்ந்தகாடு, 3. ஆயத்துறை.
மெது—மிருது.
மெதுக்கு—ஓர் செடி.
மெதுமெதுப்பு—மிருதுவாயிருத்தல்.
மெத்து—மென்மை.
மெத்தெனவு—மிருது, 2. சாந்தகுணம்.
மெத்தை—அணை, 2. மேல்வீடு, 3. சட்டை.
மெத்தைப்பாய்—ஓர்வகைப் பாய்.
மெந்திரி—பரண்.
மெய்—சத்தியம், 2. உடம்பு, 3. ஐம்பொறியுளொன்று, 4. மெய்யெழுத்து.
மெய்காப்பாளர்—காவலர்.
மெய்க்கவசம்—மார்ச்சட்டை.
மெய்ஞ்ஞானம்—உண்மைஞானம்.
மெய்ந்நலம்—வலி.
மெய்புகுகருவி—கவசம்
மெய்ப்பாடு—புகழ்.
மெய்ப்பிக்க—(வி) ருசுப்படுத்த.
மெய்ப்பீரம்—மேகம்.
மெய்ப்பை—சட்டை.
மெய்ப்பொருள்—கடவுள், 2. கல்வி, 3. உண்மைப்பொருள்.
மெய்ம்மறத்தல்—(தொ. பெ) தன்னைமறத்தல்.
மெய்ம்மை—உண்மை.
மெய்யன்—கடவுள், 2 சத்தியவான், 3. மகன்.
மெய்யுணர்வு—உண்மையறிதல்
மெய்யுரை-சத்தியவாசகம்; இது வாக்கினாற்குண நான்கிலொன்று.
மெய்யுறை—கவசம்
மெருகு—மிருது, 2. மெருகன்கிழங்கு.
மெருகெண்ணெய் — மினுக்கெண்ணெய்.
மெலி—மெல்லெழுத்து.
மெலித்தல் — (தொ. பெ) மெல்லிதாக்கல், 2. செய்யுள் விகாரத்தொன்று.
மெலியது—மென்மையானது.
மெலிவித்தல்—(தொ. பெ) கனங்குறைத்தல், 2. வாட்டல்.
மெலிவு—இளைப்பு, 2. வருத்தம்.
மெலுக்கு—வெளியலங்காரம்.
மெல்ல—(வி) சவட்ட, 2. தூஷிக்க.
மெல்ல—மிருதுவாக.
மெல்லணை—மெத்தை.
மெல்லிது— } மிருதுவாயிருப்பது.
மெல்லியது— }
மெல்லியர் — மாதர், 2. அற்பகுணங்களையுடையார்.
மெல்லியல்—மென்மையுடையவள், 2. மரத்திளங்கொம்பு.
மெல்லிலை—வெற்றிலை.
மெல்லுதல்—(தொ. பெ) மெல்லல்.
மெழுக—(வி) தரைமெழுக.
மெழுகு—அரக்கு.
மெழுகுபதம் — தயிலங்காய்ச்சும்போது கடுகு மெழுகுபோலத் திரளும் பக்குவம்.
மெழுகுமண்—பசைமண்.

மெள்ள—மிருதுவாய்.
மென்பால்—மருதநிலம்.
மென்மேல்—ஒன்றன்மேலொன்று.
மென்மை— மிருது; அஃது எண்வகை யூறிறென்று.
மென்றல்—(தொ. பெ) மெல்லுதல்.
மென்னடை — மிருதுவான நடை. 2 அன்னம்.
மென்வண—கழுத்து

## மே

மே—மேன்மை.
மேகக்கல்—ஆட்டுக்கல்.
மேக்சாலம்—முகிற்கூட்டம்.
மேகசீவகம்—சாதகப்புள்.
மேகசூலை—ஓர் சூலைநோய்.
மேகநாதம் — சிறுகீரை, 2. மேகமுழக்கம்.
மேகநாதன்—இந்திரசித்து.
மேகப்புள்—வானம்பாடி.
மேகம்—முகில், 2. ஓர் நோய், 3. கடுக்காய்.
மேகலை—மாதர் இடைக்கட்டு, 2. வெறபினருகு, 3. தூசு, 4. ஓமகுண்டத்தைச் சுற்றியிடும் வளையங்கள்.
மேகவண்ணன்—திருமால்.
மேகவாகனன்—இந்திரன்
மேகவெட்டை—ஓர் நோய்.
மேக்கு—மேல், 2. மேற்றிசை.
மேசகம்—இருள், 2. கருமை, 3. புகை, 4. முகில்.
மேசை—ஒருவிதமான பீடம்.
மேடம்— } ஆடு, 2. ஓரிராசி.
மேஷம்— }
மேடு—உயர்வு, 2. திடர்.
மேடை—உப்பரிகை, 2. வேதிகை.
மேட்டிமை—இறுமாப்பு.
மேதகம் — மேன்மை, 2. மதிப்பு, 3. கோமேதகம்.
மேதகு—மேன்மையான.
மேதகையோர்—உயர்ந்தோர்.
மேதம்—யாகம், 2. கொலை, 3. கிணம்.
மேதவர் — சண்டாளனுக்கு வைதேக ஸ்திரீயிடம் பிறந்தவர். (அபிதானசிந்-
தாமணி.) இவர் மூங்கில்வேலை செய்பவரென்பர்.
மேதாரம்—மலை.
மேதாவி—புத்தியுள்ளவன்.
மேதி—எருமை.
மேதினி—பூமி.
மேதை—பேரறிவு, 2. இறைச்சி, 3. கள், 4. தோல், 5. நரம்பு, 6. புதன், 7. மேன்மை.
மேதையர்—புலவர்.
மேத்தியம்—சுத்தம்.
மேநகை — தேவதாசிகளி லொருத்தி. இவள் காசிபருக்குச் சுரபியிடம் பிறந்தவள்
மேந்தலை—மேன்மை.
மேம்படுதல்—(தொ. பெ) உயர்தல்.
மேம்பாடு—ஊற்றம், 2. மேன்மை.
மேய்ச்சல்—விலங்குண்ணுதல்.
மேய்தல் — (தொ. பெ) உண்டல், 2. மூடல்.
மேய்த்தல்—(தொ. பெ) மேயச்செய்தல்.
மேய்ப்பான் — ஆடுமாடு மேயச்செய்பவன், இடையன்.
மேய்ப்பு—மேய்ச்சல்.
மேரு—ஆசனபீடம், 2. மேருமலை.
மேருவில்லி—சிவன்.
மேரை—வரகை, 2. மரியாதை, 3. குடிமக்கட்குக் களத்திற்றரும் தானியம்.
மேலவர்—பெரியோர், 2. வானோர்.
மேலாலம்—மழை.
மேலீடு—அதிகரிப்பு, 2. மேன்மை, 3. மாதர்காதணியிதென்று.
மேலை — வருங்காலம், 2. மேற்கு, 3. மேன்மை, 4. மேல்.
மேலையோர்— } தேவர், 2. பெரியோர்.
மேலோர்— }
மேல்—ஆகாயம், 2. மேற்கு, 3. இடம், 4. மேற்புறம், 5. ஏழுனுருபு, 6. அதிகம், 7. மேன்மை.
மேல்காற்று—கோடைக்காற்று.
மேல்வாரம்—இறைப்பங்கு.
மேல்விசாரணை—பராமரிப்பு.
மேல்விழுதல்—(தொ. பெ) யுத்தங்கலத்

மேல்வீடு—மச்சுவீடு.
மேவ—(வி) நிரவ, 2. விரும்ப, 3. சிநேகிக்க, 4. சமமாக்க, 5. உண்ண, 6. சேர.
மேவலர்—பகைவர்.
மேவினர்—சிநேகர், 2. உறவோர்.
மேவு—ஆசை.
மேழகம் — கவசம், 2. செம்மறிக்கடா, 3. துருவாட்டேறு.
மேழி — கலப்பையின கைப்பிடி, 2. கலப்பை.
மேழியர்—பூவைசியர், (வேளாளர்.)
மேளம்—வாத்தியப்பொது.
மேளனம்—கூட்டம்
மேற்கதி—மோட்சம்.
மேற்கு—மேற்றிசை, 2 மேல்.
மேற்கொள்ளல் — (தொ. பெ) தலைப்படுதல், 2 வெல்லல்
மேற்கோள் — முன்னோர்வழக்கு, 2. போர்வை, 3. சனி.
மேற்செல்லல்—(தொ. பெ) போர்குறித்துச் செல்லல்.
மேற்படல் — (தொ. பெ) அதிகமாதல், 2. வெல்லுதல்.
மேற்படி—முன்குறித்தபடி.
மேற்பூச்சு—வெளிப்பூச்சு.
மேற்றட்டு—மேலறை.
மேற்றரம்—உயர்ந்ததரம்.
மேற்றளம் — கப்பலின்மேறபககம, 2. மேனிலம்.
மேற்றிசை—மேறகு.
மேற்றிசைப்பாலன்—வருணன்.
மேனகை—மேநகை.
மேனி—உருவம், 2. நிறம், 3. வடிவு.
மேனை—மலையரசன் மனைவி.
மேனோக்குதல்—(தொ பெ) ஊர்த்துவமுகமாதல்.
மேன்மக்கள்—பெரியோர்.
மேன்மேல்—மிகவதிகம்.
மேன்மை—மகிமை, 2. மேலாந்தன்மை.

## மை

மை — அஞ்சனம், 2. கறுப்பு, 3. குற்றம், 4. செம்மறியாடு, 5. மேடவிராசி, 6. மலடி, 7. மலட்டெருமை, 8. மேகம்.
மை—நீர்.
மைசூர் — ஓர் பட்டினம், இப்பட்டினங் குடநாட்டைச் சார்ந்ததென்பர்.
மைச்சாள்— } மைத்துனி.
மைச்சுனி— }
மைச்சான்— } மைத்துனன்
மைச்சுனன்— }
மைதானம்—சமபூமி.
மைதிலி—சீதை.
மைத்திரம்— } சிநேகம்.
மைத்திரியம்— }
மைத்திராவருணம்—உபநிடத முப்பத்திரண்டினொன்று.
மைத்துனன்—மச்சான்
மைநாகம்—ஓர் மலை.
மைந்தன்—திண்ணியன், 2. மகன்.
மைந்து—மயக்கம், 2. வலி.
மைமல்—மாலைநேரம
மைம்மை—மலடி, 2. மலட்டெருமை
மையம்—நடு
மையல்—மயக்கம், 2. மோகம், 3. ஊமத்தஞ்செடி
மையாத்தல்—(தொ. பெ) மயங்குதல்.
மையிடுதல் — (தொ. பெ) மையிட்டுதல், 2. மைபூசுதல்.
மைனு—நாகணவாய்ப்புள்

## மொ

மொகமொகெனல் — ஈரடுககொலிக்குறிப்பு.
மொக்கணி — ஒருவிதமான தோற்பை; இது குதிரைக்குக் கொள்ளுக்கட்டுவதென்பர்.
மொக்களிக்க — (வி) பயணத்திற்றடுக்க.
மொக்கு—பூமொட்டு, 2. மரக்கணு.
மொக்குளிக்க — (வி) குமிழியிட்டொலிக்க.
மொக்குள்—நீர்க்குமிழி, 2. கொப்பூழ், 3. மலரும் பருவத்தரும்பு.
மொக்கை—வெட்கம், 2. பருமை, 3. கூரின்மை.

மொக்கைகுவலதல்—(தொ. பெ) அவமானப்படுதல்.
மொக்கைச்சோளம்—ஒருவகைச் சோளம்.
மொக்கைபண்ண — (வி) ஆயுதங்களை மழுக்க.
மொசுமொசுக்க—(வி) தினவுதின்ன.
மொச்சு—ஆட்டுமணம்.
மொச்சை—ஒருவகைப் பயறு.
மொடமொடெனல் — ஈரடுக்கொலிக் குறிப்பு
மொடு—பருமை, நயம்.
மொட்டு—பூவரும்பு, 2. குமிழ்ப்பு வடிவமுள்ளது.
மொட்டை — முண்டிதம், 2 மழுங்கல்.
மொண்டணி— } மரகதனு.
மொந்தணி— }
மொண்டி—நொண்டி, 2. ஒரு சாமை.
மொண்டு—முரண்டு.
மொதுமொதெனல்—ஒலிக்குறிப்பு.
மொத்த—(வி) அடிக்க.
மொத்தம்—பொது, 2 கூட்டுசதொகை, 3. பருமை.
மொத்தளம்—கூட்டம்.
மொத்தி—புடைப்பு.
மொத்தை—பருமை.
மொந்தன்—ஓர்வகை வாழை.
மொந்தை — ஓர் கட்பறை, 2. ஓர்வகைப்பாத்திரம்.
மொப்பு—வெடிநாற்றம்.
மொய் — கூட்டம், 2. பெருமை, 3. போர், 4. போர்க்களம், 5. மொய்த்தல், 6. யானை, 7. வண்டு.
மொய்க்க—(வி) நெருங்க, 2. மூட.
மொய்ம்பு—தோள், 2. வலி.
மொரமொரெனல் — ஈரடுக்கொலிக் குறிப்பு.
மொல்லு—இரைச்சல்.
மொழி—சொல், 2. வாக்கியம்.
மொழிமை—பழஞ்சொல்.
மொழியோசை—உச்சரிப்பு.
மொழுக்கன்—தடித்தவன்.
மொள்ளுதல்—(தொ. பெ) முகத்தல்.
மொறுமொறெனல்—(தொ. பெ) மிககாய்த்தல்.

## மோ

மோகம்—காமம், 2. ஆசை, 3. உன்மத்தம், 4. மதியீனம், 5 வாழைமரம், 6. பாதிரிமரம்.
மோகரம்—மயக்கம், 2. உக்கிரம.
மோகரிக்க - (வி) மயங்க, 2. கோபிக்க.
மோகர்—சித்திரகாரர், 2. மோகமுடையவர்.
மோகனக்கல்—கோயிலின்வாயில் மேற்படிக்கல்.
மோகனம் — கணையைந்தின்செயலிலொன்று, 2. மயக்கம்.
மோகனங்கினி—மோகினி.
மோகன்—மன்மதன்.
மோகிக்க—(வி) மோகங்கொள்ள.
மோகிப்பு—மயங்கல்.
மோகினி—மயக்கு முருவுடையாள், 2. ஒரு தேவதை.
மோகொரம்—துருக்கர் பண்டிகை.
மோக்கம்— }
மோக்ஷம்— } பரகதி, 2 விடுகை
மோட்சம்— }
மோக்கல் — (தொ. பெ) மணங்கொள்ளல், 2. முகத்தல்.
மோசம்—வஞ்சனை, 2. அபாயம்.
மோசனம் — கிரகணம்விடுகை, 2. விடுகை.
மோசனம்—ஓர்வகை நெல்.
மோசிகை—உச்சிமுடி.
மோசித்தல்—(தொ. பெ) தவறுதல், 2. மோசம்போதல்.
மோடம்—மப்புமந்தாரம்.
மோடி—வேடிக்கை, 2. மேட்டிமை, 3. பிணக்கு, 4. காடுகாள், 5. துர்க்காதேவி.
மோடு — உயர்ச்சி, 2. மேடு, 3. பெருமை, 4. வயிறு, 5. முகடு.
மோத—(வி) அறைய, 2. அப்ப.
மோதகம்—அப்பவருக்கம், 2. தோசை, 3. சந்தோஷம்.

மோதம் — வாசனை, 2. சந்தோஷம், 3. களிப்பு, 4. ஓமம்.
மோதிரம்—விரலணி.
மோத்தை—வெள்ளாட்டுக்கடா.
மோப்பம்—வாசனையறிகை.
மோப்பி—கைம்பெண்.
மோரா— } ஓர் பழைய பொற்காசு, 2.
மோரு— } பாதப்படி.
மோர்—மச்சிகை.
மோவாய்—தாடி.
மோழல்—பன்றி.
மோழை—மொட்டை, 2. மூடம், 3. கீழாறு, 4. கொம்பிலாத விலங்கு, 5. கஞ்சி.
மோறை—மோவாய்
மோனம்—மௌனம்; அது சாத்துவிக குணத்தொன்று.
மோனர்—மௌனியர்.
மோனை — ஆதி, 2. மோனைத்தொடை; அது முதற்சீரின் முதலெழுத்தோடு பின்வருஞ் சீர்களின் முதலெழுத்தொன்றிவரத் தொடுப்பது.

## மௌ

மௌகலி— } காகம்.
மௌகுலி— }
மௌஞ்சி — நாணற்புல்லாற் செய்த வரைஞாண்.
மௌட்டியம்—அறியாமை.
மௌண்டிதம்—உபநிடதமுப்பத்திரண்டினொன்று.
மௌத்திகம்—முத்து.
மௌர்வி—வின்ஞாண்.
மௌவல்—காட்டுமல்லிகைச்செடி.
மௌனம்—பேசாமை.
மௌனியர்—முனிவர்.

## ய

யக்ஷர்-தேவசாதியரில் ஒரு வகுப்பினர்.
யக்கியம்—யாகம்.
யசசு—புகழ்.
யசமானன்—தலைவன், 2. யாககுரு.
யசனம்—யாகம்.
யசுரு—இரண்டாம் வேதம்.
யசோதை—கண்ணனை வளர்த்த தாய்.
யஜனம்—யாகம்.
யட்சிணி—ஒரு ஜாலவித்தை.
யட்டி—ஊன்றுகோல், 2. முத்துத்தாழ்வடம்.
யதா—ஏற்ற.
யதார்த்தம்—மெய்.
யதி—தாளப்பிரமாணம் பத்தினொன்று, 2. முனி.
யதிராஜன்—இளையாழ்வார் துரியாச்சிரமம் வகிக்கையில் பெருமான் அவருக்கிட்டபெயர். (அபிதானசி.) இளையாழ்வார் இராமாநுஜாசாரியர்.
யது—ஓரரசன்.
யதேச்சை—இட்டம்.
யதேஷ்டம்—மிகுதி, 2. சுயேச்சை.
யத்தனம்—முயற்சி.
யந்திரம்—திரிகை, தேர், செக்கு, மந்திர சக்கர முதலியவை.
யமகண்டம்—ஓர் செய்யுள்.
யமகம்—வந்தசொல்லே வருதல்.
யமகிங்கரன்—நமனேவற்காரன்.
யமதக்கினி — சமதக்கினி எனும் ஓர் இருஷி.
யமதூதி — பாம்பின் நச்சுப்பற்களினொன்று.
யமபடன்—யமகிங்கரன்.
யமம்—தருமநூல் பதினெட்டினொன்று.
யமளம்—இரட்டை.
யமன்—நமன்.
யமுனை—காளிந்திநதி.
யயாதி—குருகுலத்தரசர்களிலொருவன்.
யவட்சாரம்—வெடியுப்பு.
யவம்—வாற்கோதுமை.
யவனம்—தேய மைம்பத்தாறினொன்று.
யவனர்—கம்மாளர், 2. சித்திரகாரர், 3. சோனகர்.
யவ்வனம்—யௌவனம்.

## யா

யா — அஃறிணைப் பன்மைப் படர்க்கை வினா, 2. ஓரசைச்சொல், 3. ஒருவகை மரம்.
யாகசேனன்—பாஞ்சாலன்.

யாகபதி—ஓரரசன்; இவன் திருமால் பதினைந்தவதாரத்தொருவன்.
யாக்க—(வி) கட்ட.
யாக்கியவற்கியம் — உபஸிடதமுப்பத்திரண்டினொன்று.
யாக்கை—உடல், 2. கட்டு.
யாங்கு—இடத்தையச்சொல்.
யாங்ஙனம்—எவ்வாறு.
யாசகம்—இரப்பு.
யாசகன்—ஏற்போன்.
யாசனம்—யாகஞ்செய்விக்கை.
யாசிக்க—(வி) இரக்க.
யாஞ்ஞவற்கியம்—தருமநூல்பதினெட்டினொன்று.
யாடு—ஆடு.
யாணர்—அழகு, 2. கம்மாளர், 3. நன்மை, 4. புதுமை, 5. வளமை.
யாண்டு—காலம், 2. எங்கு, 3. எப்பொழுது.
யாண்டை—எவ்விடம்.
யாதம்—பசுக்கூட்டம்.
யாதவன்—கிருஷ்ணமூர்த்தி, 2. இடையன்.
யாதனம்—தெப்பம், 2. மரக்கலம்.
யாதனுசரீரம் — ஆக்கினை யநுபவிக்கத்தக்க சரீரம்.
யாதனை—துன்பம், 2. நரகநோய்.
யாதி—ஞாபகம், 2. சிந்தனை.
யாதுதானவர்—இராக்கதர்.
யாத்தல்—(தொ. பெ) கட்டல்.
யாத்திரை — தேவஸ்தலத்திற்குச் செல்லல், 2. கப்பற்பயணம், 3. திருவிழா.
யாபனம்—பொழுதுபோக்கல்.
யாபாரம்—வியாபாரம்.
யாப்பருங்கலம்—ஓர் யாப்புநூல்.
யாப்பு—கட்டு, 2. செய்யுள்.
யாமம் — இடையிரவு, 2. சாமம், 3. தெற்கு, 4. இடக்கைமேனம்.
யாமளம்—பச்சை.
யாமளேந்திரர் — இந்திரகாளியமென்னும் இசைத்தமிழ் நூலாசிரியர்
யாமவதி—இரவு.
யாமிகன்—நகரிசோதனைக்காரன்.
யாமியம்—தெற்கு.
யாமினி—இராத்திரி, 2. காசிபன்றேவி.
யாமினியம்—தெற்கு.
யாமுனாசாரியர்—ஓர் வைணவாசாரியர்.
யாம்—நாம்.
யார்—யாவர்.
யாலம்—ஆச்சாமரம்.
யாவகம்—செம்பஞ்சு.
யாவச்சீவம்—சீவனுக்குரிய சகலமும்.
யாவன்—உயர்திணைப்படர்க்கை யொருமை யாண்பால்வினா.
யாவும்—எல்லாம்.
யாவை—அஃறிணைப் படர்க்கைப் பன்மைவினா.
யாழ—ஓர் முன்னிலையசைச்சொல்.
யாழல்—கறையான்.
யாழோர்கூட்டம்—காந்தருவமணம்.
யாழ்—வீணை, 2. அச்சுவனிநாள், 3. திருவாதிரைநாள், 4. மிதுனவிராசி.
யாழ்ப்பாணம்—ஒரூர்.
யாழ்ப்பாணர்—ஓர் தேசத்தார், 2. யாழ்வாசிப்போர்.
யாழ்வல்லோர் — கந்தருவர், 2. வீணைவல்லோர்.
யாளி—சிங்கம், 2. சிங்கவிராசி, 3. மரக்கலப்பாய்க்கு நீர்வீசுங்கருவி.
யாறு—ஆறு.
யானம்—வாகனம், 2. சிவிகை, 3. மரக்கலம், 4. கள்.
யானைக்கண்—இலை காய் முதலியவற்றில் விழும் புள்ளி.
யானைத்தண்டம் — யானை செல்லும் புறவழி.
யானைத்தந்தம்—யானைக்கொம்பு.
யானைத்தறி—யானைகட்டுந்தூண்.
யானைமாவுத்தன்—யானைப்பாகன்.
யானைமுகன்—விநாயகன்.
யானையுரித்தோன்—சிவன்.
யானையேற்றம்—கசபரீட்சை.
யானைவிச்சுளி—ஓர் கழுகு.

## யு.

யுகந்தரம்—தேயமைம்பத்தாறினொன்று, 2. தேர் முதலியவற்றைப் பிணிக்குந்தறி.

யுகம்—பூமி, 2. இரண்டு, 3. நுகத்தடி.
யுகளம்— } இணை.
யுகளி— }
யுகாதி—அருகன், 2. வருஷாரம்பம்.
யுகாந்தம்—யுகமுடிவு.
யுதிட்டிரன்—தர்மராசன்.
யுத்தகளம்—போர்க்களம்.
யுத்தங்கலத்தல் — (தொ. பெ) போர் செய்தல்.
யுத்தசன்னத்தன் — போர்க்காயத்தமானோன்.
யுத்தமுகம்—போர்முகம்.
யுத்தம் — உசிதம், 2. சேர்மானம், 3. நியாயம், 4. போர்.
யுத்தி—யோசனை, 2. புத்தி, 3. உபாயம்.
யுபம்—சாமர்த்தியம்.
யுவ—ஒன்பதாவதாண்டு.
யுவராசன்—இளவரசன்.
யுவன்—பதினாறுவயதிற்குமேல் முப்பது வயதுக் குட்பட்டவன்.

## யூ

யூகம் — தருக்கம், 2. உட்பொருளுணர்தல், 3. படைவகுப்பு, 4. படை, 5. கருங்குரங்கு, 6. பெண்குரங்கு.
யூகி—விவேகி.
யூகித்தல்—(தொ. பெ) யோசித்தல்.
யூகை—கல்வி.
யூதநாதன்— } யானைக் கூட்டத்துக்குத் தலையானை.
யூதபதி— }
யூதப்ம்— }
யூதம் — யானைக்கூட்டம், 2. விலங்கின் கூட்டம்.
யூதர்—ஓர் சாதியார்.
யூதிகம்—முல்லைக்கொடி.
யூபத்தம்பம்—வேள்வித்தூண்.
யூபம் — யாகஸ்தம்பம், 2. உடற்குறை, 3. 4. படைவகுப்பு.

## யோ

யோகக்காட்சி — தேசகாலவிகற்பமின் றித் தன் செயலற்றுச் சிவன்செயலிற் கூடியதியுமறிவு.
யோகசம் — சிவாகமம் இருபத்தெட்டி னொன்று.
யோகசாதனை—யோகப்பயிட்சை.
யோகசேமம்—சமாசாரம்.
யோகதண்டம் — யோக முத்திரைக் கோல்.
யோகநித்திரை—அறிதுயில்.
யோகப்பட்டை — யோகிருப்பாரிடை யிற் கட்டுங்கச்சு.
யோகம் — நிஷ்டை, 2. அதிஷ்டம், 3. உபசாரம், 4. உபாயம், 5. உயர்ச்சி, 6. உற்சாகம், 7. கூடல், 8. கூட்டம், 9. சாவு.
யோகரூடி—காரணவிடுகுறி.
யோகர்—முனிவர், 2. சமணமுனிவர்
யோகி—நிஷ்டைசெய்வோன், 2. முனிவன், 3. அரன், 4. அருகன், 5. ஐயனார்.
யோகிக்க-(வி) ஆழ்ந்து நினைக்க.
யோகினி—காளியேவல் செய்பவள், 2. காளி.
யோகு—யோகம்.
யோக்கியதை—தகுதி.
யோக்கியம்—தகுதி.
யோசனை—ஓரெல்லையளவு, 2. ஆலோசனை, 3. ஓசை.
யோசிக்க-(வி) ஆராய.
யோசியம்—சோதிடம்.
யோதனன்—போர்வீரன்.
யோதைகள்—அறிவுடையோர்.
யோனி — காரணம், 2. பிறப்பு, 3. பெண்குறி.

## யௌ

யௌகிகம்—பகுபதம்.
யௌதகம்—சீதனம்.
யௌவனதசை—வாலிபப்பருவம்.
யௌவனம் — அழகு, 2. இளமை, 3. களிப்பு.

## ர

ரகசியம்—இரகசியம், (மறை.)
ரகு—ஓர் அரசன்.
ரங்கு—வர்ணம், (நிறம்.)

ரசம்—இரசம்.
ரசா—உத்தரவு.
ரஸ்தா—பாட்டை.
ரஸ்தாளி—ஓர் வாழைமரம்.
ரதம்—தேர்.
ரதிதேவி—மன்மதன் மனைவி.
ரத்தினம்—இரத்தினம்.
ரத்து—தள்ளுபடி.
ரம்மியம்—திருப்தி.

## ரா

ராகம்—இராகம்.
ராகவன்—இராமன்.
ராகி—ஓர் தானியம்.
ராகு—இராகு.
ராக்ஷஸன்—இராக்கதன்
ராணி—அரசி.
ராஜ்யம்—இராச்சியம்.
ராதை — கிருஷ்ணபகவானது பிரிய நாயகி.
ராத்திரி—இரவு.
ராமன்—இராமன்.

## ரி

ரிஷபம்—இடபம்.
ரிஷி—இருடி.
ரிவாஜ்—வழக்கம்.

## ரீ

ரீகர்—கரம்பைநிலம்
ரீதி—ஒழுங்கு.

## ரு

ருக்மிணி — கிருஷ்ணபகவானது மூத்த மனைவி.
ருசி—சுவை.
ருணம்—கடன்.
ருத்ரன்—சிவன்.
ருத்ராக்ஷம் — சைவர் தரிக்கும் ஒரு மணி.

## ரூ

ரூபம்—உருவம்.
ரூபாய்—ஒரு வெள்ளி நாணயம்.
ரூபி—(வி) ருசுப்படுத்த.

## ரெ

ரெட்டி—ஓர் சாதி.
ரெண்டு—இரண்டு.

## ரே

ரேகை—இரேகை.
ரேசகம்—இரேசகம்
ரேணுகை—பரசுராமன் தாய்
ரேவதி—ஒரு நக்ஷத்திரம்.
ரேவு—துறை.

## ரை

ரைவதம்—ஒரு மலை.

## ரொ

ரொக்கம்—முதல் பணம்.

## ரோ

ரோகம்—வியாதி.
ரோஹிணி—ஒரு நக்ஷத்திரம்
ரோதனை—உபத்திரவம்.
ரோந்தை—அசங்கிதம்.
ரோமம்—மயிர்.

## ரௌ

ரௌரவம்—ஒரு நரகம்.

## ல

லகிமா—ஒரு சித்தி
லகு—இலேசு.
லக்கம்—எண்.
லங்கை—ராவணன் ராஜதானி.
லக்ஷணம்—அழகு.
லக்ஷம்—நூறாயிரம்.
லக்ஷ்மணன்—இலக்குமணன்.
லக்ஷ்மீ—இலக்குமி.
லக்ஷ்யம்—குறி.
லஜ்ஜை—நாணம்.
லதை—கொடி.
லப்பம்—கண்ணுடிப்பற்று.
லம்போதரன்—விநாயகன்.
லயம்—ஒடுக்கம்.
லலாடம்—நெற்றி.

லலிதா—அம்பிகை.
லவங்கம்—கிராம்பு.
லவணம்—உப்பு.
லவன்—ஸ்ரீராமர் புத்திரன்.

## லா

லாகிரி—வெறித்தல்.
லாடம்—குதிரை'லாடம்'.
லாபம்—பேறு.
லாயம்—குதிரைக்கொட்டில்
லாலனை—தாங்கல்.
லாவண்யம்—அழகு.

## லி

லிகிதம்—கடிதம்.
லிங்கம்—குறி, 2. பால்.
லிங்காபட்டியம்—ஓர் சமஸ்கிருதநூல்.
லிபி—எழுத்து.

## லீ

லீலை—விளையாட்டு.

## லு

லுச்சா—போக்கிரி.

## லை

லைங்கம்—லிங்கபுராணம்.

## லோ

லோகபாலர்—பூமியைக் காக்கின்றவர்.
லோகம்—உலகம்.
லோட்டா—செம்பு.
லோபம்—பேராசை.
லோபாமுத்திரை — அகஸ்தியமுனிவர் மனைவி.

## லௌ

லௌகிகம்— } உலக சம்பந்தம்.
லௌகீகம்— }
லௌகிகன்—உலக விஷயங்களில் ஈடுபட்டவன்.

## வ

வகம்—வாகனம்.
வகரம்— } வ எனும எழுத்து.
வகாரம்— }
வஃகான்— }
வகிக்க—(வி) சகிக்க.
வகிர—(வி) அறுக்க, 2. கோத, 3. பங்கு செய்ய, 4. பிளக்க.
வகிரங்கம்—பகிரங்கம்.
வகிரியாகம்—வெளியரங்கபூசை.
வகிர்—வார், 2. பிளவு, 3. வழி.
வகுக்க—(வி) வகைப்படுத்த.
வகுதி—வகுப்பு.
வகுந்து—வழி.
வகுப்பு—அழகு, 2. பகுப்பு.
வகுலி—ஓர் மீன்.
வகுளம்—மகிழமரம்.
வகுளாபரணர்—சடகோபர்.
வகுளி—ஒலி.
வகை—முறை, 2. உபாயம், 3. தரம், 4. கூறுபாடு, 5. வகுப்பு, 6. வழிவகை, 7. முதல்.
வகையரா— } உள்ளிட்டார்.
வகைரா— }
வக்கணம்—நாகரிகம், 2. நிந்தை
வக்கணை—வர்ணனை.
வக்கா—ஓர் பறவை.
வக்காமணி—ஓர் மணி.
வக்கிரம் — வளைவு, 2. மீளமடங்குகை, 3. கொடுமை, 4. வஞ்சனை, 5. பொருமை, 6. வட்டம், 7. கலக்கம்.
வக்கிரன்—குரூரன், 2. செவ்வாய்.
வக்கிரிக்க—(வி) வளைய.
வக்கு—வழி.
வக்குத்திரிகரணம்—படுக்கை.
வங்கணம்—சிநேகம், 2. ஓர் தேயம்.
வங்கம்—ஈயம், 2. துத்தநாகம், 3. தேசம் ஐம்பத்தாறினொன்று, 4. பதினெண்பாடையினொன்று, 5. கத்தரிச்செடி 6. மரக்கலம், 7. வெள்ளி.
வங்கர்—வங்கதேயத்தார், 2. சண்டாளர்
வங்கா—காளம்.
வங்காரம்—உலோகக்கட்டி, 2. பொன்
வங்காரவச்சி—ஓர் இரை.
வங்காளம்—தேயமைம்பத்தாறினொன்று.

வங்கி—ஓர் கைவளை.
வங்கிசம்—வமிசம்.
வங்கியம்—இசைக்குழல்.
வங்கு—மலைமுழை, 2. கழுதைப்புலி.
வங்கூழ்—காற்று.
வசக்க—(வி) வசப்படுத்த.
வசதி—வீடு, 2. நல்லிடம், 3 மருத நிலத்தூர்.
வசந்தகாலம்—சித்திரைவைகாசிமாதம்.
வசந்ததூதம்—குயில், 2. மாமரம்.
வசந்தபைரவி—ஓரிராகம்.
வசந்தமண்டபம் — இளைப்பாறுமண்டபம்.
வசந்தம் — இளவேனில், 2. இந்திரன் மாளிகை, 3. தென்றற்காற்று, 4. வாசனை.
வசந்தன் — மன்மதன், 2. தென்றற் காற்று.
வசந்திகை—தேமல்.
வசம் — கீழ்ப்படிதல், 2. கைவசம், 3. நிலைவரம், 4. ஒழுங்கு, 5. ஆட்சி.
வசம்பு—ஓர் மருந்து.
வசலை—
வசளை— } பசலை; அது, ஓர் கொடி.
வசவி—தட்டை.
வசவு—இழிவுரை.
வசனம்—சொல், 2. வாக்கியம், 3. வாசகம், 4. பழமொழி.
வசனாவி—
வசநாவி— } வச்சநாபி, (நஞ்சு.)
வசனிக்க—(வி)சொல்ல.
வசி—கூர்மை, 2. கழுமுள், 3. சூலம், 4. வாள், 5. தழும்பு.
வசி—வசியம்.
வசிகரம்—வசியம், 2. சீந்திற்கொடி.
வசிகரிக்க—
வசீகரிக்க— } (வி) வசியஞ்செய்ய.
வசிக்க—(வி) தங்க, 2. வசியஞ்செய்ய, 3. வசனிக்க.
வசிட்டர்—ஓர்முனி; இவர் பிரமாவின் மாநசபுத்திரரு ளொருவர்.
வசியம்—கைவசம், 2. இராம்பு.
வசிவு—வளைவு.
வசீகரம்—வசப்படுத்தல்.

வசு—தீர், 2. அட்டவசுக்கள், 3. நெருப்பு, 4. வெள்வெங்காயம், 5. பொன், 6. பசுவின்கன்று.
வசுதேவன்—கண்ணபிரான்றந்தை.
வசுதை—
வசுந்தரை— } பூமி.
வசுமதி—
வசுநாள்—அவிட்டம்.
வசுவசி—சாதிபத்திரி.
வசூரி—ஓர் நோய்.
வசை—குற்றம், 2. இகழ்ச்சிச்சொல்.
வசைக்க—(வி) வளைக்க, 2. சூழ.
வசைய—(வி) வளைய, 2. சூழப்பட.
வச்சகம்—மலைமல்லிகைச்செடி.
வச்சி—காயாமரம்.
வச்சிரதந்தி—ஓர் புழு.
வச்சிரதரன்—இந்திரன்.
வச்சிரபாணி—இந்திரன்.
வச்சிரம்—வயிரம், 2. குலிசம், 3. சதுரக்கள்ளிமரம், 4. வச்சிரப்பசை, 5. மரவயிரம், 6. எட்டூ.
வச்சிரவல்லி—பிரண்டைக்கொடி.
வச்சிரன்—இந்திரன்.
வச்சிராங்கம்—சதுரக்கள்ளிமரம்.
வச்சிராயுதம்—குலிசம்.
வச்சிராவர்த்தம்—ஸ்ரீராமன்வில்.
வச்சிரி—இந்திரன்.
வச்சையம்—கலைமான்.
வக்ஷஸ்தலம்—மார்பு.
வஞ்சகம்—வஞ்சம்.
வஞ்சம் — கபடம், 2. கொடுமை, 3. பொய், 4. வாள், 5. சிறுமை.
வஞ்சவம்—பாம்பு.
வஞ்சனம்—வஞ்சகம், 2. ஓர் மீன்.
வஞ்சனி—இடாகினி, 2. வஞ்சப்பெண்.
வஞ்சனை—வஞ்சம், 2. தெய்வப்பெண், 3. பொய்.
வஞ்சி — ஓர் கொடி, 2. ஓர் பா, 3. சீந்திற்கொடி, 4. பெண், 5. பகைவர் மேற்செல்லல், 6. மருதயாழ்த்திறத்தி னொன்று, 7. பகைவர்மேற் செல்லு வோரணியுமாலை, 8. கருவூர்.
வஞ்சிக்க—(வி) வஞ்சனைசெய்ய.
வஞ்சிரம்—ஓர் மீன்.

வஞ்சிவேந்தன்—சேரன்.
வஞ்சினம்—சபதம்.
வஞ்சுளம்—அசோகமரம், 2. வேங்கை மரம்.
வடகம்—தோல், 2. போர்வை, 3. வற்றலாகிய ஒருவித உணவுப்பண்டம்.
வடகலை—கிரந்தநூல்கள்.
வடகாற்று—வாடை.
வடகிரி—மாமேரு.
வடமர் — வடவர், பிராமணருள் ஒரு வகுப்பினர்; இவர் வடக்கிருந்து தென்னாட்டுக்கு வந்தவர்.
வடமலை—திருப்பதி, 2. மகாமேரு.
வடமீன்—அருந்ததி.
வடம் — ஆலமரம், 2. ஒழுங்கு, 3 கயிறு, 4. வின்னாணி, 5. பூவரும்பு, 6. ஊர்.
வடலி—இளம்பனைமரம்.
வடவனல்— வடவாக்கினி— வடவாநலம்— } ஊழித்தீ; இது கற்பாந்த காலத்தில் உலகையழிக்குந் தீ.
வடவை—பெண்குதிரை, 2. ஊழித்தீ, 3. எருமை, 4. பெண்யானை.
வடாது—வடக்கு, 2. வடக்குள்ளது.
வடி—கள், 2. கூர்மை, 3. மாவடு.
வடிகட்டுதல்—(தொ பெ) வடித்தெடுத்தல்.
வடிகயிறு—குதிரை வாய்க்கயிறு.
வடிக்க—(வி) வடியச்செய்ய, 2. பிழிய, 3. தைலமிறக்க, 4. வடித்திறுக்க, 5 கூராக்க, 6. வசமாக்க.
வடிக்கதிர்—நூல் முறுக்குமோர் கருவி.
வடிப்பம்—அழகு, 2. செப்பம்.
வடிம்பு—நுதி, 2. விளிம்பு.
வடிம்புக்கழி—குறுக்குவிட்டம்.
வடிவம்—உருவம், 2. உடம்பு.
வடிவு—அல்குல், 2. அழகு, 3. உடம்பு.
வடு—பிஞ்சு, 2. தழும்பு, 3. குற்றம், 4. மச்சம், 5. செம்பு, 6. மருதயாழ்த்திறம், 7. வண்டு.
வடுகன்—வைரவன்.
வடுகு—ஓர் பாஷை, 2. இந்தளராகம்.
வடுக்க—(வி) பிஞ்சுவிட.
வடுவரி—வண்டு.

வடை—ஓரப்பவருக்கம்.
வட்கல்—வெட்கம், 2. ஒளிமழுங்கல்.
வட்கார்—பகைவர்.
வட்டகை—பலவூர் சூழ்ந்த வட்டம், 2. சிறுகிண்ணம்.
வட்டணம்—பரிசை.
வட்டணிக்க—(வி) வட்டமாக்க.
வட்டணை—தாளம், 2. வட்டம்.
வட்டத்திரி—நெருப்புவைக்குந்திரி, 2. காதிடுதக்கை.
வட்டத்திருப்பி—ஆடுதின்னாப்பாளை.
வட்டம்—சக்கரம், 2. பரிவேடம், 3. திரிகை, 4. கேடகம், 5. கைம்மணி, 6. குளம், 7. கொள்கலம், 8. நீர்ச்சால், 9. பீடம், 10. விளைதடி, 11. சீலை, 12 தாழ்வு.
வட்டரவு—வட்டவடிவு.
வட்டாடல்—(தொ. பெ) சூதாடல்.
வட்டாரம்—சுற்றுப்புறம், 2. வீடு, 3. தானியக்களஞ்சியம்.
வட்டி—முதலினூதியம், 2. பலகறை, 3. கூடை.
வட்டிகை—கூடை, 2. கைம்மணி, 3. சித்திரம், 4. நால்வகைச் சாந்திலொன்று.
வட்டிக்க—(வி) வட்டமாக, 2. ஆணையிட, 3. தாளம்போட, 4. பந்திபரிமாற, 5. கடிய.
வட்டில் — கிண்ணம், 2. புட்டில், 3. கூடை, 4. வழி.
வட்டு—சூதாடுகருவி, 2. திரட்சி, 3. நீர்வீசுகருவிகளிலொன்று, 4. கறிமுள்ளிச்செடி.
வட்டுடை—முழந்தாளளவாக வீரருடுக்குமோருடைவிசேடம்.
வட்டுவப்பை—கள்ளப்பை.
வட்டுவம்—ஓர்வகை வெற்றிலைப்பை.
வட்டெலி—ஓரெலி.
வட்டை—வழி, 2. புலியினதுடல்வரி.
வட்புலி—சிங்கம்.
வணக்க—(வி) கீழ்ப்படுத்த, 2. வளைக்க.
வணக்கம்—தொழுகை.
வணங்க — (வி) தொழ, 2. பணிய, 3. வளைய.

வணர்—வளைவு.
வணிகம்—வியாபாரம்.
வணிகன்—வியாபாரி, 2. வைசியன்.
வணிச்சியம்—வர்த்தகம்.
வணிதம்—செப்பம்.
வண்களமர்—சூத்திரர், 2. வேளாளர்.
வண்சிறை—மதில்.
வண்டர்—கடிகைமாக்கள், 2. திண்ணியர், 3. தட்டர்.
வண்டல்—அடிமண்டி, 2. மகளிர் விளையாட்டு.
வண்டன்—திண்ணியன், 2. தட்டன்.
வண்டானம்—நாரை.
வண்டி—பண்டி.
வண்டு—சுரும்பு, 2. அம்பு, 3. குற்றம், 4. கைவளை, 5. சங்கு, 6. பூசநாள்.
வண்டுறை—எழுத்தில்லாவோசை.
வண்டை—ஓர் செடி.
வண்டோதரி — பஞ்சகன்னிகைகளிலொருத்தி; அவள் இராவணன் பெண்சாதி.
வண்ணக்குழிப்பு—சந்தக்குழிப்பு, (ஓரோசை.)
வண்ணம்—இராகம், 2. குணம், 3. சந்தம்; இது பலவகைப்படும், 4. சார்ந்தபொழுது, 5. நிறம், 6. அழகு, 7. நன்மை, 8. வடிவு.
வண்ணாத்தி — பூநீறு, 2. வண்ணான் மனைவி.
வண்ணான்—ஏகாலி.
வண்ணித்தல்-(தொ.பெ) வர்ணித்தல்.
வண்மை—ஈகை, 2. குணம், 3. அழகு, 4. புகழ், 5. உண்மை, 6. வளமை.
வதக்க-(வி) வாட்ட.
வதக்கம்—வாட்டம்.
வதக்குவதக்கெனெ—வேவாதிருக்க.
வதங்க-(வி) வாட.
வதந்தி—பேச்சு.
வதம்—கொலை.
வதரி—இலந்தைமரம்.
வதவல்—வாடினது.
வதனம்—முகம்.
வதாணியன் — வரையாதுகொடுப்போன், 2. குபேரன்.

வதி—சேறு, 2. வழி.
வதிட்டன்—வசிட்டன்.
வதிய-(வி) தங்க.
வதிரன்—செவிடன்.
வதில்—பதில்.
வது—பெண்.
வதுவர்—குதிரைப்பாகர், 2. யானைப்பாகர்.
வதுவை—கலியாணம், 2. வாசனை.
வதை—கொலை, 2. தேன்வதை.
வதைக்க-(வி) கொல்ல, 2. துன்புறுத்த.
வத்தகம்— } வியாபாரம்.
வர்த்தகம்— }
வத்தங்கி—ஓர் மரம்.
வத்தமானம் — வர்த்தமானம், நிகழ்காலம்.
வத்தனை—பெருகுகை.
வத்தாக்கு—கொம்மட்டிக்கொடி.
வத்தித்தல்-(தொ. பெ) பெருகல்.
வத்திரம்—முகம், 2. ஆடை.
வத்து—பொருள்.
வந்தனம்— } வணக்கம்.
வந்தனை— }
வந்தி—மலடி, 2. முரண்டு.
வந்திகள்—புகழ்வோர், 2. மங்கலப்பாடகர், 3. கவிஞர்.
வந்தித்தல்—(தொ. பெ) வணங்கல்.
வந்தியை— } மலடி.
வந்தை— }
வந்து—காற்று.
வந்தை—பெருமை.
வபனம்—சக்கிலம், 2. முண்டிதம்.
வபு—உடல்.
வமனம்—சத்திபண்ணுகை.
வமிசம்— } சந்ததி.
வம்சம்— }
வம்பலர்—புதியோர், 2. அயலோர்.
வம்பல்—திசை.
வம்பு — தீச்சொல், 2. தீச்செயல், 3. வீம்பு, 4. கச்சு, 5. நிலையின்மை, 6. புதுமை, 7. மிடா, 8. வாசனை, 9. சண்டை.
வயக்குதல்—(தொ. பெ) விளங்கச் செய்தல்.

